1-17 Pages missing

# சிறப்புப்பாயிரம்



## தஞ்சாவூர் ஜில்லா, மேகளத்தூர், வித்வசேகரர் வீரப்ப செட்டியாரவர்கள் இயற்றியது

### ஆசிரியப்பா

திங்கண்வளைந் துவிண் கங்கைமுடியளவி
மங்குன்மிலைந்தொரு சங்கரனிகரிய
திரிசிரகிரியி னொருசிறைவிரியுந்
தண்டாமரைமலர வண்டாரோடையின்
முழுநீர்நீந்திக் கழுநீர்மாந்திக்
கவையடிக்கவரி துவையடித்துளக்கலின்
வெருவியுகண்டெழு பருவியற்செஞ்சேல்
அள்ளற்பள்ளத் தகளீரம்பண்ணையின்
வள்ளக்கமல மணமலிகுவளை
களைதெறுமுழத்தியர் வளைதெறக்கைநெரித்
தழுநரிற்புகுந்துதங் கொழுநரைத்தழுவவக்
கள்ளுண்டயர்ந்து தள்ளுண்டநிலையினர்
பறித்தநாறெறிந்து வெறித்தனரோடி
மலைக்கெதிரிட்ட குலைகதிர்சூட்டிடைத்
தாவினரேறக் காவிடைமேய்ந்த
பசுநிரைகன்றொடு முசுரிறைக்கணம்வெரீஇ
அறுங்கோடேறுப் பெருங்காடேறப்
பாய்ந்துமைம்முகிலுட றேய்ந்துகிழித்தாங்
கிந்துமண்டலத்துக் கொந்தளித்தெழுந்து
குமுதநண்புறுமத னமுதமுங்குதட்டி
யுழன்றுகுழன்று சுழன்றுகழன்று
நளிர்மீனென்னவிண் மிளிர்மீன்குலப்பணை
குதர்த்துச்சிதர்த்து மதர்த்துமின்றுதிர்த்து

மேற்போய்வானப் பாற்பாய்தங்கையை
இருகரையலையப் பெருகுநீர்க்கலக்கியுட்
பாந்தியுநீந்தியு மாந்தியும்வாந்திசெய்
தெழுந்துமேற்போகித் தொழுந்தகைத்தருவின்
பொதும்பரின்மலர்த்தேன் றதும்புறப்பாய்ந்து
சுரும்பினம்விரும்பின வரும்பினமுகுத்தாங்
கெண்டினவண்டின வண்டினமண்டின
பொம்மெனவெழும்ப வம்மலர்ச்சினைபல
முறித்துச்செறித்துக் கறித்துக்கொறித்தாண்
டண்டமுகட்டினை விண்டறக்கீண்டு
திறந்தொடுங்கலிலாப் புறந்தொடுமுந்நீர்
சுறவொடும்விளையாட் டுறநெடிதுறீஇயிவன்
மீண்டளிமருங்குழல் பூண்டளிகருங்குழல்
அரும்பின்முறுவற் கரும்பின்மொழிமினார்
சுணங்கமிழ்ந்தொளிருஞ் சுணங்கமிழ்வனமுலை
மலைக்கனநின்றிழி யலைக்களபச்செங்
குங்குமவோடையிற் றங்குமக்குளிரிற்
சோகமும்வெருளும் போகநின்றுலவும்
வீமநகரினான் காமனிகரினான்
முல்லைப்புலத்தவர் தொல்லைக்குலத்தவன்
காத்தபெருமாள் கழலிணைமறவாக்
காத்தபெருமாள் கடுந்தவத்துதித்தோன்
வாணாட்சிகொண்ட வடமீனனைய
மீனாட்சிதிருமணி மெல்வயிற்றுதித்தோன்
சீரகநிவந்த வேரகமுவந்த
வாசன்வீரப்ப சோசியனாமத்
திருமாணாக்கற் கொருமாணாக்கன்
அன்றியுமவனுக் கொன்றியமருமான்
ஈதலாலந்த மாதயாநிதிதன்
புத்திரனாரிய முத்துவிவேகிக்
குவந்தபெண்கொடுத்துத் தவழ்ந்திகழ்சோதி

வித்தையுங்கொடுத்த மெய்த்திருவாளன்
வேலைமலைக்கொட மிழ்தமெடுத்தாற்றெழுஞ்
சோலைமலைக்குச் சுதந்தரமாமன்
சச்சிதானந்த மெய்ச்சிதாம்பரத்துக்
குறவுபூண்டுலகுடல் மயலொருமுப்பகைத்
துறவுபூண்டமைந்த சுதந்தரஞானி
பொன்னினைப்பெண்ணினைப் புவியினைவெறுத்துமற்
றென்னினைப்பெரும லிட்டம்வைத்துடையோன்
வரதராசேந்தரன் மாதவமைந்தன்
றுரைசாமிவேட்குச் சொந்தச்சினேகன்
சுப்பிரமணிய உடையாறெப்பிறந்
துள்ளநட்பாட்சியை யுள்ளவுள்ளுருகுவோன்
பண்ணுச்சாமி பதந்தொழுமாரை
யண்ணுச்சாமிமாற் கருமைச்சினேகிதன்
மங்கிலியத்திரு வளர்கடையக்குடிச்
சங்கிலிமுத்து தணபூருமுத்து
இழுக்குதன்மதத்து வழுக்கித்தளர்நடைப்
பொருப்பையூர்வீதித் திருப்பையூராட்சிக்
கரசிரகுபதிமாற் கிரசிதகுன்றம்
தராசுநாக்கென்னநி சந்தெரிந்துரைக்கு
மிராசுநாயக்கற் கிரண்டுகண்ணனையான்
துங்கர்நாயக்கர் றென்குலத்துதித்த
சிங்கர்நாயக்கர் செல்வச்சினேகன்
விச்சுவகுலத்தி லுச்சனெனத்தச
நூறுமுகன்புக ழாறுமுகம்பெயர்
ஒருவனுக்கிசைந்த திருவருணேயன்
ஏகநாயகன்சீ ரிறைஞ்சியநீல
மேகநாயக்கர் விரும்பியமணியனுன்
மந்தாப்பிள்ளை மணிமலைகிர்புயச்
சுந்தரப்பிள்ளை சுகிர்தசினேகன்
தன்மரணப்பெருஞ் சற்குணம்படைத்த

தன்மரணத்தையான் சக்குறுந்தன்மைபின்
என்மரணந்தா னிருந்துகாணுமையிச்
சொன்மரணுந்தத் துங்கொளண்டத்தோன்
இராமசாமி யெனும்பெயர்தழைத்த
பராவருசோதிடம் பாவலர்சிங்கம்
அயன்குகன்கும்ப ஞதியோர்தொகுத்த
வியன்பெறுங்கணித வேதம்விரித்துப்
பாலியம்வாலிபப் பருவங்கல்வி
வாலிபசெல்வம் வண்மைதிண்மை
யாயுட்காலத் தளவைதிசைபுத்தி
போயுட்புகுங்கதிப் புணப்பொருணர்ப்புத்
துன்னிருபிறவிச் சூழ்ச்சிமாட்சி
பன்னிருதானப் பயன்முதலியாவையும்
துணிதருசொற்பொரு ளெக்கிவிளக்கிக்
கணிதசிகாமணி யெனும்பெயர்காட்டி
தந்தனுலகிடைத் தவத்தோர்
அந்தணர்புலவ ரனைவரும்பெறவே.

## இதுவுமது

வே.று

செங்கரும்புபோற்கணிதநன் னூலைக்குமாரவேள்செய்தானந்தப்
பைங்கரும்பின்சாறேபோற்சுக்கிரனுடிக்கிரந்தம்பகர்ந்தான்வெள்ளி
பொங்கமிகும்பாகாக்கியகத்தியன்றந்தான்வீமபுரத்தோர்கோமான்
எங்கள்மணிராமசாமிக்குரிசில்சருக்கரையாவியற்றினனே.

முன்னருளைப்பெற்றதந்தைகாத்தபெருமாளுரவோன்முதற்றன்வாக்காற்
சொன்னபெயரதிராமசாமியுன்குரவனெனுமோர்திலன்வீரப்ப
மன்னனுக்கிட்டபெயர்சோதிடசித்தாந்திரீமதியாற்கொண்ட
தென்னபெயரெனினுலகோர்கணிதசிகாமணிநீயேயென்றின்றூரால்.

புலவுநீர்க்கடலுலகிற்கணிதசிகாமணியெனவோர்புதுநூற்கண்டோம்
உலவுமதன்சொற்கனிவுபொருட்செறிவுத்திட்பநுட்பமுய்த்துநோக்கிற்
குலவுமிந்நூற்செயராமசாமிப்பேர்தாங்கியவன்கும்பன்சுங்கன்
இலகுருவொன்றெடுத்தனரோவிவனேசோதிடக்கலையோஎன்சொல்வேமால்

## இதுவுமது

சதையினிக்குமணியுகக்கும்பணைவீமபுரிராமசாமிசெய்த
விதையினிக்குவலையமுள்ளார்கணிதசிகாமணியென்பாரிதுகேட்டோர்க்குக்
சுதையினிக்குமாபுலவோர்கவியினிக்குமாமுனுள்ளசுகிர்தமான
கதையினிக்குமாவெனின்மற்றிதன்மதுரப்பதமெவரேகணிக்கவல்லார்.

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

எப்புலவரெக்கணிதரெவர்க்குமேலோய்
இறந்தனையேயெனவருந்தியிருந்தேனிப்பாற்
சொப்பனத்துமழியாநூற்சொரூபனாகிச்
சோதிடசிகாமணிப்பேர்சூடிநீடி
இப்புவனத்தென்நாளுமிருக்கின்றாய்நீ
யென்றுகண்டபிறகுதுயரெல்லாந்தீர்ந்தேன்
விப்பர்குலமணிவிளக்கேவிமலைமேவும்
வீமபுரிராமசாமிக்கோமானே.

---

திரிசிரபுரம், வரகனகர், இலக்கண உபாத்தியாயர்

ஆ. கா. பிச்சை யிபுருஹீம் புலவர் இயற்றியது

நேரிசையாசிரியப்பா

பெருங்கட லுடீஇய மருங்குடை யுலகத்துப்
பெருமையுஞ் சிறுமையும் புதுமையு மார்க்கமு
மாயபல் பொருளு மேயதன் னுண்மை
மருட்கையிற் றெளிக்கு மருட்கை வானவன்
விரா அய்மனம் படுக்கும் பராஅய் தாபதர்
மாறுவழி சென்மார் தேறு பூரியர்
செய்வினை விருப்பொடு வெறுப்பு வையாது
சமநிலைத் தாயின் வியனிலைக் கடவு
ளறிவுப்பயன் பெறுவான் செறீஇய நோக்கத்து
மண்ணொன் று தலைஇய வெண்ணென் பொருண்முத
லெழுமையு முணர்த்தும் விழுமிய பொருளுண்
மாக்களின் கரும நிகழ்ச்சி யாக்கம்
காலங் கண்ணிய மும்மைத் தாதல்
விளக்குபு வதூஉம் வினைமுதல் பலவு
மல்லபிற யாவி மெல்லை காண்மார்
நான்குதலை யிட்ட லறுபான் கலையுட்
சோதிடப் பெயரிய மாதிடத் ததனைக்
கூறியருண் முதனூ லூறுடை நாளு
மிகுதலிற் குறைதலிற் செகுதரு வளிபிற
மாய்வினை தரூஉ நோய்பல பலவு
மறிவுபுறம் போக்கும் வறுமையு மேனவு
முடைமையிற் சீரிய தடைதரு மறிவினர்
கடைபோக வுணர்தற் கிடையீடு படுதலி
னுனித்துணர் வான்றோர் கனிப்பொடு பெறீஇ

யுச்சிமேற் கொளுஉ மெச்சுபு மகிழப்
பிறந்த ஞான்று சிறந்தமர் காலப்
பகுதிமுதல் குறித்த மிகுதிறத் தெவருந்
தத்தமக் கியன்றது தழீஇ யுத்தமத்தி
னிகழ்கின்றது நிகழ் வதுபிற புகழ்
வெளிமையிற் கொளுஉ விடாகன் றிருப்ப
வோதுநர்க் கினிய சோதிட சிகாமணி
யெனத்தகு பெயர்கொடு வனைத்தொடு மளித்தனன்
குங்குமக் குயவழித் தங்குஞ் சேஎய்க்குத்
தாயமு தளித்தென வாய்பல மடைக்கட்
சூட்டுநெல் லகனிக் கூட்டுனூஉம் புனற்பெருக்
கார்ப்பரு தடைகரை பேர்ப்புரு தாணைச்
சென்னிநோக் கெதிர்ந்து பொன்னியா றொழுகுந்
திரிசிர புரத்தின் விரிசிய வாழ்க்கை
யடுக்கன்முடி விளக்கென வெடுங்குமெண் ணளவையிற்
பொருளினை யளக்கும் பொருளூல் சொன்னூ
லாருடஞ் சோதிட மங்கமனை முதற்பிற
தன்னிகர் போக்கித் துன்னிய வுணர்ச்சியின்
முனிவனென் சிறப்புத் தனிமையிற் பெறத்தகு
நாமமிய விராம சாமியப் புலவ
லென்றூ லின்றூண் முன்னூ லெனப்படு
நன்னூ லின்றூ லென்னுமந் நூற்குக்
கனியிற் பாலி னினிமைபிரித் தெடுத்தென
கருத்துப் பதப்பொருள் காட்டொடு திருத்து
மின்றியமை யாவுரை யொன்றிவண் டருகெனக்
கலையினவ் வாசான் றலைமா ணுக்கனென்
றமையப் பெற்ற கமைஇய மருகன்
பேரிய லொருங்குண ராரிய முத்தெனுந்
தலைமைப் புலமைகொ ணிலைமையோன் றன்பாற்
பன்முறை வேண்டுபு மன்னுமது பெறீஇத்
தன்னையொப் புறுத்தலிற் சென்னை யகவயிற்
கெழீஇய வாழ்க்கை தழீஇய மதிப்பி
னுயுள்வே தத்தின் மேயபதி னெண்மரு

மோருரு வெடுத்தென நேருறாஉந் தவமுற
றபுதரா முகம்ம் தபுதுல்லா வென
றேவரும் புகழு மாவரும் பெயரினன்
வாணிபத் துறையெனு மாணியற் கடலுள்
முளைக்குமிள ஞாயிறென விளக்குமதி யின்பினன்
கோட்டைய நாயுடெனக் குலவிய புகழின
ஞய விருவரு மச்சிற்
பதித்துவெளிப் படுத்தினர் மதிப்புமிகப் பெறவே.

---

## திரிசிரபுரம், வரகனகர்
## கு. சோமசுந்தர உபாத்தியாயரவர்கள்
## இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

கடல்புடைசூழ் புவியதனிற் றிரிகால முணர்ந்திடுவான் கனத்தமாக்க
டிடமுறுநற் கணிதரில்லஞ் சோதிடமன் னோர்மகிழ்ந்து செப்பாராகி
லடல்முழுதும் பரிகொடுத்து நிலைகுளங் குன்தன்மையறிந் தளியாற்றுமே
படர்மதியாற் காலமொரு மூன்றினையுந் தேர்ந்துகொளும் பரிசாய்மாதோ.

சோதிடசிகா மணியென் றொருநூலையீன் றளித்தான் சோதிடத்தில்
வாதிடவே யொருவரின்றித் தானேநின் றரசுபுரி மகிபனெப்பா
வோதிடவென் றூழ்புகழும் பொன்னுமலாற் பிறருவமைக் குரிமையாகா
மாதிடவா ணுகுமொரு ராமசாமிப் பெயர்கொண் மாட்சியோனே.

இப்பெரியோன் புகலிந்நூற் குரைபுனைந்தா னவன்மாட்டே யெண்ணிற்றேர்ந்த
செப்பரிய சீடனுமாய் மருகனுமாய்த் தோன்றிவளஞ் செறிந்துலாவு
மெப்பெரு நூலேனுமொரு பதிநான்கா முறையிழைக்கு மியலோனெம்மோ
டப்பமுதமென நட்டோனுரிய முத்தெனுநாம னதிவல்லோனே.

---

## இந் நூலாசிரியரவர்கள் மருமகனும், சிஷ்யருமாகிய சாமிமலை சோதிடம் வீ. ஆரியமுத்து பிள்ளையவர்கள் இயற்றியது

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

என்குரு வென்றரன்புகழுங் குமாரவேள் பொதியமலைக்
 கிருந்தோன்சூரன்
றன்குகுவிம் மூவர்சொன்ன நூற்றிரட்டிக் கணிதசிகா
 மணிப்பேர்சாற்றி
நன்குருவ விளக்கெனத்தந்தான் வீமபுரிக் குடைய
 நாதனென்மா
மன்குரு வெண்ணத்தைமக னிராமசாமிப் பெரும்பேர்
 வனைத்துளானே.

## இதுவுமது

முருகனகத் தியன்புக ரிம்மூவர்சொன்ன சோதிடநூன்
 முறைமையாரும்
பருகாகத்திடை யெழுத்தின் பான்மைபோற் கணிதசிகா
 மணிப்பாச்சொன்னன்
மருகனகத் தன்புடைய மாணுக்க னென்னவென்னை
 மகிழ்ந்துகைக்கொண்
டருகனகக் கலையுணர்ந்து மிராமசாமித் திருப்பே
 ரமைந்தகோவே.

## இதுவுமது

கனக்கரிய னிருசரணங் கனவிடத்து மறவாதான்
 கணிதநூலுக்
கெனக்கரியக் தணன்படைத்தா னெனக்கணித சிகாமணிநூ
 லியற்றினனென்
றனக்கரிய மாமனர்சோ திடநூற் காசிரியன்
 றமிழ்நூலான்றோன்
சினக்கரி யகழிவீம புரிராம சாமிச்சோ திடச்
 சிங்கமே.

## திரிசிரபுரம் பீமநகர்
## சோதிடம் ரா. சோலைமலைப் பிள்ளையவர்கள்
## இயற்றியது

பூமணமாருச்சோலைசூழ்வீம
புரத்தினன்பொதுவர்தங்குலத்தோன்
புண்ணியவான்காத்தபெருமாளீன்ற
புத்திரசிகாமணியெனக்கு
மாமனுங்குருவுமாமணிஞான
மணிசிந்தாமணிதபோமணியின்
மணிநவமணியிராமசாமிப்பேர்
மகாமணிகண்மணிமதுரத்
தேமணநிறைந்தபாக்களாற்கணித
சிகாமணியென்றொருபெருநூற்
றிரட்டினனதுதான்சோதிடக்கலைஞர்
செல்வமோவவர்மனத்தேனோ
சேமன்னிதியோவவர்விளைநிலமோ
செங்கணோவவர்திருமுகமோ
திரவியமிருப்போவவர்மனைவிளக்கோ
சிவனேயாதெனத்தெரியேன்.

---

## திரிசிரபுரம் பீமநகர் டிருப்ட்ஸ்மேன்
## துரைசாமி நாயகரவர்கள் இயற்றியது

மன்னுமெழில் வீமபுரி வாதரா சேந்திரமால்
மைந்தனுழிப்
பொன்னுரியற்கடிமை துரைசாமியென்பே ரெனக்கிளமைப்
போதேவாய்த்த
வின்னுயிர்நேய னிராமசாமி மஹாகணித நன்னூற்
கிறைவன்செய்த
மின்னுமிகழ்கணித சிகாமணியவன்றன் மெய்யுருப்போல்
விளங்கிற்றம்மா.

---

## குன்றத்தூர்
## மதுரகவி மாணிக்க முதலியாரவர்கள்
## இயற்றியது

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பன்னுதமிழ்ப்புலமை மிகுமிராமசாமிப்
பாவலன் செய்சோதிட நூற் கினியபாவின்
நன்னர்நவநீதமெடுத் துதவுமாங்கே
நனிவளஞ்சேர்பீமநகர் நயக்கவந்த
உன்னருசிராரயமுத்துப் பெரியோனுய்ந்த
வுரைவரைந்தானதற்குவமை யுளதாச்சேடன்
சொன்னபெருந்தோஷத் தானுப்பிளந்து
தொய்யலுறீ இத்தலைமேன் மண்சுமக்கின்றானே.

---

## திரிசிரபுரம் வீரக்கேரி
## ம. பொன்னுசாமி பிள்ளையவர்கள்
## இயற்றியது

மாதிரிசிரபுரமிராமசாமிசொன்னகணிதசிகா
மணியைக்கேட்டு
வேதமதிற்சாகைகள் போற்பாகம்வகையிப்படியார்
விரிப்பரிந்த
மேதகுநூலச்சியன்றவுடனெனக்குமொன்றுதர
வேண்டுமென்னப்
போதனும்வந்திவனகரிப்பொருப்பினிடையிருந்துதவம்
புரிகின்றானே.

---

திரிசிரபுரம் பீமநகர்
இராசு நாயகரவர்கள்
இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

போதிடவன் கலைகளுணர்புலவனிரு வருங்கயிலைப்
பொருப்புட்போத
மாதிடவன் வீமபுரிராமசாமிக் கணித
வல்லோன் சொன்ன
சோதிடசிகாமணி போற்சொன்மினென முன்புசிகைச்
சுடர் கண்டேனென்
றோதிடப்பெற்றபோது மென்றகல குகன்மலைவா
யொதுங்கினனே.

---

திரிசிரபுரம் பீமநகர்
வே. சுப்பிரமணி வுடையாரவர்கள்
இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பொங்கவரும்பாற்கடலி னமுதையரி திரட்டிமுற்றும்
புலவர்க்கீய்ந்தான்
இங்கவருங்கல்லாத வெவருமுக்காலத் தெளிவாமமுதை
யின்பாய்
றுங்கவருந்தாது கணிதக்கடலைக் கடைந்துசிகாமணி
நூற்றந்தான்
றுங்கவருந் தீபமன்ன ராமசாமிக் கணிதத்
துரைச்சிங்கேறே.

---

சென்னை – இந்து யூனியன் அச்சுக்கூடத்தின் அதிபர்
பிருங்கி இராமசாமி முதலியாரவர்கள்
இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

நவராசக்கோண்முறையுநாண்முறையுமாண்முறையி
னன்கா ராய்ந்த
றவராசசங்கரமாமுனியும்வியந்தரிதென்றான்
றனன்றூலே
விவராசறுதிநிரம்பத்தமிழ்க்கவியாலியாவருக்கும்
விளக்கினன்பொ
துவராசகுலதீபன்றுரைராமசாமியிளஞ்
சுடரோன்மன்னே.

---

சென்னை : சோதிடம்
உருத்திரகோடியா பிள்ளையவர்கள்
இயற்றியது

திரிகாலங்கண்டறிந்த சித்தர்களுமொருகாலந்
திகைப்புந்தேர்ந்து
புரிகாலமொன்றுமுள வெனக்குறிக்குஞ் சோதிடநூற்
புணர்ப்பையாருந்
தெரிகாலமிவன்கால மென்றெவரும் வியப்பமறை
திறந்துதந்தான்
அரிகாலங்கடுத்தவ னிராமசாமிக்கணித
வரசரேறே.

---

சென்னை:
அ. பெ. தம்புசாமி பிள்ளையவர்கள்
இயற்றியது

தெள்ளுவர்நீர்க்கடலுடுத்தசெகதலத்து முனிவருஞ்
சித்தராரும்
விள்ளுவர்மற்றெவர்க் கெளிதென்றுரைக்க விரீஇக்கிடந்த
விழுக்கணிதநூலை
வள்ளுவர்புரோகிதர்க்கு மற்றெவர்க்குங் கற்றுரைக்கும்
வண்ணஞ்செய்தான்
றுள்ளுவராற் புனல்வீமபுரிராமசாமி மஹா
சுகிர்தவானே.

---

சென்னை மாபுஸ்கான்தேவடி யூனானி தாதுவிர்த்தி போதினி
எனும் நூலாசிரியராகிய
அக்கீம் பா. முகம்மது அப்துல்லா சாயபு அவர்கள்
இயற்றியது

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

இரவியாதிநவநலோரிராசிமண்டலத்திலே
இருபதோடுமேழுமானதாரகைக்கணிடையிலே
விரவியோடிமீள்வுறுஞ்சதாகதிப்படர்ச்சியில்
மேவுகாலவரையறைக்கணிதனூல்விரித்தனன்
புரவியோடியிரதமோடவதினெழும்சராகமேற்
பொங்கியோடிவானகம்புதைக்கும்வீமபுரியுளான்
அரவிநாடகங்குளித்தவண்ணலார்குலத்தினன்
அறமுருக்கொடுதையனுமிராமசாமியறிஞனே.

---

தஞ்சாவூர் ஜில்லா திருப்பையூர்
இரகுபதி மளவராயரவர்கள்
இயற்றியது

மனவாக்குக்கெட்டாது மண்ணுவிண்ணுந்திசைமுகனும்
மயங்கமுன்னோர்
சொனவாக்கம் படைத்தகன்ற சோதிடவண்பாற்கடலைத்
துருவிமாலிற்
பனவாக்கு நயவமுதைக் கணிதசிகாமணிநாமம்
பரப்பித் தந்தான்
கனவாக்குமுலகேனு மிராமசாமித் தவச்சிங்
காரன்மாதோ.

---

திரிசிரபுரம் பாலக்கரை யாதவாள் தெருவிலிருக்கும்
சோதிடம் - முத்தையக் கோனாரவர்கள்
இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

மணப்பொருத்தம்பாலர்தம்மைமளப்பருவங்கல்விசெல்வம்
வண்மைதத்தங்
குணப்பொருத்தமாயுணிலைக்குறிப்பனைத்தும்பன்னிரண்டுதானக்
கோளும்
வணப்பொருத்தப்பாக்களினல் வகுத்துரைத்தான்கணிதசிகா
மணிநூலன்பாற்
றணப்பொருத்த ரிடத்துமிலி ராமசாமிப் பெரும்பேர்
தழைத்துளோனே.

---

## மஹாவித்வான் சித்தாந்த ரத்திநாகரம், அரண்வாயல் வெங்கடசுப்பு பிள்ளையவர்கள் இயற்றியது

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

சொல்வளரு முத்தமிழின் சங்கவொலிச் செய்யுளெங்குஞ்
சுவையரு நாற்
சொல்வளரு முத்தமிழின் சங்கவொலிச் செய்யுளெங்குந்
தோலா வெற்றி
வில்வளருஞ் செங்கைமுடிக் காவலர்க ளொழுக்கமெங்கு
மீயளாவி
வில்வளருஞ் செங்கைமுடிக் காவலர்க ளொழுக்கமெங்கு
மிளிர்சோ ணாட்டுள்,

அந்நாட்டு மங்கைதிருப் பங்கேரு கானன்மென்
றறைதற் பாற்ற
யந்நாட்டு நகர்நாப்ப ணவன்மூலபோல் வளர்ந்தோங்கு
மசலக் கோயிற்
பைந்நாட்டக் குவளையருட் சுகந்தகுந்த ளாம்பிகையோர்
பாகர் மார்பிற்
பைந்நாட்டப் பணித்தாயு மானசெல்வர்க் கினியசிராப்
பள்ளி தன்பால்,

காமபுரி போலுமெனப் பற்பலகா மரைக்காட்டுங்
கருணை பூத்த
சோமபுரி போலுமெனக் குளிர்முகசோ மரைக்காட்டுஞ்
சொன்னத் தாலா
மேமபுரி போலுமெனப் பொன்னெடுமா ளிகைகாட்டு
மிணையில் கீரார்
வீமபுரி புரிந்தபெருந் தவப்பயனு யங்கனெளிர்
விளக்க மிக்கோன்,

மாதவனங் கண்ணபிரான் முன்னமவ தரித்ததிரு
மரபென் றோங்கும்
யாதவர்தங் குலத்துவந்தோன் மாராம சாமிப்பே
ரியற்பா வல்லோன்

வேதவழி விரிந்தொளிர்சோ திடமுழுது முணர்ந்தவற்றை
விளங்க யார்க்கும்
ஓதவருள் கொடுதமிழாற் சோதிட சிகாமணியென்
றொருநூ லாக்கி,

திங்களின் முற்பிறையின் வளர்ந்துறக் கிரகநாயகர்பேர்
திகழு மன்னோர்
தங்களர சாட்சியுச்சம் பகைநீசந் தானுதி
பதிக டம்பேர்
இங்களவி லவருதவும் பயனியம்பி நூற்குப்பா
யிரமா வைத்து
மங்களபா வந்தொடங்கிப் பாலாரிட் டத்திஞெடு
வரிசை யாக,

ஆயுளுறு பிதுர்மாதுர் துணைவர் களத்திரமைந்த
ரவர்சேர் யோக
மேயவிலக் கினகிரக படர்ந்தசவர்க் கந்தெளித்து
விளங்கு சீவன்
பாயவுடற் கெய்துதிசா புத்திமிகு கால்சக்ரப்
பாங்கு காட்டி
நேயமுட னட்டவர்க்க நிரியாண காலமிவை
நிகழ்த்திப் பின்னர்,

துவாதசரா சிகளினவக் கிரகநிலை பலாபலங்கள்
சோதித் தோதித்
தவாதவொரு மெய்க்கணித ஞானக்கண் மானிடர்க்குத்
தந்தாங் கீந்தா
னிவாதவர்கண் மணியனையான் புகழுடம்பே போற்சிறக்கு
மிந்நூ லோடிங்
கொவாதபிற சோதிடநூற் கீதிறமை பூண்டொளிர்மான்
புளக்க ணோர்ந்து,

விஞ்சைபல வினைபதியென் றுலகமெல்லா மதிக்கநனி
விளங்கா நிற்குந்
தஞ்சைவள நகர்க்கணித்தா மேல்வளமென் கிராமத்திற்
றழைந்து வாழ்வோ

னெஞ்சையற நெறிக்காக்கும் வணிகவே ளாண்மரபி
னிலவுஞ் சைவன்
மஞ்சைநிகர் கவிமழை பெய் வீரப்ப செட்டியென
வருபா வாணன்,

எட்டுறுபல் காலிகித வழுக்களைந்தி யாப்பியலோ
டியை யிலாத
பாட்டுகளைச் சொன்னயமும் பொருணயமும் பெறத்திருத்திப்
பரிவோ டிந்நீர்
நாட்டுறைசெந் தமிழுணரு மாந்தரெளி றுணர்ந்துவப்ப
நல்கப் பாடங்
கேட்டுளவா றிந்நூலிற் றன்குருமா துலன்கருத்தின்
கிளர்ச்சி தோன்ற,

சீரியசோ திடப்புலவர் கருத்தோடுதன் னநுபவமுந்
திகழ்வித் தூழின்
காரியகா ரணங்காட்டுஞ் சோதிடசி காமணியைக்
கருணை யாலே
மாரியைநேர் சற்குணவா னீரகங்கொ ளேரகத்து
வளர்வே ளன்னு
ஞரியமுத்துப் பிள்ளையுறை வறைந்து பதிப்பித்தா
னச்சின் மாதோ.

---

## அஷ்டாவதானம்

## பூவை - கலியாணசுந்தர முதலியாரவர்கள் இயற்றியது

பதினான்குசீர் விருத்தம்

தேய்த்துணர்த்தண் டலைகளுறுஞ் சிரபுரத்துப் பீமநகர்த்
திலகனென நாளும் வாழ்ந்த
திகழ்கணித வாருடக் சிங்கமிரா மச்சாமி
திரள்வேந்தர் நனிகொண் டாட

வீந்தனனற் சோதிடசி காமணியென் றொருபனுவ
லேய்ந்தபத் தழகு மேவி
யிலங்குறுகற் பனையலங் காரநவ ரசமனைத்து
மேற்றபல பாக்க டம்மா

லேந்துபுக ழிந்நூலி னருமைபனு பவித்தெவர்க்கு
மிசைக்குமவன் மருக னான
வெண்ணருஞ்சீர் வாய்ந்தவா ரியமுத்துக் கவிஞனிந்நா
ளிருங்கடனீ ருண்டு விண்ணி

னீர்துமழை யெனச்சந்தக் கவிபொழியும் வீரப்ப
னெனும்புலவர் சிகாம ணிநன்
னேர்மையுடன் புரைதிருத்தித் தரவச்சி னிதேற்றி
நிலைத்தபுகழ் பெற்றிட் டானால்.

---

# பொருளடக்கம்

| பாட்டு | எண் |
|---|---|



| பாட்டு | எண் |
|---|---|

உ

ஜோதிட சிகாமணியின்

# அநுபந்தம்



## 27 – நக்ஷத்திரங்களில் செய்யும் சுப காரியங்கள்

* வேதசாஸ்தி ராப்பியாச விவாகோப நயனமும்
விதைகளை விதைத்தல் கர்ப்பம்
ஆதன யாகங்கள் யாத்திரை செயல்நன்று
அன்னப் பிராசன நாமகரணம்
நூதனு பரணங்க ளாடைகளை வாங்குதல்
நுட்பமாய் சித்திர மெழுதல்
சாதனமாய் பொன்னேரு கட்டவு மஸ்வனியில்
சந்தோஷ முண்டாக்குமே.

1. அஸ்வனி நக்ஷத்திரத்தில்: பூ முடித்தல், கர்ப்பதானம், விவாகம், அன்னப் பிராசனம், நாமகரணம், உபநயனம், குதிரை வாங்க, வேதசாஸ்திராப்பியாசம், நூதன ஆடையாபரணம் வாகனம் வாங்க பூண, பட்டாபிஷேகம், கிரகாரம்பம், சித்திரம், ரத்தின மிழைத்தல், பொன்னேர் கட்ட, விதைக்க, தெங்கு பலா மா முதலிய பல விருக்ஷங்கள் வைக்க, யாகம் செய்ய, யாத்திரை செய்ய, தேவதா பிரதிஷ்டை, கிரகப் பிரவேசம் முதலியனவும் செய்ய உத்தமம்.

2. பரணியில்: மூலிகையை உபயோகிக்க, ஜலத்தில் படகு முதலாகியவை விட, தீர்த்த யாத்திரையில் திதி முதலானவை செய்ய, யாக சாலையில் அடுப்பிடவும்.

3. கிருத்திகையில்: சுரங்கம் வெட்ட, ஓமாரம்பம் செய்ய, மடப்பள்ளி சமையல் முதலாகியவைகள் செய்ய, விருக்ஷங்கள் வெட்ட, கடன் நீக்க, வாகனுதிகள் விற்கவும் நன்று.

---

* இவ் விருபத்தேழு நக்ஷத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வோர் செய்யுள் உள. அவை யாவையும் முழுமையும் அச்சிட இவ்வேடிடந் தராமையால் முதல் நக்ஷத்திரத்திற்கு மாத்திரம் செய்யுள் வைத்திருக்கின்றது. இப்படியே கண்டு கொள்க.

4. ரோகணியில்: ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், விஷ்ணு பலி, நாமகரணம், விருந்துண்ணல், உபநயனம், வித்தியாப்பியாசம், ஆலய ஆரம்பம், விவாகம், ஆடையாபரணமணிதல், பட்டாபிஷேகம், பல்லக் கேருதல், கிரஹப் பிரவேசம், கிராமப் பிரவேசம், கும்பாபிஷேகம், யாகம், நவக்கிரக சாந்தி, வியாபார ஆரம்பம், தானியங்களை இருப்பு வைக்க, கிணறு வெட்ட, வாசக்கால் நாட்ட, புத்தகங்கள் பத்திரிகைகள் பிரசுரஞ் செய்யவும்.

5. மிருகசீரிடத்தில்: விவாகம் முதலியனவும், உபநயனம், வித்தியாரம்பம், ஆபரணம் பூணுதல், வாகனம் வாங்க, மனை கோல, கிராமப் பிரவேசம், பொன்னேர் கட்ட, விதைக்க, யாத்திரை செய்யவும்.

6. திருவாதிரையில்: சூளைக்கு நெருப்பு வைக்க, ஆயுத அப்பியாசம், மந்திரம் செபிக்கவும்.

7. புனர்பூசத்தில்: பூ முடித்தல், சீமந்த முதலியனவும், அதிகாரம் பெறுதல், வாஸ்து சாந்தி, கிரஹப் பிரவேசம், யாத்திரை, வியாபார ஆரம்பம், பந்தக்கால் முகூர்த்தம், விவாகம், கோடி வஸ்திரம் தரிக்கவும்.

8. பூசத்தில்: ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், நாமகரணம், முடிவாங்க, விருந்துண்ண, அன்னப் பிராசனம், வித்தியாரம்பம், சௌளோபநயனம், கர்ணுபரணம் பூண, சாஸ்திராப்பியாசம், பசு வாங்க, விவசாயம் செய்ய, யாத்திரை செய்ய, ஆலோசனை சபை கூட, சிம்மாசன மேற, வாஸ்து சாந்தி செய்ய, விரதாரம்பம், குரு உபதேசம், நடனம், கரும்பு நடவும்.

9. ஆயிலியத்தில்: ஜெபம் பூர்த்தி செய்ய, நவக்கிரக சாந்தி செய்ய, ஆயுதம் கொள்ள, கிணற்றில் கல் கட்டிடம் கட்டவும்.

10. மகத்தில்: மந்திர பிரயோகம், கசம் எடுக்கவும்.

11. பூரத்தில்: சித்திர மெழுத, ஆயுதப் பிரயோகம் செய்ய, கிரக பாதையை நிவர்த்தி செய்யவும்.

12. உத்திரத்தில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், சீமந்த முதலியவும், கிரகப் பிரவேசம், விதைவிதைக்க, தேவதா பிரதிஷ்டையும் செய்யவும்.

13. அஸ்தத்தில்: ருதுசாந்தி, கர்ப்பாதான முதலியவும், காது குத்த, வித்தியாரம்பம், சாஸ்திர அப்பியாசம் செய்ய, விதை

விதைக்க, வியாபாரம் ஆரம்பம், பொன்னேர் கட்ட, மந்திரம் ஜெபிக்க, யாத்திரை, கும்பாபிஷேகம், கிணறு வெட்ட, நந்த வனம் வைக்க, கிரகாரம்பம், ராஜதரிசனம், கிரகப் பிரவேசமும்.

14. சித்திரையில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், நாம கரணம், முடிவாங்க, கர்ணுபரணம், வித்தியாரம்பம், உபநயனம், விவாகம், வேத சாஸ்திர ஆரம்பம், வஸ்திராபரணம் கொள்ள, குதிரை வாங்க, தீக்ஷா வைராக்கியங்கொள்ள, நாட்டியம் ஆரம் பிக்க, அவுஷதம் செய்ய தேவதாபிரதிஷ்டை செய்ய, கிரகாரம் பம், கிரகப்பிரவேசமும்.

15. சுவாதியில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், நாமகரணம், முடி வாங்க, அன்னப் பிராசனம், வித்தியாரம்பம், ஜோதிடம், வைத்ய சாஸ்திரமாரம்பிக்க, விவாகம், சங்கீதம், வாகனம்வாங்க, விவசாயம், கும்பாபிஷேகம் செய்ய, கிரகப் பிரவேசம், கோடி யுடுக்க, புத்தகங்கள், பத்திரிகைகள் பிரசுரஞ் செய்ய.

16. விசாகத்தில்: விவசாயத்தால் உற்பத்தியாகிய தானி யங்கள் அறுக்க; கிணறு, தடாகங்களை சீர்திருத்த.

17. அனுஷத்தில்: ருதுசாந்தி முதலியனவும், வித்தியாரம் பம், கோடியுடுத்தல், ஆபரணம்கொள்ள, கிரகப் பிரவேசம், வாசற்கால் வைக்க, தூண் நாட்ட, தானிய மிருப்பு வைக்க, முகூர்த்தக்கால் நட, தேவதா பிரதிஷ்டையும்.

18. கேட்டையில்: ஆபரணம் அழித்துச் செய்ய, சூளை போட, ராஜ விவகாரந் துவக்க, ஆயுதத்தால் செய்யவேண்டிய வேலைகள் ஆரம்பிக்க, யந்திரம் செய்ய, சேவகாளை வைக்க, கடன் வாங்க, வாகன மாற்றவும்.

19. மூலத்தில்: ருது சாந்தி, பூ முடித்தல், சீமந்தம், பேரை மாற்றி வைக்க, விருந்துண்ண, வித்தியாப்பியாசம், விவாகம், ஆபரணம் தரிக்க, யாக யெக்கிய தீக்ஷாரம்பம் செய்ய, விதை விதைக்க, பல விருக்ஷங்கள் வைக்க, கிணறுவெட்ட, மந்திரம் ஜெபிக்க.

20. பூராடத்தில்: கணிதாரம்பம், கரும்பு நட முத்து பவழம் வாங்க, பழைய கிணறுகளை சீர்திருத்த, கடன் விமோசனஞ் செய்ய.

21. உத்திராடத்தில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், வித்தியாப்பியாசம், பட்டாபிஷேகம், கிராமங்களிலும் வீடுகளிலும் சங்கு ஸ்தாபனம் செய்ய.

22. திருவோணத்தில் ருதுசாந்தி முதலியவும், அன்னப்பிராசனம், காதுகுத்த, விஷ்ணுகும்பாபிஷேகம், கிரகாரம்பம், ஓமசாந்தி, மந்திராப்பியாசம், பொன்னேர் கட்ட விதைக்க, தீர்த்த ஸ்நானம்.

23. அவிட்டத்தில்: பூ முடித்தல், நாமகரணம், முடி வாங்க, காது குத்த, விருந்துண்ண, ஆபரணம் பூண, உபநயனம், வித்தியாரம்பம், பட்டாபிஷேகம், வாகனமேறுதல், கிரகப் பிரவேசம், சங்கீதாரம்பம், வியாபாரம் ஆரம்பிக்கவும்.

24. சதயத்தில்: கர்ப்பாதானம், பூ முடித்தல், குதிரை வாங்க, வியாபார கணக்கு முடிக்க, பூமி கொள்ள, கிரகம்வாங்க.

25. பூரட்டாதியில்: கபிலை, ஏத்தம் முதலியன ஸ்தாபிக்க, மந்திரம் ஜெபிக்க, விவகாரம் முடிவு செய்ய.

26. உத்திரட்டாதியில்: ருதுசாந்தி முதலியவும், சகல விருட்சம் வைக்க, கோபுர ஆலயாரம்பம் கிரகாரம்பமும்.

27. ரேவதியில்: ருதுசாந்தி முதலியவும், விவாகம், சாஸ்திராப்பியாசம், கோடியுடுக்க, ஆபரணம் தரித்தல், ராஜ தரிசனம், விதை விதைக்க, யாத்திரை கும்பாபிஷேகம் செய்யவும் உத்தமம்.

---

## இங்கிலீஷ் மாதாரம்ப கணிதச் சக்கரம்

| உ | 31 | 28 | 31 | 30 | 31 | 31 | 31 | 31 | 30 | 31 | 30 | 31 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தெய்வம் | ஜனவரி | பிப்ரவரி | மார்ச்சு | ஏப்ரல் | மே | ஜூன் | ஜூலை | ஆகஸ்டு | செப்டம்பர் | அக்டோபர் | நவம்பர் | டிசம்பர் |
| 1 | திங்கள் | வியாழ | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி |
| 2 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | திங்கள் | :புதன் | சனி | திங்கள் | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு |
| 3 | புதன் | சனி | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 4 | வியாழ | ஞாயிறு | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் |
| 5 | சனி | செவ்வா | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ |
| 6 | ஞாயிறு | புதன் | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 7 | திங்கள் | வியாழ | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி |
| 8 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 9 | வியாழ | சனி | சனி | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா |
| 10 | வெள்ளி | திங்கள் | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் |
| 11 | சனி | செவ்வா | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ |
| 12 | ஞாயிறு | புதன் | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி |
| 13 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு |
| 14 | புதன் | சனி | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 15 | வியாழ | ஞாயிறு | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா |
| 16 | வெள்ளி | திங்கள் | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ |
| 17 | ஞாயிறு | புதன் | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |
| 18 | திங்கள் | வியாழ | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 19 | செவ்வா | வெள்ளி | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு |
| 20 | புதன் | சனி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா |
| 21 | வெள்ளி | திங்கள் | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் |
| 22 | சனி | செவ்வா | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ |
| 23 | ஞாயிறு | புதன் | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |
| 24 | திங்கள் | வியாழ | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | ஞாயிறு |
| 25 | புதன் | சனி | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | திங்கள் |
| 26 | வியாழ | ஞாயிறு | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | செவ்வா |
| 27 | வெள்ளி | திங்கள் | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வியாழ | ஞாயிறு | புதன் | வெள்ளி | திங்கள் | புதன் |
| 28 | சனி | செவ்வா | புதன் | சனி | திங்கள் | வியாழ | சனி | செவ்வா | வெள்ளி | ஞாயிறு | புதன் | வெள்ளி |

முற்றிற்று.

நாம் பார்க்க வேண்டிய வருஷத்துகையை 28-ல் வகுத்து, வந்த பாக்கி எண்ணை மேற்படி சக்கரத்தில் தெய்தி யென்கிற வரிசையிற் கண்டு, அதற்கெதிரில் அதன் தலைப்பிற் கண்டிருக்கிற கிழமையே மேற்படி மாதத்தின் முதற்தேதி யென்றறிந்து கொள்க.

## உதாரணம்

1894-ஷுத்தில் மேமீ" முதற் றெய்தி எந்தக் கிழமையிலெனக் கண்டுகொள்ளவேண்டுமானல், 1894-ஐ 28-ல் வகுக்கவேண்டும்.
$\frac{1894}{28}$ 67-தரம் போக பாக்கி 18, இச் சக்கரத்தில் தெய்தி யென்கிற வரிசையில் 18-க்கு எதிரில் மே மாதத்தைப் பார்க்க செவ்வாய்க் கிழமையெனக் காணலாம். இவ்விதமே எவைகளையுங் காண்க.

ஜோதிட மென்பது கிரகங்களுக்கும், ஜீவர்களுக்கும், சராசரங்களுக்கு முண்டாகிய சம்பந்தத்தைக்கொண்டு பூத பௌஷிய வர்த்தமான காலங்களில் தெரிவிப்பதேயாம்.

ஜாதக மென்பது கிரகாதிகள் நின்ற நிலையைத் தெரிவிக்கும் படமாம்.

ஆதலினல், அது ஒவ்வொருவரும் தத்தம் ஆயுள் முதலிய நிர்ணயங்களைத் தெரிந்து கொள்வதற்கும், தங்கள் தங்கள் சவுக்கியா சவுக்கியத்தை யறிந்து நடந்து கொள்வதற்கும் ஆதாரமாயிருக்கின்றது.

இதற்காக முக்கியமாய் ஒருவர் ஜனித்த காலத்தில் கிரகங்களின் நிலை முதலியவைகளைத் தெறிந்துகொள்ள வேண்டியது ஆவசியகம்.

## அக்கிரகங்களாவன :

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| சூரியன் 1 | புதன் | 4 | சனி | 7 | ஆகியவைகளும் |
| சந்திரன் 2 | வியாழன் | 5 | ராகு | 8 | |
| செவ்வாய் 3 | சுக்கிரன் | 6 | கேது | 9 | ஆகியவைகளுமாம் |

இக் கிரகங்க ளமைந்து நிற்குமிடத்திற்கு இராசிமண்டலமென்று பெயர்.

## இதன் வடிவம்




ராசி மண்டலமானது 12-சம பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

இவற்றுள் ஒவ்வொரு பாகத்திற்கும் ராசி அல்லது வீடு என்று பெயர்.

இவ் வொவ்வொன்றிற்கும் தனித்தனி பெயரும் இடப்பட்டிருக்கிறது.

### அதாவது

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| மேடம் | 1 | கடகம் | 4 | துலாம் | 7 | மகரம் | 10 |
| இடபம் | 2 | சிங்கம் | 5 | விருச்சிகம் | 8 | கும்பம் | 11 |
| மிதுனம் | 3 | கன்னி | 6 | தனுசு | 9 | மீனம் | 12 |



இவ் விராசி யொவ்வொன்றிற்கும் இரண்டே கால் இரண்டே கால் நட்சத்திரங்களாக 27 நட்சத்திரங்கள் அமைந்திருக்கின்றன.

அவையாவன :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அசுபதி | 1 | மகம் | 10 | மூலம் | 19 |
| பரணி | 2 | பூரம் | 11 | பூராடம் | 20 |
| கிருத்திகை | 3 | உத்திரம் | 12 | உத்திராடம் | 21 |
| உரோகணி | 4 | அஸ்தம் | 13 | திருவோணம் | 22 |
| மிருகசீரிடம் | 5 | சித்திரை | 14 | அவிட்டம் | 23 |
| திருவாதிரை | 6 | சுவாதி | 15 | சதயம் | 24 |
| புனர்பூசம் | 7 | விசாகம் | 16 | பூரட்டாதி | 25 |
| பூசம் | 8 | அனுஷம் | 17 | உத்திரட்டாதி | 26 |
| ஆயிலியம் | 9 | கேட்டை | 18 | இரேவதி | 27–ஆம் |

இராசி பனிரண்டிலும், மேற்சொன்ன 27-நட்சத்திரங்களும் அமைந்து நிற்கும் விதமாவன :—

அசுபதி–1, பரணி–1, கிருத்திகை ¼-கொண்டது மேடம். கார்த்திகையில் ¾-லும் உரோகணி 1–ம், மிருகசீரிடம் முன்னரையும் கொண்டது இடபம்.

இவ்விதம் முறையே 2¼–நட்சத்திரங்கள் ஒவ்வொரு ராசியாக 12–ராசியிலும் 27–நட்சத்திரங்களும் அமைந்திருக்கின்றன.

இன்னும் ஒவ்வொரு நட்சத்திரமும் நன்னுன்கு பாகங்களாகக் கொள்ளப்பட்டிருக்கின்றது. இதற்குப் பாதங்களென்றும் பெயர்.

மேற்கண்ட 27–நட்சத்திரங்களும் பனிரெண்டு ராசியிலும் அமைந்திருக்கும் விதம் அடியில் வரும் படத்தில் விசிதமாய்க் காண்க.

கிழக்கு






மேற்கு

பிரிதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஆகிய பஞ்ச பூதங்களில் சூன்யமாகி ஆகாசத்தை நீக்கி மற்றைய நாலு பூதங்களின் தன்மை இப் பன்னிரண்டு ராசிகளிலும் அமைந்திருக்கின்றன. அவற்றிற்கு ராசிப் பிரகிருதிகளெனப் பெயர்.

## 1. இராசிப் பிரகிருதிகள்

| | | | |
|---|---|---|---|
| பிரிதிவி | அப்பு | தேயு | வாயு |
| ரிடபம் | கடகம் | மேடம் | மிதுனம் |
| கன்னி | விருச்சிகம் | சிம்மம் | துலாம் |
| மகரம் | மீனம் | தனுசு | கும்பம் |

## 2. புருஷ ராசிகள்

(3) இதில் மேடம், மிதுனம், சிம்மம், துலாம், தனுசு, கும்பம் இவை ஆறும் ஆண் ராசியாம்.

## 3. ஸ்திரீ ராசிகள்

இடபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் இவை ஆறும் பெண் ராசியாம்.

## 4. இராசிகளின் வர்ணங்கள்

மேடம், சிம்மம், தனுசு இவை செம்மை நிறமுடையவைகள்.

விருச்சிகம், கும்பம், மீனம் இவை பசுமை நிறமுடையவை.

மகரம், ரிஷபம், துலாம், கர்க்கடகம் இவை வெண்மை நிறமுடையவை.

கன்னி, மிதுனம் இவை கருமை நிறமுடையவை.

## 5. இராசிகளின் பிரிவுகள்

(a) மேடம், கடகம், துலாம், மகரம் இந் நான்கும் சர ராசியாம்.

(b) ரிடபம், சிம்மம், விருச்சிகம், கும்பம், இந் நான்கும் ஸ்திர ராசியாம்

(c) மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இந் நான்கும் உபய ராசியாம்.

## 6. இராசிகளின் கடிகைகள்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| மேடம் | நாழிகை | $4\frac{1}{4}$ | சிம்மம் | நாழிகை | $5\frac{1}{4}$ | தனுசு | நாழிகை | $5\frac{1}{2}$ |
| ரிடபம் | ,, | $4\frac{3}{4}$ | கன்னி | ,, | 5 | மகரம் | ,, | $5\frac{1}{4}$ |
| மிதுனம் | ,, | $5\frac{1}{4}$ | துலாம் | ,, | 5 | கும்பம் | ,, | $4\frac{3}{4}$ |
| கடகம் | ,, | $5\frac{1}{2}$ | விருச்சிகம் | ,, | $5\frac{1}{4}$ | மீனம் | ,, | $4\frac{1}{4}$ |

ஆக ராசி 12-க்கு நாழிகை-60

விருச்சிக மகரம் மிதுன மைந்தேகால்
மேஷ மீன நான்குடன் காலும்
வருந்துலாங் கன்னி யைந்துமே யாகும்
வனை தனுர் கடக மைந்தரை யாம்
திருக்கும்ப மிடபம் நான்குடன் முக்கால்
சிங்க மைந்துட னொரு காலாய்த்
தருகுவ ரின்னாழிகை யொரு ராசி
தனக் குரித் தாமெனச் சாற்றே.

## 7. இராசிகளின் திக்குகள்

மேஷம், இடபம், மிதுனம் இம் மூன்றும் கிழக்கு

கடகம், சிங்கம், கன்னி இம் மூன்றும் தெற்கு

துலாம், விருச்சிகம், தனுசு இம் மூன்றும் மேற்கு

மகரம், கும்பம், மீனம் இம் மூன்றும் வடக்கு.

## ராசியின் லக்ஷண சக்கரம்

ராசி, கடிகை, பிரகிருதி, பால், வர்ணம், வகுப்பு, திக்கு, முதலியவைகளை இச் சக்கரத்திற் காண்க.

| | | | |
|---|---|---|---|
| 12<br>மீனம்–$4\frac{1}{4}$<br>அப்பு<br>பெண்<br>பசுமை<br>உபயம்<br>வடக்கு | 1<br>மேடம்-$4\frac{1}{4}$<br>தேயு<br>ஆண்<br>செம்மை<br>சரம்<br>கிழக்கு | 2<br>இடபம்-$4\frac{3}{4}$<br>பிருதிவு<br>பெண்<br>வெண்மை<br>ஸ்திரம்<br>கிழக்கு | 3<br>மிதுனம்-$5\frac{1}{4}$<br>வாயு<br>ஆண்<br>கருமை<br>உபயம்<br>கிழக்கு |
| 11<br>கும்பம்-$4\frac{3}{4}$<br>வாயு<br>ஆண்<br>பசுமை<br>ஸ்திரம்<br>வடக்கு | | | 4<br>கடகம்-$5\frac{1}{2}$<br>அப்பு<br>பெண்<br>வெண்மை<br>சரம்<br>தெற்கு |
| 10<br>மகரம்-$5\frac{1}{4}$<br>பிருதிவு<br>பெண்<br>கருமை<br>சரம்<br>வடக்கு | | | 5<br>சிம்மம்-$5\frac{1}{4}$<br>தேயு<br>ஆண்<br>செம்மை<br>ஸ்திரம்<br>தெற்கு |
| 9<br>தனுசு-$5\frac{1}{2}$<br>தேயு<br>ஆண்<br>செம்மை<br>உபயம்<br>மேற்கு | 8<br>விருச்சிகம்-$5\frac{1}{4}$<br>அப்பு<br>பெண்<br>பசுமை<br>ஸ்திரம்<br>மேற்கு | 7<br>துலாம் 5<br>வாயு<br>ஆண்<br>வெண்மை<br>சரம்<br>மேற்கு | 6<br>கன்னி-5<br>பிருதிவு<br>பெண்<br>கருமை<br>உபயம்<br>தெற்கு |

முன் சொன்ன கிரகங்களுள் சூரியனும், சந்திரனும், முக்கியமானவர்கள், இவ் விரண்டிலும் சூரியன் பெரிய கிரகம்; சந்திரனே சிறியது.

## சூரியன்

இது ஞாயிற்றுக்கிழமைக்கு அதிகாரி 12-ராசிகளையும், 365 நாள், 15-நாழிகை, 32-விநாடியிற் சுற்றி வருகிறது. மேட ராசியில் ஆரம்பிக்கும்போது வருஷப்பிறப்பு என்று பெயர். ஒவ்வொரு ராசியிலும் சூரியன் செல்லும் தினங்களை அடியிற் கண்ட குறிப்பில் காண்க.

| மாதத்தின் பெயர் | சித்திரை | வைகாசி | ஆனி | ஆடி | ஆவணி | புரட்டாசி |
|---|---|---|---|---|---|---|
| இராசி | மேடம் | ரிடபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
| நாள் | 30 | 31 | 31 | 31 | 31 | 30 |
| நாழிகை | 57 | 35 | 37 | 29 | | 25 |
| விநாடி | | 59 | 50 | 13 | 25 | 9 |

| மாதத்தின் பெயர் | ஐப்பசி | கார்த்திகை | மார்கழி | தை | மாசி | பங்குனி |
|---|---|---|---|---|---|---|
| இராசி | துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |
| நாள் | 29 | 29 | 29 | 29 | 29 | 30 |
| நாழிகை | 42 | 38 | 18 | 27 | 50 | 22 |
| விநாடி | 53 | 40 | 53 | 10 | 10 | 8 |

## சூரியன் நட்சத்திரங்களில் செல்லும் விபரம்

### ஆதிபாகம்

| நட்சத்திரம் | அசுபதி | பரணி | கிர்த்திக | ரோகணி | மிருக்சிரம் | திருவாதிரை | புனர்பூசம் | பூசம் | ஆயிலியம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | 13 | 13 | 13 | 13 | 14 | 14 | 14 | 3 | 13 |
| நாழிகை | 45 | 45 | 55 | 58 | 0 | 3 | 2 | 59 | 59 |
| விநாடி | 21 | 21 | 0 | 13 | 50 | 29 | 32 | 39 | 39 |

### மேற்படி நடுப்பாகம்

| நட்சத்திரம் | மகம் | பூரம் | உத்திரம் | அஸ்தம் | சித்திரை | சுவாதி | விசாகம் | அனுஷம் | கேட்டை |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | 13 | 13 | 13 | 13 | 13 | 1 | 13 | 13 | 13 |
| நாழிகை | 49 | 46 | 35 | 31 | 21 | 14 | 11 | 10 | 10 |
| விநாடி | 51 | 51 | 6 | 10 | 48 | 23 | 56 | 31 | 39 |

## மேற்படி கடைப்பாகம்

| நட்சத்திரம் | மூலம் | பூராடம் | உத்திராடம் | திருவோணம் | அவிட்டம் | சதயம் | பூரட்டாதி | உத்ரட்டாதி | ரேவதி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 | 13 |
| நாழிகை | 1 | 1 | 4 | 5 | 10 | 15 | 19 | 29 | 29 |
| விநாடி | 44 | 43 | 29 | 35 | 31 | 38 | 11 | 51 | 50 |

மேற்கண்ட விதமாக 12-ராசிகளையும், 27-நட்சத்திரங்களையும், 365-நாள், 15-நாழிகை, 32-விநாடியில் ஒரு தடவை சுற்றி வருகிறபடியால் இதற்குச் சூரிய வருட மென்று பெயர்.

## சந்திரன்

இதற்குச் சிறு கிரக மென்றும் பெயர்; திங்கட்கிழமைக்கு அதிகாரி; சூரியனிலும் அதிவேகமாகச் செல்லும் சுபாவமுடையது 12-ராசிகளையும், 27-நாள், 20-நாழிகை சில நிமிஷங்களில் ஒரு தடவை சுற்றி வருகிறது; ஆகையால் சந்திரிகை வருடமானது 355-நாள் 20-நாழிகை ஏற்படுகின்றது. சந்திரிகை மாதமானது 12-ராசியிலும் சந்திரன் சுற்றிவரும் நாட்களைக் கொண்டே ஏற்படுத்தப்படுகிறது; சந்திரிகை மாதமானது கிருஷ்ணபக்ஷ மென்றும், சுக்கில பக்ஷமென்றும் இரண்டு பாதமாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. கிருஷ்ண பக்ஷ ஆரம்ப முதல் சந்திரன் குறைந்து கொண்டே வந்து அமாவாசையில் முற்றும் மறைந்துபோய் விடுகிறது. இப்படி நாடோறுங் குறைவதற்குக் காரணமாவது சூரியனுக்குச் சமீபத்தில் வந்தபோது சூரியனுடைய ஒளியில் மறைந்து போய்விடும்; அதுவே அமாவாசையாம். சுக்கிலபக்ஷ ஆரம்ப முதல் சூரியனில் நின்றும் பிரிந்துகொண்டே போகின்றபடியால் நாள்தோறும் வளர்ந்துகொண்டே போய் சூரியனில் நின்று வெகு தூரம் எட்டியவிட்டால் பூரணமாய்த் தெரிகிறபடியால் பூரண அமா

வாசை யென்றும், பூரண சந்திரனென்றும் பெயர். சூரியனில் நின்றும் சந்திரன் 12-பாகை வரையிற் சென்றால் பிரதமை திதி யென்றும் பெயர். 12–லிருந்து 24–பாகை வரையிற் சென்றால் துவிதிகை யென்றும் பெயர். இவ்விதம் ஒவ்வொரு பனிரெண்டு பாகைக்கும் ஒவ்வொரு திதியாக 180–பாகையில் நின்றால் பௌர்ணமை அமாவாசை பூரண சந்திரனும், இப் பூரண அமாவாசை முதற்கொண்டு 12–12 பாகையாகச் சூரியனை நெருங்கிச் செல்கின்றபடியால் நாள்தோறும் முறையே குறைந்து, மறு 180-வது பாகையில் வரும்போது சந்திரன் கண்ணிற்குத் தோற்றமல் மறைந்தே போகிறது. இதுவே பூர்வ பக்ஷ மல்லது அமரபக்ஷ திதியென்றும் சுக்கில பக்ஷ மல்லது கிருஷ்ண பக்ஷ திதி யென்றும் முறையே பெயராம்.

ராசி மண்டலமானது 360-பாகையாக பிரிக்கப்பட்டிருக்கிறது.

இம் முன்னூற்றி யறுபது பாகையும், 12-ராசிக்குப் பாகித்தால் ராசி யொன்றுக்கு 30–பாகையாக வருகிறது. ஒவ்வொரு பாகைக்கும் 60-நாழிகையாகவும், நாழிகை யொன்றுக்கு 60-விநாடியாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது. சந்திரனது 12–ராசியிலும் 27-நட்சத்திரத்திலும் சுற்றி வருகிற விபரம் பின் கண்டிருக்கும் குறிப்பினால் தெரிந்து கொள்ளலாம்.

சந்திரன் இராசிகளிலும் நக்ஷத்திரங்களிலும்

| இராசி | நட்சத்திரம் | பாத சாரம் | நாள் | நாழி கை | விநாடி | தர்ப்ப ரை |
|---|---|---|---|---|---|---|
| மேடம் | அசுவினி | 4 | 1 | 3 | 8 | 0 |
| | பரணி | 4 | 1 | 4 | 14 | 0 |
| | கிருத்திகை | 1 | 0 | 16 | 19 | 31 |
| | ஆக | 9 | 2 | 23 | 41 | 30 |
| இடபம் | கிருத்திகை | 3 | 0 | 48 | 58 | 30 |
| | உரோகணி | 4 | 1 | 6 | 0 | 0 |
| | மிருகசிரம் | 2 | 0 | 33 | 45 | 0 |
| | ஆக | 9 | 2 | 28 | 43 | 30 |
| மிதுனம் | மிருகசிரம் | 2 | 0 | 33 | 45 | 0 |
| | திருவாதிரை | 4 | 1 | 6 | 27 | 0 |
| | புனர்பூசம் | 3 | 0 | 49 | 33 | 0 |
| | ஆக | 9 | 2 | 29 | 45 | 0 |
| கடகம் | புனர்பூசம் | 1 | 0 | 16 | 31 | 0 |
| | பூசம் | 4 | 1 | 5 | 21 | 0 |
| | ஆயிலியம் | 4 | 1 | 4 | 14 | 0 |
| | ஆக | 9 | 2 | 26 | 6 | 0 |
| சிங்கம் | மகம் | 4 | 1 | 3 | 18 | 0 |
| | பூரம் | 4 | 1 | 1 | 43 | 0 |
| | உத்திரம் | 1 | 0 | 15 | 10 | 0 |
| | ஆக | 9 | 2 | 20 | 11 | 0 |
| கன்னி | உத்திரம் | 3 | 0 | 45 | 30 | 0 |
| | அஸ்தம் | 4 | 0 | 59 | 27 | 0 |
| | சித்திரை | 2 | 0 | 29 | 13 | 0 |
| | ஆக | 9 | 2 | 14 | 10 | 0 |

நிற்கும் சுத்தநாளைக் காண்பிக்கும் சக்கரம்

| இராசி | நட்சத்திரம் | பாதசாரம் | நாள் | நாழிகை | விநாடி | தார்ப்பரை |
|---|---|---|---|---|---|---|
| துலாம் | சித்திரை | 2 | 0 | 29 | 13 | 0 |
| | சுவாதி | 4 | 0 | 57 | 26 | 0 |
| | விசாகம் | 3 | 0 | 42 | 43 | 30 |
| | ஆக | 9 | 2 | 9 | 22 | 30 |
| விருச்சிகம் | விசாகம் | 1 | 0 | 14 | 14 | 30 |
| | அனுஷம் | 4 | 0 | 59 | 11 | 0 |
| | கேட்டை | 4 | 0 | 55 | 52 | 0 |
| | ஆக | 9 | 2 | 9 | 17 | 30 |
| தனுசு | மூலம் | 4 | 0 | 56 | 0 | 0 |
| | பூராடம் | 4 | 0 | 55 | 54 | 0 |
| | உத்திராடம் | 1 | 0 | 14 | 3 | 0 |
| | ஆக | 9 | 2 | 5 | 57 | 0 |
| மகரம் | உத்திராடம் | 3 | 0 | 42 | 9 | 0 |
| | திருவோணம் | 4 | 0 | 56 | 9 | 0 |
| | அவிட்டம் | 2 | 0 | 28 | 40 | 0 |
| | ஆக | 9 | 2 | 6 | 58 | 0 |
| கும்பம் | அவிட்டம் | 2 | 0 | 28 | 40 | 0 |
| | சதயம் | 4 | 0 | 58 | 22 | 0 |
| | பூரட்டாதி | 3 | 0 | 44 | 24 | 0 |
| | ஆக | 9 | 2 | 11 | 26 | 0 |
| மீனம் | பூரட்டாதி | 1 | 0 | 14 | 48 | 0 |
| | உத்திரட்டாதி | 4 | 1 | 0 | 19 | 0 |
| | ரேவதி | 4 | 1 | 1 | 35 | 0 |
| | ஆக | 9 | 2 | 16 | 42 | 0 |
| ஆக மொத்தம் | 27 | 108 | 27 | 22 | 20 | 0 |

## குறிப்பு

நவக்கிரகங்களுள் சூரியன், சந்திரன் ஆகியவை தவிர மற்ற கிரகங்களாகிய செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சனி, ஆகிய இவர்கள் பெரும்பான்மை வலமாகவும், சிறுபான்மை இடமாகவும் சுற்றி வருவார்கள். இவர்கள் நேரே வலமாய்ப் போவதற்கு அதிசாரமென்றும், பின்னிடைந்து போவதற்கு வக்கர மென்றும் பெயர்.

## அங்காரகன் அல்லது செவ்வாய்

இது செவ்வாய்க்கிழமைக்கு அதிகாரி; சூரியனைப் பார்க்கினும் அதிக தாமதமான நடையுள்ளது. சற்றேறக்குறைய 45-நாளைக்குள் ஒரு ராசியைக் கடக்கும். இவ்விதம் சுமார் 12-வருடத்திற்குள் 12-ராசியையும் சுற்றி வரும்.

## புதன்

இது புதன்கிழமைக்கு அதிகாரி, சூரியனைப் பார்க்கிலும் துரித நடையும், சந்திரனைப் பார்க்கிலும் தாமத நடையுமுள்ளது. ஒருமாதம் சில்லரை நாளில் 12-ராசியையும் ஒரு முறை சுற்றி வருகிறது.

## குரு அல்லது வியாழன்

இது வியாழக்கிழமை அதிகாரி. இது மிகவும் தாமத நடையுள்ளது. ஒரு ராசியை ஒரு வருஷத்தில் கடக்கிறது. இவ்விதம் 12-ராசியையும் பனிரெண்டு வருஷத்தில் ஒருமுறை சுற்றிவரும்.

## சுக்கிரன்

இது வெள்ளிக்கிழமைக்கு அதிகாரி. இது சூரியனைப் பார்க்கிலும் சில சமயம் தாமத நடையும், சில சமயம் துரித நடையுமுள்ளது. இது எப்போதும் சூரியனுக்குச் சமீபத்திலிருக்கும். சில சமயம் சூரியனுக்கு முன்னும், சில சமயம் சூரியனுக்குப் பின்னுமாய் நடக்கும். சிலசமயம் சூரியனின்றும் சற்று தூரத்தில் போய்விட்டால் பின்னிடைந்து சமீபித்துவிடும். வருஷத்தில் ஒரு தடவை சூரியனுடைய வொளிக்கு எதிரிலாகி அதற்குமுன் பக்கத்திலாகும்போது மேற்குத் திசையில் உதயமாகும். சூரியனொளிக்கு எதிரிலாகி அதற்குப் பின் பக்கத்தில் நிற்கும்போது கீழ்த் திசையில் உதயமாகும்.

## சனி

இது சனிக்கிழமைக்கு அதிகாரி. மிகவும் தாமத நடையுள்ளது. $2\frac{1}{2}$-வருஷத்தில் ஒரு ராசியைக் கடக்கும். இப்படி 12-ராசியையும் 30-வருஷத்திற் கடக்கும்.

## இராகு, கேது

இவர்கள் இடமாகவே சுற்றி வருவார்கள். ஒவ்வொரு ராசியையும் $1\frac{1}{2}$-வருஷம் சுற்றுவார்கள். இவ்விதம் 12-ராசியையும் 18-வருஷத்திற் சுற்றி வருவார்கள். இவர்கள் சூரியன் சந்திரனேடு சேரும்போது அல்லது எதிர்ப்படும்போது முறையே சூரிய கிரகணம், சந்திர கிரகணம் ஆகியவைகள் உண்டாகின்றன. அதற்கு நிபந்தனையாவது பௌர்ணமை அமாவாசையின் இரவில் சந்திரனுக்கு எதிர்ப்பட்டாலும் கூடினுலும் சந்திர கிரகண முண்டாகிறது. அமாவாசையில் சூரியனுக்கு எதிர்ப்பட்டாலும், கூடினுலும் அன்று பகலில் சூரிய கிரகண முண்டாகிறது.

இவர்கள் எவ்வளவு அளவாகச் சந்திக்கிருர்களோ அல்லது கூடுகிருர்களோ அவ்வளவு பிரமாணமே கிரகணச் சங்கையாம்.

## விண்ணப்பம்

சகோதரர்களே! இதுவரையில் நாம் இராசி யின்னதென்றும், முக்கிய நட்சத்திர மின்னதென்றும், இவ் விராசியில் நட்சத்திரம் அமைந்து நிற்கும் வித மிவ்வித மென்றும், சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, இராகு, கேது ஆகிய கிரகங்கள் சுற்றி வரும் விதமும், இராசியின் கால அளவு முதலியவைகளையும், தெளிவாகவும், கூடியவரையில் சுருக்கமாகவும் சொன்னேம். இனி சோதிடத்திற்கு முக்கியமாய் ஆதாரமாகிய பொது விதிகளை இங்கு சொல்லுவாம். அவற்றை ஒவ்வொருவரும் சற்று கவனித்துத் தங்கள் ஞாபகத்தில் நிலை நிறுத்துவார்களேயானுல் கடவுளினது கிருபையால் யாதொரு சந்தேகமறத் தங்கள் தங்கள் ஜாதக பலனைத் தெரிந்து கொள்வார்களென்பது திண்ணம்.

## 1. கிரகப் பிரகிருதிகள்

| பிரிதிவு | அப்பு | தேயு | வாயு | ஆகாயம் |
|---|---|---|---|---|
| செவ்வாய் | சுக்கிரன் சந்திரன் | குரு சூரியன் | புதன் | சனி இராகு கேது |

## 2. கிரக ஆண், பெண்

ஆண் கிரகங்கள் :—சூரியன், குரு, ராகு, கேது.

பெண் கிரகங்கள் :—சந்திரன், சுக்கிரன்.

அலி கிரகங்கள் :—புதன், சனி.

## 3. கிரக லக்ஷணமும் உருவமும் குணமும்

(சூரியன்) எப்பொழுதும் விழிப்புள்ளவர், கொழுத்த தேகி; சம வளர்த்தி; கொஞ்ச ரோம முள்ளவர். அதிக வீரத் தன்மையும் சுருசுருப்புமுள்ளவர், மஞ்சள் நிறமுள்ள கண்ணும், செம்மை வர்னமுள்ள தேகமும், பித்த குணமு முடையவராம்.

(சந்திரன்) சுத்த தேகம், வெள்ளைத்தோல், கபவாத தன்மை மதுரமாகிய வார்த்தை, நெடியன், மந்தபுத்தி.

(செவ்வாய்) இறக்கமற்றவன், கோபி, குட்டையன், சதா வாலிபன், சிவப்பு வர்னம், வலிய மார்பன், கொலை பாதகன்.

(புதன்) சமவளர்த்தி, மதுர வார்த்தை, பச்சைநிறம், அதிகக் கருத்து, புத்தியுள்ளவன், திரேக வீரியன், பித்தகப சுபாவமுடையவர், கோதுமைநிற மயிருள்ளவர், பலமான எலும்புள்ளவர்.

(குரு) கொழுத்த தேகி, குட்டையன், சிறு கண், மிகவும் புத்தி யுடையவர், கப சுபாவம், வாதம், கோதுமை நிறமுள்ள மயிர், பலமான எலும்புள்ளவர்.

(சுக்கிரன்) வெண்மை நிறம், கருப்பு சுருட்டைமயிர், சிரித்த முகம், கப சுபாவம் மதுர வார்த்தை, புத்திமான், சங்கீதப் பிரியன்.

(சனி) மெலிந்த தேகி, நெட்டயன், மஞ்சள், வர்னக் கண், கருப்புவர்னம், தலையிலும், தேகத்திலும் அதிக ரோமமுள்ளவன், துஷ்டன், கோளன், அறிவீனன், நகமும் பல்லும் பெரிதுள்ளவன்.

(இராகு, கேது) நெட்டயன், கருப்பு வர்னம், தரம், புகழ்ச்சி, அகங்காரி, முகத்தில் புள்ளியுள்ளவன், எவரிடத்தில் சிநேகம் பண்ணுகிறுர்களோ அவர்களின் குணத்தை கிரகித்துக் கொள்ளும் சுபாவ முடையவர்கள்.

## 4. கிரக திக்குகள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியன் | நடு | புதன் | வடகிழக்கு | சனி | மேற்கு |
| சந்திரன் | தென்கிழக்கு | குரு | வடக்கு | இராகு | தென்மேற்கு |
| செவ்வாய் | தெற்கு | சுக்கிரன் | கிழக்கு | கேது | வடமேற்கு |

## கிரக குணங்கள்

| குரூரம் | சௌமியம் |
|---|---|
| சூரியன்<br>செவ்வாய்<br>சனி<br>இராகு<br>கேது<br>தேய்பிறைச் சந்திரன் | புதன்<br>குரு<br>சுக்கிரன்<br>வளர்பிறைச் சந்திரன் |

## கிரகப் பிணி

| வாதம் | பித்தம் | சேத்துமம் |
|---|---|---|
| குரு<br>புதன்<br>சனி | சூரியன்<br>செவ்வாய்<br>இராகு<br>கேது | சுக்கிரன்<br>சந்திரன் |

## கிரக சுவை

| கார்ப்பு | துவர்ப்பு | உவர்ப்பு | தித்திப்பு | கைப்பு | புளிப்பு |
|---|---|---|---|---|---|
| சூரியன் | செவ்வாய் | புதன் | சந்திரன்<br>குரு<br>சுக்கிரன் | சனி | இராகு<br>கேது |

## கிரகப் பிரிவுகள்

| வக்கிரம் | ஸ்திரக் கிரகம் | உபயக் கிரகம் |
|---|---|---|
| சந்திரன்<br>செவ்வாய்<br>இராகு<br>கேது | சூரியன்<br>சுக்கிரன் | புதன்<br>குரு<br>சனி |

## கிரகங்களின் ஆக்ஷி அதிபகை

| கிரகம் | சூரியன் | சந்திரன் | செவ்வா | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| ஆக்ஷி | சிங்கம் | கடகம் | மேடம் விருச்சி | மிதுனம் கன்னி | தனுசு மீனம் | இடபம் துலாம் | மகரம் கும்பம் |
| அதிபகை | கும்பம் | மகரம் | இடபம் துலாம் | தனுசு மீனம் | மிதுனம் கன்னி | மேடம் விருச்சி | கடகம் சிங்கம் |

## கிரகங்களின் உச்சம் அதியுச்சம் நீசம் அதிநீசம் அறியவும்

| கிரகப் பெயர் | | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு கேது |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| உச்சம் | ராசி | மேடம் | இடபம் | மகரம் | கன்னி | கடகம் | மீனம் | துலாம் | மிதுனம் |
| அதியுச்சம் | பாகை | 19 | 3 | 28 | 15 | 15 | 27 | 21 | முழுதும் |
| நீசம் | ராசி | துலாம் | விருச்சிகம் | கடகம் | மீனம் | மகரம் | கன்னி | மேடம் | தனுசு |
| அதிநீசம் | பாகை | 19 | 3 | 28 | 15 | 15 | 27 | 21 | முழுதும் |

## நவக்கிரக நட்பாக்ஷி, உச்சம், பகை, நீசம், திரிகோணங்கள்

| | | | |
|---|---|---|---|
| மீனம்—$4\frac{1}{4}$<br>ரவி-நட்பு<br>சந்திரஸ் நட்பு<br>செவ்வாய்-பகை<br>புதன்-நீசம்<br>குரு-ஆட்சி<br>சுக்—உச்சம்<br>சனி-நட்பு<br>ராகு-நட்பு<br>கேது-ஆட்சி | மேடம்—$4\frac{1}{4}$<br>ரவி உச்சம்<br>சந்திரன்-பகை<br>செவ்-ஆட்சிமூல<br>த்திரிகோணம்<br>புதன்-நட்பு<br>குரு பகை<br>சுக்-நட்பு<br>சனி-நீசம்<br>ராகு-நட்பு<br>கேது-நட்பு | இடபம்—$4\frac{3}{4}$<br>ரவி-பகை<br>சந்திரன்-உச்சம்<br>மூலதிரிகோண<br>செவ்வாய்-நட்பு<br>புதன்-நட்பு<br>குரு நட்பு<br>சுக்கி ஆட்சி<br>சனி-நட்பு<br>ராகு-ஆட்சி<br>கேது-ஆட்சி | மிதுனம்—$5\frac{1}{4}$<br>ரவி-பகை<br>சந்திரன்-நட்பு<br>செவ்-நட்பு<br>புதன்-ஆட்சி<br>குரு-நட்பு<br>சுக்-நட்பு<br>சனி-நட்பு<br>ராகு-ஆட்சி<br>கேது-உச்சம் |
| கும்பம்-$4\frac{3}{4}$<br>ரவி-பகை<br>சந்திரன்-பகை<br>செவ் பகை<br>புதன்-நட்பு<br>குரு-நட்பு<br>சுக்-நட்பு<br>சனி-ஆட்சி<br>ராகு-ஆட்சிமூல<br>த்திரிகோணம்<br>கேது-நட்பு | | | கடகம்—$5\frac{1}{4}$<br>ரவி-பகை<br>சந்திரன்-ஆட்சி<br>செவ்-நீசம்<br>புதன்-நட்பு<br>குரு-உச்சம்<br>சுக்-பகை<br>சனி-பகை<br>ராது-பகை<br>கேது-பகை |
| மகரம்—$5\frac{1}{4}$<br>ரவி-பகை<br>சந்திரன்-பகை<br>செவ்வா-உச்சம்<br>புதன்-நட்பு<br>குரு-நீசம்<br>சுக்-நட்பு<br>சனி-ஆட்சி மூல<br>த்திரிகோணம்<br>ராகு-<br>கேது-ஆட்சி | | | சிங்கம்—$5\frac{1}{2}$<br>ரவி-ஆட்சி-மூல<br>த்திரிகோணம்<br>சந்திரன்-பகை<br>செவ்-பகை<br>புதன்-பகை<br>குரு-நட்பு<br>சுக்-பகை<br>சனி-பகை<br>ராகு-பகை<br>கேது-பகை |
| தனுசு—$5\frac{1}{2}$<br>ரவி-நட்பு<br>சந்திரன்-நட்பு<br>செவ்-பகை<br>புதன்-நட்பு<br>குரு-ஆட்சி-மூல<br>த்திரிகோணம்<br>சுக்-நட்பு<br>சனி-நட்பு<br>ராகு-ஆட்சி<br>கேது-நட்பு | விருச்சிகம்—$5\frac{1}{4}$<br>ரவி-பகை<br>சந்திரன்-நீசம்<br>செவ்-ஆட்சி<br>புதன்-நட்பு<br>குரு-பகை<br>சுக்-நட்பு<br>சனி-பகை<br>ராகு-<br>கேது-உச்சம் | துலாம்—5<br>ரவி-நீசம்<br>சந்திரன்-பகை<br>செவ்-நட்பு<br>புதன்-நட்பு<br>குரு-நட்பு<br>சுக்-ஆட்சி-மூல<br>த்திரிகோணம்<br>சனி-உச்சம்<br>ராகு-ஆட்சி<br>கேது-ஆட்சி | கன்னி—5<br>ரவி-பகை<br>சந்திரன்-நட்பு<br>செவ்-நட்பு<br>புதன்-ஆட்சி-மூ<br>லத்திரிகோணம்<br>குரு-நட்பு<br>சுக்-நீசம்<br>சனி-நட்பு<br>ராகு-நட்பு<br>கேது-நட்பு |

## கிரக நட்பு பகை சமம்

| கிரகப் பெயர் | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு |
|---|---|---|---|---|---|---|---|---|
| சூரியன் | 0 | நட்பு | நட்பு | நட்பு | நட்பு | பகை | பகை | பகை |
| சந்திரன் | நட்பு | 0 | பகை | நட்பு | பகை | பகை | பகை | பகை |
| செவ்வா | நட்பு | சமம் | 0 | சமம் | சமம் | சமம் | பகை | பகை |
| புதன் | சமம் | நட்பு | பகை | 0 | பகை | நட்பு | நட்பு | நட்பு |
| வியாழ | நட்பு | சமம் | சமம் | சமம் | 0 | சமம் | சமம் | சமம் |
| சுக்கிரன் | பகை | சமம் | சமம் | நட்பு | சமம் | 0 | நட்பு | நட்பு |
| சனி | பகை | சமம் | சமம் | சமம் | சமம் | நட்பு | 0 | நட்பு |
| இராகு | பகை | சமம் | சமம் | சமம் | சமம் | நட்பு | நட்பு | 0 |
| கேது | பகை | சமம் | சமம் | சமம் | சமம் | நட்பு | நட்பு | 0 |

## கிரகாதிபத்தியங்கள்

### 1. சூரியன்

(ஆட்சி பெறில்) மூக்காற் பலமானதால் அதற்குப் பலன் சத்திய வசனம், ஆத்ம சீலம், உத்தியோகம், பரிசுத்தம், அனுஷ்டானம், பிதிர் சுகம்.

(உச்சமாகில்) $1\frac{1}{4}$-பலமானதால் மேற்கூறிய பலத்துடன் சந்தோஷமும், சைவத்வமும், ஸ்திரீ போகமும், அஸ்வ லாபமும், சிவ தேவதை யாராதனை, பிரதாபம், இராஜ சேவை, பொருள்விர்த்தி.

(நட்புபெறின்) $\frac{1}{2}$-பலமானதால் எல்லாவற்றையுஞ் சமமாகக் கொள்ளுதல், தவாங்கம், வனசஞ்சாரம், மேன்பாடு, பிதுர் சந்தோஷம்.

(நீசமாகில்) $\frac{1}{4}$-பலமானதால் தேக உஷ்ணம், ஆசாரக் குறைவு, பிதுர்த்துவேஷம், சுரம், அவமானம்.

(பகையாகில்) சிரோபாரம், நேத்திரச் சூடு, சிரங்கு, உஷ்ண வேதையுடைய பலனும்.

### 2. சந்திரன்

(ஆக்ஷிபெறில்) மாதுரு சுகம், தன்மையாய் வருதல், ஸ்நானுதிகள், கந்தம், புஷ்ப சாமரம், தர்மம், கணபதி யாராதனை.

(உச்சம் பெறில்) முன் கூறிய பலத்துடன், பட்டு பீதாம்பர மணிதல், சுக போஜனம், மதுரப்பாலுணவு, வெள்ளி லாபம்.

(நட்பாகில்) கீர்த்தி பெறுதல், அஸ்வமேறுதல், உத்யோகஞ் செய்தல்.

(நீசம் பெறில்) மேற்கூறிய பலன்களை தாமதஞ் செய்பவராயும், சிலேர்ப்பனை சீதள வாதமும், அன்னிய ஸ்திரீ போகம்.

(பகை பெறில்) ஜன்னி தோஷம், ஜலகெண்டம், மாதுரு பீடை, சீத சுரமுண்டு.

## 3. செவ்வாய்

(ஆட்சி பெறில்) சேனாதிபத்தியம், ஸ்திரீபோகம், பூமி பலிதமும், சகோதர பலன், சௌரியம்.

(உச்சம் பெறில்) மேற்கூறிய பலத்துடன் ஆஞ்சநேய ருச்சாடனம், காரிய வெற்றி, யுத்தரங்க தீரம், சந்தோஷம்.

(நட்பு பெறில்) மேற்கூறிய பலத்துடன் டம்பம், நிதானம், சமாதானம், கூர்மையோடுங் கூடிய அறிவு, சோரபயங்கரம், ரணம்.

(நீசம் பெறில்) இழிவான நடக்கை, பிளவை ரோகம்.

(பகையாகில்) விரண பாதை, அக்கினி பயம், ரொணத் துவேஷம், பித்த வாய்வு உபத்திரவம் முதலியவைகளாம்.

## 4. புதன்

(ஆட்சி பெறில்) வாக்கு சாதுரியம், வியாபாரம், சத்திய வாதம், மாதுல சுகம், பந்துக்கள் சேர்க்கை.

(உச்சம் பெறில்) மேற்கூறிய பலத்துடன் மகாவிஷ்ணு ஆராதனை, தேவ வுபாசனை, சங்கீதம், வித்தை, ஞானம், பக்தி.

(நீசம் பெறில்) போகம், சரீர முடைதல், புத்திர தோஷம், அண்ட வாய்வு, பீஜ ரோகம்

(பகையாகில்) பந்து விரோதம், மாதுல விரோதம், பந்து சேதம், வாத நோய் முதலியவைகளாம்.

## 5. குரு

(ஆட்சி பெறில்) பிராமணத்துவம், குரு பீடம், சேனாதிபத்திய சீவனம், உபதேசம், புத்திர பலன், வைடூரிய லாபம், வகார வேலை சொர்ன லாபம்.

(உச்சம் பெறில்) மேற்கூறிய பலன்களோடும் பரிமள யோகங்களில் விரோதமான அட்டமா சித்தி சாஸ்திர பீடம், நவரத்ன லாபம், புத்திரப் பெருக்கு மிகுந்த ஆலோசனை.

(நட்பு பெறில்) மேற்கூறியவைகளில் நிதானமான பலன்.

(பகையாகில்) மேற்கூறியவைகளில் விரோதமான பலன்.

(நீசம் பெறில்) சாஸ்திர மறதி, புத்திர விரையம், ஆசார வழுவு, அவகீர்த்தி முதலியவைகளாம்.

## 6. சுக்கிரன்

(ஆட்சி பெறில்) வாகனம், சுபம், பசுவிர்த்தி, ஆரோக்கியம் கப்ப லாபம்.

(உச்சம் பெறில்) களபம், கந்தம், மதனாலங்காரம், தியாகஞ் செய்தல், பிணி தீர்த்தல், கப்பலேறுதல், சம்பத்து பெறுதல், வஸ்திராபரணம், இரத்தின லாபம் தேவாலயம் போதல்.

(நட்பு பெறில்) மேற் கூறியவைகளோடு சிவிகை லாபம், லட்சுமி கடாக்ஷம் இராஜ சம்போகம்

(நீசம் பெறில்) வாகன பயம், அன்னிய போகம், நேத்திர நோய், கபரோகம், களத்திர பகை

(பகை பெறில்) யாவற்றிலும் பயம், நட்டம், சத்துருத்துவம் முதலியவைகளாம்.

## 7. சனி

(ஆட்சியாகில்) உல்லாசம், சம்பந்தம், அலக்ஷியம்.

(உச்சமாகில்) முன் கூறிய பலனுடன் மனோதைரியம், ஆயுள் விர்த்தி.

(நட்பாகில்) நிதானம், வாக்கு, உறுதி.

(நீசம் பெறில்) சாஸ்திர விரோதம், ஊன ஸ்திரீ போகம், தாழ்ந்தோர் சிநேகம், சோம்பல், அங்கக் குறைவு.

(பகை பெறில்) சித்தப் பிரமை, இராஜ பகை, தெண்டனை, அடிபடல், வாகன பய முதலியவைகளாம்.

## 8. இராகு

(ஆட்சி பெறில்) தெய்வ ஆலயம் போகுதல், தீர்த்தயாத்திரை செய்தல், ஐஸ்வரியம், சாஸ்திரப் பயிற்சி, மகா பண்டித்துவம்.

(உச்சம் பெறில்) மேற்கூறிய பலத்துடன் மனோ தைரியம், நஞ்சை புஞ்சை லாபம், பிரபல யோகம், பிதுர் வம்ச சுகம்.

(நட்பு பெறில்) வணக்கம், துயரம், பிரதேசவாசம், மோக்ஷத்துவம், மலை பிரயாணம், ஜெபதப தியானம், நீதி மார்க்கம்.

(நீசம் பெறில்) கீர்த்திக் குறைவு, குடும்ப வெறுப்பு முதலியவைகள், ஜலரோகம், தர்க்க வாதம், ஆயுத பயம், பித்தவாத ரோகம்.

(பகை பெறில்) விஷ பயம், பாண்டு ரோகம், அடாது செய்வித்தல், ரோக ஸ்திரீ சம்பந்தம், பகை முதலியவைகளாம்.

## 9-கேது

(ஆட்சி பெறில்) மோக்ஷம் பெறுதல், வைராக்கியம், வேத அப்பியாசம், ஞான கைவல்லியம்.

(உச்சம் பெறில்) மேற்கூறிய பலன்களுடன் சாம்பிராஜ்ஜியம் பெறுதல், சன்னியாசம், ஞான சையோகம், அகங்காரம்.

(நட்பு பெறில்) நிதானம், நேர் வழிபடுதல், பரதேச ஜீவனம், சமாதானம், கோபம், மயக்க வஸ்துண்ணல், அக்கினி வழி போகுதல், மாம்ச முண்ணல், பாப கிர்த்தியம் செய்யுதல்.

(பகை பெறில்) விரண முண்டாகுதல், மேக நோய், இராஜ பயம், வயிற்றுவலி, பாட்டன் வழி யீனம் முதலியவைகளாம்.

## கிரக பலா பலம்

(சுக்கிலபக்ஷ ஜாதகருக்கு) குரு, சந்திரன் முழுச் சுபர்கள். சுக்கிரன் முக்காற் சுபன், புதன் அரைச் சுபன்.

சூரியன், சனி, ராகு முழுப் பாவிகள்; கேது, செவ்வாய் முக்காற் பாவிகள்; புதன் அரைப் பாவி.

(அமரபக்ஷ ஜாதகருக்கு) சனி, ராகு, சூரியன் முழுச் சுபர்கள்; செவ்வாய், கேது முக்காற் சுபர்கள்; புதன் அரைச் சுபன்; குரு, சந்திரன் முழுப் பாவிகள்; சுக்கிரன் முக்காற் பாவி.

தக்ஷணாயன சுக்கில பக்ஷத்தில் சுபக்கிரகங்கள் வலியவர்கள்.

உத்தராயன கிருஷ்ண பக்ஷத்தில் பாவக் கிரகங்கள் வலிடவர்கள்.

புதன், குரு இவர்கள் உதயத்தில் வலியர்.

சனி, ராகு, கேது அந்தியத்திற் வலியர்.

சூரியன், செவ்வாய் உச்சத்தில் வலியர்.

சந்திரன், சுக்கிரன் ஜல ராசியில் வலியர்.

## கிரக ராசி பலம்

(1) பெண் கிரகங்களாகிய சந்திரன், சுக்கிரன் ஆகிய யிவர்கள் பெண்ராசியிலும், ஆண் அலி கிரகங்களாகிய மற்றவைகள் ஆண் ராசியிலும் இருந்தால் பலமுள்ளவர்கள்; அதாவது பெண் கிரகங்கள் ஆண் ராசியிலும், ஆண் அலி ஆகிய கிரகங்கள் பெண் ராசியிலுமிருந்தால் பலவீன மென்றும் தெரிந்துகொள்ள வேண்டும்.

(2) ஆனால் சந்திரன், சுக்கிரன் இவர்கள் தங்கள் சிநேகிதர் வீட்டிலும் வியாழன், புதன் இவர்கள் தத்தம் முதல் வீட்டிலும் சனி, சூரியன், செவ்வாய் ஆகிய இவர்களுக்குரிய பெண் ராசியிலும் மேன்மையுடையவர்களும், பலமுடையவர்களும் ஆவார்கள்.

(3) சூரியன், சுக்கிரன், குரு பகலிலும்; சந்திரன், செவ்வாய், சனி, இரவிலும்; புதன் இரவு பகல் இரண்டிலும், பலவானென்றுங் கூறப்பட்டது.

(4) சூரியன் ஞாயிற்றுக் கிழமையிலும், சந்திரன் திங்கட் கிழமையிலும், செவ்வாய் செவ்வாய்க் கிழமையிலும், இம்முறையே அவரவர்களுக்குரிய நாட்களில் பலவானென் றறியவும்.

## கிரக சுபாவம்

(5) சூரியன், செவ்வாய், சனி, ராகு, கேது கடின சுபாவமுடையவர்கள். வியாழன், சுக்கிரன், சனி, புதன் மிருதுவான சுபாவமுடையவர்கள். ஆனால் புதனுக்கு மாத்திரம் கடின சுபாவமுடையவர்களுடன் கூடில் கடினமும் சாந்த சுபாவ முடையவர்களுடன் கூடில் சாந்த சுபாவத்தையு முடையவராம்.

## கிரக வயது

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | ஷூ | 6 |
| சந்திரனுக்கு | ஷூ | 10 |
| செவ்வாய்க்கு | ஷூ | 7 |
| புதனுக்கு | ஷூ | 17 |
| குருவுக்கு | ஷூ | 16 |
| சுக்கிரனுக்கு | ஷூ | 20 |
| சனிக்கு | ஷூ | 19 |
| ராகுவுக்கு | ஷூ | 18 |
| கேதுவுக்கு | ஷூ | 7 |

## கிரக தராதரம்

புதனுக்கு செவ்வாய் வலிது
செவ்வாய்க்கு சனி வலிது.
சனிக்கு குரு வலிது.
குருவுக்கு சுக்கிரன் வலிது.
சுக்கிரனுக்கு சந்திரன் வலிது.
சந்திரனுக்கு சூரியன் வலிது.
சூரியனுக்கு ராகு கேது வலியர்.

## கிரக பார்வை

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | 7 - ம் | பார்வை |
| சந்திரனுக்கு | 7 | ,, |
| செவ்வாய்க்கு | 7, 4, 8 | ,, |
| புதனுக்கு | 7 | ,, |
| குருவுக்கு | 7, 5, 9 | ,, |
| சனிக்கு | 7, 3, 10 | ,, |
| ராகு கேதுவுக்கு | 7, 11, 3 | ,, |

வெண்பா

கரிக்குழூன் றீரைந்துங் கனலுக்கோர் நான்கெட்டா
மரசற்கோ ரைந்தொன்பதாகுமே—அரவுக்கு
பதினைன் றுடன்மூன்றும் பகரொன்ப தேவர்களும்
பதியேழைத் தான் விழிப்பரே.

## இன்னின்ன நக்ஷத்திரங்களில் கிரகங்கள் வருமாயில் பலவானென் றறியும் சக்கரம்

| சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி | ராகு கேது |
|---|---|---|---|---|---|---|---|
| திருவாதிரை | மகம் | அஸ்தம் | அனுஷம் | அவிட்டம் | கிருத்திகை | பூராடம் | உத்திரட்டாதி |
| புனர்பூசம் | பூரம் | சித்திரை | கேட்டை | சதயம் | ரோகணி | உத்திராடம் | ரேவதி |
| பூசம் | உத்திரம் | சுவாதி | மூலம் | பூரட்டாதி | மிருகசீரிடம் | 0 | அசுபதி |
| ஆயிலியம் | 0 | விசாகம் | 0 | 0 | 0 | திருவோண | பரணி |

## கேந்திரம், திரிகோணம், கிரக கேந்திரம், கிரக திரிகோண மென்கிற நான்கு வகையு மறியவும்

லக்கினத்திற்கு 1-4-7-10 கேந்திரமென்றும், லக்கினத்திற்கு 1-5-9 திரிகோண மென்றும் உலகத்தில் வழங்கி வருகிறதா யிருக்கினும்,

கேந்திரமென்றால் லக்கினத்திற்கும், கிரகம் நிற்கு மிடத்திற்கும் மத்தியில் 60-பாகை யிருந்தால் மாத்திரம் கேந்திர மென்று பெயர். அப்போதுதான் கேந்திர பலனையும் கொடுப்பரெனக் கொள்ளவும்.

திரிகோண மென்ருல் லக்கினத்திற்கும், கிரகம் நிற்கு மிடத்திற்கும் 90-பாகை யிருந்தால் மாத்திரம் திரிகோணமென்றும் பெயர். அப்படியானுற்ருன் திரிகோண பலனையும் கொடுப்பராம்.

## அஸ்தமன கிரக மறியவும்

சூரியனி னின்று செவ்வாய் பதினேழாம் பாகையிலும், புதன் பதின்மூன்ரும் பாகையிலும், குரு பதினுென்ரும் பாகையிலும், சுக்கிரன் ஒன்பதாம் பாகையிலும், சனி பதினைந்தாம் பாகையிலும் நிற்பார்களாகில் அஸ்தமன மென்றும் பெயராம்.

## அதி யுச்ச மறியவும்

பனிரெண்டு ராசிக்கும் முந்நூற்று அறுபது பாகையாக விதித்திருப்பதால் ஒரு ராசி யொன்றுக்கு 30-பாகையாம். இவற்றுள்,

சூரியனுக்கு மேடம் உச்சமானதால் அம்மேடத்தில் பத்தாவது பாகையிற் சூரியன் வரில் பரமோச்ச மென்றும், சந்திரனுக்கு இடப முச்சமானதால் அவ் விடபத்தில் மூன்ருவது பாகையில் சந்திரன்வரிற் பரமோச்ச மென்றும், இவ்விதமே செவ்வாய்க்கு மகரத்தில் 28-பாகையிலும், புதனுக்கு கன்னியில் 15-வது பாகையிலும், குருவுக்கு கடகத்தில் 5-வது பாகையிலும், சுக்கிரனுக்கு மீனத்தில் 27-வது பாகையிலும், சனிக்கு துலாத்தில் 20-வது பாகையிலும் பரமோச்சமெனக் கொள்க.

## அதி நீச மறிய

முன்னுச்சம் நின்ற ராசியில் எத்தனையாவது பாகையில் அந்தக் கிரகம் வந்தால் அதியுச்சமெனக் கொண்டதுபோல, அதற்குரிய நீச ராசியில் அத்தனை பாகையில் வரும்போது அதி நீசமென்றறிந்து கொள்ளவும்.

## கிரகங்களின் காரகாதிபத்திய மறியவும்

**சூரியன் :** ஆத்ம, பிர்தாப, சாத்திய சத்திய இலக்ஷண, உஷ்ண, பைத்திய, சௌரிய, உத்யோக, சைவத்துவ, அனுஷ்டான, ஸ்திரீபோக, அசுவாதீன, சிர ரோக, சுர சிவ தேவத, பிதுர் காரகனுன சூரிய பகவான்.

**சந்திரன் :** அன்னை மனம், வஸ்திரம், நேத்திரம், முகம், மனு, பிரசாதம், சயித்தியம், சிலேர்ப்பணம், வாமநேத்திர, வாமபாகம், சீதசுரம், வதுரக்ஷீரம், தேசாடனம், சீத ரோகம், கந்தம், புஷ்பம், கணபதி, சுகபோஜனம், முத்தாபரணம், மாதுருகாரகனுன சந்திர பகவான்.

**செவ்வாய் :** சத்துவம், காமம், பிரியம், டம்பம், குரோதம், சபலம், பூமி பைத்தியம், பராக்கிரமம், அக்கினி, வெருவல், இரணம், பிளவை, யுச்சம், குலமாரகம், உக்ரஅனுமம், படைத்தலைவன், கம்மனம், சகோதர காரகனுன குஜ பகவான்.

**புதன் :** மாதுலசீபந்து, விபகார வியாபார வர்த்தக, சங்கீத சாயுச்சிய, சத்திய வசன, அபுத்திர, அரூபிசம், விஷ்ணு தேவதை சாதுரியன், உபாசனை புத்தி வித்தியாகாரகனுன புதன்.

**வியாழன் :** புத்திரீ புத்திர பிதாமகற்கு, ஸ்ரீவேத சாஸ்திர சம்பன்ன அர்த்த கர்மம், சொர்ன ப்ரபு மாணிக்க வைடூரிய, வகார சிவத்துவம், ஞானம், பிராமணன், ராசியாதி, உபதேசம் சாந்த தேவதை புத்திர காரகன்.

**சுக்கிரன் :** வர்கன, சுகிர்த, பசுக்கிர்காவா ரோக்கிய, மதன, புஷ்ப, கேளிக்கை, சுகந்த வைதிய, தியாக, மணி மந்த்ர, வாம, போக, நேத்திர, கப்பல், வியாபார, ரதி லீலை ரத்தினம், களத்திர காரகனுன சுக்கிரன்.

சனி : கிரேசுபசிதாப, ஜீவனலாப, உல்லாச, சம்புந்த, அலசிய, வாதரோக, அன்னிய, அடிபடல், சோம்பல், ஆயுள்வேத விரோதம், அங்கக்குறைவு, தெண்டனை, அபாத்திரன், சித்தப்பிரமை, ஊன ஸ்திரீபோகன், நீசத்துவன், எருமை ஆபாசிகாரகனுன சனிபகவான்.

இராகு : தீர்த்தயாத்திரை, தியான, ஐஸ்வரிய, சாஸ்திர, சம்பன்னராய், மாவைத்திய, லோக எந்திரகுடில், தைரிய, தாம காம யோக, வெட்டுக்காயம், ஜலகண்டம், பிளவை, படைத்துயரம், செய்யாத் தொழில் செய்தல், அங்க பின்னம், குன்மம், வலிப்பு, போக்கிய பிதாமகிகாரகனுன இராகு பகவான்.

கேது : மோக்ஷ, சாம்பிராஜ்ஜிய, சையோக, அப்பியாச, சன்யாச வைராக்கிய, கைவல்லிய, நெருப்பின் பாதை, மயக்க வஸ்து, அசவ்வியம், அகங்காரி, தரித்திரம், பரதேச ஜீவனம் மாதாமகிகாரகனுன கேது பகவான்.

## கோசார பலன்

சூரியன் இலக்கினத்திற்கு 3-6-10-11-ல் நிற்கில் நற்பல ஸ்தா [னம்
" 1-2-9-4-5-12-ல் நிற்கில் வேதை [ஸ்தானம்

சந்திரன் இலக்கினத்திற்கு 10-7-9 11-ல் நிற்கில் நற்பல ஸ்தா [னம்
" 1-3-6-2-4-8-5-12-ல் நிற்கில் [வேதை ஸ்தானம்

செவ்வா, சனி, இராகு, கேது } இலக்கினத்திற்கு 6-3-9-11-ல் நிற்கில் நற்பல ஸ்தா [னம்
" 1-2-4-7-8-5-10-12-ல் நிற்கில் [வேதை ஸ்தானம்

புதன் இலக்கினத்திற்கு 1-2-3-4-5-6-7-9-11-12-ல் நிற்கில் [நற்பல ஸ்தானம்
" 8-ல் நிற்கில் வேதை ஸ்தானம்

குரு இலக்கினத்திற்கு 2-5-7-9-11-ல் நிற்கில் நற்பல [ஸ்தானம்
" 1-6-12-3-8-4-10-ல் நிற்கில் [வேதை ஸ்தானம்

சுக்கிரன் இலக்கினத்திற்கு 1-2-7-4-5-6-8-9-12-11-ல் நிற் [கில் நற்பலன்
" 3-10-ல் நிற்கில் வேதை ஸ்தானம்

பத்துடனே மூன்றுகும் பரிதி மிகநல்லன்
பகுந்தபத்தே ழொன்பதுவென் பனிமதியி னல்லன்
உத்தபொன்னன் ரெண்டைந்தே ழொன்பதுவு நல்லன்
உயர்வெள்ளி மூன்றெழிய பத்தொழிய நல்லன்
இத்தனைக்குஞ் சனிசெவ்வாய் இராகுகேது
இருமூன்றும் ஒருமூன்று மும்மூன்றும் நல்லன்
பக்தியுடன் புதனுக்கு எட்டொழிய நல்லன்
பதினோரா மிடந்தனிலே பலகோளு நன்றே.

## லக்கினம் எடுக்கும் விபரம்

விகுர்தி வருஷம் புரட்டாசி மாதம் 5-ந்தேதி ஹிஜ்ரி 1309 வருஷம் சபர் மாதம் 4-ந்தேதி இங்கிலீஷ் 1890 வருஷம் செப்டெம்பர் மாதம் 19-ந்தேதி வெள்ளிக்கிழமை காலை $2\frac{1}{2}$-நாழிகைக்கு ஜனனம்; இதற்கு லக்கின மெடுக்கும் விவரம்.

புரட்டாசி மாதம் ஆகையால் சூரியன் கன்னியி லிருப்பர். இப் புரட்டாசி மாதம் 1-ந்தேதியில் சூரியன் நாழிகை-22 விஞடி 21-க்கு கன்னியில் வந்தார். மேற்படி புரட்டாசி மாதம் 31-ந் தேதி நாழிகை-49 விஞடி 43-க்கு இக்கன்னியைவிட்டு அடுத்த ராசிக்குச் செல்கிறுர். ஆகையால் அந்த மாதத்தின் சுத்த தேதி யாவது:

நா.நா.விஞ.நா.விஞ.
1வயில் கன்னியில் சூரியனின்ற நாழிகை 60-(22-21)—37—39
31வயில் ஷை (49-43)—49—43
ஆகையால் இந்த 2வயில் கன்னியில் சூரியன் 87-22—1-27—22
அந்த மாதம் தேதி பஞ்சாங்க ரீதியாய் கண்ட தேதி $31\frac{1}{2}$-க்கு மேற்படி 2வ நீக்கி பாக்கி தேதி 29—1-27-22-சுத்ததேதி நாள்-30

நாழி-27 விஞடி-22 = $\frac{54821}{1800}$

கன்னி ராசிக்குள்ள நாழிகை—5 = 5 60—300-விஞ

30-நாள் 27-நாழிகை-22-விஞடி அல்லது $\frac{54821}{1800}$ தேதிக்குள் 300 விஞடியானுல்;

1-தேதிக்கு 300 $\frac{54821}{1800}$ $\frac{300—1800}{54821}$ $\frac{540000}{54821}$
ஜெனனம் 5வ.

1வ நாழிகை-37-39
2வ ,, 60
3வ ,, 60
4வ ,, 60
5வ ,, 2-30

ஆக 3வ 40-நாழிகை 9-விநுடி
54000
முன் கண்டபடி 1வ-க்கு———விநுடி
54821

| | விநுடி | விகலை |
|---|---|---|
| 4403 | 54000 | 830872 |
| —— | ——36 | |
| 1200 | 54821 | 54821 |

மேற்படி கன்னிக்குரிய நாழிகை 5-ல் 36-விநுடி 8-விகலை நீக்கி
4-23-52

0—36—8
2—30—0
———
3—6—8—கன்னியில் செல்லு.

ஆகையால் லக்கினம் கன்னி, இத்ற்கு கிரகபாதசாரம் எடுக்கும் விபரம். ஜாதகன் ஜெனித்த தேதி நாழிகையிலிருந்து முன் தேதிகளை மாதவாரியாயினுஞ் சரியே; தேதிவாரியாயினும் சரியே; பார்த்து கிரகபாத சாரங்களை யெடுத்து இச் சக்கரத்திலடைக்க வேண்டும். இவ்விதம் எடுத்த பின் சக்கரத்தைப் பார்த்து முறையே அடைத்துக்கொள்ளவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | |
| | இராசி | | |
| குரு | | | சனி |
| செ | கே | சந் சுக் | லக் குபு |

| | | |
|---|---|---|
| சூரி | உத்திரம் | 3-ல் |
| சந் | விசாகம் | 3-ல் |
| செ | மூலம் | 4-ல் |
| புதன் | உத்திரம் | 2-ல் |
| குரு | திருவோணம் வக்கிரி. | 1-ல் |
| சுக் | சுவாதி | 4-ல் |
| சனி | பூரம் | 2-ல் |
| ராகு | மிருகசிரம் | 1-ல் |
| கே | கேட்டை | 3-ல் |

பின்பு நவாம்சம் எடுக்கவேண்டும்.

## அதன் விவரமாவது

ஜென்மலக்கினத்தின் மொத்த நாழிகையை 9-பாகஞ்செய்து அந்த லக்கினம் எத்தனையாவது பாகத்தில் முடிகிறதோ அந்த

தெரிந்து அந்த லக்கினத்திற்குத் திரிகோண ராசி மூன்றில் சர ராசி யெதுவோ அது ஆரம்பமாக அடைக்கவேண்டும்.

ஆகையால் கன்னியா லக்கினத்திற்கு மொத்த நாழிகை விநாடி விநாடி விகலை.
300

5—300 இதை 9-ல் வகுக்க——33-20 2000 பாகம் ஒன்றுக்கு லக்கினத்திற் சென்ற நாழிகை 3-6-111-68-விகலை
1168
11168—5——இது கன்னியா லக்கினமாகையால் மகர ராசிமுதல்
2000
கணக்கிட 6-வது ஆகிய மிதுனத்தில் முடிகிறபடியால் அதுவே அம்ஸ லக்கினமாம்.

மேஷ லக்கினத்திற்கு-மேஷ முதலாகவும்
ரிஷப லக்கினத்திற்கு-மகர ,,
மிதுன லக்கினத்திற்கு-துலா ,,
கற்கடக லக்கினத்திற்கு-கற்கடக ,,
சிம்ம லக்கினத்திற்கு-மேஷ ,,
கன்னியா லக்கினத்திற்கு-மகர ,,
துலா லக்கினத்திற்கு-துலா ,,
விருச்சிக லக்கினத்திற்கு-கடக ,,
தனுசு லக்கினத்திற்கு-மேஷ ,,
மகர-லக்கினத்திற்கு-மகரம் ,,
கும்பலக்கினத்திற்கு-கடகம் ,,
மீன லக்கினத்திற்கு-கடகம் ,,

| | | | |
|---|---|---|---|
| சுக் | குரு | | ல |
| சூரி கே | நவாம்சம் | | செ |
| 4 | | | ராகு |
| | | | சனி |

ஒரு நக்ஷத்திரத்திற்கு 4 பாதமாக மாதம் 1-க்கு ஒரு ராசியாக அசுவினி முதலாக அடைக்கவேண்டும்.

(உதாரணம்) மிருகசீரிடம் 1-ல், ராகு என்றதற்கு அசுவினி-4, ரோகணி-4, மிருகசிரம்-1, ஆக 17-க்கு மேஷ லக்கினம் முதலாக ஒரு சுற்றுகி இரண்டாவது சுற்றில் சிங்கத்தில் வருகிறதைக் காண்க. இதற்காக நட்சத்திரங்களின் எண்ணை 4-ல் பெருக்கி 12-ல் வகுத்து வந்த பாக்கித் துகையை மேஷ முதலெண்ணி எந்த ராசியில் முடிகிறதோ அதுவே அம்ச ராசியில் அந்த கிரகத்திற்குரிய வீடாம்.

(உதாரணம்) உத்திரம் 3-ல் என்றதற்கு அசுவினி முதல்
47
பூரம் வரையில் 11-11-4-44 உத்திரம் 3—ஆக—பாகிக்க 11-மேஷ
12

முதல் ஒன்பது கும்பத்தில் முடிகிறபடியால் அதுவே சூரியனுடைய வீடாம். மற்றவைகளையும் இப்படியே காண்க.

### முதற் சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 7 பங்குனி | 7 சித்திரை | 8 வைகாசி | 10 ஆனி |
| 8 மாசி | முதற் சக்கரம் | | 11 ஆடி |
| 10 தை | | | 11 ஆவணி |
| 11 மார்கழி | 11 கார்த்தி | 11 ஐப்பசி | 11 புரட்டாசி |

### இரண்டாஞ் சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| 3 41 பங்குனி | 3 41 சித்தி | 3 13 வைகாசி | 5-நாழி 4விநாடி ஆனி |
| 4 13 மாசி | இரண்டாஞ் சக்கரம் | | 5 42 ஆடி |
| 5 4 தை | | | 5 45 ஆவணி |
| 5 42 மார்கழி | 5 45 கார்த்தி | 5 35 ஐப்பசி | 5 35 புரட்டா |

### இவை லக்கின நிச்சயந் தெரிந்துக்கொள்ளு முறை

ஒருவர் ஜனித்த தேதியையும் முதல் சக்கரத்தில் அம் மாத ராசியில் குறித்த துகையும் பெருக்கி வந்த ஈவு விநாடியாம். அதை நாழிகையாகச் செய்து, ஜனன நாழிகையில் மேற்படி ஈவைக் கழித்து வந்த மிச்சத்துடன் இரண்டாவது சக்கரத்தில் அந்த மாதத்தில் குறித்திருக்கின்ற விநாடித் தொகையுங் கூட்டிச் சேர்த்து வைத்துக்கொண்டு மூன்ருவது சக்கரத்தில் அந்த மாதத்திற்கு எதிரில் கொடுத்திருக்கிற எண்களில் பார்க்க எந்தத் தொகையுடன் நெருங்கி வருகிறதோ அதுவே ஜாதகருடைய ஜன்ம லக்கினமாக வருமெனக் கொள்க.

மூன்றாவது சக்கரம்

| மாதப் பெயர் | லக்னம் கணக்கு | மேடம் | ரிடபம் | மிதுனம் | கடகம் | சிங்கம் | கன்னி | துலா | விருச்சிக | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சித்திரை மாதம் | நாழி | 3 | 7 | 12 | 18 | 24 | 30 | 35 | 41 | 47 | 52 | 56 | 0 |
| | விநா | 41 | 54 | 58 | 40 | 25 | 0 | 35 | 20 | 2 | 6 | 16 | 0 |
| வைகாசி | நாழி | 60 | 4 | 9 | 14 | 0 | 26 | 31 | 37 | 43 | 48 | 52 | 56 |
| | விநா | 0 | 13 | 17 | 59 | 44 | 19 | 54 | 39 | 21 | 35 | 38 | 19 |
| ஆனி | நாழி | 55 | 60 | 5 | 10 | 6 | 22 | 27 | 3 | 39 | 44 | 48 | 52 |
| | விநா | 43 | 0 | 4 | 46 | 31 | 6 | 41 | 26 | 8 | 12 | 25 | 6 |
| ஆடி | நாழி | 50 | 54 | 60 | 5 | 11 | 17 | 22 | 28 | 34 | 39 | 43 | 47 |
| | விநா | 43 | 56 | 0 | 42 | 37 | 2 | 37 | 22 | 4 | 8 | 21 | 2 |
| ஆவணி | நாழி | 45 | 49 | 54 | 60 | 5 | 11 | 16 | 22 | 28 | 33 | 37 | 41 |
| | விநா | 1 | 14 | 18 | 0 | 45 | 20 | 55 | 40 | 22 | 26 | 39 | 20 |
| புரட்டாசி | நாழி | 39 | 43 | 48 | 54 | 60 | 5 | 11 | 16 | 22 | 27 | 31 | 35 |
| | விநா | 16 | 29 | 33 | 15 | 0 | 35 | 10 | 55 | 37 | 41 | 54 | 35 |
| ஐப்பசி | நாழி | 33 | 37 | 42 | 48 | 54 | 60 | 5 | 11 | 17 | 2 | 26 | 30 |
| | விநா | 41 | 54 | 58 | 40 | 25 | 0 | 35 | 2 | 2 | 6 | 19 | 0 |
| கார்த்திகை | நாழி | 28 | 32 | 37 | 43 | 48 | 54 | 60 | 5 | 11 | 16 | 20 | 24 |
| | விநா | 6 | 19 | 23 | 5 | 50 | 25 | 0 | 45 | 27 | 31 | 44 | 25 |
| மார்கழி | நாழி | 22 | 26 | 31 | 38 | 43 | 48 | 54 | 60 | 5 | 10 | 16 | 18 |
| | விநா | 21 | 34 | 38 | 20 | 5 | 40 | 15 | 0 | 42 | 46 | 59 | 40 |
| தை | நாழி | 16 | 40 | 25 | 31 | 27 | 43 | 48 | 54 | 60 | 5 | 9 | 12 |
| | விநா | 39 | 52 | 56 | 38 | 23 | 58 | 47 | 18 | 0 | 4 | 17 | 58 |
| மாசி | நாழி | 11 | 15 | 20 | 26 | 32 | 37 | 43 | 49 | 54 | 60 | 2 | 7 |
| | விநா | 35 | 48 | 52 | 24 | 19 | 54 | 29 | 14 | 56 | 0 | 3 | 54 |
| பங்குனி | நாழி | 7 | 11 | 16 | 22 | 28 | 33 | 39 | 45 | 50 | 55 | 60 | 3 |
| | விநா | 32 | 35 | 39 | 21 | 6 | 41 | 16 | 1 | 43 | 47 | 0 | 41 |

மேற்கண்ட விதமாகவே எல்லா ஜாதகங்களையும் கணித்து நிச்சயித்து அறிந்து கொள்க.

ஜோதிட சிகாமணி அ[illegible] முற்றிற்று.

# கிரக தேவதைகள் வணக்கம்



## கணபதி தோத்திரம்

தங்கமான் மழுவோடேந்தித்
தண்மணித்லையிற் கொண்டோர்
மங்கையர் பதிக்குச்சொன்ன
மஹாமொழிச் சோதிடத்தை
யிங்குநா முரைப்பதற்கோ
ரிமையெனும் பிழைவராமற்
செங்கண்மால் மருகன்யானைச்
சிவன்பதங் காப்பதாமே.

நல்லசொற்பொரு ளுஞநடாத்தவும்
எல்லுகாணவரும் பேரின்பமெய்தவும்
வெல்லும்யானை முகத்தினைமேவிவாழ்
வல்லபைக்குரி யானைவழுத்துவாம்.

ஐந்தாருவானதொடுக் காடர்சோதிடகிரக
சிந்தாமணிமாலை செப்பவே - கொந்தார்
குழலுமையாடந்த குலக்குஞ்சரமுங்
கழலணிவேன் வாணியுமே காப்பு.

## வீமேசுரர் வணக்கம்

கதிரவனுமதியுமங் காரகன்புந்தியுங்
கருணையுள சுரர்குரவனுங்
காரவன்காரியு மிராகுவுங்கேதுவுங்
கருதும்வெகு சுபமாகநற்
பதினொராமிட்மூவந் துச்சநிலையாய்நின்ற
பரிவினின் மகிழ்ந்தருள்செயப்
பங்கயன் செங்கண்மான் முதலானதேவரும்
பாரதி பரிந்துகாக்க
மதிநுதலிகுமரிச்ங் கரித்திரியம்பகிஞலி
கலையரையன் மகளென்னுமோர்
வடிவுடையகவுரிங்கை முகவல்லிபாகனே
மரும்லர்ச் சடைமுடியனே

யதிகபெலனுடையமுய லகன்முதுகுநெறுநெறென்
வாடிய பதத்தழகனே
யடியவருளத்தமுத மேவீமாதஙின்
னருளளித்திடல் வேண்டுமே.

## சூரிய பகவான் வணக்கம்

காசினியிருளைநீக்குங் கதிரொளியாகியெங்கும்
பூசனையுலகோர்போற்றப் புசிப்பொடுசுகத்தைநல்கும்
வாசியேழுடையதேர்மேல் மகாகிரிவலமாய்வந்த
தேசிகாவெனைரட்சிப்பாய் செங்கதிரவனேபோற்றி.

## சந்திர பகவான் வணக்கம்

அலைகடலதனிநின்று மன்றுவந்துதித்தபோது
கலைவளர்திங்களாகிக் கடவுளரெவருமேத்துஞ்
சிலைநுதலுமையாள்பங்கின் செஞ்சடைப்பிறையாய்மேரு
மலைவலமாகவந்த மதியமேபோற்றிபோற்றி.

## செவ்வாய் பகவான் வணக்கம்

வசனநற்றைர்யத்தோடு மன்னவர்சபையில்வார்த்தை
புசபலபராக்ரமங்கள் போர்தனில்வெற்றியாண்மை
நிசமுடனவரவர்க்கு நீணிலந்தனிலளிக்குங்
குசனிலமகனுஞ்செவ்வாய் குறைகழல்போற்றிபோற்றி.

## புத பகவான் வணக்கம்

மதனனூன்முதலாநான்கு மறைபுகல்கல்விஞானம்
விதமுடனவரவர்க்கு விஞ்சைகளருள்வோன்றிங்கள்
சுதன்கனபசுவுபாக்கியஞ் சுகம்பலகொடுக்கவல்லன்
புதகவிப்புலவன்திருமால் பொன்னடிபோற்றிபோற்றி.

## குரு பகவான் வணக்கம்

மறைமிகுகலைநூல்வல்லோன் வானவர்க்காசான்மந்திரி
நரைசொரிகற்பகப்பொன் னாட்டினுக்கதிபனுகி
நிறைதனஞ்சிவிகைமண்ணி வீடுபோகத்தைநல்கு
மிறையவன்குருவியாழ மிருமலர்பாதம்போற்றி.

## சுக்கிர பகவான் வணக்கம்

மூர்க்கவான்சூரவாணன் முதலினோர்குருவாம்வையங்
காக்கவான்மழைபெய்விக்குங் கவிமகன்கனகமீவோன்
தீர்க்கவானவர்கள்போற்றச் செத்தவர்தமையெழுப்பும்
பார்க்கவன்சுக்ராசாரி பாதபங்கயமேபோற்றி.

## சனி பகவான் வணக்கம்

முனிவர்கடேவரேனும் மூர்த்திகண்முதலினோர்கள்
மனிதர்கள்சகலவாழ்வுன் மகிமையதல்லாதுண்டோ
கனிவுளதெய்வநீயே கதிர்சேயேகாகமேறுஞ்
சனியனேயுனைத்துதிப்பேன் றமியனேற்கருள்செய்வாயே.

## இராகு பகவான் வணக்கம்

வாகுசேர்நெடுமான்முன்னம் வானவர்க்கமுதமீயப்
போகுமக்காலையுன்றன் புணர்ப்பினாற்சிரமேயற்று
பாகுசேர்மொழியாள்பங்கன் பரன்கையில்மீண்டுபெற்ற
ராகுவேயுனைத்துதிப்பேன் ரட்சிப்பாய்ரட்சிப்பாயே.

## கேது பகவான் வணக்கம்

பொன்னைத்தனுரத்திற்கொண்டோன் புலவர்தம்பொருட்டாலாழி
தன்னையேகடைந்துமுன்னர் தண்ணமுதளிக்கலுற்ற
பின்னைநின்கரவானுண்ட பெட்பினிற்சிரம்பெற்றுய்ந்தா
யென்னையாள்கேதுவேயிவ் விருநிலம்போற்றத்தானே.

## நவக்கிரக தெய்வங்கள்

இரவிசங்கர னீஸ்வரிதிங்கள்சே
யினியகந்தனி சைத்திருமால்புதன்
குருவயன்சுரர் கோன்வெள்ளிசுன்னெமன்
குலவிராகு குறிபத்திரகாளியா
மருவுசித்திரபுத்திரன் கேதுவாம்
வானவர்முனி வோராசிமற்றுகா
ளரிமுதற்கிர கத்தாற்பரசிவ
னண்டபிண்டம் படைத்தளித்தாற்றுமே.



உ

ஸ்ரீராமஜெயம்

## சுகர்நாடி என்னும்

# ஜோதிட சிகாமணி



### சடகோபர் துதி

நேரிசை வெண்பா

மாதிடசி காமணியாம் வல்லவர்க்கே யேன்றவொரு
சோதிடசி காமணிநூல் சொல்லுமென்னு—யாதுந்
திருக்குருகைத் தொண்டர்கண்முன் சேர்வதற்குத் தாழாத்
திருக்குருகைத் தொண்டரருள் சேர்ந்து. (1)

### அரங்கநாயகர் காப்பு

எழுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்

குரங்கத்துமோதைகேட்ட தன்கன்றுங் கூப்பிடும் வழக்கெனப்பருணி
தரங்கத்துளுரைத்தமுறைய சோதிடசிகாமணிதன்னையான்புகலத் [தாங்
தரங்கத்துமணிச்சூட்டா விடைக்கிடந்துதங்கமும் பொன்னும்போர்த்தணிந்
கரங்கத்துளிலங்குநீலமாமணியை யகமெனும்பேழையுளமைப்பாம். (2)

### பிரதம குரு வணக்கம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

கருணைமழைபொழிந்துலகிலடியார்தங்கள்
கருத்திலின்பப்பயிர்விளைக்குங்கடவுட்டெய்வத்
தருணமுகிலனையவறுமுகத்தெங்கோமான்
தந்தருளுங்குமாரசாமியத்திற்கண்ட
அருமைமொழிப்பெருமைவழியதனையாரும்
அறிந்துபயன்றெதிந்துகொள்ளவரிதில்லாமற்
பொருள்விளங்கவிளக்கமுதற்குருவாய்தந்த
புனிதர்சின்னுபாத்தியர்தாள்போற்றினேனே. (3)

## காரணகுரு வணக்கம்

மாதிடநூன்முறைப்படியேதன்னைப்போற்று
வாரகத்துமேரகத்தும்வாழ்வோன்சொன்ன
தீதிடமிலாமுறையேகணிதநூலைச்
சிகாமணியென்றொருபெயராற்செப்புமாறு
போதிடமினுணுருவமெடுத்தாற்போன்ற
புண்ணியவான்கண்ணியவான்புலவர்பெம்மான்
சோதிடநூற்குருவுமாமனுமாவாய்த்த
சுந்தரன்வீரப்பமுகிற்றொழுகின்றேனே. (4)

## சோதிட நூலாசிரியர் வணக்கம்

முன்னுரைத்தகுமாரவேள்சுக்கிரக்கோள்
முனியரசிம்மூவர்களின்முளரிபூத்த
மின்னுரைத்ததண்டயந்தாள்கணிதநூலை
விரித்துரைத்தசோதிடநூல்வேந்தர்பூந்தாள்
பின்னுரைத்தபாற்கடலின்மணியேபோலப்
பிறந்ததிருத்தாயாரின்பேரின்பத்தாள்
இன்னுரைத்தபோதனர்தாள்புலவர்செந்தாள்
இத்தனையும்பத்தியுடனிறைஞ்சினேனே. (5)

## அவையடக்கம்

இலக்கியநூலிலக்கணநூலிருந்தவூரி
லிறைப்பொழுதுமிருந்தறியாவெளியோன்சொல்லிக்
கலக்கியவிப்பிழைமொழியைநல்லோர்கண்டாற்
கருத்திலருவருத்துவிடார்கணிதநூற்கு
விலக்கியனூலென்னவிடார்பாடாணத்த
மிழ்துவிளைக்கும்வைத்தியவிவேகரேபோற்
றுலக்கியரும்பிழைநீக்கியிந்தநூற்குச்
சோதிடசிகாமணிப்பேர்சூட்டுவாரால். (6)

## ஆக்கியோன் பெயரும்-நூற்பெயரும்-அவையடக்கமும்

நொண்டிச்சிந்து

அமிர்த சஞ்சீவி யெனுஞ் - சிகாமணி
யன்பாய்ச் சோதிடர் தன்னிற் றென்பாகவே

சமர்புரி ராக்ஷ சரை - வே ரறுத்துத்
தண்டகா ரணியத்துத் தவர் நிலேக்க
வைத்திடு மிரகு ராமன் - மலர்ப்பாதம்
வணங்கி யிதனை யானுங் கனிந்துரைக்கப்
பத்தி யாய்த் திருமார்பி - லமர்ந்திடும்
பாக்கிய லட்சுமி பதந்தூக்கிப் பணிந்து
திருவருடனைக் கிடைத்துப் - பரத்துவஞ்
சேர்ந்த தும்பிக்கை யாழ்வார் பதம் போற்றி
வருமலர் மீ தமர்ந்த - கலைமகள்
மலரடித் துணை சிரமணி யாக்கி
எந்தங் குருசாமி - மலரடி
யெப்போது மறவாம லொப்பிப் பணிந்து
சிந்தைத் தடமலரிற் - கற்றுணர்ந்தோர்
திருவடி தனைத்தினஞ் சிரத் தணிந்து
வாசித்துத் தெரியாத - சிறுவன் யான்
வணங்கி யுரைத்த சிகாமணியிதனை
நேசித்துப் பெரியோர்கள் - குற்றமிக
நிறைந்திருந் தாலந்தப் பிழைகளைந்து
திருத்து மகாத்மாக்கள் - மலர்ப்பதந்
தெண்டஞ் செய்தே னனந்தங் கோடிகோடி
வருத்தித் தள்ளாமலிதனைப் - பெரியோர்க்கு
வணங்கி யாயிரங்கோடி வந்தனஞ்செய்தேன்
எந்தங் குலப்பேருந் - திருவடி
யேற்ற வாசாரியர் தம்பேரு
முந்தியவுண் மைப்படியே - வெளியிட்டு
மொழியக் கருணையொடு முகங்கொடுப்பீர்
ஆயர்குலத் துதித்தோ - னெங்குல
வாசாரி திருநம்பி பதஞ் சேர்ந்தோன்
மாயன் வள ரரங்கப் - பதியினில்
மனது மங்களமாக வசித்திருந்தோன்
தசரதன் குலத் துதித்துச் - சீதையைத்
தனிமணஞ் செய்து வனவாசி யாகிப்

புஜபல வல்ல மையினூற் - சீதையைப்
புலியொ டெடுத் திலங்கை புகுந்துகொண்ட
தானவர்க் கதி பதியை யிருபது
தலையுத் துணிப்பே னென்று சபதஞ்சொல்லி
வானரப் படை யெடுத்து - நடுவுள்ள
வாரி மீதினி லணைவகுத்துக் கட்டிக்
கவர்மன ராவணன் றன்னைப் - போரிடைக்
கதறப் பதற வெட்டிக் களத்திலிட்ட
கவனவில் வீரன் பாத - மறவாத
காத்த பெருமாள் வரத்திற் பூத்த புதல்வன்
ஏரகம்வாழ்வு பெறும் - பாக்கியவான்
எங்குரு வீரப்பபிள்ளை யன்பு மருமான்
சேரகம்பீ மாநாயக்கன் - பாளையஞ்
செழித்த ராமசாமிச் சோதிட வித்துவான்
இலகொளிச் சாலிவாகன - னுயிரத்
தெழுநூற் றெண்பத்தாறு நிகழ்வதிலே
கலியுக முப்பத் தைந்தாண்டு - பாக்கியிற்
கழியவை யாயிர மிரக்தா க்ஷியிற்
கார்த்திகை பூச நாளி - லிந்நூலைக்
கட்டுரைக்க மனதிலே திட்டப் படுத்தித்
தேர்த்தொழில் விசையனுக்கு - முன்னாளிற்
செய்த பெரு மான்பத மெய்தமனத்துள்
சொன்னே னிந் நூற்றுவக்கம் - பொறுப்பது
தூயவர் கடனெனத் துணிவுகொண்டு
பனிரண்டு புயக்குமர - வேள்சொன்ன
பன்னிரண் டாயிரம் பாட்டி லுளவும்
பினுமுள்ள சுக்ரநாடி - தெற்கில்வந்த
பீரங்கித் திரட்டிவை பேசியனவும்
பின்புத்தி யறியாத - சிறுவன் யான்
பேதை வயதுக் குள்ளாயோதித் தெரிந்த
என்புத்திக் கெட்டின மட்டுந் - திரட்டியிங்
கியம்ப சிகாமணியை நயந்து கொள்வீர்

சோதிடங் கொஞ்ச மறிவேன் - பஞ்சபக்ஷி
சொல்லும் பெரியோர் பாதம் பணிந்தறிவேன்
ஆதியில் சிவனுரைத்த - சரமென
வம்புவியி லெல்லோருஞ் சொல்ல வறிவேன்
அயனுடைப் பதத் துதித்த - விசுவன்முன்
அருமையுடனே செய்த பெருநூலு
மயனுடைச் சாஸ்திரமுஞ் - சல்லியமு
மந்திரமுந் தந்திரமு மறந் தறிவேன்
செம்பொருட் கலையனைத்தி - லொன்றேனுந்
தேர்ந்தறியேன் மனமோர்ந்து மறியேன்
ஐம்பெரு மிலக்கணமு - மிலக்கியமும்
அணுவளவுந் தெரியேன் றுணி விதுவே
துஷ்ட நிக்கிரகஞ் செய்யத் - தூணிடைத்
தோன்றிய நரசிங்க ஸ்வரூபியுடைய
அஷ்டாக்ஷரஞ் செபிப்பே - னித்தவத்தா
லருந்தமிழ்க் கவிசொல்ல வாக்குக் கிடைத்தேன்
அரும்பிடைத் தேனையுண்ண வண்டினம்
அம்மலரை மலர்த்திய செம்மை போலே
கரும்பிடைச் சக்கை நீக்கி - ரசங் கொள்ளுங்
கருத்துப்போ லிக்கவியைப் பொறுத்துக் கொள்வீர். (7)

தனனதனதன

---

## குரு வந்தனம்

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

ஆண்முத லாய சூரமற் கழகன்வீ ரப்புநாமன்
றூண்மலர்ப் போதை யாண்டுந் தணிந்துகொண் டாடிக்கொண்டு
நாண்முதற் கோள்களீரு நண்ணிய நாமமெல்லாம்
பாண்முதற் கவியாக்கோத்துப் பழகிய வாறுசொல்வாம். (8)

## அசுபதி-பரணி-கார்த்திகை-உரோகணியின் பெயர்

### பதினொன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

இரலையாசென்னியைப்பசிழ்முதனுளேறுபுரவிபரிவாசி
யிவுளியச்சுவினிமறுத்துவநாளேயீரறுபேரசுபதிக்காம்
பரணிகாட்டுப்புத்தருமநாள்கிழவன்பகலவன்றூராசுமுக்கூட்டு
பாகுபூதம்போதம்பருந்தாழிதாசிசோறெடுபதின்மூன்றும்
எரிதழல்வாணனுலிதன்றுமீனிருலழகங்கிநாளறுவாய்
இலங்கியவாரல்கிருத்திகைநாடனளக்கர்கார்த்திகைப்பெயர்பதின்மூன்
றுருள்சதியநாள்பண்டிதேர்சகடமுரோகணிபார்வையம்விமானம்
உருளியூற்றுல்சகடுபதின்மூன் றுமுரோகணிக்கமைந்தபேரென்ப.

## மிருகசிரம்-திருவாதிரை-புனர்பூசம்-பூசம்-ஆயிலியம் இவற்றின் பெயர்

மான்றலைமும்மீனிந்தரனேந்தானமார்கழிநரிப்புறம்வெய்யோன்
மாழ்குபேராளன்பாலையேமதிநாள்பதினொன் றுமிருகசீரிடப்பேர்
ஆன்றபேரீசனுள்செங்கையாழேயாதிரை திமூரையைம்பேர்
அரியசேர்த்திருவா திரைக்குறித்தென்பவதிதிநாளாவணம்பாலை
தோன்றெரிகரும்புகழைபிண்டிபுணர்தஞ்சொலுமெண்பேருறும்புநர்பூசம்
துலங்குதைவண்டுநாற்குளங்குருநாள்கொடிறைம்பேர்துகளறுபூசம்
என்றபாம்பாயிலரவுநாள்கௌவைபீரிரண்டாயிலியப்பேர் [பாம்
இவைமுதலொன்பானுட்களின்பெயராமிடையொன்பானுட்பெயரிசைப்

## மகம்-பூரம்-உத்திரம்-அஸ்தம் இவற்றின் பெயர்

வேட்டுவனெழுவாயெழுஞ்சனிபிதிர்நாள்விளம்புமாதிச்சனிமாசி
வேள்விவாய்க்காலேகொடுநுகமெட்டும்விள்ங்கியமகத்தின்பேராகும்
காட்டெலிநாவிதன்பகலதிநாள்கணையிடையெழுஞ்சனியைந்தும்
கருதியபூரநாட்பெயராகுங்கடையெழுஞ்சனியிளங்கதிர்நாள்
சேட்டுமானேறுபாற்குனிகதிர்நாள்செங்கதிர்பிறந்தநாள்பொய்கை
செப்புபங்குனியெட்டுத்திரநாளின்றிருப்பெயராமங்கியைமீன்
காட்டுமைவிரல்காமரங்கன்னிகௌத்வங்களிறுகையீனவ்விகைனீ
கழரியபத்துமத்தநாட்பெயராக்கணித்தனர்றுனித்தநூற்கவிஞர்.

## சித்திரை-சுவாதி-விசாகம்-அனுடம் கேட்டையின் பெயர்

அறுவைமீனடுநாள்செவ்விதச்சன்றூசாடைநெய்சுவைதுவட்டாநாள்
ஆம்பயறேகாதசமுன்றித்திரைப்பேரதிநாள்துணிமரக்காலே

வெறுநுகந்துளக்கங்காற்றெருடீபம்விளக்குவீழ்க்கைமிவையொன்பான்
விளங்கியசோதிநாட்பெயரென்னுவிளம்புவர்சேட்டைவைகாசி
முறஞ்சுளகனிலமுற்றிலேகாற்றுமுந்துநாளேழ்விசாகப்பேர்
முடப்பனைபெண்ணைதாளிபுல்போந்தைமுனையதேள்மித்ரநாலெழுபேர்
சிறந்தவனுடமாம்வேதிவல்லாரைசெந்தழலெரிந்த்ரனுளே [ளே.
சேட்டையிவ்வாறுங்கேட்டைநாட்பெயராஞ்செப்புவாங்கடையென்பானு

## மூலம்-பூராடம்-உத்திராடம்-திருவோணம்-அவிட்டம் சதயம்-பூரட்டாதி-இவற்றின் பெயர்

அசுரநாள்குருகுகொக்கன்றில்சிலைவில்லாணிதேட்கடையென்பேர்மூலம்
ஆகுநீர்நாள்முற்குளமுடைகுளநீராயநாற்பெயரும்பூராடம்
விசுவநாளானிகடைக்குளமாடிமேவுநாற்பெயருத்திராடம்
விண்டுநாளுலக்கைசேணைநள்ளோணமேசிரவணமுக்கோள்வயிரம்
வசையிலெண்பெயரும்பெறுந்திருவோணம்வசுத்தினங்காகப்புள்புள்ளா
வணிபறவையைந்துமவிட்டநாளாகும்வருணனுள்குண்டுபோர்கண்டன்
விசைபெறுசெக்கோடைந்துசதையமாமிளிர்புரட்டாசிமுற்கொழுங்கோல்
விடங்கியநாழிபுரட்டைநாற்பெயராம்பூரட்டாதிக்கென்பர்மேலோர். (5)

A.C.M.

## உத்திரட்டாதி-இரேவதி இவற்றின் பெயர்

முசுபிற்கொழுங்கோலறிவனுள்மன்னன்மொழிந்திடுநீபமிவைந்தும்
முனைவருத்திரட்டாதிபெயரென்பர்மும்முனைச்சூலநாவாயோ
டிரவிநாள்கடைநாள்கலங்குலந்தோணியிரும்பெருநாட்டொழும்பஃறி
யியம்பிடுபுருடநாள்பதினென்றுமிரேபதிநாட்பெயரென்பர்
உரைசெயுமிப்பேரன்றியுமவைகட்குரியவர்பெயர்களும்வைகட்
குளபரியாயநாமமுமேற்குமுணர்வினுங்கறிகுவருயர்ந்தோர்
வரைபுரைகுணத்தெம்வள்ளல்வீரப்பமழைமுகில்வனசமாமலர்த்தாள்
வாழ்த்திமுந்நான்கிராசியின்பெரும்பேர்வரன்முறைவழுத்துவாமாதோ.

## மேடமாதி-ராசிகளின் பெயர்

வருடைமையாடுதகர்கொறியுதளேமறியுடனுடெட்டுமேடம்
மால்விடைபுல்லம்பாறல்சேநந்திமாப்பசுபாண்டிலேகுண்டை
நரைவிடையேறுப்தினென்றுமிடபம்நத்சயமகள்தண்டுவிழவு
நட்புறுமிரட்டைபாட்வல்யாழ்ப்பாடவைமிதுனத்தின்பேரேழாம்

அருமதிநள்ளிருளிர்கள்வன்சேக்கையலவனண்டேழுங்கர்க்கடகம்
ஆளியேபரிமாபுலியையானனனுன்கன்றியும்புவிசிங்கத்தின்பேர்
மருவுமாஞ்சிங்கராசிபெண்பொதுப்பேர்வனையுமக்கன்னியிராசி
வனிகன்சீர்நிறைகோல்கட்டளைதரார்சுவருந்துலைதூக்கெண்பேர்துலாமாம்.

பறிப்பன்றேள்தெறுக்கால்விருச்சிகங்காண்டிபங்கொடுமரந்துரோனஞ்சா
பஞ்சிலையன்றுவிற்பெயரெல்லாம்பகருவர்தனுவிராசிக்கே
சுறுக்கலைதைமான்பங்குக்கிராகஞ்சொலுமைந்துமகரவிராசி
சுயகுடங்குடங்கர்சாடிகரீரந்தோற்றுநாற்பெயர்கும்பமாகும்
சிறப்புயர்சலசஞ்சலசாமயிலைமச்சநாற்பெயர்செழுமீனம்
செப்புமீதன்றியவ்வவ்விராசித்திரிப்பரியாயமும்பொருந்தும்
இறப்பொடுபிறப்புமிம்மைக்கண்வென்றவென்குருவீரப்பநாமன்
இருசரணிறைஞ்சிக்கிரகநாயகர்பேரியம்புவானிசைந்தனமென்றே. (8)

## நவக்கிரகநாயகர் பெயர்-சூரியன் பெயர்

இன்னொளியொளியோனரியமாவருக்கன்
எல்லைபகலவன்மார்த்தாண்டன்
ஏழ்பகலோனவிண்மணியரிசூரன்
எல்லழலவன்வெயில்வெய்யோன்
கனவிபங்கயன்வெஞ்சுடர்சண்டன்
சவிதார்கதிரவன்பனிப்பகை
பானுகதிர்விகர்த்தனன்மித்திரன்
பதங்கன்செங்கதிரவன்ஞாயிறுசோதி
தினகரன்றரணிவிரோசனன்பரிதி
சித்திரபானுவேசான்ஹேன்
திவாகரன்கிரணமாலியருணனு
தித்தனபோமணியென்றாழ்
அனலிதினமணிபகல்சுடருதைய
ஞதவன்விரிசகிகன்றபனன்
ஆயிரஞ்சோதியிருள்வலியிரவி
யலரிசூரியன்பெயராமே. (9)

## சந்திரன் பெயர்

கலவுமானேந்திமதிமுயற்கூடுநிசாசரனிராக்கதிர்வேந்தன்
நிசாபதிமதியந்தன்சுடர்திங்கள்நிலாச்சிசுதாகரன்சீதன்
கலையினன்விதுவீபத்துடுபதிவெண்கதிரிமகரனிந்துசோமன்
களங்கனம்புலிதெவ்வரிசிகனமுதகதிரயினன்பசுங்கதிர்த்தே

அலவனேகுபேரன்தண்ணவன்றூரைக்கன்பினன்றூனவனூலோன்
அல்லவன்குரங்கிகலாநிதியுடுவினரச்னேகுமுதநண்பாளன்
இலகுமிந்நாற்பத்திரண்டுபேரன்றியிளம்பிறைகுழவியுமாகும்
இவன்முன்பாற்பூர்வஞ்சுக்கிலம்பின்பால்கிருட்டினபரமென்றிசைப்பர். (10)

## செவ்வாய்-புதன் பெயர்

ஆரல்சேய்குருதிகுஜன்செந்தீவண்ணனறிவனங்காரகனுதிரன்
அரத்தன்மங்கலன்வக்கிரனிலமைந்தனழல்ழலோன்பௌமன்பதினேம்
பேருளான்செவ்வாயருணன்றூறுபிரபலப்புலவன்றேர்ப்பாகன்
பெருமதிமகன்மாலவன்புந்திபர்கன்பிறழ்பச்சைசவுமன்மால்சிந்தை
கூறியன்கணக்கன்மேதைதூதுவனசற்குணபண்டிதன்சௌமிய
கோள்நிபுணன்சாமான்னனுவழியேகூறுமூவேழுதிருநாமம்
சீருயர்புதன்பேரன்பர்நூலுணர்ந்தசெந்தமிழ்ப்பாவலரினிமேற்
றேவர்முப்பத்துமூவரும்வணங்குந்திருக்குருநாமஞ்செப்புதுமால், (11)

## குரு-சுக்கிரன் பெயர்

அரசன்மாமறையோன்சிகண்டிசன்சீவ
னந்தணன்வேதன்பொன்னுசான்
ஆண்டளப்பான்பீதகன்குருவேந்தன்
அமைச்சன்றூராபதிநற்கோள்
சுரகுருபிரகற்பதிசிகண்டிதன்மா
சுகிர்தக்கோள்தெய்வமந்திரியே
சுந்தரத்தாரைகேழ்வன்மூவேழு
தொல்பெயர்வியாழனுக்குரித்தாம்
பிரசுரனுசான்புகர்புயல்மழைக்கோள்
பெருங்கவியநாவிலன்சுங்கன்
பிருகுசல்லியன்காப்பியன்பளிங்குசனன்
பேரொளியோன்சிதன்சுபக்கோள்
மருவுசீதகன்பார்க்கவன்வெள்ளிதைத்ய
மந்திரியசுரமந்திரியே
வழுத்துமூவேழ்பெயருஞ்சுக்கிரனும்
வானவற்குரித்தென்பர்வல்லோர், (12)

## சனி-இராகு-கேதுவின் பெயர்

கதிர்மகன்சவுரிசாவகனீலன்காரிகீழ்மகன்மந்தன்மேற்கோள்
கரியன்வக்கிரனேயந்தகன்சந்தில்கருந்தமனியன்பங்குதீக்கோள்
முதுமகன்சாயாபுத்திரனந்தன்முடவனேய்முகனந்தணன்சுன்
மொழியிருபதினென்றுஞ்சனிக்குரித்தாமுழுமதிப்பகைகரும்பாம்பு
மதியுணிதமமேகாமகோடீக்கோள்வருமிருமூன்றிராகுவின்பேர்
மதிகதிர்ப்பகைசெம்பாம்புஞானக்கோள்மதியுணிசிகியைந்துங்கேது
இதையெலாமன்றியவரவர்க்குரியவிராசியாற்காரகச்செயலால்
ஏற்ப்பேரிருவர்க்கொருபெயர்வரினுமிடஞ்சமையங்கண்டுகொளலே. ()

## கரந்துறை-கிரகர் பெயர்

சனிமகன்மாந்திசூரியன்பௌத்ரன்றண்டனீலன்மகனெம்பேர்
தகுங்குளிகனுக்கேயிவனெடுகோலன்சாற்றுமிமகண்டனின்னும்
முனிவுறும்அர்த்தப்பிரகரணனுநால்முனைவருங்குளிகனுதியர்கள்
மோதியதூமகேதுபகேதுமுதிரிந்திரதனுபரிவேடம்
இனிவிதிபாதனிவரைவர்தூமாதியரெனமுன்னுளார்வகுப்பர்
என்றென்றுங்காணுக்கிரகங்கள்தீக்கோளிருட்கிரகர்மாரகர்துட்டர்
சனிமகார்கோரர்எனப்பொதுநாமஞ்சாற்றுவர்நூற்றுரைத்தக்கோர்
தந்தமதறிவாலனுபவச்செயலாற்சாற்றுவர்பற்பலபெயரே. (14)

## ஆக்ஷி-யுச்சம்-நீசம்-நட்புப் பகையாவன

செங்கதிர்மேடம்பசுங்கதிரிடபஞ்சேய்மகரம்புதன்கன்னி
சிகிண்டிசன்கடகம்சுக்கிரன்மீனம்திருக்கதிர்மகன்றுலாமிராகு
வெங்கொடுந்தேளேஞானிமிதுனமாம்விளம்பிவையுச்சமாமிதனேழ்
விருப்பறுநீசமாமென்பர்ஆக்ஷிவீடினிவிள்ளுவாங்கதிரோன்
சிங்கம்வெண்மதியங்கடகம்வக்கிரற்குத்தேள்மறிபுதன்கன்னிமிதுனம்
சீவன்வில்மீனம்புகர்துலாமிடபம்தீச்சனிமகரகும்பமுமாம்
பங்கயன்மீனம்தனுசுசந்திரன்மீன்பாவைவில்மிதுனமுமாகும்
பார்மகன்மிதுனம்கன்னிதுலேபிடபம்புதன்னட்பினிபகர்வாம். (15)

மேடமிடபங்கடகந்துலாந்தனுசுவிருச்சிமகரகும்பங்கள்
வியாழனிடபஞ்சிங்கங்கன்னிகும்பமிதுனந்துலாமுமாம்வெள்ளிக்
காடுமிதுனம்விர்ச்சிகந்தனுமகரமங்குடமாம்சனியற்கே
(ஆ)ணைந்குலிக்மீன்பாமி ... கருந்துலேமகரமுமீனும்

நாடுசெம்பாம்புக்காடுதேள்கன்னிநட்பென்பர்பகையினிச்செல்வோம்
ஞாயிறுக்கிடபந்தேள்கும்பமகரநண்டொடுகும்பமிதுனமாம்
நீடுறுமதிக்குமறிசுறுக்கும்பநிறைசிங்கமாமங்காரகற்கு
நிறைசிங்கங்குடமீன்புதனுக்குச்சிங்கம்நிசக்குருவுக்குத்தேள்மடம். (16)

கவிக்கொருசிங்கஞ்சனிக்குநண்டரிதேள்கரியபாம்பாடரிநண்டாம்
கதிர்பகைவனுக்குச்சிங்கங்கர்க்கடகம்கடும்பகைவீடென்பர்கற்றோர்
புவிக்கணக்கிரகர்பார்வையினிலக்கப்புகலுவாமிரவிக்கேழிடமாம்
புந்தியின்றந்தைக்கேழதாஞ்சேய்க்குப்பொருந்துநாலேழெட்டாம்பார்வை
சவிச்சுடர்பச்சைக்கேழதாங்குருவைந்தாமிடமேழொன்பானிடமாம்
தைத்யமந்திரிக்குமேழதாஞ்சனிக்குமூன்றுபத்தேழென்பர்பார்வை
துவித்தெழுமிராகுகேதுவேழ்பதிஞென்றேடுமூன்றென்பராலிதினும்
சுரர்குருவொன்பான்மற்றையர்க்கேழாந்துலங்கியமுழுகண்ணோக்காமே.

நேரிசை வெண்பா

கன்னிமிதுனந்தனுசு காரரவுக்காட்சியாம்
பன்னுதுலாகும்பமிட பம்மகரம்—மின்னியமீன்
கேதுவுக்காட்சி கிடைத்ததாமென்றுமுன்னோர்
ஓதுவர்களென்றே யுணர்.

## இலக்கினாதி தேவர்களின் பெயர்

பதினான்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

தலைநிறஞ்சொரூபமுபாங்கநித்தியமு
தயமுடிமூர்த்திமெய்கீர்த்தி
சன்மமொன்றபிடேகங்கல்விசிந்தி
தம்பரகிருதிசந்தோஷம்
மலையுபஞ்சென்மமேருயிர்தேக
மனுவொடெண்மூன்றிலக்கினமாம்
வழுத்திவையல்லாதிவையின்பிரதிநா
மங்களும்பொருந்துவர்வல்லோர்
வலதுகண்பல்வாய்மூக்கொடுநாக்கு
வாக்குநண்ணுதல்முகம்புருவம்
மாரகங்குடும்பந்தனஞ்சவுபாக்ய
மாரணஞ்சென்மமேற்சென்மம்

நிலைமைபூருவமுன்சத்தியமன்னம்
நெற்றிபாத்திரஞ்சனரட்சண்
ணியமொடுபொண்டங்கேள்வினையிரண்டா
நெறிப்பெயரிருபத்தைந்தென்ப. (19)

வல்லபம்விசயம்வெற்றிபராக்ர
மந்தைரியம்பலவிக்ர
மஞ்சகோதரங்காவியந்தொழும்படிமை
வலதுகாதாயுளாபரணம்
நல்லபூடணம்பின்சேவகம்வலக்கன்
னந்திரிகேள்விபோகமுமா
நவிலுமூன்றேழுநாமமுமூன்றாய்
நாட்டுவர்கணிதநாவலவர்
சொல்லுயர்கல்விவாகனம்பூமி
சுகஞ்சயனஞ்சவுக்கியம்பந்
துக்கணிட்சேபம்வத்திரநன்னீர்த்
துறைதடாகங்கிணறன்னை
மெல்லணைகன்றுகாலிதன்பாகம்
மேன்மைவர்த்தங்கண்டம்வலக்கை
வேதநூல்கடவுள்பணியிவையைந்தும்
மேலவர்நான்கிடைவிரிப்பர். (20)

தந்தைசேய்பத்திபுத்திமந்திரம்வித்
தாரமன்பளவுஞானம்போ
சனம்ப்ரபுமார்புபுத்திரன்மாமன்
தாயனுனிருதயம்பாசம்
சிந்தனைசித்தங்கருப்பம்பஞ்சமமாச்
செப்புபேரிருபதுமஞ்சாந்
திருமனைப்பயனென்றருமைநற்கணிதா
செப்புவரொப்புவர்தெரிந்தே
தொந்தறைகாயம்பிணியுத்தமுரோகஞ்
சோரந்தீயாயுதபீடை
துயரமிரணமாபத்துவயிறுசத்
துருகடன்றத்தவமிருத்து
வெந்தெழுபசிஞாதிப்பகைமரணம்
வேதனையிகழ்ச்சியிம்மூவேம்

வினைப்பயனுருமனைப்பயனென்று
விளம்புவர்கணிதநூல்வீரர். (21)

களத்திரம்போகஞ்சுக்கிதம்விவாக்
கன்மஞ்சன்மானம்வர்த்தகஞ்சற்
கருமம்யாத்திரைநல்லறமனமகிழ்ச்சி
கால்கையிரேகைநல்யோகம்
தளப்புறுமரணமிருபத்துநான்குஞ்
சத்தமங்கேந்திரமென்னுச்
சாற்றுறுமேழாமிடப்பயனென்பர்
சக்கரன்றண்டனைகொடுமை
இளைப்புறுபிணியபானநோயாயு
ளிடும்பைவெங்கொலையவமதிப்பே
இரணநோய்கிலேசம்வியறிவின்மை
யெளியசீவிதங்கடுன்மரணம்
விளக்குறுமாயுதப்பகைவிரோதம்
பெருந்துயர்விக்கினமிகுபாழ்
பிழையெலாமட்டமப்பலனென்னுய்
பேசுவர்மாசுவர்பெறுதார். (22)

ந்திதிரவியம்பாக்கியம்பயிர்ச்செயனன்
னேயர்சற்குருபத்திதிருப்ப
ணிதருமந்தவஞ்சுகுணம்பத்திநவம்
ணிபுத்திரர்ருத்தைமாளிகையே
பிதிர்சுகம்பிதிர்மாரகமுபதேசம்
பெருங்கொடையோகபாகங்கள்
பெறற்கருஞானம்வாவிதீரோடை
பேசியவிருபத்துமூன்றும்
துதிபெறுமொன்பதாமிடங்கொடுக்கும்
துடையடியுடல்வலிமையிட
துகைவெகுமானங்காரியங்கருமந்
தொழில்வியாபாரமுத்யோகம்
கதிதெய்வபக்திபிரட்டைபூர்வகருமஞ்
சற்கருமமெய்ஞ்ஞானங்
கருணைவேளாண்மைமூன்றுபயனுங்,
காட்டுவதுபத்திடமாமே. (23)

பொன்னிலமிடத்தசெவிகண்கால்குரங்கு
புதையல்செல்வந்துயர்நிவிர்த்தி
புகலிடஞ்சேட்டசோதரபகைவம்
புகளவுமூர்க்கந்துற்சேர்க்கை
மின்னியசெல்வஞ்சேட்டசோதரன்பால்
விருப்பஞ்சூதாட்டிலேவேட்கை
வெள்ளிபொன்வாதங்கபடமிகழ்ச்சி
விருத்தியவிருத்திதுன்மார்க்கம்
அன்னியமாதர்சங்கமமுயற்சி
யறிவுசிவிகையெழுநான்கும்
ஆயமாதாயமிலாபமாம்பதின்மூன்
ருமிடப்பயனென்பரறிஞர்
இன்னமும்விரையங்கடைவியமீறே
இலக்கினமூலஞ்சன்மாதி
யெனப்பெயர்பெற்றபனிரண்டாமிடத்தி
லெய்துறுபலன்சிலவிசைப்பாம். (24)

சிவனம்வேள்வுவியாச்சியக்கவலே
செல்வம்சன்யாசமசௌக்யம்,
சீர்த்திசர்வவிர்த்தியூழியமயனந்
திரவியச்சேதந்தேசாந்திரம்
சாவுதாப்பானசங்கமஞ்செல்வ
சாத்தியமோக்ஷந்தியாகஞ்
சயனமழிவுபதவிசிவயோகம்
சமாதிவாமக்கண்வெண்கவரி
மேவிவையைந்தும்பனிரண்டா
மிடத்தால்விள்ளுவர்சோதிடவீரர்
மேலுமிப்பனிரண்டிடமுமொவ்வொன்றில்
விளம்பியபேர்கள்மற்றொன்றில்
பாவினவாகிலவணவண்கூறும்
பலன்களால்கிரகர்நிலைகளால்
பார்வையாலவர்தஞ்சேர்வையால்நடப்புப்
புண்பினுற்பகுத்தனர்கொளலே. (25)

உ

ஸ்ரீராமஜெயம்

# நூலாரம்பம்



## மங்கள பாவகம்



### குரு வணக்கம்

*எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

பொன்குருவிற்பூத்தகொன்றைபுனைந்துளார்க்குப்
புனிதமறைவடித்தருளும்புலவர்கோமான்
றன்குருகிரியிலமைந்துகணிதநூற்குச்
சற்குருவாயவதரித்தசார்வபூமன்
என்குருவீரப்பமழைமுகிலைப்போற்றி
யிலங்குகணிதக்கடலுக்கிறைவர்போற்றி
நன்குருவக்காளையர்க்குமணங்கள்பூணு
நான்முறையைக்கோன்முறையானவிற்றுவேனால்.(26)

இலக்கினத்தோனின்றநவாங்கிசத்தோன்ராசிக்
கிந்துவுடனந்தணனுமிராகும்வந்தால்
அலக்கணின்றிமணங்கூடுமென்பரேழோன்
அசுரர்க்குருவிருவரிராசியிலேயாலோன்
துலக்குமறையவன்வந்தாலுடனேநல்ல
சுககலியாணங்கூடுந்துலங்குமேழிற்
பலத்துடையபுதனிருந்தால்மாமன்பெண்ணைப்
பரிந்துமணம்புணர்ந்துசுகப்பயன்றுய்ப்பானால். (27)

சத்தமத்தோன்றிரிகோணத்திருந்துமேருத்
தலநோக்கவேழ்க்கேழோனுதாயத்தில்
உத்தமனுங்குருவிருந்துமதியினேக்க
முறக்காமியைந்தினல்லோருடனேகூட
சுத்தவாக்கதிபனுச்சமுயர்ந்தோனேடுஞ்
சொச்சேத்ரனெடும்கூடித்துலங்குவானேற்
பத்தியுள்ளமனையவளைமணந்துநல்ல
பாலகரைப்பெற்றுமின்பம்பயன்றுய்ப்பானுல். (28)

சத்தமத்தோனுட்சிபெற்றுவாக்குமன்னன்
ருனுகிக்களத்திரக்கோளாதாயத்தோன்
ஒத்திவர்களுடன்சேரக்குருவின்வீட்டில்
உயர்பாக்யபதியுறப்பொன்வெள்ளிசோமன்
இத்தனைபேர்கூடியிலக்கினத்தில்வாழ
இவனுமத்தைமகளைமணந்தினிதுவாழ்ந்து
புத்திரரைப்பெற்றுமனமகிழ்ந்துநல்ல
புண்ணியமுங்கண்ணியமும்பொருந்திவாழ்வான். (29)

ஏழுடையோன்றிரிகோணகேந்திரமேற்
இந்துதிரிகோணமுறநிதியிற்பச்சை
வாழவேழவனேழைமகிழ்ந்துநோக்க
மகிழ்களத்ரகாரகனுர்வலுக்கொண்டேறச்
சூழுமதிசப்தமனைமறையோனேக்கத்
தூயசெல்வாய்கேந்திரிக்கக்காமியாயம்
வீழுறச்சந்திரன்காமிதன்னைநோக்கில்
விண்ணிலருந்ததியனையாள்விவாகஞ்சேர்வன். (30)

காமபதிசந்திரமங்களயோகத்தே
கலந்துறையுக்குருகேந்த்ரங்கதிக்கவேழிற்
காமியுறப்பாக்யபதிலக்னகேந்த்ரங்
கலக்கவேழுக்கேழோன்கண்ணுய்நிற்க
பூமிமிசையோக்கியபாக்கியங்களோங்கும்
பூவையைநன்மணம்புணர்ந்துபுத்ரபாக்கியம்
சேமநிதிகிடைத்துபின்னுள்வழியாற்செல்வச்
செருக்கையும்பெற்றுயர்வன்னன்செப்புவாரால். (31)

களத்திரத்தானுதிபதிகேந்த்ரமேறக்
　　காமிதிரிகோணமுறநிதிக்கோன்ருனே
களத்திரகாரகனுகிக்கிரியோன்கூடக்
　　கலந்துமங்களாதிபனைக்கனிந்துகூடக்
கிளைத்தமதிகுருவுக்காதாயமேறக்
　　கிடைப்பாரேலருந்ததிபோற்கீர்த்தியோங்கித்
திளைத்தபதிவிரதைமணம்பெற்றுவாழ்வர்
　　செல்வமவளுள்ளளவுஞ்சிதைவுருதே. (32)

காமத்தோன்கேந்திரிக்கவேழுக்கேழோன்
　　கனகோணமேறவெள்ளிகண்டமேற
வாமத்தோனுட்சிபெற்றசெவ்வாயோடு
　　மருவிநிற்கக்காமக்கோள்வியத்துவாழச்
சோமற்கேழிடைநிதியோன்காமியோடு
　　துணைக்கூடப்புகர்வீட்டிற்ருதன்வாழப்
பூமற்கேழவன்சுகத்தேபுகுந்துநின்ருர்
　　புண்ணியநன்மனைவியொடுபொருந்திவாழ்வன். (33)

சத்தமனுர்சேய்வீட்டிலிருக்கவேழ்க்குத்
　　தனியேழோன்களத்திரகாரகனைச்சார்ந்து
சித்திபெற்றுவாக்கிலுறநிதிக்கோன்காமி
　　சேயொடுசேர்ந்தந்தணனுர்திருட்டிவாழப்
பத்தவனுர்பார்வைபெற்றுநாலோனைந்தோன்
　　பனிமதியின்றலத்திலுறப்பலித்தானல்ல
உத்தமியார்மணமிரண்டுகிடைத்துப்பாலர்
　　ஓங்குசெல்வத்தொடுநெடுநாளுலகின்வாழ்வான். (34)

களத்திரகாரகன்களத்ரத்தானவேந்தன்
　　காரியாதிபனுடனேகலந்துவாழக்
கிளைத்தகுருதிரிகோணகேந்த்ரமேறக்
　　கேந்திரத்திற்புதன்மதியுங்கிடைக்கச்செவ்வாய்
விளைத்திடுகேந்திர்மேறச்சந்த்ரகேந்த்ரம்
　　வெற்பரசுபெறக்காமிவியத்தேநிற்க

முளைத்திடுசாதகனிரண்டுமூன்றுபெண்கள்
முழுப்பதிவிரதைகளுடன் முயங்கிவாழ்வான். (35)

சத்தமத்தோனொடுகூடிநின்றோர்பாலும்
தனிவாக்கோனுடன்கூடிநின்றோர்பாலும்
சித்திபெற்றவலுச்செலவையறிந்துநோக்கிச்
செயங்காணிலுத்தமிப்பெண்சேர்வளென்பர்
ஒத்தவலுக்குறைந்துபலவீனமேறில்
உதவியற்றகழிசிறைபெண்ணுறுவளென்பர்
உத்தமரையெண்ணிநற்பெண்தொகையுந்தீயோ
ருற்றதெண் ணித்தீப்பெண்ணெண்ணுமுறைசெய்வாரால்.

தலையிறைவனேழிறைவன்புடங்கள்கூட்டிச்
சக்கரத்தால்வகுத்துவந்தநாளின்பாதத்
துலைவிலும்பர்குருவருங்கால்மணநாளாகுஞ்
சுத்தகுணரத்தினமாய்த்துலங்கிவாழ்வள்
நிலையதிலேபாபர்வந்தான்மணநாளெய்து
நீசகுணபூஷணியாய்நின்றுவாழ்வள்
மலையிறைவன்சந்திரனைக்கூடிநின்றால்
மாதாவின்வீடடையுமனையைச்சேர்வன். (37)

சுங்கனுக்கேழோனேழிற்சுபர்கூட்டத்துட்
டுலங்குறவேழோன்வாக்கோன்றுணையாய்ச்சேர்ந்து
செங்கணிடையிருக்கிலொன்பான்பத்திம்மன்னர்
திசையிலவர்புத்தியிற்கல்யாணஞ்சேரும்
மங்கலத்தோன்பாக்கியத்தோன்சுபருந்தந்தம்
மனைமாறிநிற்கவியமகிபன்பூண்ட
பங்கமிலாத்திசையிலவன்புத்திநாளிற்
பாக்யமணநிரம்புமென்றுபாடுவாரே. (38)

சந்திரன்வாழ்பதிக்கிறைவன்புடத்தோடந்தச்
சந்திரசத்தமன்புடமுஞ்சாரக்கூட்டி
முந்துரைத்தபடிவகுக்கக்குருவந்தாலும்
முழுத்தலைவன்புடம்வாக்கோன்புடத்தாலேற்றி

வந்திரவினின்றபதிபுடமுங்கூட்டி
வகுக்கவதிற்செங்கதிரோன்வந்துற்ருலும்
செந்திருவைநிகர்த்தபெண்ணேமணஞ்செய்காலஞ்
சேர்ந்ததென்றுதேர்ந்துநின்றுசெப்பலாமே. (39)

பதினுன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பஞ்சமன்குருவின்றலத்திலேகேந்த்ரம்
பாய்ந்துறப்பஞ்சமன்றலத்திற்
பண்ணவர்க்காசான்பதிந்திடவாட்சிப்
பனிமதிகுருமுகம்பார்க்கச்
செஞ்சுடருச்சமேறிப்பாக்கியத்தோன்
றிங்களின்பஞ்சமனுடனே
சேர்ந்திடச்சந்த்ரபாக்கியாதிபதி
திருக்கண்ணுேக்கடைந்தராசியற்குக்
கொஞ்சியமக்கள்பலருளராவர்
கூடுநாள்விளக்குவாங்கேந்த்ரங்
கூடியபுந்திதிசையிலேதேவ
குருபுத்திசேட்டனேக்கூட்டும்
வஞ்சகமின்றித்தந்தசேயிவனே
மாநிலத்தனந்தநாள்வாழ்வன்
மற்றையர்நிலைப்பதரிதுபெண்ணுக
வரிற்சிலநிலைக்குமென்றறியே. (40)

புத்ரகாரகனுங்காரியாதிபனும்
புகரொடுகூடிலக்கினத்திற்
பொருந்துறச்சந்த்ரபாக்யவான்குருவின்
பொன்மனைக்கிருந்திடவைந்தோன்
சித்திரச்சந்த்ரபஞ்சமனுகிச்
சேய்க்குநல்லாயத்தேசெழிக்கச்
சிறந்தநற்கோணகேந்திரத்தாட்சி
சீதகனிருந்திடவைந்தில்
உத்தமகுருநோக்குறக்கிடைத்தவனுக்
குளர்பலர்மைந்தர்கள்சேட்டன்

உதவுநாள்குறிக்கிற்குருதிசைஞானி
யுயர்புத்தியென்பராலுறவோர்
சுத்தனுமிச்சேய்பி...கற்கடுத்த
சுகத்தொழிற்பணிவிடைபுரிந்து
துயரிலாத்தாதைக்கும்முறைசெய்து
துலங்கியபுகழ்பெறுவானுல். (41)

ஐந்தவனுலிற்கேந்திரமேற
வந்தனன்சுக்ரகேந்திரத்தோ
டன்றியுமிலக்னகேந்த்ரமுமேறி
யாட்சியும்பெறமதிக்கைந்தோன்
சுந்தரவருணேக்கிலக்கினத்தேறச்
சுகசந்த்ரபாக்கியனுட்சி
துலங்குசேயுடனேவெள்ளிக்குமூன்றிற்
றேய்ந்திடப்புதன்றிரிகோணம்
வந்துறக்குருவாயத்திடையிரவி
வயங்குறக்கிடைத்தசாதகற்கு
மைந்தர்கள்பலராமிதிலொருவினையம்
வழுத்துவாம்புகர்திசையிடத்தே
புந்திபுத்தியிலேகொடுத்தசேய்நிலத்துப்
புத்தியுஞ்சித்தியும்பெறுவன்
புதுநிலாத்திசையிற்சேய்திசைதன்னிற்
புத்திரர்கிடைப்பரென்றறியே. (42)

கேந்திரத்தலத்திற்பஞ்சமன்குருவின்
கிருபைக்கண்பெற்றுமூன்றவனைக்
கிடைத்தினிதிருக்கச்சந்த்ரபாக்கியத்திற்
கிளர்குருவிருக்கவத்தலத்தோன்
ஏந்தியசந்த்ரபஞ்சமத்திருக்க
விவனையுங்குருகடாட்சிக்க
இரவிசந்த்ரற்குக்கேந்திரத்திருக்க
விந்துவுங்கோணமீதேற

வாய்ந்தபாக்கியத்தோன்பாக்கியகேந்த்ரம்
வாழ்வுறக்கிடைத்தசாதகற்கு
வாளராத்திசையிற்புந்திபுத்தியிற்பெண்
மகளுண்டாய்க்குருதிசைவரவே
காந்தியசனிமால்கேதுபுத்திகளிற்
கன்னியர்மூவரைத்தந்து
கமழ்குருதிசையிற் சந்திரன்புசிப்பிற்
காளையர்தோன்றுவர்காணே. (43)

புத்திரதானத்ததிபதிசொச்சேத்
ராங்கிசம்பொருந்துறவவன்றன்
புக்கவங்கிசத்தோனமிசசொச்சேத்ரம்
புகுந்துறப்பிறந்தசாதகற்குப்
புத்திரனுண்டேயவன்றேகையொன்றே
பூரணவாயுளுநன்றே
பொன்மலையிருந்துநோக்கியுமுரிமை
பொறுத்துநின்றுலுளர்புதல்வர்
இத்தலத்துதித்தவிலக்கினம்புண்ய
மேறியகோட்கள் நோக்களித்தோர்
இவருடனின்றோர்புண்ணியரென்று
ளிளமையிற்புத்திரர்கிடைப்பர்
ஒத்தவைந்தோனைந்திடைவல்லோர்நல்லோ
ருடனின்றுகுருகடாட்சமும்பெற்
றோங்கிடக்கிடைத்தசாதகன்சிறந்த
உறுதிமக்களைப்பெறுவானுல். (44)

சன்மலக்கினத்துக்கைந்திலேகதிரோன்
றுவுறப்பஞ்சமன்வலுக்கத்
தாரைமணுளன்கோணகேந்த்ராதி
தகைவலிசிறந்துறக்கிடைத்தோன்
பொன்மயமானமக்களைப்பெற்றுப்
பூரிப்பன்பலசுகம்பூண்பன்

புரோகிதனை ந்திற்புகவைந்தோன்வலுக்கப்
புண்யர்நோக்கினுமகார்புக்கும்
நன்மைசெய்குருவைகேசியங்கிசத்தே
நணுகியைந்தவன்முகம்பார்க்க
நல்லவர்பார்வையின்னமுங்கிடைக்க
நர்யகப்புதல்வரைப்பெறுவன்
மென்மையாயுரைத்தவிவ்வகைகொண்டே
விளம்பலாங்கணிதமென்றெண்ணேல்
மேலவர்குழுவிற்றெரிந்தெடுத்துரைத்த
வீரரைப்புடங்கொண்டுகாணே. (45)

சன்மலக்கினத்தோனைந்திலேநிற்கச்
சர்ப்பமொன்றவனுடன்சேரச்
சாற்றுமைந்ததிபன்வலுப்பெறவதில்வே
தனுமுறவல்லதுபார்க்கப்
பண்மகர்வாலிபத்திலேவருவர்
பஞ்சமனங்கிசந்தொட்டுப்
பகருமிலக்கினத்தளவெண்ணிப்
பாலகர்தொகைதெரிந்திடுக
சன்மலக்கினதியேழிடமேறச்
சத்தமனுலவன்கூடித்
தாழ்ந்தசட்டாட்டவியமலா நல்ல
தானத்திலேறவாக்காதி
நின்மலசன் மலக்கினத்தோனும்
பஞ்சமத்தோனுநின்றிடப்பொன்
நேத்திரமிவைகளெதிற்கிடைத்தாலும்
நிலைத்தபுத்திரர்பிறப்பாரால். (46)

ஐந்திறைநின்றபுடத்தையுஞ்செங்கே
ழலரியின்புடத்தையுங்கூட்டி
யளந்தராசியிலேகுருவருங்காலத்
தழகியநன்மக்கள்வருவர்

முந்துசொலேந்தாதிபன்புடத்திடையே
முதுமகன்புடத்தினைநீக்கி
முதிர்ந்தராசியிலேகுருவரிற்சிறுவர்
முத்தினுவிசேடராய்க்கிடைப்பர்
ஐந்தவன்சுபனுயுச்சமீதேறி:
யாயநட்படைந்திலாபத்தே
அமர்ந்திடிற்சுகுணமைந்தர்கள்கிடைப்ப
ரைந்தவர்கூடினேர்தொகையே
மைந்தர்கடொகையாமிலக்கினத்தலத்து
மதியுறச்சுக்கிரனுறில்
வாழ்வுறிலிவனுக்கொருவனேமைந்தன்
வடகியாதிசெய்திடுவன். (47)

கதிர்மதியிருவரினியகேந்திரத்துக்
கலந்துமேற்சொன்னசக்கரத்துட்
காணிலிக்காளைபிள்ளையைக்கிடைத்துங்
கருமம்பெருன்மகனிடத்தே
துதிபெறுமைந்தோன்சூரியனுடனே
தோன்றிடிற்பன்றிபோற்பலசேய்
தோன்றுவரென்பார்இரவிகேந்திரத்திற்
சோமனின்றிடிற்பிதிர்க்கிளைத்தோன்
மதியமாக்கடவுள்பண்பரத்திருக்கில்
வலிபிதாவுடன்சமமாவன்
மாமதியாபோகிலியத்திலிருக்கில்
வளர்புகழ்தந்தையின்மேலோன்
இதுவலாலேந்தேழொன்பதுவியத்து
ளிந்துநட்பாட்சியுச்சஞ்சேர்ந்
திறையருள்பெற்ருர்றன்னிலும்பத்தா
யிரங்கொண்டபுதல்வனைப்பெறுவன். (48)

இடபலக்கினத்தோர்க்கைந்திலேகுருவீற்
றிருந்திடவப்பதிநாதன்

இந்துமண்டலத்தில்சத்தமகோணத்
தெழிற்குசகோணம்பெற்றேற
உடுபதியிராசகேந்திரத்திறைவீட்
டொள்ளியோனேக்கடைந்திருக்க
ஓங்கியசந்த்ரகேந்திரத்தறிவ
னுயர்குருநோக்கடைந்திருந்தால்
மடலவிழ்கோதைசுக்கிரன்றிசையின்
மத்தியில்வாய்ப்பள்பெண்மக்கள்
மதிதிசைவருவாரிவர்களிலிளையாள்
மலர்மகளனையபாக்கியத்தாள்
திடமிவளாலேசெல்வமும்புகழுஞ்
சித்திரமாடமுங்கிடைக்கும்
செழுநிலாத்திசைசேய்திசைகளில்வருவர்
செல்வபுத்திரரென்பர்தெளிந்தோர். (49)

கேந்திராதி தானங்களுங் கிரகாதிகாரங்களும்

ஒன்றுநான்கேழுபத்தென்பகேந்த்ர
மொன்றைந்தோடென்பதுகோணம்
ஒருபதினொன்றின்கேந்த்ரம்பண்பரமா
மொன்பதின்கேந்திரத்தலங்கள்
என்றுளதாபோகிலியமாமிவைக்
ளிராசிமண்டலநிரையென்பார்
இயலுளகாரகாதிபருரிமை
யியம்புவாமலர்கதிரிரவிக்
கொன்றுகாரகங்கள்பிதிர்பிரதாப
முட்டணஞ்சத்தியஞானம்
உதயமான்மாவுத்யோகமஸ்மார
உரோகமுபாலனசித்தம்
நன்றிவைபத்துமன்றியுந்தான்
நாயகத்தன்மையாற்கதியால்
நாட்டியவுரிமையாவையும்பூட்டி
நவிலுவார்கணிதநூனுதர். (50)

சந்திரனுரிமைமாதுருவாமஞ்
சைத்தியம்வதனஞ்சீதளம்பூச்
சந்தனுனுபவந்தருமங்கணேசோச்
சாரணமெட்டென்பர்தக்கோர்
செந்திருமேனியரத்தன்துரிமை
செப்புவாஞ்சகோதரர்விருத்தி
சிறந்தவிடம்பம்போர்ச்செயல்பூமிச்
சேர்க்கைபித்தாதிக்கம்வீரம்
ஐந்தென்பரறிஞர்புதனுரிமைகளை
யறைகுவாவாதுலன் றீர்க்கம்
அரியநற்பந்துகல்விகேள்விகள்செட்
டறிவுகானத்தெளிவ்வந்தாம்
அந்தணனுரிமைபுத்திரலாபம்
அருமறைத்தெளிவுபொன்னிலையார்
அரசர்சமானமரத்னுபரணம்
ஐந்துமாமென்பராலறிஞர். (51)

சுக்கிரனுரிமைகளத்ரமுல்லாச
சுகமணிமந்திரம்போகம்
சுகந்தமங்களமுதாரம்வாகனம்ப
சுக்குலச்சேர்க்கைநற்சுகிர்தம்
ஒக்குமீராருஞ்சனியனுக்குரிமை
யோதுவாம்ஆயுளினிலைமை
யுறுபசிதாகந்துற்பலமபாயம்
உபத்ரவம்வாதநோய்ப்பீடை
யிக்குணமேழாமிராகுவினுரிமை
யியம்புவாந்தீர்த்தயாத்திரை நூல்
ஏற்றுமைஸ்வரியங்காமசம்போக
மெக்ஷணியாட்டம்பொய்குடிலம்
பக்குவவைத்யந்தைரியம்பகைமை
பாண்டுரோகாதிக்கங்களவு
பரக்ரகப்பிரவேசம்பதின்மூன்ருய்ப்
பகருவர்கணிதநூல்படித்தோர். (52)

கேதுவினுரிமைகூறுதும்ஞான்
கேவலந்தெய்வத்தியானம்

கிடைப்பருந்தவசுமௌனவைராக்யம்
கிரியைசன்னியாசநிதானம்
மாதுர்மகீகாரகந்திடசித்த
மனவெறுப்பிலாகிரிவழக்கம்
வறுமைவீடின்னமோக்ஷசாம்ராஜ்ய
வாழ்வொடீரேழெனவகுப்பர்
ஈதெலாமிராசிகாரகர்செயலாம்
இறைவலுப்பலமல்லதீனம்
இவையுச்சமாக்ஷிபகைநட்புநீச
மென்பதேவலுச்செலவென்பர்
ஓதியதல்லாலவரவர்க்குள்ளு
முட்படைநட்பெனலுண்டே
உரைத்தனகொண்டுசொலாதனவறித
லுத்தமர்செயலென்பருயர்ந்தோர். (53)

---

## பாலாரிஷ்ட விபரம்

கலி வெண்பா

எட்டில்மூன்றிற்பாபரேகமதிகாரி
தொட்டரவுக்கேழில்வரச்சூரியற்குத்-திட்டமுடன்
நாலிலிருகுருவுநண்ணிறுற்றீவிரமாய்ப்
பாலன்மடிவான்படியிலிரு-நாலவனுக்
காறிற்சனிசேர்ந்ததனுலிற்சேயேறக்
கோறுவிதியோன்கேந்த்ரங்கூடவே-கூறுததி
மைந்தருதிக்கிலவர்மாண்டிடுவரோராண்டிற்
சிந்தைதெளிந்தவர்க்குஞ்செப்புசருப்-பந்தனக்கு
நாலிற்சனிமேவநற்சனிக்குப்பத்தில்வெய்யோன்
மாலவன்வெள்ளிமருவியுறக்-கோலி
ம்திவிதியுங்கேந்திரிக்கவந்தவரீராண்டில்
விதிவலியான்மாள்வரெனவிள்ளாய்க்கதிரவனுக்
கட்டமத்தோன்மேருவுறமந்தனுக்கெட்டாமிடத்தோன்
வட்டமதிலக்கினத்தில்வாயவே-யெட்டவனுக்
கட்டமனேமெய்தவதிற்சுபர்தானேக்கமறத்

திட்டமுடனேராண்டிற்செத்திடுவர்-தொட்டொருநாள்
மந்தனுறப்பாம்பிரண்டில்வாவவிரையத்திரவி
புந்திசேய்பத்திலுறப்பொன்னுலில்-வந்துறவே
மேவினமைந்தர்மிகவிருந்தானுலாண்டே
யாவிமடிவாரிதற்கோரையமில்லே-யேவுமெட்டோன்
ஈனமுறவேழோனிழிகுலமாய்மேருவிற்போ
யானியடையமதியந்தனிவர்-ஊனமாய்க்
கேந்திரத்திலேறக்கிடைத்தமைந்தரோராண்டின்
மாந்தமதனுலேமடிந்திடுவ-ராந்துணேவன்
எட்டவனுங்கூடியீரைந்தில்வீற்றிருக்கப்
பட்டவேழோன்பகையாய்ப்பார்வையிட-நட்டமாய்க்
காரிமதிகூடக்காளேயீராண்டினுக்குட்
சாரிபோவானியமன்றன்பதிக்கே-யோராறேன்
சந்திரற்குமூன்ருறேன்ருன்மூவர்கூடிடவே
சுந்தரக்கோணேக்கமறச்சொல்லக்கேள்-வந்தமைந்தர்
மாண்டிடுவர்நாலாண்டின்மன்னியிதைநினேவாய்
ஆண்டுதனேநோக்கியறைகநீதூண்டுமதி
பத்திலுலேழிற்பதியச்சனிசேயுஞ்
சித்தமேருங்கூடிச்சேறவிரை-யத்தினிலே
யேமனீராண்டிலிழுத்துப்போவானிசமே
நீமதியினுலேநிதானிப்பா-யாமூன்ருேன்
எட்டவனுமாருேனுமேகமதிக்கோர்நான்கிற்
பட்டிவன்போவானெனவேபாடுகநீ-ரெட்டைகொண்டோன்
சந்திரனுக்காருேன்ருன்கூடத்தீவிதியும்
பந்தமுடனேக்கவந்தபாலகனும்-விந்தையாய்
மாளுமாளும்பிழையான்மண்ணிலிதையறிந்து
கோரளின்பலனுய்ந்துகூறுவாய்-நீளுமெட்டோன்
நாலின்மதிவிதியினண்ணக்கரிக்கேழிற்
சாலரவியேகமைந்தன்ருனரிட்ட-மேழிற்
சனியேகவேழோனுக்கட்டமனுஞ்சார
வினியசுபர்நோக்கோயவெட்டிற்-பனிமா
மதிபாவர்கூடவந்தமைந்தனந்தாண்டுக்குள்
விதியிழந்துகாலனூர்மேவும்-பதியோன்
மதிக்கெட்டோன்கர்மன்விதிமாகேந்ரமேற
விதமாயிரண்டோன்விழிக்க-மதியேழ்
கரிமேவவைந்தாண்டிற்காளமடிவான்காண்
திரமுடனேகோளறிந்துசெப்பாய்-கரிவிதியும்
கூடிவியமேகக்குன்றியொருகோனீசம்

பாடச்சனிக்கொரெட்டிற்புரவியர்கள்-நீடியுற
மாண்டிடுவன்மெய்யாகமண்ணிவிவனேந்தான
வாண்டுக்குள்ளாகவுரைகுவா-யீண்டு
விதிகருமமேறமேவுகர்மனேழோன்
மதியின்பிதிமூவர்மன்னவாய-மதிசுபர்கள்
நோக்கமறவந்தமைந்தனுண்மையாயேழாண்டிற்
போக்குறுவான்காலன்புதுக்குடியாய்-வாக்காதி
ரோகன்றஸநாதனுடிவிதியேகத்
தாகமதிக்கட்டமத்தோன்சப்தமத்திலேகச்
சுபர்நோக்குமில்லாயிற்சொல்லுமொன்பதாண்டிற்
சுபநோக்காற்காலனூர்காண்பான்-றுவனுறேன்
அந்தனெட்டின்மேவவெட்டோனுறில்வரமுத்தியிடை
வந்துவிடப்பாந்தள்மருவுவே-நொந்துபவர்
நோக்கிடவேபத்தாண்டிலேயாய்நமனும்வந்து
தாக்கிடுவானென்றறிந்துசாற்றுவாய்-தீர்க்கமில்லா
மைந்தருதிக்கில்வரும்பாலாரிட்டமிதென்
றந்தரங்கமாகவறிவிப்பாயிந்தவிதி
சொல்லாதசாதகர்க்குஞ்சூக்குமத்தாலாய்ந்துசுக
மெல்லாமுரைப்பாயினி (54)

---

## மத்திம வாயுசு

ஈரடிக் கப்பற்பாட்டு

அட்டமத்திராகுயுற — யேழோ
னட்டமனும்லாபம்வரத்
துட்டர்விழியானேக்க — விதிற்
றேன்றுமந்தப்பாலகர்க்குச்
சொல்லுவாய்ராகுதிசைசுயபுத்திதன்னில்
அல்லதேலவ்வீட்டுநாதன்புசிப்பிற்
கொல்லுமேநட்டநடுவாயுளிடையந்தோ
குவலயத்தோரறியக்கூறுவாய்நீயே. (55)

சந்த்ரவிதியட்டமனுங்கர்மன்
ருன்கூடிக்கண்டம்வர
வெந்துதனத்தவனேக்கவிதில்
மேவுமந்தசாதகர்க்கு
விழியோன்றன்றிசையதிற்பத்தோன்புசிப்பி
லழிவானநோயினலல்லன்மிகப்பட்டுக்
கழிவானேயழகுள்ளகாளைப்பருவத்திற்
காலனகர்செலுமென்றுகண்டுமொழிவாயே. (56)

அட்டமன்காரியும்பகையா — யிருவ
ரனல்விழியானேக்கமுறத்
துட்டர்களும்விதியேகமேருஞ்
சொல்லியனுங்கேந்திரிக்கத்
துஞ்சிடுங்கரும்பாம்பிரண்டிலேவாழ
மஞ்சுலவியவ்வன்னமத்திமவயதிற்
நஞ்சுமிழிராகுதிசைநீலன்புசிப்பில்
நமனூரைக்காணபனெனநாடிமொழிவாயே. (57)

மூன்றில்வியத்தோன்வரவேயெட்டோன்
மூவிரண்டில்வரவுதன்கோன்
ஊன்றுகிரிதிரிமூவர்மதி
யோன்விதியிலேபடவே

உற்றவிரையாதிபதிபெற்றதிசைதன்னி
லட்டமத்தாதிபன்புத்தியிலிவர்க்கே
மத்திமப்பருவத்தில்மடிவுவருமென்றே
மண்ணினிடையறிவாகவெண்ணிநீகூறே (58)

சந்த்ரவிதியட்டமனுங் – காரி
தான்மூவர்வியமேகச்
சுந்தரர்கணேக்கறவே - வியன்
தோன்றிசையவாதாயமதிற்
சொல்லிடும்விரையாதிபன்பெருந்திசையில்
வெல்லுமவன்பதியேகினவர்புத்திதன்னிற்
கொல்லுமேமத்திமவாயுளிடையந்தோ
குவலயத்தோரறியக்கூறுவாய்மெய்யே. (59)

ஏழாரேனிவர்கூடி – நான்கி
லேகவிதிகரிக்கிரண்டில்
மாலோனும்நோக்கறவேயிதில்
மருவியுதித்தோர்களெல்லாம்
மன்னியேழாதிபன்மகாதிசைதன்னி
லுன்னியேரோகாதிபதிதன்புசிப்பில்
வன்னமிகுமத்திமவாலப்பருவத்தில்
வஞ்சகமனக்காலன்வசமாகுவாரே. (60)

எட்டோன்கண்டமதிலேகக் - கரியும்
இந்துவுக்கெட்டதின்மேவச்
சட்டமுடன்கரிக்கேழில் - ரவி
தாவவிடந்திரிமேவத்
தங்குமூன்ருதிபன்றந்திடுந்திசையில்
மங்கிடுமெட்டாதிபதிதன்புசிப்பிற்
பங்கமாய்மத்திமவாயுசுதன்னிற்
பரமனூர்திருவடிப்பதவிபுகுவானே. (61)

மதியினெட்டோன்விதிகருமன் - மூவர்
மன்னிடவாதாயமதில்
இதமுடனேகருமமதிலாப
னேகிடவேமத்திமத்தில்

எண்ணியேலாபாதியிருந்தவன்றிசையில்
மண்ணினிடையட்டமனிருந்தோன்புசிப்பில்
வின்னங்களாகியேகாலன்பதிக்கே
மேவுவான்காளையெனவிள்ளுவாய்மெய்யே. (62)

இரண்டோனுரேன்காரியெட்டி-லுற
இதன்பதியுரோகமுறத்
திரண்டவிடந்தசமேற-வகைத்
தீக்கோள்கணேக்கமிடத்
திண்ணமாரோகன்றிசைக்கணவன்வீட்டில்
கண்ணினவன்புசிப்பிலந்தநாகரிகக்காளை
வண்ணமன்மதனிகரும்வாலைப்பருவத்தில்
மறலியூர்குடிபுகுந்துவாழ்வனெனக்காணே. (63)

சுகபாக்யாப்பனிரண்டோ-னிவர்கள்
சுடுபகையோடுடன்கூடி
மிகுகேந்த்ரமுறவாரோ-னுய
மேவவிஷமதிவிதியில்
விந்தையாயாறவன்மகாதிசைதன்னிற்
சந்திரற்கட்டமன்றந்திடுபுசிப்பிற்
சுந்தரக்காளையிளவாலைப்பருவத்தில்
துள்ளுகுட்டியந்தகன்சொந்தநகர்புகுமே. (64)

சத்துருவெட்டேகவெட்டோ-னேழோன்
தான்கூடிக்கண்டம்வர
நத்திக்கரிக்கேழில்குஜன்-நாட
நன்மையுள்ளோர்நோக்கமற
நாடியேயாறவன்றந்திடுந்திசையிற்
போடவருமேழோன்புசிப்பிலிந்தக்காளை
வாடியேமத்திமவாயுளிடையந்தோ
மரணமடைந்தேபரமன்சரணம்புகுவானே. (65)

எட்டிற்சனியேறிடவேசனிக்
கெட்டிற்குருமாறிடவே
அட்டமனுக்கேழில்விஷஞ்சேர
அதைத்தீயர்நோக்கமிட

அந்தன் மகா திசையிலேழோன் புசிப்பில்
விந்தைதருமத்திமவிடனுனவயதிற்
சுந்தர நிறைந்திடுமதன்றரனிலந்தோ
சொல்லலாமாரகந்துணிவுபெறமன்னே. (66)

தானத்திறைமெலிவாகப்-பாபர்
தழல்விழியானேக்கவட்ட
மானத்திறைசெயமாகச்-சுபர்
மலர்விழியினேக்கமற
மன்னிடுமேருவிறைதன்னுடன்சேர்ந்தோன்
பொன்னவன்றிசையினிடையட்டமன்புசிப்பி
னன்னயக்காளை யிளவாழைப்பருவத்தி
னமனுரைக்காண்பனெனநாட்டுவாய்நீயே. (67)

சோமனுக்குநாலிற்செவ்வா-யேழிற்
சுடர்மகன்சேர்ந்தம்மனையோன்
பூமன்விழிநோக்குறவே-விதியும்
புக்கிடவேகேந்திரத்திற்
போகுவன்காரிப்பதியோன்றன்றிசையில்
ஏகுவன்சந்திரவிதியின்புசிப்பில்
வாகையணிவிசையனெழில்வாலையிளவயதிற்
வஞ்சநமனெஞ்சுவப்பமரணமடைவானே. (68)

ஜென்மாதிக்கட்டமனும்-ஆறிற்
சேரவதுவுபயமாகக்
கன்மாதிசனியுங்கூடி-யதைக்
கண்டிடவேமத்திமத்தில்
கச்சிதமாயட்டமன்றன்மகாதிசையில்
உச்சிதமாகவேகிரியோன்புசிப்பி
னச்சரவம்போலநமனண்ணியினுயிரை
நல்லபட்சணமாகமெல்லுவான்காணே. (69)

கிரியிற்கஜன்விதியின்மதி-மேலவக்
கேடுபெற்றுத்தலைமெலியக்
கரியனதைநோக்கமுற-விதியும்
கட்டிப்பெலமாயிருக்கக்

கண்டிடுஞ்சனியலதவ்வீட்டுளான்றிசையி
றுண்டமதிக்கட்டமன்ரேய்ந்திடுபுசிப்பில்
முண்டகக்கணமாரன்போலுமிளவயதில்
முத்தியுலகம்புகுந்துசுத்திபெறுவானே. (70)

விதிகுஜனுமாறுபனிரண்டின்
மேவவெட்டிலவர்களையே
சதியாகரோகனேக்கமேரு
தானிழைக்கமத்திமத்திற்
றந்திரவாறவன்றன்மகாதிசையிற்
சுந்தரமங்களன்றந்திடுபுசிப்பில்
அந்தகன்போற்றுட்டராயுதத்தினலே
யரஹராவெட்டுண்டுமாள்வனெனலாமே. (71)

எட்டவனிராகுங்கூடியாறி
லேகவாரேனுட்சியுச்சத்
தொட்டிடவேமேருபகையாகச்
சொல்லியவீட்டோன்றிசையிற்
றுடியானஅட்டமன்றந்திடுபுசிப்பில்
கெடியானதிருடராலல்லதரவத்தான்
மடியாதஅழகுடையவாலையிளவயதில்
வைகுந்தசாயுச்யபதவிபெறுவானே. (72)

சுகன்விதியோனுறெட்டிராறுறச்
சுங்கன்பகைநீசமுறத்
தகையாரேன்மதிநாலோன்கூடிச்
சாரச்செவ்வாய்க்காறதனிற்
சாற்றுவாய்நாலாதிபன்மகாதிசையில்
ஏற்றவவமானத்தினிறையோன்புசிப்பின்
மாற்றிடும்பரிகரியிவ்வாகனத்தினலே
மாரகமுமத்திமவயதினிற்கூறே. (73)

மதிக்கிரண்டுபாரிசமும்பாம்பும்
மங்களன்சேதுடன்காரி

சாவகனேசத்தமனுய்சட்டாட்டவிரையத்
தானங்களிற்கிடந்தலையில்வேசைமனைசார்வான்
தாவிரண்டோன்கருநாகஞ்சத்தமனைக்கூடிச்
சட்டாட்டவியங்களிலேநெட்டோட்டஞ்சார்ந்தால்
பாவியிவன்முன்னுரைத்தபாதகனுக்கிளையான்
பாம்புபுகர்சத்தமனேழ்பதியப்பொலார்பார்க்க
ஆவிநொந்துதந்தைகண்டசொத்தனைத்தும்வாரி
அரத்தவிதழ்ப்பரத்தையருக்காக்கிவிடும்பதரே. (351)

மெய்த்தலையேகுருத்தலமாய்வேந்தன்மகன்சிலதீ
வினையரொடுநீசசந்த்ராமிசம்புகையிற்சேரச்
சத்தமத்தோன்சனிமனையிற்றத்திவிழவவனைச்
சனிவிழித்துமுனிவெடுக்கசத்தமம்பாக்கியத்தோன்
சத்தமத்திலாயினுமச்சனியிடத்திலேனுஞ்
சாரவந்தவேசிமகன்றூரந்தனைவழங்கி
நித்தமதுசீவனமாய்வயிறுவளர்க்கின்ற
நித்தியதரித்ரனெனநீயறிந்துகொள்க. (352)

நித்தமெனுமுயிர்த்தலத்துநீசர்கள்சஞ்சரிக்க
நிலைமைபெற்றசத்தமத்திற்றலைமைபெற்றகுருவும்
பைத்தலையகறுத்தநிறப்பாம்புமிருந்திடினும்
பார்த்திடினுஞ்சாதகன்றன்பத்தினியைவிரும்ப
மொய்த்துவருந்துற்சனர்க்குமுறைமைகள்பாராட்டி
முன்வருவார்பின்வருவார்முகமுகமன்பேசி
மைத்தடங்கட்பரத்தியர்மனைகடொறுந்திரிவன்
மனைவிபரபுருடரொடுமருவுவளென்றுரையே. (353)

சந்திரன்பன்னிரண்டிடத்திற்சத்தமத்திற்பாவாம்
சத்திலுறப்புகர்கொடியர்தம்முடனேகூடி
வெந்தகொலைக்களத்தினல்லோர்விழியுமின்றிகிடக்க
விதியுடையான்மனைவிசெயல்விள்ளுகிறேங்கொஞ்சம்
பந்தமுள்ளகணவனுடைப்பகைவனுடன்கூடிப்
படுத்திடுவளிதுவுமன்றிப்பகைவன்சொல்லைக்கேட்டுச்

சொந்தமுள்ளகொண்கனுயிர்துன்மரணப்படுத்திச்
சுடுநரகிற்கிடந்துழலுந்த்ரோகியிவளம்மே. (354)

பதினான்குசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சந்திரன்புகர்பொன்புதனிவர்நால்வர்
சத்தமகோணத்திலிருக்கச்
சதிவிதிநோக்கவலதுடனிருக்கத்
தாரங்கள்பற்பலசாரும்
தொந்தறைச்சதியிற்புகருறவேழோன்
சுகத்துறத்தீயர்பாக்கியத்தே
தோன்றினுற்பரத்தைசுகத்திலேமயங்கிச்
சுழலுவன்குடும்பத்திலேழில்
வெந்தெழும்பாபரிருந்திடப்புதன்சேய்
மெலிவுறவிதியொடுகாரி
வெறுப்பொடுபஞ்சமத்தலநோக்க
வேசிபோல்மனைவிவாய்த்திடுவள்
இந்துவும்புகருஞ்சனியுஞ்செவ்வாயு
மேழிலேநின்றிடக்கொடியோர்
இவர்முகம்பார்க்கில்மங்களமில்லை
யேற்குமேற்புத்திரரிலையாம். (355)

முதுமகற்கேழிற்புகர்நின்றுநீச
மூழ்கிடச்சேயுநாலவனும்
முழுபுலவனுக்குச்சத்தமத்திருக்கின்
மூவரைமணந்துந்தன்முடிவில்
எதுசெயவேண்டுமென்பதற்கொருத்தி
யிருந்திடாள்முன்னரேயிறப்பள்
ஏழவனுறெட்டீராறுதானத்
தெய்திடவேழிடைப்பாவர்
பதியுறக்காரிகுடும்பனைநோக்கப்
பாதகர்நல்லிடம்பற்றும்
பதவியிற்சனனமெடுத்துநற்குயின்
பாலியங்கெடுத்தவிப்பாவி

மதுமுதற்கொடியவழக்கங்கள்பழகி
வனத்திடையாற்றிடைப்பலபெண்
மருவித்தன்குடும்பமிழந்துழல்கின்ற
மடையரிற்கடைவனுவனே. (356;

அந்தணன்மூடமாயுறமூன்றி
லரவுசேய்சத்தமன்புகுத
அன்னைவீட்டிற்சாவகன்புகர்மேவி
லருங்கிழத்துதவிசெய்பவர்யார்
வந்தபெண்ணிருவரழிந்திடுவார்கள்
மரணநாளுதவிமற்றிலரால்
மலையவனேழோன்சனிக்குநாலிடத்தில்
மன்னுறச்சந்தரசத்தமத்தே
அந்தரத்தமரர்மந்திரியிருக்க
வதிற்சிலபாவர்வந்தடைய
அல்லதுகுருவைப்பார்க்கநேர்ந்தவருக்
கவள்பிறகவளெனுமுறையாற்
சுந்தரமடவாரிருவர்வந்தடைந்துஞ்
சுகஞ்சிலநாளனுபவித்தும்
துன்புறுவார்த்திகத்திலேயிருந்துச்
சுகந்தரார்தொலைத்திடுவாரே. (357)

பாக்கியனீசம்பகைசட்டாட்டங்கள்
பாடெனுமிழிவொன்றைப்பலிக்கப்
பளிங்குசேய்நீலப்பாம்புடன்மூவர்
பலிமரணத்தலம்பற்ற
யோக்கியம்படைத்தசாதகன்முறையே
யொன்பதுபெண்மணந்தாலும்
யூகந்தளாடுந்தளர்ச்சிநாண்மனைவி
யொருத்தியுமிருந்துதவாளே
வாக்கியன்பகைவீட்டெய்துறவேழோன்
வலியொரீஇச்சனிபுகரிருந்த
மனையிலேபுகுதத்தனத்தினைக்கதிரோன்
மனைராக்கைப்பற்றிவாழ

ஆக்கியதனத்தானென்றின்பின்னென்று
யைந்துபெண்மணம்புணர்ந்திருந்தும்
அந்த்யகாலத்திலருகிருந்துதவ
அமைகலாளொருத்தியுமந்தோ. (358)

காரியுஞ்சேயுமேழிடத்திருக்கக்
கதிர்புகரொன்றுறக்கலக்கக்
களத்திரத்ததிபன்வியத்திலேபொதுங்கக்
கண்டவச்சாதகன்றனக்குச்
காரியபலன்கேள்மங்களம்விரும்பான்
சற்சனர்வெறுப்புறவிதவைத்
தையலாள்கொடுத்தமையலாலன்று
டாட்புடைக்காட்படுவானல்
சீரியகுருவுமதியமுமேழிற்
சிறந்துறவவர்களைப்பாவர்
தீக்கணுனேக்கச்சனிகுடும்பத்தைச்
செறுத்தனர்நோக்கிடக்கிடைத்த
பூரியனந்தோபெண்பலிகொள்ளும்
பூதமேயாமிவனேழு
பூவையர்மணந்துந்தளர்ந்தகாலத்திற்
புத்திரனுற்பணிகொள்வன். (359)

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

வெள்ளியோபலவீனப்படப்பொன்னேன்
மேருவையுறநிதிவீட்டில்
எள்ளியவிரும்புபோயுறப்பாம்பொன்
றிதிர்புகச்சுகமிணக்கிவர்போற்
றெள்ளியர்புகுந்துகைப்பற்றிக்கொள்ளச்
செங்கதிர்க்கேழிடைச்செந்தீ
துள்ளியார்ப்பரிக்கில்நூறுபெண்கொண்டுந்
துயர்கிழத்துத்வ்வலர்தொலைவர். (360)

பதினன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

சுக்கிரன்பலக்கவதைச்சுபரல்லார்
சுடுகணுற்பார்த்திடவேழோன்

சூரியனிருவர் நின்றவீட்டேழோன்
சொர்க்கவீடேறினன்றுலங்க
அக்கிரமத்தோர் நட்பொடுநோக்க
வாய்மனைதீமனையாக
அதிட்டமுள்ளவனுற்கட்டினோர்பலர்நின்
றறுப்பவளொருத்தியுமலரால்
உக்ரவாளரவுபுகர்சதுர்க்கிறைவன்
ஓதுமிம்மூவருமூன்றில்
உறச்சுடுகண்ணூர்நோக்குறவிரண்டோ
னோரிருமூன்றிடைச்சுழலும்
வக்கிரவதிட்டங்கிடைத்தசாதகன்றன்
மனையவடனிமனைவாட
மறுமனைக்கேகவதின்மனையாவி
மடித்திடத்துடித்துழல்வானல். (361)

அந்தணனேழில்வரவதற்குரியோன்
அஷ்டமக்கஷ்டம்வீழ்ந்தலற
அக்ரமக்கோட்களுட்புகவலதங்
கவ்விருகோட்களைநோக்கச்
சந்திரன்புதன்மாமலைக்கிறைமுதலாச்
சாற்றுநற்கோளெலாம்விரையத்
தானமேடாதிநீசமீருகத்
தத்தமவலிரிலைகுறைய
வந்தவன்கொடியவஞ்சகன்றனது
மனையவணிலவிலாவிருட்போன்
மயங்குறவேசைமனைதொறுந்திரிந்து
மாண்பொருளிழந்துவறிஞனுய்ச்
சுந்தரமடந்தையுயிரினையிழக்கத்
துணித்திடவவளையுமிழந்து
த்ரோகியாய்நெடுநாட்கிடந்துயிர்துறந்து
சுடுநரகிடைநின்றுதுடிப்பன். (362)

சுங்கனேழதிபன்மங்கலன்மனையிற்
[illegible]

சொருகுறக்காரிசூரியனிருவர்
சோர்புறநோக்கவந்துதித்தோன்
அங்கசன்பெரும்போர்ப்படையினுன்மாழாந்
தல்பகலெனும்விகற்பகற்றி
அத்தைபெண்ணன்னேபெண்டனபெண்ணென்
றந்தரமாங்கறவகற்றிச்
சங்கையற்றவனுய்த்திரிந்துசாங்காலந்
தாரமற்றுழலுவனென்பார்
சத்தமத்திராகுதசத்திலேசவுமன்
சத்தமன்புகுந்தனரிருக்கப்
பக்கவைநோக்கில்மங்கலமிழந்த
பாவையைக்கோயிலிற்புணர்வன்
பார்க்கொருபாரமாய்ப்பிறந்தந்தோ
பயன்படாப்பதரெனப்படுவன். (363)

பதினன்குசீர்க் கழிநெடிற் சந்த விருத்தம்

மதியாறிலும்போகசுககாரகன்பேடு
மறைவாழ்பதம்பானுவிழிநாட
வருவானிளங்காளைவடிவானபெண்பாவை
மனையாளெனுஞ்சீரை-யுடையானும்
விதுவேழில்வெம்பாவர்விழிநாடவங்கேழி
னுடையாளிசண்டாள-வினைசேர
மிகைசீர்குடும்பாதிபனிராகுதன்சேர்வில்
விழநேர்பவன்றூரம்-விபசாரி
சுதன்வீடிரண்டாவன்விழிநாடவெண்டாது
சுகவீடடைந்தேற-உடையாளி
சனிராகுடன்கூடிவிளையாடவந்தோன்
துணையாளுமங்கோது-நடையானே
விதிநாதனைந்தாவன்மனையாளிடஞ்சேர
விடநாகம்வெங்காரி-யிவரோடே
விளையாடவந்தோன்மனையாள்கொடுங்காமி
வெளியாதல்கண்டேனுமறியாளே. (364)

கருமேசன்வெம்போகிமதவேளொருங்கேவி
கடநோயடைந்தேற-வருமாரல்
கரியோனுடன்கூடிநடமாடவந்தோன்
கனிகோனிறந்தேயும்-விபசாரி
பிருகாதினந்தானும்விழிநாதனுங்கூடிப்
பிழைகாரிகண்டேச-மனையாள்கோன்
பெரிதாரலுங்கூடிவிளையாடவந்தோன்
ப்ரியையாள்முன்விண்டானே-நிகர்வாளே
ஒருநாலில்வெங்காலன்மனையாளிடன்காணி
யுறராசனண்போடு-விதிகாண
உருவாகிவந்தோனதொருபாவைசண்டாளி
யொருநாளும்வெங்காம-மொழியாதாள்
திருவாழ்விழந்தேயும்விபசாரமங்காத
செயன்மாதர்சங்கேதமொருவாறு
சிறிதேமொழிந்தேமிமுறையேழவன்போன
செயலாலறிந்தோதல்வாழியாமே. (365)

---

## களத்திர மாரகம்



பதினன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

மனைவியாயினவர்குணமுரைத்தனமுன்
மற்றவர்க்குவருமாரகம்
வரையறுத்தனமுமல்லெம்வல்லவொரு
வாறுசொல்லுதுமதித்தியால்
மனைவியட்டமனுமதிலிருந்தவனு
மனைவியாறில்வருவானுமாம்
மன்னுமேழிடைவதிந்துளான்விழி
வழங்கினுனுடனிணங்கினுன்
இணையருந்துணைவிமாரகாதிர
ரினித்திசைக்குறிவனித்துநம்

ஏழவன்றிசையிரண்டுமாரகர்பு
சிப்பில்மாரகமியம்புவார்
சினவியத்துறைவர்திசையிலேந்திடைச்
சிறந்துநின்றவர்கள்புத்தியில்
செப்புவார்மனைவிமாரகத்துநிலை
யின்னமுஞ்சிலதெரிக்குவாம். (366)

அசுரர்மந்திரிதனுறினிற்பர்திசை
யவனதட்டமர்புசிப்பினும்
அம்புலிக்குமொருசத்தமத்துறுவர்
திசைபுகர்க்குவிதிபுத்தியும்
இசைகுடும்பபதிதிசையிலக்னபதி
புத்தியுங்கடையனதுதிசை
யிந்துவட்டமனதுறுபுசிப்பிணி
மிறைந்தவன்றிசையிலக்கிலே
உசனனுக்குவிதிபுத்தியுங்கணிறை
யட்டமன்றிசையிலுயர்பொனுக்
குற்றவட்டபதிபுத்தியும்பிரியை
மாரகங்களென ஓதுவர்
அசைவிலுத்தமகளத்திரங்களென
வங்குரைத்தவைகள்பின்புவைத்
தற்பவாயுவுள்களத்திரங்களை
யறிந்தெடுத்தல்முறையாகுமால். (367)

வேறு

சத்தமத்திறைவன்மூன்றிடைக்கதிரோன்
றயங்கொளிக்குட்படவாக்கோன்
சந்திரனேடும்விரையத்திற்புகுதத்
தலத்திறையிலாபத்திற்றரிக்க
வித்தகப்புகரோன்பாம்பொடுசுகத்தே
மேவுறக்கருமத்தில்விரையன்
விளங்குமெய்ஞ்ஞானியங்ஙனேபுகுத
மேதினியுதித்தசாதகர்க்குப்

பத்தினிமூவரவர்களின்மூத்தாள்
பயனிலளிடையிலேகிடைத்தாள்
பலபகலிருந்துசேட்டனைக்கனிட்ட
பாலனை நிலமையைப்பயந்தாள்
உத்தமியிளையாளிவணிலைப்பவளாம்
முரைக்குதும்புதன்றிசைசெவ்வா
யுணவினும்வெள்ளிதிசைசெவ்வாபுசிப்ப
மோரிருகளத்ரமாரகமே. (368)

---

## புத்திர பாவகம்

### குரு வணக்கம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

கலைஞானமறுபத்துநாலுளொன்ருங்
கணிதமுறையிலக்கணத்தாற்கதிர்வான்சோதி
நிலையானசோதிடநூற்கடலையாய்ந்து
நெறியறிந்திங்கெனக்குமதனிலைமைகாட்டுந்
தலைஞானியேரகத்துள்வாழ்வூத்த
சற்குருவீரப்பமணித்தருவைப்போற்றி
விலையாதுமதிப்பரியமணியாம்புத்ர
விதிமுறையையதிமுறையாவிளம்புவேமால். (369)

### விசேட புத்திர பலிதம்

நிதிபதியுமிலாபாதிபதியுநீல
நிறப்பாம்பும்பஞ்சமத்தோனெடியவீட்டிற்
பதிவுறவப்பஞ்சமத்தோனந்நாளேடும்
பனிமதியின்வீட்டிருக்கமதியெல்லோடுந்
துதிபடைத்தமலைமுடியிலிருப்பாராகிற்
சுந்தரமக்களைப்பெறுவன்சுகமுஞ்சேர்வன்

மதிபடைத்தமந்திரிபோற்பாலரோங்கி
வளரவளரத்தனமும்வளருமாதோ. (370)

பஞ்சமனையேகனொருதுணையாய்க்கூடிப்
பசந்தமனைக்கிருந்திடினும்பதிதான்மாறி
விஞ்சியொருவருக்கொருவர் நின்றிட்டாலும்
வெங்கோட்கள்கண்பாரா விட்டாலிந்த
வஞ்சமிலாமனத்தன்மகப்பேறுள்ளானே
மலையிறைநான்கிறையுறவாயைந்தோன்பார்க்கிற்
கொஞ்சமல்லபலகுழவிபெறுவான்மைந்தர்
குணநலத்திற்றந்தையினுங்கூறியோரே. (371)

சத்தமத்திற்றலைவனுறவிரண்டோனேழோன்
தாய்மனையில்வசித்திடப்பொன்கோணந்தா விற்
புத்திரனைக்கிடைப்பனவராலேநல்ல
புண்ணியமும்பெரும்புகழும்பொருந்திவாழ்வன்
சித்திதரும்பஞ்சமனோடாயத்தானுஞ்
சினேகிதராயுச்சநட்புச்சேர்ந்தாராகிற்
பத்ததிகந்தந்தையினுங்கீர்த்திசெல்வம்
படைத்துலகில்வாழுமகன்பலிப்பன்காணே. (372)

பஞ்சமனுந்தசமனுநட்பாகக்கூடிப்
பாவமிலார்கிரகத்தேபதியமீட்டும்
விஞ்சுபெறும்புண்ணியர்நோக்கடைந்தாலிந்த
மெய்யர்பலபுத்திரரைமேவிவாழ்வர்
அஞ்சிறையும்புண்ணியனுங்கூடிநல்லோ
ரகத்தினட்போடிருக்கநல்லோரருளுங்கூடச்
செஞ்சுடரோன்சனிசெவ்வாய்பாராராகிற்
செல்வமக்கள்கிடைத்துநிதிசெழிப்பாமன்னே. (373)

நல்லவர்களைந்திடத்தைக்கூடிநிற்க
நாட்டுமந்தவீட்டவனுநல்லோர்கூட்டிற்
புல்லுறப்பாபிகளிவரைப்பாராராகிற்
புத்திரரைப்பௌத்திரரைப்பொருந்திவாழ்வன்

அல்லலிலா நான்கிடத்திற்சுபர்கள்கூட
அமரர்பிரானுறிடத்திலுச்சமாகச்
சொல்லியவா றவனேழோனுயமேறத்
துட்டர்வியமுறில்வருவர்சுதர்கண்மாதோ. (374)

தலைத்தலைவனுதாயத்தலத்துவாழத்
தனயர்தலத்ததிபனெருசருப்பத்தோடு
மலைத்தலைவற்கீராறினட்பாய்வாழ
வானவர்கோன்மனையில்வெள்ளிமதப்பாம்போடும்
அலைத்தலைவாழரிபோலுமுச்சமேற
வலர்கதிரோன்புதனெடுமூன்றமரப்பெற்றேன்
நிலைத்தசெல்வமானமக்கட்பேறுவாய்த்து
நிரம்புவான்கல்விகுண நிறைந்துளானே. (375;

பஞ்சமன்வாக்கதிபன்மனைபற்றிநிற்கப்
பாக்கியவான்மேருவிடம்பதியவாக்கோன்
புஞ்சமதியுடன்கூடிப்புத்ரலாபப்
பொன்மலையில்வீற்றிருக்கப்பொருப்புநாதன்
செஞ்சுடரோனுடன்வாக்கினிலைத்துநிற்கத்
தேவகுருசுகவீட்டிற்சிறந்துநின்றால்
வஞ்சமிலிச்சாதகற்குப்புத்ரலாபம்
வளரும்வரவர்வாழ்வுவலுக்குங்காணே. (376)

புத்திரவானுன்கிடைக்கேந்திரிக்கவந்தப்
புத்திரத்தானத்திலுயர்பொன்னேன்மின்ன
உத்தமகர்மாதிபதிகேந்த்ரமேற
வுயர்பாக்யன்குருகேந்த்ரத்தோங்கிவாழச்
சித்திபெற்றவாதாயத்தலத்திலாட்சி
திங்களுறக்கிடைத்தவற்குச்சிறுபோழ்தத்தே
புத்திரன்பொன்போற்கிடைத்துநிலைத்துவாழ்ந்து
புண்ணியமுங்கண்ணியமும்பொருந்துவானே. (377)

சுகப்பதியிற்றருமகுணத்தவர்கணிற்கச்

சீர்குருரோகப்பதியில்வலுக்கொண்டேற

முகப்பதியின்சுகப்பதிகண்ணேக்கவேழோன்
முழுலாபத்திருக்கவியம்பாபர்மூழ்கி
சகப்பதியென்றுலகர்புகழ்பாலர்தோன்றிச்
சந்திரவிளம்பிறைபோற்றழைத்துவாழ்ந்து
மகப்பதிபோற்சுகம்புசித்துவளர்வாராயுள்
வளரவளரத்தனமும்வளருமன்றே. (378)

வானவர்கோவலுத்ததிரிகோணத்தேற
மண மகன்சாவகன்பஞ்சமத்தோனின்னூர்
ஈனமுறுசட்டாட்டவியத்தின்வீழி
லிவன்பலபுத்திரர்பெறுவனென்பர்நல்லோர்
ஞானகுருபஞ்சமனுய்வலுத்துநிற்க
ஞாயிறுசேய்புதன்சனியிந்நான்குதேவர்
ஊனமிலாக்கேந்திரகோணங்களேறி
யுலோபர்விழிக்கமையாரேலுண்டேமைந்தர். (379)

இலக்கினநாயகன்கருமநாதன்கூட
விவருடனேஞானகுருவிருந்துவாழ
நிலக்கினியபுத்திரனுதாயனேடு
நீலநிறப்பாம்போடுநேத்ரம்வாழச்
சுலக்கினத்துக்கெட்டிடைச்செம்பாம்புநிற்கச்
சுகபஞ்சமாதிபதிவியத்தேதோன்றிற்
றுலக்கின்நன்மணிவடம்போலிளமைப்போழ்தே
சுபுத்திரரைப்பெற்றெடுத்துச்சுகித்துவாழ்வான். (380)

பஞ்சமநாயகனுலிற்கேந்த்ரமேறப்
பஞ்சமத்தினுலிறைவன்பாம்பினேடு
மிஞ்சுநட்புப்பெற்றிருக்கச்சத்தமேசன்
மேலாட்சியொடுகேந்த்ரமேவிவாழக்
கொஞ்சுநிதிக்கரசுவிதிகூடிநிற்கக்
குஜனிரவியவனேடுங்குலவிவாழ்ந்தாற்
செஞ்சுடரோனனயமக்கட்பேறுவாய்ந்து
திண்ணியமும்புண்ணியமுஞ்சிறந்துவாழ்வான். (381)

சங்கநிதிபதுமநிதிநிதியிம்மூவர்
சந்திரன்பார்வையிற்சுபர்கள்தானத்தேறப்
பங்கமுறுதீயர்விழிபற்ருராகிற்
பாக்கியமக்களைப்பெறுவன்பத்தோனஞ்சோன்
றங்களிலேமாறிநிற்கலாபத்தானந்
தனிச்சுகனுர்வலுத்தேறச்சனித்தபாலன்
செங்கதிர்போன்மகப்பெறுவான்கீர்த்தியோங்கிச்
செழித்திருப்பனென்றுமுன்னேர்செப்புவரால். (382)

புத்திரத்தானத்துக்கார்காரகேசன்
புகுதாமனேக்காமற்புறம்பேநிற்கச்
சித்திரபானுவின்புதல்வன்பஞ்சமேசன்
றிருமுகநோக்காதிருக்கச்செனித்துளோர்க்குப்
பத்துமக்கள்பிறப்பர்சிலரிறப்பாரேனும்
பாதிக்குமேற்றெகையோர்பலிப்பாரின்னும்
உத்தமராய்த்தந்தைமொழிதவருராகி
யுறுதியொடுவாழ்வரென்பருயர்ந்தநூலோர். (383)

பொன்பொருப்பில்வீற்றிருக்கப்புத்ரத்தானப்
புரவலன்சத்தமத்தானம்புகுந்துநிற்க
அன்பொருப்பட்டசுரகுருவாறில்மேவ
வைந்திடத்திற்சந்திரனுமரவுங்கூடத்
தன்பருத்தவீட்டினைச்சூரியனுக்கீந்து
சத்தமத்தின்மங்கலனுர்சனியைக்கூடின்
முன்பொருத்திக்கொருநாலுமகள்பெற்றப்பால்
முழுமகனைப்பின்பொருத்திமுயக்கிற்சேர்வன். (384)

அஞ்சிடத்தோன்புகராகிச்சுகத்தினிற்க
வைந்திடத்திற்சூரியனேடருணன்சேர
விஞ்சுசத்தமாதிபன்சத்தமத்தேவாழ
வியத்திலேநிதிபதிபாம்புடனேமேவக்
குஞ்சுமதிசேயுடனேயாறிற்சேரக்
கூடினேன்சிலசிசுவைக்கொடுத்துப்பின்பு

மஞ்சுபொழியத்தளிர்த்தபயிர்போற்பாலர்
வாக்கிடைத்துச்சிறப்புடைத்தாய்வாழ்வன்மாதோ. ()

புத்திரத்தானத்ததிபனுலோடு
பொருந்திவளர்வாக்கிடத்தேபுதேதவேழோன்
சுத்தவெள்ளிக்கீராறிற்கதிரோன்மைந்தன்
றுணைக்கூடியாட்சிபெற்றுத்துலங்கப்பாக்யத்
துத்தமப்பாம்பரசிருக்கநாலிற்சோம
னுறக்குருபுத்திரத்தானத்தோங்கிநின்ருல்
இத்தரத்தோன்நாவலருக்கரசனுவா
னிவன்மூன்றுபெண்பெறுவனென்பர்நூலோர். (386)

பஞ்சமத்தோனட்டமத்திற்பாயவேழோன்
பரிதியுடன்வாக்கிடத்திலாட்சிபற்றக்
கொஞ்சியவாக்கிறையாட்சிபெற்றுலாபக்
கோமகனேரிரண்டிற்குலவச்சோமன்
விஞ்சியசத்தமனுடனேசனிக்கோரெட்டில்
விளங்கவருட்குருகேந்த்ரமேவிவாழ்ந்தாற்
பஞ்சமிலாச்செல்வமொடுமக்கட்பேறும்
பலித்துலகிற்கெலித்தசெயம்பரம்புவானுல். (387)

பஞ்சமத்தினிருபாலுந்தீயர்நிற்கப்
பரிதிமகன்விழிநோக்கம்படாதேநின்று
விஞ்சைகற்றகுருகோணத்தேறிநிற்கில்
வீடெல்லாம்புத்திரராய்விளங்குவாரால்
பஞ்சமமேமேடமாயதிலேசெவ்வாய்
பதியமீனத்திடைப்பொன்பற்றிநிற்க
வஞ்சரதைநோக்காரேல்வீமசேனன்
மறுத்துமவதரித்ததுபோல்வருவார்மைந்தர். (388)

சந்திரபஞ்சமத்திடைப்பஞ்சமக்கோன்பாக்யத்
தானபதிக்காதாயத்தலத்துவாழச்
சந்திரபாக்யாதிபதிகுருராசன்பஞ்
சமத்திலேநிற்கரவிதலைமேனிற்கச்

சந்திரன்கேந்திரிக்கவுயர்சந்த்ரபாக்யத்
தலத்திலேவெள்ளிநின்றுதழைப்பனுகிற்
சந்திரன்போல்மைந்தர்களைக்கிடைத்துநெஞ்சந்
தளிர்த்தோங்கிச்செழித்தசுகந்தழைப்பன்மாதோ. ()

தேளைந்தாமிடமாகியதிலேவெய்யோன்
சிறந்திடமெய்த்தனுவிடத்தேசீவன்வாழக்
கோளந்தனுற்கோணமறுத்துநிற்கக்
குழவிகிழவயதில்வந்துகுலவுமென்ப
கேளன்பாய்ப்பெண்கிரகமைந்தின்மேவக்
கிழத்துமைந்தோனுன்கினிடைக்கிளம்பமேரு
ஆளுங்கோனுணுகியைந்தோன்பெண்ணே
யாகிலிவன்மைந்தருடனுக்கஞ்சேர்வான். (390)

பஞ்சமமேகுருவீடாயதிலேவெள்ளி
பதிவுறப்பொன்மதிவீட்டிற்படரவைந்தோன்
வஞ்சர்குருமாளிகையில்வாழநேர்ந்தோன்
மக்களெலாம்பெண்ணுவர்மைந்தன்வாரான்
அஞ்சிடமேபுகர்மனையாயதிலேதிங்க
ளமரவைந்தாதிபன்புகரோடமரவேதா
கொஞ்சமருள்வைத்தாலுமிருந்திட்டாலுங்
குணமணிபோல்மகளொருத்திகொலுச்செய்வாளே. ()

செங்கதிரோன்மகன்மனைபஞ்சமமாயந்தத்
திருமனையிற்குருகோணஞ்சேரநான்கிற்
பங்குநட்புக்கேந்திரம்பெற்றிருக்கவெள்ளி
பரிதியொடுமாட்சிபெற்றபௌமனேடும்
பொங்குநட்புப்பெற்றிருக்கமதிலாபத்தே
புகுந்தாட்சிநிலையடையப்பொறுத்தாலிந்தத்
துங்கமகனெருமகனைக்கிடைத்துப்பின்பு
சுகுணமகளிருவரைத்தந்துகளிப்பானுல். (392)

பஞ்சமத்திற்குருராசனிருந்துலக்னம்
பார்க்கமதிகேந்திரத்துமேலேப்பார்க்கப்

பஞ்சமத்தோன்சந்திரகேந்திரத்தில்வாழப்
பாக்யபதியாதாயப்பதத்துமேவ
விஞ்சுசந்த்ரபாக்கியத்திலிலக்கினேசன்
மெய்ஞ்ஞானியுடனிருக்கவிளைந்தபாலன்
மஞ்சுலவுங்குருகிரியானருள்பெற்றேங்கி
மக்கண்மக்கண்மக்களொடுவாழ்வன்காணே. (393)

தலைத்தலைவனுதாயத்தலத்துவாழத்
தனயர்தலத்ததிபனெருசருப்பத்தோடு
மலைத்தலைவற்கீராறினட்பாய்வாழ
வானவர்கோன்மனையில்வெள்ளிமதப்பாம்போடே
அலைத்தலைவாழரிபோலுமுச்சமேற
வளர்கதிரோன்புதன்மூன்றிலமரப்பெற்றேன்
நிலைத்தசெல்வமானமக்கட்பேறுவாய்த்து
நிரம்புவான்கல்விகுண நிறைந்துளானே. (394)

தலைக்கதிபன்பாக்கியவான்கூடியேழிற்
சரிக்கவுதயத்தலத்திற்றனன்வாழ்ந்தாலும்
தலைக்கழகாய்க்குருராசனிருந்துமேருத்
தலைவனிரண்டாமதிபன்சார்ந்தும்பார்த்தும்
நிலைத்ததிரிகோணகேந்திரங்களேறி
நின்றாலுங்குருகருணை நிருமித்தாலும்
வலுத்தசுபவர்க்கமடைந்தாலுமின்னுன்
மனை நிரம்பப்புத்திரர்கள்வருவர்மாதோ. (395)

புந்திமதிசனிசெவ்வாய்நால்வர்கூடிப்
புண்ணியத்தானத்திருக்கப்பொருந்தினுலும்
செந்தழல்சந்திரனருக்கன்மூவர்கூடித்
திருமனையினட்புடனேசேர்ந்துற்றாலும்
அந்தணன்சுன்மதியரவமொன்றுகூடி
யைந்தினிலாபத்திடையேயமர்ந்திட்டாலும்
வெந்தகுணத்தவர்களைந்தைவிழியாராகில்
வீடெல்லாம்புத்திரராய்விளங்குவானே. (396)

வக்கிரன்பொன்புந்திமதிவெள்ளிகூடி
மனையிலொன்றிலினிதிருந்துமருவினலும்
வக்கிரன்மாலிரவியொன்றுகூடிநல்ல
மனையிடத்திலிருந்தாலுமாதாயத்தில்
மெய்க்குருவுஞ்சந்திரனுமிதுபோற்கூடி
மேலானமனையிடத்துவிளங்கினலும்
மிக்கமுடிபாக்கியமைந்திவற்றுளொன்றின்
மேவினும்புத்திரர்பலரைவிளைவர்காணே. (397)

சுகபஞ்சமாதிபதிகேந்த்ரவாட்சி
சுகத்தலத்திலடைந்துகுருச்சந்த்ரலாப
மகபுஞ்சமடைந்துநிதிபதியின்கோண
மகத்வமுற்றுக்கருமனிலாபத்தில்வாய்ந்தாற்
சகபஞ்சங்கனவிடத்துமறியான்செல்வந்
தழைத்திருந்துஞ்செருக்கடையான்சத்யநாவான்
மகபஞ்சமாலிவனுக்கந்த்யமட்டு
மக்கள்மக்கள்பெற்றிருந்துவாழ்வன்காணே. (398)

தனுசினுக்கென்றெடுத்தபஞ்சவிரையநாதன்
சந்திரனுருடன்கூடிக்குருலாபத்தில்
மினுமினுக்கக்கிடைத்துநிறைதனவான்றூய
வீக்ஷணமுங்கிடைத்துநிதிவேந்திலாபத்
தினிமைபெற்றுச்சுகன்போகத்தெய்தப்பெற்ருே
னிலங்கியபாக்கியத்துறுமிராகுநாளிற்
கனிவுமிக்கசத்தமத்தோன்புசிப்பில்வாய்க்குங்
காதலனேடிரண்டுமக்கள்கதித்துள்ளானே. (399)

பஞ்சமகர்மாதிபதிபாக்யமேறி
பருப்பதராசன்கருணைபடைத்துநின்று
விஞ்சுசுகபாக்கியனையிலாபத்தோனை
விரும்புதனதாயவீட்டிற்பெற்றும்
புஞ்சலக்னகேந்திரமும்பெற்றுவாய்ந்த
போதுவந்தபுதல்வனுக்குப்புதல்வர்ளுன

விஞ்சைகற்றகுருதிசையில்கருமம்வாய்த்த
வேளாளன்புத்திமுதல்மேவுவாரே. (400)

பதினுன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

புத்ரகாரகன்வலுத்தகேந்திர
மிருந்துபுத்திரவிராசனைப்
புத்ரமாளிகையையுய்த்துநோக்கியருள்
பொழியவிந்துகுருகோணனுய்
மெத்தலாபபதியாகியம்பொன்விழி
வீக்ஷணப்பொலிவடைந்துமா
விநுதபுத்திரதலத்திருந்துமக
வீசனுக்குநயமேவவச்
சுத்தபஞ்சமனுயர்ந்தகேந்திர
சுகம்பொருந்தியிறையருள்பெறச்
சுகிர்தகர்மபதிசந்த்ரபஞ்சம
சுபம்பொருந்தவருசாதகன்
கொத்தடுக்குமலரென்னமுன்சில
குருந்துபெண்கிளைகிடைத்துமேற்
குருதிசைக்கண்மதிபுத்தியிற்றரு
குமாரனீளநிலையாளனே. (401)

வேறு

பஞ்சமத்திற்குருராசன்வரவேயைந்தோன்
பார்த்தவனதருட்கடைக்கண்பலித்திட்டாலும்
பஞ்சமனும்புத்திரகாரகனுங்கூடிப்
பரவுவைசேடிகவமிசம்பதிந்திட்டாலும்
பஞ்சமத்திற்றனபதிநின்றறிந்தணுளன்
பார்வைகிடைத்திடவேழிற்பனிநிலாச்சேர்ந்
தஞ்சவனைமுகநோக்கியருள்செய்தாலு
மவர்வளவெல்லாமகவாயடைவர்மாதோ. (402)

இலக்கினத்தோன்பஞ்சமன்சேர்ந்தொன்றுகூடி
இறைவனருள்கிடைத்தாலுமேழுக்கேழாய்த்

துலக்கிநின்றுபார்த்தாலுமைந்தாம்வீட்டிற்
றேய்ந்திருவிழிக்கெதிரேதோன்றினுலும்
அலக்கணிலாவொன்பதைந்தொன்றுடையார்கோண
மணிகேந்திரமாட்சிநட்பையடைந்துற்ருலும்
விலக்கமிலாவளர்பிறைமாபலங்கொண்டாலும்
வீடுகட்டவேண்டுமக்கள்விழையாடற்கே. (403)

காமத்தோனிலக்கினத்தோனைந்தோனுசான்
கலந்திவர்கள்சுபவமிசங்கதித்துநிற்கச்
சோமத்தேவன்கருணையுடனேபார்க்கிற்
சுந்தரமைந்தரைப்பெறுவர்சுகமுஞ்சேர்வர்
சேமப்பூங்கிரியிலேந்திலாசானிற்கச்
செப்புமற்றேருபசெயத்திற்சேர்ந்துற்ருலும்
தாமத்தோன்மைந்தர்பலர்கிடைத்துவாழ்வன்
சந்ததியின்சந்ததியுந்தழைக்குந்தானே. (404)

---

## மத்திம புத்திர பலிதம்



எண்சீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்

அஞ்சிரண்டினதிபரீனராகியைந்திலேறவங்
கவரைநல்லரல்லர்வெங்கணமைவுறக்கிடைத்தவிப்
புஞ்சமானநுண்பயன்பொருத்துவந்தசாதகன்
புறப்படுந்தரத்திலேவரப்படுஞ்சொல்மைந்தரே
பஞ்சமத்தனுட்சிபெற்றுநீசர்கண்பலிக்கவே
பாலருண்டுகாலம்வந்துநற்பயன்கொடுக்குமால்
அஞ்சிடத்துநிதியிருக்கவங்கிகண்செலுத்துமேல்
அறிவுமக்கியேனுமுண்டுகருமமுந்தமைந்தனே. (405)

ஐந்திடைச்சிகண்டிதன்கண்ணுகவல்லத்திலுற
ஆட்சிநட்பிடைந்துபஞ்சமாதிபத்யன்மேவுற

வெந்ததுட்டர்காணுருதுவிலகுவார்களாயினில்
வீரனுக்கனேகபாலர்விழலெனப்பிறப்பராம்
அந்தணுளன்மூன்றிலேயமர்ந்திருக்கவந்தவீட்
டாதிபன்சதுர்க்கிராசனேந்திரண்டில்வந்துற
இந்தமைந்தனைந்துமாறுமேழுபெண்கள்பெற்றபின்
இந்த்ரநீலமணியின்மைந்தனேகனுகவருவனே. (406)

அஞ்சவன்சிறந்தகோணமமரவீறுகேந்திரத்
தந்தணுளனேறவஞ்சரங்குகண்செலுத்தினல்
நெஞ்சிலேதுமறிவிலாதநெடியமூடனுருமகன்
நித்யகர்மகிரியைசெய்யநிற்பனென்பர்நினைவுளார்
விஞ்சுறுஞ்சுகாங்கிசத்தில்மேவியைந்தினுதிபன்
விள்ளுமூன்றினின்றுபுல்லர்விழிபெருதுமேவினுற்
கொஞ்சுமைந்நர்வந்துபோவர்பின்புகடையிலே
கொள்ளிவைக்கமைந்தனுண்டுகுருவருட்கிடைக்கினே.

சரத்திடைப்பொன்னைந்திலெய்தவைந்திடத்துநாயகன்
ருவியேதிறத்திலெய்தல்சத்தியவந்தர்நோக்கினல்
வரத்தினுற்கிடைப்பர்மைந்தரில்லையென்பதில்லையே
மலையுலேவியாழனின்றுமைந்தன்வீடுசூன்யமாய்த்
திருத்தரும்பன்னுென்றின்மீதுகாககேதுநிற்கவே
செல்வரத்தனுலிலேசிறந்துநிற்கவேழிலே
குருத்துரோகிபுந்தியோடுகூடவாறிரவிபுகர்
கூடிநிற்கிலருமையானகுழவிதோன்றிநிற்பனே. (408)

---

## சுவீகார புத்திர பலன்

### எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

முடியிராசனைந்தினுதன்மாறிமுந்தவெஞ்சனி
முனிந்துபஞ்சமத்திலேறவந்தணன்முதிர்ந்திடிற்
பொடியனில்லைதத்தமைந்தன்வந்துகாக்குமென்பராற்
புத்ரநாதனிரவியோடுபுத்ரகர்மமாட்சிபெற்

றடியிராசனனுசதானநிற்கவட்டமாதிபன்
ஐந்திலஞ்சலஞ்சலென்றடுத்துநண்புகூசவே
கொடியராகுமூன்றிலேகொதித்துநிற்கவந்தவன்
குமரனின்றிமகண்மணந்தகொழுநனின்புபெறுவனல்.

இகழுமாறுமாறுமாறுமெட்டுமானராசியில்
இனியமைந்தனுவிநாதனிழிவடைந்துநின்றுநற்
புகழுயர்ந்தபுண்ணியத்தர்புனிதநோக்கமெய்திடுற்
புத்ரனிற்சிறந்தபிள்ளைதத்தெனப்பொருந்துவான்
திகழுமைந்தராதிபன்செவாயொடைந்தினட்புறச்
செங்கதிர்க்குமைந்தனைந்தைநேர்செறுத்துநோக்கினல்
மகனுமில்லைமக்களுமில்லைவங்கிஷத்துமில்லையால்
மருவுமொக்கலுய்த்ததத்தமைந்தனற்சுகிப்பனே. (410)

சனியுமைந்தனுங்குளிர்ந்தசந்த்ரனேடுகூடியே
தலையுமைந்துமொன்பதுசஞ்சரிக்கினுஞ்சனிப்பிரான்
கனியுமங்கியொன்றுகூடியேழிடைக்கல்க்கநற்
கருணையாளர்விழிமறுத்துமருளர்பார்வைகப்பினும்
தனயர்வன்னன்முடியிராசன்மாறிநிற்கவவர்களைச்
சல்லியன்பொன்னேக்ககன்றுசர்ப்பநோக்கநேரினும்
இனியவொன்றுபஞ்சமத்திராசர்பாவவர்க்கமுற்
றிறைவனேக்கமுறினும்வந்துதத்தமைந்தனெய்துமே.

புத்திராதிபன்சனிப்புலிக்குநேசமாயுறப்
பொருந்தியங்கிசங்கணேறவிரையபூமனைந்தவன்
சித்ரபானுவாகிமுன்சொலிறைவரோடுமங்கிசம்
சேருமோரைரெட்டையாய்ச்சிறக்கினுஞ்சொலைந்திலே
சுத்தமானபொன்னிருக்கமற்றையோர்சுவர்க்கமாய்த்
துன்னினுமிதுனகன்னியோரையைந்துதோன்றிடப்
பித்தனனசனியனங்கிகுளிகனும்பெருந்துணைப்
பெறநடக்கினுஞ்சுவீகரித்துநன்மைபெறுவரால். (412)

மேருநாதனைந்திருக்கவைந்தினுதன்மேனிதி

வீட்டிருக்கநாசகாலர்விதுவுடன்கலக்கினும்

ஆருமைந்தில்நல்லகோட்களமரவிந்தமனையுளான்
அங்கிலாதுநோக்கலாமலகலநின்றுதிரியினும்
தீரனுனசுக்கிரன்சிகண்டிதன்றன்வர்க்கமேற்
சேரமந்தன்வர்க்கமேற்றிரிந்திடக்கிடைக்கினும்
சாரமானவேழிலங்கிசனிகலக்கவிரையமேற்
சந்திரன்படுக்கினுஞ்சொற்றத்தமைந்தனெய்துமே. ()

---

## நபுத்ர சாதகவியல்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

விரையமீதுபஞ்சமாதிவீரனுகவன்புக
வெள்ளிபொன்கண்வைத்திடாதுவிலகிலில்லைபிள்ளையா
சிரமவட்டமேசனைந்தில்மேவவந்தவீட்டினேன் [ல்
செப்புமந்தவீட்டினுக்குமெட்டிலேசிறைபடக்
குருவுயர்ந்தகேந்த்ரமேறவந்தசாதகர்க்குமேற்
கொள்ளிவைக்கமைந்தனில்லைகூறலாந்திடத்தினே
அருமையானபஞ்சமத்திலந்தனிற்கநாலிலும்
அந்தமீதுவிடாிருக்கில்வந்துறுர்கண்மக்களே. (414)

சந்த்ரபஞ்சமாதிபன்பளிங்கிபனுடுசார்வுறீஇத்
தையல்ராசிமீதிருக்கவருளிலார்நோக்கிடின்
மைந்தன்வந்திடான்பெண்ணென்றுவருமெனக்குறிக்கலாம்
வாழுமேழிடத்துநாதனைந்திடத்தில்வந்துற
வெந்தபாபர்கூடிநிற்கமெய்யிலார்விழிக்கவி
யாழனூர்சிறக்கிலில்லைபிள்ளையென்றுவிள்ளுவார்
ஐந்திடத்துநாதனிலராகுவோடுகூடியீ
ராறெராறிலட்டமத்திலணுகிலில்லைபிள்ளையே. (415)

---

## துவேஷபுத்திரர்



கட்டளைக் கலிப்பா

பஞ்சமத்திலருங்கனிருக்கவப்
பதியுளான்றூர்ப்பலம்பெற்றுப்பாழ்ஞ்சனி
வஞ்சவுக்கிரன்பார்வைகிடைத்திடின்
மைந்தன்றேன்றிப்பிதாவைவருத்துவான்
செஞ்சுடர்க்கனல்வெள்ளிபொன்சூரியன்
றிங்கள்கூடினுமொன்பதிற்றீச்சனி
நஞ்சுநாகங்கலந்திருந்தாலுஞ்சேரி
நாசகாலன்பிதாவின்றுவேஷியே. (416)

தந்தைலக்கினத்துக்கெட்டுமாறுமாய்த்
தனயர்லக்கினஞ்சன்மிக்கப்பட்டதேல்
வந்தபாலன்பிதுர்க்குத்துவேஷியே
மலையன்பஞ்சமன்வன்பகையாயுறில்
வெந்துசீறுந்துவேஷியைப்பிள்ளையாய்
மேவப்பெற்றதவமிகமேன்மையே
முந்துமொன்பதிற்சேயரவிவெஞ்சனி
மூழ்கிற்பாலர்முழுப்பகையாவரே. (417)

எட்டுமாறுமீராறுமுளார்பல
மேறநாலொன்பதேழுமுளார்பலங்
கெட்டுவாடக்கிடைத்தவர்புத்திரன்
கிடைப்பர்தஞ்சுகக்கேடுகிடைத்தென
வட்டமாமதிசெங்கதிர்சேய்குரு
வண்ணவெள்ளியிவ்வானவர்கூடிடிற்
துட்டமைந்தன்பிறப்பன்றன்றுயைச்சு
டாமற்சுட்டுத்துரத்துந்துரோகியே. (418)

பாக்கியத்திற்புகர்மதிசேயவன்
பதியிற்றுயைப்பழிக்குஞ்சுதன்பெறும்

காக்குமைந்திற்சனியிவற்கைந்திலே
கனகநாமனிவற்கைந்திலேபுக
தாக்குஞ்சேய்குளிகன்கரும்பாம்புசெஞ்
சர்ப்பமேவக்கிடைத்திட்டஜாதகன்
வாக்குங்கண்ணுநற்காதுமிலாதவோர்
மகவைப்பெற்றுமனந்துடிப்பானரோ. (419)

---

## புத்திர மாரகம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

புத்திரர்க்குமாரகம்பொறுத்துநின்றதிசைகளும்
புத்தியுந்தெரிக்குநாம்புகுந்தறிந்துகொண்மினே
புத்திரர்க்கிடத்தனேடுபுக்குநின்றுளோருமப்
புத்திரத்தலத்தினட்டமம்புகுந்தகோட்களும்
புத்திரர்க்கொன்றெட்டிடைக்கண்வைத்துநின்றபேர்களும்
புத்திநாதர்திசையிராசராப்புகுந்துபொருதுநர்
எத்திசைக்கணெவர்புசிப்பெனத்தெரிந்துகொள்வதேல்
இவர்கள்பாகைபுடவிதிக்கணினிதறிந்துகொள்கவே. (420)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

புத்திரமாரகத்திசையோர்புத்திநாதர்
புலக்கியத்தையிலக்கியமாப்புகலுங்காலைப்
புத்திரர்க்கட்டமத்திறைவர்கூடிப்புக்கோர்
புத்திரர்க்காருமிடத்தோர்புத்ரகர்மர்
இத்தனைபேர்களிற்கொடுமைவலுத்தோர்தம்மை
எண்ணியவர்புடஞ்சோதித்தேற்றம்பாராய்
புத்திரர்க்காயுட்பாகம்வலுத்துநின்றுற்
போகவிட்டுக்கடைக்காலப்பகுதிகாணே. (421)

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

சந்த்ரபஞ்சமத்தின்மீதுசனியனேடுபொன்னேடுந்
தருமராசன்வந்திடத்தயவிலர்கணேக்குறில்

வந்தமங்கைமூவருக்குமலடியென்றபேர்வரூஉ
மைந்தன்வீட்டிலாறனெட்டன்வந்திருக்கவைந்தவன்
அந்தணற்கொர்துணையனுகியாறினெட்டிலெய்துறில்
ஆயமைந்தன்மலடனென்னவட்டியொன்றுமில்லையே
அந்தமாநிதிக்கிராசனுறினீசரோடுற
ஐந்துமொன்றுமுடையரிந்துவேழிலாகின்மலடனே. (422)

மைந்தனேடுகாரிதானமாறிநிற்கவாரியன்
வஞ்சரோடுகூடமைந்தன்விரையமெய்திடுவாடுறில்
வந்தமைந்தராவிசிந்திமாய்வரன்றிநிற்பரோ
மைந்தனுறிலெய்தவந்தமனையுளானிதிக்கனே
வெந்தநெஞ்சர்பார்க்குமாறுமேவிநிற்கவரசனை
வீறுகாரிசேய்விழிக்கவிதிகிடைத்தஜாதகன்
ஐந்துமைந்துமைந்துமைந்துநாவினுற்பெருக்
கமைந்தவேள்விசெய்துமைந்தரணுகலென்பதரிதரோ. ()

சீதகன்செவாயோடேசினந்துநாலிலெய்துறச்
செல்வபுத்ரதானமீதுபொன்சிறந்தகேந்திர
மீதுநிற்கமைந்தரார்விழற்கிறைத்தபுனலெனு
வீவரன்றிநில்பெரூர்விதுப்பிரானுடைருளிலா
ரேதுணைக்கொடுத்ரகர்மராசிமேலிருப்புற
இலக்கினத்தில்வஞ்சராரிருக்கின்மைந்தரில்லையாம்
ஓதிவைத்தமுறையெலாமுணர்ந்தபஞ்சமாதிபற்
குற்றநன்மைதீமைகண்டுரைப்பர்புத்ரருறுதியே. (424)

---

## யோக பாவகம்



### குரு வணக்கம்

*எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

போதிடமினுருலராப்பூந்தருவின்வாய்ந்தவொரு
பூவைப்போற்று
மாதிடவற்கருமறையைவடித்தளிப்பத்தலமாக
வாய்த்தவேர

காதிடநீதருகெனப்பெற்றெனக்களித்தகுருராச
கருணனை
சோதிடன்வீரப்பமுகிலடிவணங்கியோகமுறை
சொல்கின்றேனே. (425)

---

## இராஜ யோகம்



*சந்தப்பா*

சக்கராதியும்லக்கினதியும்
அப்பன்வீடுற - நளிர்தாவு
தப்பிலாமதிபெற்றதாயிறை
தத்திநாலுற - வதனோடு
சுக்ரன்வாளராவர்க்கமேறிமா
சுத்தவேழிலே - வரலாகச்
சொற்கியாதிசுரர்க்குமாகுரு
சுப்புண்யாலய - மிசைமேவு
மிக்கதூமதிநற்பொனோடென்
வர்க்கமேறின - னலமேவ
வெப்பஞாயிறுபச்சைமாலுடன்
வெற்புமேவினன் - வரலாலே
தக்கநாவலர்மிக்கபாமழை
சத்தமாரியி - னெதிர்பாடச்
சத்ரசாமரநற்பொனுசன
சக்கரேஸ்வர - னிவனுமே. (426)

பதினன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

சரத்திற்முற்கூறுபயத்திற்பிற்கூறு
தருந்திரத்திடைநடுக்கூறு
சந்திரனிருக்கப்புதன்முதற்சுபர்கள்
சதுரர்தண்ணருளொடுபார்க்க

உரைத்திடுமிதுவேயிலக்கினமாக
வுசனனங்கதிலுறவிவனை
யுத்தமராவாருய்த்தருணுேக்க
வுதயனட்பாட்சியுச்சத்தே
திரத்திரிகோணகேந்திராதிதனிற்
சிறக்கவிவ்விலக்கினுதிபனைத்
தேவர்கோனுேக்கபாபர்கண்காணுத்
திசையிலேமறைவுறக்கிடைத்தால்
திரைகடலுடுத்தபுவியெலாஞ்செங்கோல்
செலுத்துவனிவனரண்மனையிற்
றிருமகள்நடனமாடுவளிவனைச்
செகபதியென்பராற்றேர்ந்தோர். (427)

இரவியும்புதனுஞ்சுகத்திலேயிருக்க
விந்துவுஞ்சனியும்பத்திடத்தே
இருக்கலக்கினத்திற்குஜனுறக்குருவங்
கிசத்திலேசுக்கிரனிருக்கச்
சிரமிசையரசனிருக்கமாமதியுஞ்
சிறந்துபூரணவடிவடையத்
தீயர்சட்டாட்டவிடத்திலேமறையச்
செழித்துலகுதித்தசாதகவான்
அரசனுயுலகமடிதொழப்பலநா
ளாயுளோடிருந்துநாமகளும்
அலைகடல்மகளுந்தனதிடம்வாழ
வன்னசத்திரம்பலநடத்தி
வரைபுரைதிருத்தோளிடைப்பிரதாப
மாமகணடஞ்செயக்கனத
மணிமுடிசூடியரியணைமேவி
மகத்துவம்பொருந்திவாழ்வானே. (428)

தலையிறைநான்கினிறைநிதியிறையித்
தலைவர்கண்மூவரும்பாக்யத்
தலத்திலேநிலைத்துத்தசத்திறைதலைமேற்
சரித்துநல்லோர்களெல்லோரும்

மலையிலேகருணைத்திருக்கணேக்கேற்றி
மற்றவரற்றவராகி
வாய்ந்திடக்கண்டசாதகன்புவிக்கு
மன்னவனேயென்பர்வல்லோர்
நிலையிறைலாபத்திறைநிதியிறையிந்
நிருபர்கண்மூவரும்பத்தி
னிற்கவத்தசத்தோனிலக்கின்த்தலத்தே
நேருறத்தீயவர்நோக்கந்
தொலைவுறநல்லோர்கருணையாரமுதந்
தோய்ந்துறக்கிடைத்தசாதகவான்
சுடர்முடிசூடியரியணையேறுந்
துரகதகெசரததுரையே. (429)

## இராஜயோகம்

பண்ணவர்சாமிதானவர்சாமி
பாக்கியசாமியிம்மூவர்
பரவுறுகோணகேந்த்ரமாளிகையிற்
பதிவுறவவ்வவர்க்கவையே
திண்ணமாமாட்சியுச்சங்களாகச்
சிறந்திடத்தீயவர்பார்வை
திகைக்கப்பாலொழியநல்லவர்கருணை
செழித்திடக்கிடைத்தசாதகவான்
வண்ணமாமகுடஞ்சூடியிராச
மாளிகையரியணைமேவி
மதகெசதுரகரதபதாதிகள்சூழ
வாழ்விடைத்தாழ்விலாதிருந்து
தெண்ணிலாவணையசத்ரசாமரபூ
சிதையுறீஇவதைபுரியாது
செந்தனிப்பெருங்கோல்செலுத்துவானென்று
செப்புவரொப்புவர்தீர்ந்தோர். (430)

சுகபதிதசாங்கமேறிடத்தசமன்
றுணைவிழிகளிப்புறநோக்கச்

சுரகுருவசுரகுருவிருவோருந்
தோய்ந்துகோணங்கண்டமேற
யுகபதியிலாபபதிநிதிபதியாம்
யோகவான்தனைக்குருநோக்க
யுத்தசன்னத்தராயதீக்கோட்க
ளொருபதில்வருபதம்பிறந்தோன்
சகபதியசுவபுதிகெசபதிமா
தனபதிரதபதிசிங்கா
சனபதிசத்ரசாமரபதியாய்ச்
சத்துருபயமிலாதவனுய்
மகபதிபோலுஞ்சுகபதியாகி
வாழ்வனுற்கொடைத்தொழிற்பிறரால்
வழுத்திடத்தெரிந்துகொடுபவன்வாலை
மன்மதலீலையிற்சிறந்தோன். (431)

## பிரபல பாக்கிய யோகம்

செங்கதிர்க்கடவுள்சுக்கிரன்புலவன்
சேர்ந்துமாமுடிமிசைவாழத்
திரியிலேகரியன்சுகத்திலேஞானி
செல்வபாக்கியத்திலேமதியம்
பொங்கராவுடனேகுருகருமத்திற்
புகுந்துகேந்திரமுறச்செவ்வாய்
பொன்விலைநிலமாமிலாபத்திலிருக்கப்
புண்ணியம்புரிந்தசாதகவான்
செங்கமலப்பூமாளிகைக்கிருக்குந்
திருமகள்மருமகள்விசயச்
செயமகள்கூடிநடனங்கள்புரியத்
திருக்கொலுவிருந்தரசாள்வான்
மங்களயோகம்வளர்ந்திடும்பிரபு
மக்களெலாம்புறங்காப்பர்
மன்மதலீலாவிநோதனுய்நெடுநாள்
வாழ்ந்திருப்பனென்பர்வல்லோர். (432)

## பிரபல பாக்கிய யோகம்

புண்ணியவான்வாகனத்தோனிருவர்கூடிப்
பொருப்பிருக்கக்குருவேனும்புகரோனேனுந்
தண்ணியநல்லருட்கண்ணுற்பார்க்கவேழிற்
றண்மதிகேந்திரகோணந்தழைத்துப்பாவர்
கண்ணிடைப்படாதிருக்கக்கிடைத்தாலிந்தக்
கண்ணியவான்பதிநிதிவாகனம்பெற்ருேங்கிப்
பெண்ணினியார்கவரியிரட்டப்பாரப்
பிரபுவாய்ப்பெரிதாயுள்பெறுவன்மாதோ. (433)

## பிரபல பாக்கிய யோகம்

தேருடையான்பத்திருந்துசுகத்தானத்திற்
சீதகன்வந்திருந்துவெற்பிற்றேவர்கோவும்
ஊருடையானிருவர்களுமிருந்துவாழ
உத்தமபாக்யாதிபதிசுகனேக்கூடிச்
சீருடையபதிகளிலோரிடத்தில்வாழத்
தீயர்பிணிவிழியடைந்துதேயப்பொற்பூண்
டாருடையதனபதிதேவாம்சமேறிற்
றனயோகசாலியிந்தத்தனிகனம்மா. (434)

## பிரபல பாக்கிய யோகம்

சுகபதிகேந்திரக்கோயிலாட்சிமேவச்
சுகேந்த்ரபதிமுதல்மனேயிற்றுளிர்த்துவாழ
மகபதியுமாபலியும்வணங்குந்தேவர்
மலர்விழிநோக்கருளமுதுவழங்கப்பெற்ருல்
யுகபதியொன்பான்பதிதேவாம்சமேறி
யுயர்ந்திருக்கவித்தனேயுமோங்கப்பெற்றுச்
செகபதியென்றுலகுபுகழ்வாழ்வினேங்கிச்
சிங்கமுகத்தண்டிகையிற்சிறந்துவாழ்வன். (435)

## பிரபல பாக்யம்

வாகனத்தினிறைவனிதியிறைவன்கூடி
வலுத்ததேவ்ாங்கிசத்தில்வாழமூன்ருேன்

பூகுமரன்கோணகேந்திரத்திலுச்சம்
புகுந்திருக்கக்கிடைத்துவந்தபுதல்வன்பாரிற்
கோகனகமலர்மாதுவருக்கத்தோடுங்
குலவிவிளையாடுபைம்பொற்கோயின்மேவி
மாகனகநரவாகனங்களேறி
வாழ்ந்திருப்பனனுராகமதனன்காணே. (436)

## பிரபல பாக்யம்

வாகனத்தோன்கோபுராங்கிசத்திலேற
மாநிதியோனுதாயன்றசமன்மூவர்
கோகனகமலர்போலும்விதியாற்பார்க்கக்
குணநிதியோன்றனபதியுங்கோணகேந்த்ர
மாகனகமாளிகையிலிருக்கவாய்ந்தோன்
மங்களமாளிகையிருந்துமகிழ்ந்துவாழ்வான்.
தோகையர்குங்குமமிருகமதனவாசத்
துணைமுலையிற்கண்வளருஞ்சுகத்தினனே. (437)

## கனபாக்ய யோகம்

மிதுனமேதலையாயதற்குடையாளி
விழியிலேபுகரொடுமேவ
வெற்பிலேமதியமாறின்நிற்க
வியாழனூர்புகர்க்கைந்தின்மேவ
பதுமநண்பாளன்மதியொடுமுறையப்
பாம்புசேய்சனிவியம்படுக்கப்
பாம்பெனவுருக்கொள்ஞானவான்குருவின்
பதமலரிறைஞ்சினனிற்க
இதுவலிகிடைத்தோன்பாக்கியவானே
யீகைகற்றரிகலானெனினும்
இணங்கினர்க்குதவிசெய்வதிற்சற்று
மிடைகலான்கொடைகலானிவனே
புதுவரவானசுயார்த்தமாம்பொருளைப்
பொருந்தினுந்திரட்டுவனன்செய்ம்

புலங்களும்புன்செய்ந்நிலங்களும்விளையும்
புரவியும்பெற்றுவாழ்வானே. (438)

## கனபாக்ய யோகம்

சன்மலக்கினத்தோன்மூன்றவனிருவர்
சந்திரசத்தமத்திருக்கச்
சந்திரனுதாயத்திலேதழைக்கச்
சல்லியன்சுகத்தலக்கேந்த்ரம்
நன்மனைக்கிருக்கக்குடும்பத்தானத்தே
நாயகக்குருவுச்சமேற
நவநிதிக்கோமான்சந்த்ரபாக்கியத்தில்
லக்கினசத்தமத்திருக்கத்
தன்மதேவதையாங்குருகடாக்ஷத்திற்
றரைமகனுட்சிபெற்றிருக்கச்
சருப்பங்களிரண்டுவிருப்பங்கட்காகாத்
தானத்தேகிடக்கின்றசமயம்
சன்மனுவந்தோன்பாக்யவான்யோக்ய
சற்சனநேயவான்கனவான்
சத்தியன்பிதாவுக்குத்தமனேக
தனயன்மங்களசுபன்றனே. (439)

## தனபாக்ய யோகம்

சந்த்ரலக்கினக்கோள்சத்தமகேந்த்ரத்
தலத்திலேகுருகடாக்ஷத்தாற்
றழைப்புறப்பாக்யத்தலத்திலேயதுபோற்
றனந்தரும்பாம்பொன்றுதானிற்க
மந்த்ரவேதியனிலுக்னகேந்திரத்தில்
வாழ்வுறச்சந்திரன்மாதா
மனையிடையிருக்கமூன்றிலேஞான
வான்றனித்திருந்திடவாய்த்தோன்
இந்த்ரபாக்கியனுய்த்தழையுனுக்கிராமற்
கிலக்குவன்போற்பணியியுற்றி
இளமைமாருததேகியாயிருப்ப
னிமையவர்குருதிசைவந்தால்

சுந்தரமதன்போன்மைந்தனைக்கிடைத்துச்
சுகமவனுற்பலபெறுவன்
சொப்பனத்திடத்தும்பிறர்மனவருந்தச்
சொற்புகலானிவைதுணிவே. (440)

## பிரபுத்வ யோகம்

நிதிபதியாட்சிநிலையிடையிருக்க
வாக்கிறையைந்திலேநிற்க
நெடுங்குருகருணைகடாக்ஷத்திலிலக்கி
னேசனும்புதனுமைந்தவனும்
பதிவுறச்சந்த்ரகோணத்திற்காரி
பாரியகாணிபெற்றிருக்கப்
பாக்கியங்கொடுக்கும்பாம்பொன்றுகாமப்
பதியுறமற்றென்றுபார்க்குந்
ததியிலேசனனங்கிடைத்தவனூறு
சகஸ்திரநிதிகிடைத்தன்பே
தாரமாக்கிடைத்துநன்மக்கள்பலரைத்
தந்தவராற்சுகந்தருமந்
திதிமதிகிடைத்துப்பூரணவாயுள்
சிறந்திடக்கிடைத்துளத்தன்பு
திருமகள்மணாளன்றிருவடிக்கமைத்துச்
செழித்துநீடித்துவாழ்வானே. (441)

## பிரபுத்வ யோகம்

சேய்மனைதலையாவதற்குநாயகன்கேந்
தரத்துறவம்மனைநாதன்
சிறந்தலாபத்திலிருக்கலாபத்தோன்
சித்திரகேந்திரஞ்சேரத்
தாய்மனைக்கேழோன்புகரொடுகூடித்
தலைமனைக்காறிலேதரிக்கச்
சத்தியவான்கோன்றலையிருக்கச்
சந்திரன்கேந்திரஞ்சாரத்
தூய்மனைக்கன்றுபன்னிரண்டாறிற்
சுடவிடப்பாம்புகளொதுங்கச்

சுகிர்தநல்லதிட்டங்கிடைத்தசாதகன்மா
சுதந்தரராஜயோகத்தன்
ஆய்மனைபோலுந்தன்மனைநம்பி
யடுத்தவர்க்கைந்துகற்பகமே
யாமெனுங்கொடையான்பற்பலவிசித
மாய்ந்தளந்திடுந்துணிவானே. (442)

## பிரபுத்வ யோகம்

துலாந்தலையாகியம்மனைக்குடையோன்
சூரியனோடுவாக்கமரத்
துலையிடைப்புலவனிலையுடனிருக்கச்
சுடுசனியெட்டிலேதொலைய
எலாந்தெரியறிவன்மூன்றிலேமதியோ
டிருக்கநாலாதிபன்கேந்த்ரத்
தேகனுயிருக்கக்காமக்கோள்மனிய
வினியகேந்திரத்திருந்திலங்கக்
கலாந்தமெய்ஞ்ஞானிபுதனொடுமுடியிற்
கலந்துறக்கிடைத்தசாதகவான்
கல்வியிற்சிறப்போன்கனிந்தெவர்தமையுங்
கைதொட்டுக்காப்பவனரசர்
சலாஞ்செயற்கடுத்தசன்னத்தான்யூக
தந்திரசமர்த்தினிற்சிறந்தோன்
சத்தியவசனன்றந்தையினூறு
சதமடங்கதிகவானென்னே. (443)

## தன யோகம்

சன்மத்திலிரவியைந்திலேபாம்பு
சந்திரன்விதியிலேசரிக்கத்
தசத்திலேபார்ப்பானிலாபத்திற்கேது
சாவகனிருக்கவிரையத்திற்
பொன்பொய்த்தநிறத்துச்சேயுடன்வெள்ளி
புதனிவர்மூவருமிருந்த

புத்திரன்றனவான்சேட்டனைத்திவ்யப்
பொருளெனவருளொடுபுரப்பன்
தன்மத்திற்படர்ந்தசிந்தையான்வாக்காற்
சாற்றியசொற்பழுதில்லான்
சத்தியவாளன்புத்தியினுயர்ந்தோன்
தரணியிற்செல்வனென்றுரையே
வன்மத்தைமனத்தில்வைத்திடான்சிறிதும்
வாயினுற்சொன்னசொன்மாருன்
மருந்தினுமினியமனையவள்கிடைப்பள்
மாடமேல்வசிப்புறும்வாழ்வோன். (444)

சுகமதிவிதியிற்றுலங்கவிலாபத்
துத்தனபதியுறவிவரைச்
சுரர்பதிநோக்கியருள்செயக்குளிர்ந்த
துளிர்பதிலக்கினுதிபதி
மகபதிவணங்குங்குருவசுரகுரு
வழுத்தியமூவருங்கேந்த்ர
மாத்தலங்கோணமணித்தலமிவற்றுண்
மருவியாட்சியுச்சங்களேறத்
தகபதியானசனிபத்தாமிடத்திற்
ருவியுச்சம்பெறமலைக்கோன்
தகுபலன்பொருந்திச்சுபர்நயனகடா
க்ஷம்பெறப்பிறந்தசாதகனைச்
சகமிசைப்பெரியபாக்யவானென்னச்
சாற்றுவராயினுமிப்பே
தைக்குளபாக்யம்புற்றிடைத்தேனே
தகுமெனக்கொடைகலாதவனே. (445)

## பிரபுத்வ யோகம்

மதிபுகர்குருமூவருந்தனத்திருக்க
மாநிதிபதியருள்வழங்க

மாட்சிசேர்மோக்ஷபதிதிரியிருக்க
வாளராப்பத்திடைமயங்க
இதுவிதிநிரையேயமைந்தசாதகனை
யிராசனேயென்பதூஉமன்றி
யெதிரிலாக்கொடையான்றருமவான்கடவு
ளிணையடிமறப்பிலாவிதயன்
புதுமதிபோலுமுகத்தினுன்கல்விப்
பூட்டெலாந்தேட்டலாம்புகுந்தோன்
பொன்மணிவரிசைபுதுக்குவான்புலவர்
புதுமனைகுடிபுகப்புரிவன்
மதுவிதழ்கமழுமாலேவேய்ந்திலங்கும்
வசந்தமண்டபத்திடைமானுர்
வனமுலைக்களபமணிப்புயத்தணியும்
வாஞ்சையானென்றும்வாழ்த்துவரால். (446)

## பிரபுத்வ யோகம்

மலைப்பதிக்கரசுகாணியினிலைக்க
மதிமகன்மோக்ஷவீடேற
மாநிதிதனேசன்சுகத்திடைவாழ
மகிழ்பிதாவிறைவிழிமல்க
நிலைப்புறுசுகத்தோன்பாக்கியத்தேற
நிதிபதிசுகத்திடைநிலைக்க
நிருமலஞானகுருவதிற்கூட
நீசர்கள்பொருந்துருதகலத்
தலைப்பெரியோர்கள்கடாக்ஷமுஞ்செய்யத்
தகைவலிமடைத்தசாதகற்குத்
தரணியிராசயோகனென்றுரைக்கத்
தடையணுவளவுமிங்கில்லை
யுலப்பிலாவாழ்வுங்கலப்பிலாப்பொன்போ
லோங்கியதிடசரீரமும்பெற்
றுறுதியாய்பந்துசேகரனுகி
யொண்டொடிசுகம்பெறுவானல். (447)

## பிரபுத்வ யோகம்

பொன்முடியேறவெள்ளியாறிடத்திற்
பொருந்துறவைந்திடைமதியம்
புகர்முகத்தரவோடிருக்கமாநிதியாற்
புதன்புகச்சனிசெவ்வாயிருவர்
சொன்முடிபொறுத்தகேந்த்ரதானத்திற்
றுலங்குறவட்டமத்தலத்தே
சூரியனிருக்கலாபத்தேகாமத்
துறையிருந்தரசுசெய்வானேல்
மின்முடியணிந்தவேந்தனேயென்ன
வீரமுந்தீரமும்பொருந்தி
வித்வசேகரனுய்மிகுகொடையானுய்
விவேகசாமர்த்யனுயுலகில்
முன்முடிபிதிரர்யாரினுஞ்சிறந்த
மூர்த்தனுய்ப்பார்த்தனுய்வாழ்வர்
முத்தமிழ்ப்பாமாலிகைபுனைந்தழியா
முதுபுகழ்ச்செல்வமோங்குவனே. (448)

## பிரபுத்வ யோகம்

குருமனைதலையாய்க்குருவிலாபத்தே
குலவிடப்பத்திலேகேது
குஜனமர்ந்திருக்கமூன்றிடைச்சிந்தை
சூரியன்சூரியன்குலவ
வருமனைவீட்டிற்சுக்கிரன்காம
மன்னவனுடன்திருவிருக்க
மதிசனியிருவர்விரையத்தானத்தே
வடங்கிடக்கிடைத்தசாதகற்குத்
தருவனைக்குணத்துங்கொடையிலத்தருமன்
றமையனைப்புசபலத்தன்னுன்
றம்பியைஞானநூல்வினையிலவன்
றம்பியைச்சாற்றலாமத்திற்

கொருமனைக்கூறிலொப்புருதவனு
யுயர்புகழ்கல்விநற்செல்வம்
ஓங்குறப்பெறுவன்சொன்னசொற்றவரு
வுறுதிசேர்வாக்குடையானே. (449)

## விற்பன்ன யோகம்

புதன்மனைதலையாயிலக்னகேந்திரத்திற்
புதனுறப்புதன்றிருவாக்கிற்
பூமகனுட்சிசூரியனுச்சம்
புகர்குருகேந்திரம்பொறுக்கச்
சிதன்மனைக்கொருநான்கிடைக்குருகோண
சிகாசனமடைந்துவீற்றிருக்கத்
திங்களிலாபத்தெய்துறஞானி
சேர்வுறக்குருவருள்செழிக்கச்
சுதன்மனைக்கரசுலக்னகேந்திரத்துச்
சுகத்திடைக்குருமனைக்கிருக்கச்
சுரகுருமாறிச்சனிமனைக்குமணிச்
சூட்டரவுடனின்றுதுலங்கில்
பதன்மனையாளுமக்களுங்கிடப்பன்
பாலினும்பாகினுமினிய
பசுந்தமிழ்ப்பனுவல்பற்பலதொடுக்கும்
பண்டிதனுவனிப்பாலன். (450)

## விற்பன்ன யோகம்

சுக்கிரன்மனையேலக்கினமாகச்
சுக்கிரன்குருச்சந்த்ரசேர்க்கைச்
சுகிர்தமுற்றுட்சிபெற்றுலக்கினத்தே
துலங்குறப்பாம்பொடுசுடரோன்
வக்கிரன்மூவர்வாக்கிடையிருக்க
மதிமகன்மூன்றிலேவயங்க
மாயவிற்செம்பாம்புமோக்ஷத்திற்சனியும்
வாய்ந்திடக்கிடைத்தசாதகவான்

மெய்க்குருவருளாற்கல்வியும்புகழும்
மேன்மையுஞ்செல்வமுஞ்சுகமும்
விளங்கியபூரணுயுளுங்கிடைத்து
விப்பிரர்சினேகனுய்மிளிர்வன்
றுக்கமிலாதமனத்தனுய்த்தந்தை
சொற்படிபணிபுரிந்தொழுகிச்
சுதந்தரநிலைமைநிதந்தருங்கல்விச்
சூழ்ச்சிகள்கண்டறிந்தோனே. (451)

விற்பன்ன யோகம்

சந்திரன்மனையேயிலக்கினமாகச்
சந்திரன்சுகத்திடைத்தழைக்கச்
சாத்திரப்புலவன்வாக்குறப்புகரா
தாயத்தேவிருக்கவச்சமயம்
வந்துமாமலைமேற்கதிரவனுதிக்க
வாளராலாபத்தில்மகிழ
மங்கலன்சந்த்ரகோணத்திற்கிடக்க
வன்சனிமூன்றிலேவசிக்கக்
கந்தரத்திறைவன்புதனுக்காதாயக்
களத்திலேகிளைத்துறக்கண்டாற்
காதலன்வித்தைக்களஞ்சியமாவன்
காரணகுருவருள்காண்பன்
செந்திருமடந்தைகருணைபெற்றேங்கிச்
செழிப்பன்மெய்ச்சுகபலன்சேர்வன்
தெண்ணிலாவணவபுண்ணியவாணி
திருவருட்பாக்கியந்திளைப்பன். (452

விற்பன்ன யோகம்

மலைக்குநாயகனம்மலைக்கணேயாட்சி
வயங்குறவாக்குநாயகனவ்
வாக்கிடையாட்சிகாக்குறச்சுகத்து
வளர்மதிகிளர்வுறவேழாந்

தலைக்குநாயகன்சொச்சேத்திர நிலைக்கத்
தனத்திலேசுகபதிதழைக்கத்
தழைந்தவாதாயநாயகனைந்தாந்
தலத்திலேநிலைத்திறநிதிவா
னிலைக்குநாயகனுய்ச்சந்திரபாக்ய
நெடுமனைக்கிருக்கமெய்ஞ்ஞானி
நிதியிடத்திருக்கக்காமக்கோண்மூன்றி
னின்றிடக்கிடைத்தசாதகன்றன்
கலைக்குநாயகனுயச்சாந்தசற்குணனுய்க்
கவிஞரிற்கவிஞனுய்க்கயிலைக்
கடவுட்கேகாந்தநண்பனுயரசர்
கண்ணெனநண்ணிவாழ்வானுல். (453)

## விற்பன்ன யோகம்

நிதிபதியாட்சியுச்சமுங்கிடைத்து
நிறைசுகபதியிலாபாதி
நேயமுங்கிடைத்துமோக்ஷவீடேற
நேத்திரத்திற்குருவாழ
மதிபதினென்றில்வயங்கத்தனேசன்
வான்குருபார்வையில்வாழ
மகத்துவஞானிகேந்திரத்தசுர
மந்த்ரிபார்வையிலுறமகுடத்
ததிபதிதலைமேலாட்சிபெற்றரவோ
டரசுவீற்றிருந்தசாதகன்று
னுயுளுள்ளளவுந்தமையனைத்தமைய
னுமெனப்பணிபுரிந்திருப்பன்
அதிபதியானசிவபிரானடிமைக்
கடிமையாய்ப்பணிவிடைசெய்வன்
அருணிறைகல்விச்செல்வவான்சுகவான்
அமிர்தவாக்கமைந்தவனுமே. (454)

## விற்பன்ன யோகம்

மணிவர்க்கிற்புதனிருக்கமதிநான்கிற்கேந்திரிக்க
வானோர்க்கரசான்

அணிவாக்குமமுதமதிகேந்திரத்திற்றசகேந்த்ரத்
தமரலாபன்
துணிவாக்குஞ்சந்திரபாக்கியத்திருவாக்காளி
மலேமேற்றேன்றில்
திணிவாக்கப்புலவர்கள்சிகாமணியாய்ப்பெரும்புலமை
செலுத்துவானே. (455)

## விற்பன்ன யோகம்

வாக்கரசுமதிவாக்கில்வளரநாலுக்கரசு
மலேமேற்றேன்ற
ஆக்கரசாம்புதன்பாக்யத்தமரமதிபஞ்சமத்தி
லமரவேழிற்
காக்குமகவரசுதுணேக்கரசுடனேகலந்திருக்கக்
கண்டாலிந்தக்
கோக்குமரனிதிகாசகாவியநூற்கரைகடந்த
குணவான்காணே. (456)

## விற்பன்ன யோகம்

சந்திரகேந்திரத்தலத்திற்பாக்யாதிபதியோடுபுதன்
றழைக்கநான்கில்
மந்த்ரகுருலாபத்தேவானேர்கள்குருவிருக்க
வாக்குநாதன்
சந்திரசங்கமனுகிக்குருவாக்கைக்கிடைத்துவந்த
சமயம்வந்தோன்
செந்திருவினுள்கருணேகிடைத்துமிலக்கியப்புலமை
செலுத்துவானே. (457

## ஜோதிட வித்வ யோகம்

வாக்கதிபன்சந்திரனுய்ப்பிணிவீட்டிற்பாம்புடனே
மயங்கநாலிற்
சூக்குமசுக்கிரனிருக்கச்சூரியனும்புதனுமைந்திற்
றேன்றவேழிற்

கோக்குருகேந்திரம்பொருத்துக்குறையனைத்துந்தவிர்த்து
கொடுக்கத்தோன்றும் [நலங்
யோக்கியவான்சோதிடநூற்குசனனகத்தியன்குமர
னுருக்கொண்டோனே. (458)

## ஜோதிட வித்வ யோகம்

பண்டிதன்கேந்திரத்திருக்கவாக்கோனுச்சம்பெறவப்
பால்போல்வெள்ளி
விண்டவுபயத்திருக்கவல்லதுச்சமேலிருக்க
விரும்புந்தூயோர்
மண்டியொருமூன்றிலேவயங்கவருட்குருநோக்கம்
வாய்ந்தபாலன்
தெண்டிரைஞாலம்புகழுஞ்சோதிடவித்வானெனவே
செப்பலாமே. (459)

சந்திரனுங்குருவுமொருவர்க்கொருவர்கேந்திரமாய்த்
தழைத்துவாக்கிற்
புந்தியிருந்திவற்கிலாபத்துவெள்ளிநிலைத்துநின்றாற்
புலவனுவன்
இந்தவிதமேயிவர்கள்வர்க்கோத்தமத்துமிருந்
திட்டாலிந்த
மைந்தனறுபத்துநாற்கலைஞானப்புலவனென
வாழ்த்தலாமே. (460)

## பிரபல விற்பன்ன யோகம்

சீதகனும்பீதகனும்வாக்கிறையுந்திரிகோண
கேந்த்ரத்தாட்சி
யோதுமுச்சமென்றிவற்றையடைந்துநல்லாரல்லார்கண்
ணுேதுங்கிநின்ருல்
போதநிறைதர்க்கிகத்துமிலக்கணத்துமிலக்கியத்தும்
புலவனுவான்
மாதுரியவர்க்கோத்தமமுஞ்சிறந்தாலிதின்மதுர
வாக்குளானே. (461)

### சமவிற்பன்ன யோகம்

ஆதாயத்திடைக்குருவுமவற்கிரண்டிற்சந்திரனு
மவற்குநான்கிற்
போதாந்தப்புதனுமவன்வாக்கிடையேசுக்கிரனும்
புகுந்துநின்ருல்
வேதாந்தப்பனுவல்கண்டவித்துவானுவன்வர்க்கோத்
தம்மாமேவிற்
வாதாந்தத்தார்க்கீகவிலக்கணவிலக்கியநூல்
வல்லோன்காணே. (462)

### சமவிற்பன்ன யோகம்

ஒன்பதிலேபுதனுமவற்கொன்பதிலேமதியுமவற்
கொன்பான்வீட்டிற்
பொன்பெருமானுங்கோனிநிலையடைந்தாற்பெருநூலைப்
புகலவல்லான்
முன்புகன்றமுறைப்படியத்தேவர்வர்க்கோத்தமமேறி
முழுதுநின்ருல்
என்புகல்வோமிவன்கல்லாக்கலையுமிவன்சொல்லாத
விசையுமின்றே (463)

### பிரபல விற்பன்ன யோகம்

சாவகனலாதநல்லோர்கூடி யுத்தமாங்கிசையிற்
றழைக்கவாக்கிற்
பாவகாரியரிலதுபுதன்குருசுக்கிரன் முதலோர்
பலிக்கவாய்த்தோன்
பூவுலகிற்சிறந்தகல்விமானெனவேபிரபலிப்பன்
பொன்மால்சுங்கன்
மேவும்வர்க்கோத்தரமாகிவிலக்கணநூலிலக்கியநூல்
விளம்புவானே. (464)

### பிரபல விற்பன்ன யோகம்

இரண்டவன்பொன்புதன்மூவர்கோணகேந்திரங்களிலே
இருந்துவாழத்

திரண்டகல்விமானுவன்வர்க்கோத்ரங்களினுஞ்
சிறருவண்ணம்
இருண்ட கிரகாதிபர்கண்ணேருமலிருப்பாரே
லிலக்கனுதி
மருண்டபலநூற்குழுவைத்தெருண்டமொழியாய்விரிக்கும்
வலிமையோனே. (465)

## பிரபல விற்பன்ன யோகம்

பொன்னவனுமேழவனும்புதனுமொன்றிக்கோணகண்டம்
புகுந்துநின்ருல்
மன்னவரின்சபையேறவல்லவித்துவானுவன்
வழுத்துந்தேவர்
சொன்னமுறைப்படிதமதுமனையிரண்டாமனைவயிற்றுட்
டுலங்கினுல்மற்
றென்னசொல்வதிவன்பெருமைதார்க்கீகநூதனமா
யியற்றுவானே. (466)

## பிரபல விற்பன்ன யோகம்

சந்திரகேந்திரத்திடைப்பொன்டிருகேந்த்ரத்திடைமதியந்
தழைத்துமின்னுஞ்
சுந்தரமாலிலக்கினகேந்திரத்துநின்றுகுருகோணந்
துலங்கக்கண்டால்
இந்தமகனிலக்கணமுமிலக்கியமுங்காவியமு
மியற்றவல்லோன்
புந்திகுருவர்க்கோத்தமஞ்சிறந்தாலிவனினில்லை
புலவர்தாமே. (467)

## யோக்யதா யோகம்

செவிக்கரசுவாக்கரசுமோக்ஷராசன்
சேர்ந்துகுருகேந்திரத்திற்செழிக்கநாலாம்
புவிக்கரசுகோணமாளிகையின்மேவப்
புதன்கேந்த்ரமாளிகையிற்பொருத்துவாழ

அவிக்கரசாமதிலாபத்தாட்சிமேவ
வமைந்துடையசாதகன்றேவமுதம்போலுங்
கவிக்கரசாய்மனைமனைவிசுகிர்தவானுய்க்
கண்ணியமும்புண்ணியமுங்கதிப்பன்காணே. (468)

### யோக்யதா யோகம்

குருநாதன்றலைநாதனிவுபநாதன்
கூடியுயர்கேந்த்ரதிரிகோணமேவத்
திருநாதன்றுணைவீட்டிற்பொருந்தவாக்கிற்
செங்கதிருமங்களனுஞ்சிறந்துவாழச்
செருநாதற்கிலாபத்தேயன்னைநாதன்
சிறந்துநிற்கக்கிடைத்துவந்தசெல்வக்காளை
யொருநாதன்றிருக்கருணைகிடைத்துக்கல்வீ
யோங்கியின்பந்தாங்குமெய்ச்சொல்லுறுதியோனே. ()

### யோக்யதா யோகம்

வாக்கியத்திற்புதனிருக்கவாக்குநாதன்
மலையிருக்கமலைநாதன்கேந்த்ரம்வாழப்
பாக்கியத்தோன்றசகேந்த்ரமாடிமேவப்
படர்சுகத்தோன்சுவர்க்கமனைபற்றிவாழ
ஆக்கியகேந்திரங்கடொறுஞ்சுபரேவாழ
வமைந்துவந்தசாதகன்ருனுயுளெல்லாம்
யோக்கியனுய்ப்பாக்கியசிலாக்யவாக்ய
யோககல்விமானுகியோங்குவானே. (470)

### யோக்யதா யோகம்

வ்ாகனநாயகன்கோணவலுக்கொண்டேற
வழுத்துமந்தமனையவன்வாகனத்திலேறத்
தாகமிகுதந்தையிறைசுவர்க்கமேறிச்
சந்திரகேந்திரத்திருக்கச்சந்த்ரசாமி
ஓகைபெறவாட்சிபெற்றபூமனேடு
முறக்குருகேந்திரத்திருந்தங்குயிலைரக்காக்கிற

கோகனகமலர்மாதுகலைமாதோடுங்
குலவவளம்படைத்தகல்விக்குருவாவானே. (471)

## விற்பன்ன யோகம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

நான்குடையான்பாக்கியவானுகிலாப
நன்மனையிற்கிடைக்கவைந்தோன்மூன்றேனேழோன்
றேன்குலவுதசமகேந்திரத்துவாழத்
திங்கள்பெருங்கேந்திரத்தேசெழிக்கவாக்கோன்
வான்குலவுதிரிகோணமாடியேறி
மலையிலனுதினங்கருணைமாரிதூற்ற
மான்குலவுவிழிமடவார்மாரனுகி
மலர்மகற்குங்கலைமகட்கும்வாஞ்சையானே. (472)

## விற்பன்ன யோகம்

பாக்கியவான்கோணகேந்திரங்களான
பனிமலையிலரசிருக்கப்பருப்பகேந்த்ரன்
வாக்கிடத்தாதாயனெடுங்கலந்துவாழ
வாகனத்தேகுருநாதன்மகிழ்ந்துவாழ
யோக்கியமாமதியினெடுதனவான்மூன்றி
லுறக்கிடைத்தமைந்தன்மிகயூகவானுய்ப்
போக்கியனுய்வாகடவித்தையிலேதேர்ந்த
புலவனுய்மதிப்படைந்துபுகழ்சேர்வானே. (473)

## விற்பன்ன யோகம்

சுகப்பதியும்வாக்கிறையும்வாக்கில்வாழச்
சுரர்பதியைந்தாமிடத்தேதுலங்கப்பாக்ய
வகப்பதிநல்லாட்சிபெற்றவறிவனோடே
யருஞ்சுவர்க்கமாளிகைக்கணமரமேருச்
சிகைப்பதிவான்பதிகருணையமுதந்தேக்கித்
திரிகோணகேந்திரத்திலாட்சிசேர்ந்தால்
இகப்பதியிற்கவிதைமழைபொழியுமேக
மெனப்புலவர் பெருமானுயிருந்துவாழ்வான். (474)

## விற்பன்ன யோகம்

குருநாதன்வாக்கிடத்துவாழவேழிற்
கூரியமெய்ஞ்ஞானிநின்றுகுலவவோங்குந்
திருநாதன்சுகநாதனுயநாதன்
றிருக்கூட்டோடாட்சிபெற்றுச்சுவர்க்கஞ்சேர
ஒருநாதனுப்புகரோன்றலையில்வாழ
வுடுபதியாதாயமனைக்குதிக்கத்தோன்றி
வருநாதன்கல்விசெல்வசுகமுமோங்கி
வசனரசாமிர்தனுகிவாழ்வான்காணே. (475)

## விற்பன்ன யோகம்

கட்டளைக் கலிப்பா

தலையிற்புந்திதனித்துறவேழிலை
சர்ப்பநிற்கச்சோதரதானத்திற்
குலவிச்சந்திரன்சேயொடுகூடுறக்
குருவுங்கேந்திரங்கூடிடச்சுக்கிரன்
இலகுமாட்சிபெறக்கண்டசாதக
னிராசயோகனெனற்கையம்யாதினி
வலனுயர்த்தசெம்பாம்பொன்றிற்றேன்றினல்
வாகடத்தினும்வல்லவனுவனே. (476)

## அதிகார யோகம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

நிதிபதிக்காதாயமனைசாமிநிற்க
நீணிதியிற்சுகத்ததிபனிற்கவின்னுர்
துதிபெறுமங்கிசபதியர்தேவதாம்ச
சுத்தபரிபூர்ணபலஞ்சுமந்துகேந்த்ரப்
பதிமதியக்கிடைத்துதித்தபாக்யவானிப்
பாருலகுக்கொருபேரம்பலவானுகி
அதிபெரியநரவாகனேசனுகி
யதிகாரியாய்ச்சிலநாள்வாழ்வான்காணே. (477)

## அதிகார யோகம்

சந்திரனேபுதனேசுக்கிரனேயின்னுந்
தக்கவரிற்சிலர்பதத்துத்தலைமேல்வாழச்
செந்திருமாமகள்கோயிலுள்ளேஞானத்
தேவகுருக்கொலுவிருக்கத்திருடராவார்
வெந்தசிறைபிணிவீடுகடையிற்றூங்க
விதிகிடைத்தோர்ப்பொற்சிகரவீட்டில்வாழ்ந்து
சுந்தரவாம்பரியிரதத்தேறிஞாயத்
துறைக்கதிபனாகமின்னித்துலங்குவானே. (478)

## அதிகார யோகம்

குடும்பபதிவிரையபதிகலந்துகேந்த்ர
கோணமிசையாட்சியுச்சங்குலவவெற்பி
னெடும்பதியாயிருந்துநவநிதிக்கோள்பார்வை
நேர்ந்திடப்பெற்றிருந்துறலாபத்தோன்பத்தோ
னெடுங்கலவிவானகத்திலேறிநின்று
லுதித்தமகன்கதித்தசெல்வமுடையானாகிக்
கொடும்பகைவர்நடுங்கிவலியொடுங்கித்தாழ்ந்து
குற்றேவல்செயவலிமைகொழுத்துளானே. (479)

## அதிகார யோகம்

இருகிரகருச்சமுறப்பாக்யவீட்டுக்
கிரண்டுசுபர்கலந்துநிற்கவிளங்குவெற்போன்
அருமைபெறுபாக்கியத்தோனிருவர்கூடி
யந்நால்வர்திருமுகத்தையன்பிற்பார்க்கக்
கருமனிலாபாதிபன்சிம்மாங்சமேறக்
கதிர்முடிபோனெதிரின்றுகண்பார்த்ததாலித்
தருமசெனனங்கிடைத்தமதலையாண்டுஞ்
சதுரங்கசேனையொடுந்தழைத்துவாழ்வான். (480)

## அதிகார யோகம்

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

மதியினான்கில்வெள்ளிநிற்கமலையிராசன்விக்ரமன்
மறையிராசன்வாளராநிதிக்கிராசன்வாழவே

நிதியிராசனுகியாண்டுநீண்டுவாழ்வனென்பரால்
நெடியசீவனுட்சிபெற்றுநிற்கலக்கினன்றனன்
வதியவாக்கிடத்திலேபின்மாதுர்வீட்டையட்டமன்
மலியநோக்கிடக்கிடைத்தமைந்தன்மாநிலத்திலே
துதிநிலாவுபாக்கியன்றுரைத்தனச்சிலாக்கியன்
சூரராசயோகமாதுரந்தரீகனுவனே. (481)

## அதிகார யோகம்

சுகபதியுஞ்சுக்கிரனுமொன்ருகக்கூடிச்
சுயகோணகேந்திரத்துட்டுலங்கினுலும்
சுகமதனிற்பிரசுரன்மாவலுக்கொண்டேறிச்
சுரகுருமூலத்தலத்தோன்ருேயமூன்றில்
திகழ்மதியந்துலங்கநல்லோர்பார்வைகூடிற்
சிங்காரமாளிகையிற்றிருவீற்ருண்ட
மகபதிபோல்வாழ்ந்திருப்பன்பச்சைவாக்கில்
வந்திருந்தாலதிகாரவாழ்வினுனே. (482)

## அதிகார யோகம்

கட்டளைக் கலிப்பா

நாலினுென்பதினுயகர்க்கத்தமம்
நணுகிலக்கினநாதனை நோக்கிடச்
சாலும்பஞ்சமன்கேந்திரத்தேறினுஞ்
சதியிலாபத்தலைவர்பத்திற்புகூஉத்
தூலரோகிவிதிப்பதிநோக்கிடைத்
தோன்றிடாதுசுரர்குருநோக்கினுற்
சீலமன்னவர்மந்திரியாய்மலர்ச்
செந்திருப்பெண்டினநடங்காடுமே. (483)

## வாகனுதிகார யோகம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பாக்யபதிகேந்த்ரகோணத்தேயுச்சம்
பாய்ந்திருக்கத்தனபதிபஞ்சமத்தேவாழ
யோக்கியரிற்சிறந்தகுருவிருவர்ஞான
யோகவிழிகிடைத்தாலுமுறுதிச்செல்வம்

ஆக்குசுகபதிநிதிபனிருவர்கூடி
யரும்பாவவர்க்கமின்றியமலராகித்
தூக்கியவைசேடிகாங்கிசத்துற்ருலுஞ்
சுகதனவாகனவிபவத்துரைகளாவர். (484)

## வாகன யோகம்

சிலையிடைவான்குருமீனிற்புகரோனைந்திற்
செங்கதிரோன்பத்திடத்திற்சிறந்தகாமன்
தலையிடையத்தலைநாதனிருக்கநல்லோர்
சார்பலதுதீச்சார்புசாராராகில்
நிலைமைதருகுணநான்குபத்திந்நாதர்
நேரவொருமூவர்களும்பத்தைந்தானத்
தலைமுறத்தாயிடந்திருமால்வரினுமிந்தச்
சாதகர்தண்டிகைக்குடையதனவானுவர். (485)

## வாகன யோகம்

தலையிறைவனுன்கிறைவன்பாக்யநாதன்
றருமூவர்திருக்கூடிதசத்துமேவ
நிலைதசத்தோனுதயமனையிருக்கச்சொன்ன
நிருபரெலாம்பாவவர்க்கநீசங்கோபம்
உலையுமத்தமனமுதலாந்தீங்கில்லாம
லுறப்பெற்ருேன்றனபாக்யவுறுதிமேவி
மலையனையரதநுகத்திற்பரிமாப்பூட்டி
வலம்புரிவர்தினமுமெனவாழ்த்துவாரால். (486)

## வாகன யோகம்

இருகுருசந்திரனேழோனுல்வர்கூடி
யிலக்கினத்தேயலதுகேந்திரத்திலேனும்
பெருகுவர்க்கதோஷமுருதிருக்கநல்லோர்
பெருங்கருணைமழைபொழியப்பிறழ்செஞ்சோதி
தருகதிரோனுச்சமுறப்பெற்ருலிந்தச்
சாதகவான்வெண்புரவித்தடந்தேர்மீது

வருபிரபுமக்கள்முன்னும்பின்னுஞ்சூழ
வலம்புரிவன்தினமுமெனவழுத்துவாரால். (487)

## வாகன யோகம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

ஒன்பதுபத்தைந்துசதுர்க்குடையதேவ
ருத்தமவர்க்கங்கிடைத்தேயுறுதியேறி
பன்புறுநற்கோள்பார்வையடைந்திட்டாலும்
அன்னமனைக்குடையவனுமசுரர்கோவும்
நன்பருதிக்கொருதசத்திலடைந்துவர்க்க
நலமேறிநின்றுலுநவிலுமின்னோர்
இன்பரததுரகவாகனம்பெற்றோங்கி
யிந்த்ரசெல்வபாக்கியத்தோடிருப்பர்மாதோ. (488)

## வாகன யோகம்

பொன்னவனும்பண்டிதனுங்கேந்த்ரமேறப்
புகருதயத்திருக்கமதிப்புத்தேனன்கின்
மன்னியுறவர்க்கநலங்கிடைத்திட்டாலும்
வானவர்கோன்மோக்ஷநலம்வாழநான்கின்
மின்னுபுகர்புகச்சாமிவிழிவைத்தாலும்
வெள்ளிதசாங்கம்பெறமாமதிக்குப்பத்தில்
பன்னுகுருநட்புடன்வீற்றிருந்திட்டாலும்
பரிமாவுங்கரிமாவும்படைத்துவாழ்வார். (489)

## வாகன யோகம்

சந்திரனுக்கட்டமத்தில்வெள்ளிமேவத்
தலையிடத்தில்குருபகவான்றழைத்துநல்லோர்
சுந்தரக்கிர்பாநலங்களோய்ந்திட்டாலுஞ்
சூரியனுமாரியனுதெரழுநிலாவும்
வந்துதிரிகோணகேந்திரத்திலொன்றி
மாபுனிதக்கோணேக்கவாழ்ந்திட்டாலும்
இந்தமக்களிருவரும்பாக்கியம்பெற்றோங்கி
யிரதகஜதுரகமுடனிருந்துவாழ்வார். (490)

## வாகன யோகம்

சுகமணையோன்சுகத்திருக்கமலைக்குச்சாமி
துணைவிழிநோக்குறநிதிக்குவேந்தன்சுங்கன்
இகலறுசுஞ்ஞானகுருமூவர்கூடி
யின்பசுகமாளிகைக்கணிருந்துவாழப்
பகைவர்விழியடையாமனல்லோர்பார்வை
பரிமளிக்கக்கிடைத்தவிந்தப்பாலன்யாண்டும்
மகபதிபோற்கசதுரங்கவிரதமான
வாகனுதிபனுகிவாழ்வன்மன்னே. (491)

## வாகன யோகம்

பாக்யபதிசுகபதியப்பாக்யவீட்டிற்
பதியவுச்சகேந்திரத்திற்பருப்பதேந்த்ரன்
காக்கவதற்குடையவன்மித்திரனுய்க்கோண
கண்டமுறக்கிடைத்தானுங்கனகபாக்யத்
தாக்கமருள்குருவிருக்கவெய்யோன்சோமன்
அக்குருவைநோக்கமலைக்கசுரர்கோக்கண்
டாக்கினுமீண்டிவரிருவர்பாக்யமோங்கித்
தண்டிகைமேற்கொண்டிடுவர்சாற்றுங்காலே. (492)

## வாகன யோகம்

அந்தணன்பாக்கியத்திருக்கமதிமார்த்தாண்ட
னதுநோக்கக்கேந்திரத்திலணையோன்வாழச்
சந்திரன்வாகனத்திருந்துதனத்தோன்பார்வை
தங்கவெள்ளிமுடிக்கிருக்கச்சட்டாட்டத்துள்
வெந்தவிடப்பாம்பிருக்கக்கிடைத்துற்ருலும்
வெற்பரசன்சத்தமக்கோன்வீயத்தோடு
பைந்தனத்தில்வீற்றிருக்கக்கிடைத்துற்ருலும்
பரியிரதமிசையுலவும்பாக்யவானே. (493)

## வாகன யோகம்

செந்தழல்சூரியன்புகர்மாநிதியோனுல்வர்
சேர்ந்துகண்டகோணமிசைத்திருவீற்ருலும்

சுந்தரமாமுடியிறைதாய்க்கிறைவான்வெள்ளி
சுரர்மூவர்துணைகூடிமலைநின்றாலும்
அந்தணன்சந்திரன்றலையோனல்வர்கூடி
அருங்கோணகேந்திரத்துளமர்ந்துற்றாலும்
இந்தநலத்திடைப்பிறந்தோர்பரிமாப்பூண்ட
இரதமிசையனவரதமேறுவாரோ. (494)

## வாகன யோகம்

இருகிரகமிடமாறியிருக்கவெள்ளி
யிணையிலாப்பலமேறியிருக்கநல்லோர்
திருவருள்மாமழைபொழியக்கிடைத்துற்றாலுந்
தேவரிறைமணிமகுடந்தீண்டும்பூந்தாட்
குருமதிசேய்புகர்புதன்மார்த்தாண்டனாறு
கோட்கடனித்தனிகேந்த்ரகோணமேறிப்
பெருமதியோர்நோக்குறினும்பிறந்தோர்பாய்மரப்
பிணைத்துரதநடத்துசெல்வம்பெற்றுளாரே. (495)

## வாகன யோகம்

மதிகுருத்தாயிறைநிதிக்கோனல்வர்கூடி
வளர்கேந்த்ரதிரிகோணமனையில்வாழத்
துதிபெறுமாமுடிமிசைச்சீதகனின்றாலுஞ்
சுடர்முடியோன்சுகபதிமால்மூவர்கூடி
யெதிரறுகேந்திரகோணத்தினிதுவாழ
விரவிபுகர்துலைக்கைந்தாமிடநின்றாலும்
கதிர்மணியாலலங்கரித்தபரிமாப்பூண்ட
கனகரதபாக்கியங்கள்கைக்கொள்வாரால். (496)

## வாகன யோகம்

நிதிபதிதாயதிபதியிருவருங்கூடி
நெடுங்கிரிக்கேவீற்றிருக்கநின்றதேவர்க்
கதிபதியசுரபதியிருவருமன்றே
லதிலொருவர்திருக்கணருளளித்திட்டாலுந்
துதிபெறுதாயிடத்திறைமாநிதிக்கோன்கூடிச்
செறிந்தெழுதேவாங்கிசத்தேதுலங்கப்பூர்ண

மதிதிரியன்சுகனிவர்களுச்சகேந்த்ர
மலகிடினுமிவரிருவர்வாகனேசர். (497)

## சமபாக்ய யோகம்

புண்ணியகேந்திரத்தரசனுட்சியுச்சம்
புகப்புகரிலாபகேந்திரம்புக்கேறத்
தண்ணியபஞ்சமன்புதரைநோக்கிநின்று
தழைத்திடவேநல்லவர்கண்டாக்கினுலும்
எண்ணியபத்திறையிருந்தராசிநாத
னினியநட்பாய்த்தசமேவியிருந்திட்டாலும்
திண்ணியலாபாதிபனுய்த்தனேசனுவன்
சித்திரத்தும்வைத்தெழுதான்சிறுமைதானே. (498)

## இதுவுமது

தனபதிலாபாதிபதியுச்சமேறத்
தாமேறும்பதிக்கரசுதருமத்தேற
அனககுருசாமியவர்கருட்கணேக்க
மளித்திடினும்பாக்கியத்தீரைந்தோன்சாரச்
சனகபதிகருமத்தானத்திலேறச்
சக்ரபதிருக்கணருள்தந்திட்டாலும்
கனகபதியசுவபதியாகியிந்தக்
காளையிருவரும்புவிமேற்கனம்பெற்ருரே. (499)

## இதுவுமது

ஏகாதிபதிபஞ்சகருத்தன்கூடி
யெழிற்சருமமாளிகைமேலேறபத்தோன்
வாகானபாக்கியவீட்டிருந்திட்டாலும்
மதிபுதல்வன்கருமமனைவதியவந்த
சாகாவின்றலைவன்பாக்கியத்திலேறித்
தங்கிடினுமிவ்விரண்டுசன்மத்தோரும்
தேகாதியந்தமட்டுங்குறைவில்லாத
செல்வமுங்கல்வியும்படைத்துச்செழிப்பர்மாதோ. (500)

காரிபத்தொன்பானிராகுமூவாருங்
கதிர்மதிப்பகைவனுண்டேழாம்
கணிதநூன்முறையினவரவர்கழிந்தோர்
காட்டுவர்கேட்டுவர்கழிந்தோர்
பாரிடையுதித்தோர்க்குடற்றிசைவிவரம்
பகருவோஞ்செனித்தநாட்குள்ள
பரமநாழிகைதானறுபதுக்கதிகப்
பட்டதேலதிகநாழிகையைச்
சீருறவறுபதாற்பெருக்கிட்டுச்
சேர்தொகைவிநாடியாச்செய்து
சென்மநாட்கடிகையால்வகுத்தீவைச்
சென்றநாழிகையினுற்பெருக்கே. (683)

## இதுவுமது

பெருக்கவந்ததுவேவிநாடியாமதனைப்
பின்னறுபானுக்கீந்தெடுத்த
பிண்டநாழிகையைச்சென்றநாழிகையிற்
பிட்டுமீந்துள்ளதேசெலவாம்
திருக்கிளர்பரமநாழிகையறுப
திருக்குறைந்துள்ளதேற்பிண்டஞ்
சேர்த்திடக்கண்டநாழிகைசெலவாஞ்
சென்மநாட்கடிகையறுபதேல்
இருக்கிறபடியேசென்றறுசெலவா
மிருந்தனசுத்தமாமிதற்கு
மிப்படித்தெரிந்தசுத்தநாழிகையை
யேற்பட்டதிசைவருடத்தாற்
பெருக்கியைந்தாலேவகுக்கவந்ததுவே
பெருங்கருவிற்சென்றமதியாம்
பின்னின்றபாக்கிமுதற்றொடர்ந்தோட்டிப்
பெருந்திசைதெரிந்திசைபிறர்க்கே. (684)

## உயிர்த்திசை விதி

கிரகநாயகரொவ்வொருவருங்கொடுக்கக்
கிடைக்குநல்லாயுளினிலையைக்

கிரமங்கள்பகர்வரமிரவிநான்காண்டு
கிளர்மதியைந்துவருடமாங்
குருதிமூன்றுயிராதிவேழாகுங்
குருவிருமூன்றதாச்சனியன்
கொடுப்பதுநவமாம்புதனெட்டேகேதுக்
கோளொருமூன்றதாம்புகரோன்
தருவதுபத்தாமுயிர்த்திசைவருடந்
தந்தகோள்வரிசையிதேனும்
தலைத்தலநின்றோர்தமிற்றலைவன்முன்
றந்துமற்றதினின்றோர்முன்சொல்
வரிசையிற்றந்துமறுமனைநின்றோர்
வரிசையின்வழங்கியிவ்வாறே
மற்றுளமனைக்குங்கோணிலைவரிசை
மனைநிரைவரிசையிவ்வரம்பே. (685)

## உயிர்த் திசாபுத்தி விவரணம்

கருப்பத்திற்செலவைக்காண்பதற்குறுதி
காட்டுதுமுயிர்த்திசையாண்டைக்
கணக்கொடுநூற்றுமுப்பத்தைந்தாலே
கழித்துமீந்திருந்ததொகையினை
வரப்பெருந்திசைக்கோட்புடத்திடைத்தேர்ந்து
வருகடிகையைக்கொடுபெருக்கி
வருடமுமதியுந்தினமுநாழிகையும்
வந்ததேகருப்பத்துட்செலவாம்
இருப்புநாட்டுலக்கித்திசைநடத்திடுங்கா
லேற்படுதிசைவருடத்தில்
இயல்புறநாலிலொன்றைப்பன்னிரண்டா
லேற்றிடில்வருந்தொகைநாளாம்
திரப்படவுடலின்றிசையிலிக்கோட்குச்
செப்பியதிசைத்தொகையால்முன்
செப்புநாட்டொகையைப்பெருக்கவந்ததுவே
தினமுயிர்ப்புத்தியின்றினமாம். (686)

## இருதிசை கலந்து வருங்கால் நேரிடும் மாரக விவரணங்கள்

இருதிசைகலந்துவருகின்றகாலை
யெதிர்ப்படுமாரகமொழிவா
மெண்ணியமேடவிலக்கினத்துதித்தார்க்
கிறைவன்மால்சனியுடற்றிசையா
யெரிபுகருயிராயெய்தினுமாறே
ழிரண்டுமூன்றெட்டிலாபத்தே
யிருந்தவர்தம்மிற்சிலருடல்சிலரு
யிருக்கலந்துதிசையில்வரினும்
வருமிவர்தாமேமுன்றெடுத்துரைத்த
வானவராயினும்பகைவர்
மாரகஞ்செய்வர்திசைவலிதான
வலிபெறிற்கொலைசெயாதொழியார்
எருதிலுற்பவித்தோர்க்குடதிற்பொன்மதிசே
யிசைந்துயிர்புதன்சனிவெள்ளி
யேற்கினுமாறெட்டொருபதிலிருந்து
விரைவர்களுடற்றிசையெய்தி. (687)

### இதுவுமது

சத்தமம்வியங்கண்ணிருந்தவருயிர்த்தி
சாமுகங்கூடினும்பகைவர்
சாற்றுமக்கோட்களிப்படிநேர்ந்தாற்
றப்படிமுழக்கலிற்றடையோ
மைத்துனத்துதித்தோர்க்கிரவிசேயரசன்
வல்லுடற்றிசைவருகாலை
மதிபுதன்வெள்ளியுயிர்த்திசைகலந்து
வரத்தலைவிதிகிடைத்தாலும்
பத்துசட்டாட்டவியத்தலத்திருந்தோர்
பகருடற்றிசைவிழிதிரிநோய்ப்
பதிகளிலிருந்தோருயிர்த்திசைபுயனும்
பகைஞரேமுன்சொன்னகோட்க
ளித்துணைகிடைத்தாற்புற்றுறையாவுக்
கிராசரீகங்கொடுத்தற்றே
யிமையவரமுதங்கொடுக்கினுந்தடுத்தாண்
டிவர்தொழில்நடத்துருதேகார். (688)

## இதுவுமது

அலவனிற்செனித்தோற்கரசன்மால்சனிய
னணிமகாதிசைவருகாலே
யலரிசேய்வெள்ளியுயிர்த்திசைவரினு
மாறிரண்டெட்டிலேநின்றோர்
வலவுடற்றிசையாய்மூன்றிரண்டிருந்த
வானவருயிர்த்திசைவரினும்
வழுத்தியவவரேயுடலுயிர்த்தான
வலிபெற்றுற்புவிபிற்றுமாய்ப்பர்
மெலிவறுசிங்கத்துதித்தவர்க்கரசன்
வெள்ளிசுன்னுடற்றிசைவருங்கால்
வியாழனும்புதனுமுயிர்த்திசைவரினு
மிகுபுணிசுகந்தசமிருந்தோர்
இலக்குடற்றிசையாயிரண்டுமூன்றேழி
னிருந்தவருயிர்த்திசைவரினும்
இகலினராமேயிவ்வலியவரே
யெடுத்திடிற்கெடுத்திடாதேகார். (689)

## இதுவுமது

கன்னியிற்சனித்தோர்க்கரசன்சேய்திங்கள்
கனிவுடற்றிசைகொளவுயிரிற்
காரிமால்வெள்ளிவரினுநோயன்னைக்
கண்ணின்றோருடல்கொளப்பத்தோ
டன்னைசோதரனின்றவருயிர்கொண்டா
லரும்பகையாவரேயவரே
அவர்வலியடைந்தாலெவருயிர்கொல்லார்
அணிதுலாத்துதித்தவர்க்கருக்கன்
பொன்னிலமைந்தன்மதியுடல்கொள்ளப்
புகர்புதன்றேய்பிறையுயிரிற்
பொருந்தினும்பகையேயாறுமூன்றெட்டிற்
புக்கவருடற்றிசையாக
மன்னியேழிரண்டுபத்திலேநின்றோர்
வாழுயிர்த்திசைகொளிற்பகையே
வழுத்துமக்கோளிப்பலம்பெற்றுலுயிரை
மாற்றுவரேற்றுவர்வானில். (690)

## இதுவுமது

விருச்சிகப்பிறந்தோர்க்கரிச்சிகன்மைந்தன்
வெள்ளிகாரியுமுடலாகி
வியாழன்மங்களன்சூரியனுயிர்த்திசையாய்
மேவினும்பாவியராவர்
பிரிச்செறிவிதியேழிரண்டொன்றினின்றோர்
பேருடல்கொளப்பத்துமூன்று
பிணியிவைநின்றொருயிர்த்திசைகொண்டாற்
பெரும்பகையாவரிவ்வலியுந்
தரிச்சிமுற்குறித்தகோட்கள்வந்துற்றாற்
சடுதியிற்சுடுதியிற்றகர்ப்பர்
தனுவிடைச்செனித்தோர்க்கந்தன்மால்வெள்ளி
தனுத்திசைகொளக்குருரவிசே
யெரிச்சுயிர்த்திசைகொண்டாற்பெரும்பகையே
இரண்டுமூன்றேழ்பிணிநின்றோ
இலங்குடல்கொள்ளத்திரிவிழிகரும
மிசைந்தவருயிர்த்திசைகொளினே. (691)

## இதுவுமது

சத்துருவாவரித்தலப்பலமுற்
சாற்றியகோட்கள்பெற்றாலோ
சத்தியங்கொல்லாதொழிகலர்மகரஞ்
சனித்தவர்க்கினித்தமால்மதியோன்
மொய்த்துடலாகப்புகர்கதிர்செவ்வாய்
மூவருமுயர்த்திசைவந்தால்
மோதுவரிரண்டுமூன்றெட்டேழ்நின்றோர்
முதுசடத்திசைகொளலாபம்
மெய்த்தலையாறுவியநின்றோருயிராய்
மேவிடிற்பாவியராவர்
விளம்பியகோட்களிவ்வலிபெற்றால்
விடுவரோசுடுவரொர்விநாடி
சுத்தகும்பத்திற்பிறந்தவர்க்கிரவி
சுடுசனிசேய்மதியுடலாய்த்

சுரர்குருபுதனுமுயிர்த்திசையாகிற்
றெருஃலக்குருபெரும்பகையாவர். (692)

## இதுவுமது

இரண்டுமூன்றேழெட்டிருந்தவருடலா
யிலாபநோய்தலையியத்திருந்தோர்
இலகுயிர்த்திசையாய்வருவரெற்பகைஞ
ரிவரினும்வேறிலையென்ப
திரண்டவித்தானவலியையுமிதிலே
செப்பியகோட்கள்பெற்றெழுந்தாற்
சித்திரத்தினுமெய்வைத்திடாரருப்பர்
சிறந்தமீனத்திடைச்செனித்தோர்
தெருண்டமால்வெள்ளிரவிசனியுடலாய்ச்
சேய்சனிபுதன்குருவுயிராய்ச்
சேர்ந்திடிற்கொலைஞராவர்கண்விதிநோய்
செவ்வினின்றேருடற்றிசையாய்
வரும்பதினொன்றேழ்பத்திடைநின்றோர்
வல்லுயிர்த்திசைவரிற்கொல்வர்
வழுத்தியவவரேயிவ்வலிகொண்டால்
மாட்டுவர்காட்டுவர்வானே. (693)

---

## காலச்சக்கர திசை



நொண்டிச்சிந்து

மூலக்கணபதியை - நெஞ்சக
முளரிக்குட்பத்தியொடுகள்றிக்கொண்டு
காலச்சக்கரதிசையை - நொண்டிச்சிந்தாக்
காட்டுகிறேனிதைக்கேட்டுக்கொள்வாய். (694)

குஜனுக்கேழாண்டாகும் - புக்ருக்குக்
கூறுவாரீரெட்டாண்டாகவுமே

துசமெனப்பொன்னவனுக்குக் - கூறுவர்
சந்திரன்றனக்கிருபத்தொன்ருண்டு. (695)

புதனுக்குநவமாகும் - இரவிக்குப்
பொங்கும்வருடமோரைந்தாகுமே
விதமுடன்கரியவற்கே - திசையும்
வேதமாகவேமுன்னேரோதலுற்ருர். (696)

கலவாப்பொன்னனையமைந்தா - வினியந்தக்
காலச்சக்கரநடைக்கோலஞ்சொல்வோம்
வலவோட்டுமிடவோட்டு - மிதனில்
மருவிமதனையறிவின்றி. (697)

அசுபதிமுதல்மூன்றும் - வலவோட்
டடுத்தமூன்றிடவோட்டாகமாறி
வசையறமும்மூன்றதாய் - மாறிவர
வலவோட்டுமூவைந்துமிடமுந்நான்காம். (698)

அசுபதிபரணிகார்த்திகை - புனர்பூச
மப்பூசமாயிலியமத்தஞ்சித்திரைச்
சுவாதிமூலம்பூராடம் - உத்ராடம்
சொல்பூரட்டாதியுத்திரட்டாதிரேவதி. (699)

பதினைந்தும்வலவோட்டுநாள் - மற்றையவை
பன்னிரண்டுமிடவோட்டுப்பார்த்தறிக
திதிபெறவேபுசிப்பை - யோட்டுஞ்
சேதியைச்சொல்கிறேனீதியுடனே. (700)

பரியெரிபிண்டிபாம்பு - அத்தம்
பகரும்விளக்குச்சிலையாடியுடன்
புரட்டையிரேவதியும் - வலவோட்டுப்
பொங்கும்நட்சத்திரம்ஒருபதுக்கும். (701)

முதற்கால்மேடமுதலாய்ச் - சரியாய்
முயன்றுசிலவரையினூருய்க்கொள்வாய்
இதம்பெறவிரண்டின்பதம் - கலைகுடம்
எண்ணுமீன்தேள்கோலரிவைநண்டு. (702)

அரியாளெனவிதற்கு - முன்னோர்கள்
அன்புடனெண்பத்தஞ்சாண்டெனவே
திரிகாலேறுமறிமீன் – சால்கலை
சிலைகொடுயேறியாழெண்பத்திமூன்றும். (703)

வேதமேநண்டுமுதல் - மீன்வரை
மிக்கவேகொள்வையெண்பத்தாருகவே
மீதியடுப்புவண்டு - சித்திரை
விளங்குபூராடமுமுரசோடைந்தில். (704)

ஆதிபதந்தேள்கோல் - கன்னி
யலவனோடரியாழேறுமறிமீன்
சோதனையாகமுன்னோ - ராண்டுஞ்
சொல்லினார்நூருகவல்லபுலவர். (705)

வினையின்பதங்கும்பம் - கலைசிலை
மேடமெருதியாழ்நண்டரிகன்னி
இனையவுடுக்கென்பத்தைந்தே - யாண்டென
விசைத்தனர்முன்னோர்கள்திசைக்கியல்பே. (706)

குணங்கோல்தேள்சிலைமான் – சால்மீன்
கொட்டும்விருச்சிகமுஞ்செட்டிகன்னி
மணமுடனெண்பதற்கும் - வருஷம்
மகிழ்ந்தெண்பத்துமூன்ருகுமென்ப. (707)

நான்குகற்கடகஞ்சிங்க - மிதுனமி
நத்திமேடமீனகும்பமகரந்தனு
பாங்குறவெண்பத்தாறே - யாண்டெனப்
பாடினர்நற்கோளசாஸ்திரத்திலே. (708)

திடம்பெறவலவோட்டுத் – திசைக்குச்
செப்பினேன்புத்தியதுதப்பாமலே
இடவோட்டுநாளதற்குப் – புத்தி
யியம்புகிறேன்மனநயந்துகொள்ளு. (709)

வேட்டுவன்சுளகுரு – கோணத்தோடு
மேவிடும்நான்கினுக்குமுதற்காலில்

ஓட்டிடுமார்க்கமதைச் - சொல்ல
வொருமித்துமனத்திணைநிருமித்துகேள். (710)

சிலைகலைசால்கயலு - மறியேறு
செப்பும்மிதுனமறிநண்டொன்பதும்
தலையுடனெண்பத்தாறு - மாண்டுக்கும்
தப்பாமல்நடக்குமேபுத்திதானே. (711)

இரண்டில்மடந்தைதுலாம் - தேள்மீ
னினியகுயவன்தலைசிலைதேள்கோல்
விரைவுடனெனென்பதற்கு - மாண்டு
விளம்பினுரெண்பத்துமூன்ருக. (712)

திரிகன்னியரிநண்டியாழ் - ஏருடு
செப்புஞ்சிலைகலையுஞ்சாலொன்பதும்
வருமேயெண்பதஞ்சு - வருடமா
வகுத்துநற்புத்தியதையோட்டுவர்கள். (713)

வேதமீன்மறியேறுயா - ழரிநண்டு
மிக்கவேகன்னிகோற்றேளொன்பதுஞ்
சோதனையாகவொருநா - ருண்டுக்குஞ்
சொல்லுவார்புத்தியதுவிள்ளுவோமே. (714)

மார்கழிசெங்கையெலி - பங்குனி
மன்னியதேள்சேட்டைபறவைசெக்கு
தீர்க்கமாயிருநான்கு - தாரைக்கும்
செப்புவேன்புத்தியதுத்தப்பாமலே. (715)

ஏகம்மீன்முதலாய் - நண்டுவரை
யெடுப்பனவதாரைக்குமெண்பத்தாறுய்த்
தாகமுடனேயிதனைக் - கண்டு
தாஷ்டிகமாகவேநீயுரைப்பாய். (716)

இரண்டுமிதுனமிடப - மேடந்தனு
சியம்புமகரகும்பமீன்மறியாடு
திரண்டெழுமொன்பதுக்கும் - புத்திவிதி
செப்புவாயெண்பத்துமூவாண்டதாய். (717)

திரிபதமிதுனஞ்சிங்கம் - நண்டுகன்னி
செட்டிவிருச்சிகமீனங்கும்பமகரம்
வருமிந்தவொன்பதுக்குப் - புத்தி
மாட்டுவாயெண்பத்தஞ்சாண்டாக. (718)

நாலிடைவிற்றேள்கோல் - கன்னிசிங்க
நண்டுமிதுனநந்திமேடமொன்பதும்
சாலவுநூறுவருடம் - முன்னோர்கள்
சாற்றினர்கேட்டறிந்துபோற்றிக்கொள்ளே. (719)

புத்திபிரிக்கவகையை - மொழிகுவேன்
பொருந்தியொருமனதாயிருந்துகொள்ளே
நத்தியபுசிப்புமோட்டும் - கோள்கள்
நண்ணுந்திசைவருடமெண்ணியறிந்து. (720)

திசைகோள்வருடந்தன்னை - யதற்குத்
தீங்கறக்கொடுத்தந்தஊவைவைத்துப்
புசிப்பெனத்திசைவருடம் -அதனில்
பெருக்கிடப்புத்தியதுவருங்காணே. (721)

மீனத்திலேயிருந்து - கிரகங்கள்
விருச்சிகத்திற்பாயுங்காலமதில்
ஆனியாயுடற்றிசையு - மிருந்திடி
லதற்குப்பலன்கேளுவிரித்துரைப்பேன். (722)

இராசனினமித்துரு - விரோதம்
நண்ணுஞ்சிறைகாவலக்கினிபயம்
நீசனுலவமானம் - சோரபயம்
நிலைக்குஞ்சரீரபீடைவலுத்திடுமே. (723)

சுபன்றிசையுடலர்கி - லதற்குச்
சொல்லுவாய்புத்தியினால்வெல்லுவாயென்றே
தபமுடன்மேடத்தினின்று - தனுசிற்
ருண்டிலதற்குப்பலன்வேண்டுமேகேளு. (724)

துரகலோகாபனமா - மிதற்குச்
சொல்லுபிதிர்புத்திரகளத்திரங்களும்

திரமுடனிரணபயமு – மிதற்குத்
தீட்டுமகாதிசையையோட்டியறிந்து (725)

கன்னியில்நின்றகிரகம் - புன்னுகக்
கடகத்திற்ருண்டிடில்மண்டுககதி
மண்ணிடைக்களத்திரங்கள் – தனக்கும்
மாரகஞ்செல்லுடல்திசையொட்டி. (726)

சிங்கமிருந்துபின்னுல் – மிதுனத்திற்
சிக்கெனவேதாண்டவதுசர்ப்பகதியாம்
மங்குபிதுர்மாது - ரதனெடு
மகிழ்ந்துமகாதிசையுமறிந்துசொல்லே. (727)

தண்டிலிருந்துசிங்கத்தில் – பாயுமத்
தாண்டவமற்கடகமெனச்சாற்றினரே
விண்டிடுமறைக்குமேலே – விரணம்
விளம்புமகாதிசைதனையோட்டிப். (728)

பாவிதிசையுடலாகச் - சக்ரதிசை
பலுக்குந்தீயோர்திசைதானுக
ஓவியமானபுசிப்பு - மிரண்டையு
மொத்துவிநயமதியுக்தியுடனே. (729)

கூறுவாய்புவியோர்க்கே – சொன்னசொற்
குறிதவருதிந்தநெறியிடையே
ஆறுவாய்சந்தேக - மின்னமு
மட்டவர்க்கவிவரமுந்திட்டமாய்க்கேளே. (730)

---

# அட்டவர்க்கம்

விருத்தம்

ஆலிலைமேற்பள்ளிகொண்டோனருளினுலே
யருமறையைத்தேர்ந்துநின்றவையாவிந்தப்
பாலர்சிறுமனத்தில்வருஞ்சந்தேகத்தைப்
பட்சம்வைத்துநிவிர்த்திசெய்யும்பாங்குள்ளோனே
காலசக்கரத்திசையின்கருத்தைக்கண்டேன்
கர்த்தனேகருணைசெய்துமுன்னேசொன்ன
சாலவுள்ளவட்டவர்க்கப்பலனேரெட்டுந்
தாமரைவாய்மலர்ந்தருளுந்தருணமிதே. (731)

நொண்டிச்சிந்து

அட்டவர்க்கமினிக்கேளு – சொல்லுகிறே
னன்பானகுருபதந்தென்பாய்பணிந்து
திட்டமுடனேரவிக்கு - நாற்பத்தெட்டுச்
செப்பினுர்பரலதுஒப்பினுர்முன்னேர். (732)

சந்திரற்குநாற்பத்தொன்பது - பரல்பரல்
தழல்நிறச்செவ்வாய்க்குமுப்பத்தொன்பதே
புந்திக்கைம்பத்துநாலு - பரலெனப்
பூட்டினுர்முன்னேர்கள்காட்டினுரே. (733)

குருவுக்கைம்பத்தாறதாஞ் - சுக்கிரற்குக்
குறித்தவைம்பத்திரண்டுவிரித்தனரே
கரியற்குமுப்பத்தொன்பது – பரலெனக்
காட்டினுர்முன்னேர்கள்கூட்டிக்கொள்ளே. (734)

## இரவி அட்டவர்க்கம்

நவக்கிரகங்களுக்கும் - தனித்தனி
நாட்டுகிறேன்சமுதாயப்பரலை

ரவியிடசமுதாய - விவரத்தை
நன்மையாய்ச்சொல்லுகிறேனுண்மையாய்க்கேளே.

ஒன்றிரண்டுநாலேழெட்டே - யொன்பது
மொருபதுபதினொன்றுபரலூட்டு
நின்றமதிக்குமூன்று - ரீரைந்து
நிலேத்தவேகாதசம்பரலூன்று. (736)

செங்கதிருக்கெப்படிபர - லப்படிச்
செவ்வாய்க்கும்வைத்துக்கொள்மெய்வாக்குமே
துங்கப்புதற்குமூன்றைந் - தாறெென்பது
பத்துப்பதினொன்றுபன்னிரண்டென்பவே. (737)

அந்தணற்கைந்தாறெென்பது - பதினொன்று
மாறேழுபனிரண்டுசுக்கிரனுக்கே
அந்தனொன்றிரண்டுநாலே - ழெட்டொன்பதீ
ரைந்துபதினொன்றுபரலிந்தவிதமே. (738)

## சந்திர அட்டவர்க்கம்

மேருக்குமூன்றுநாலா - ரீரைந்து
மேருபதினொன்றுபனிரண்டாம்பரல்
பாருக்குள்மதியுடைய - சமுதாயம்
பாடுகிறேன்குருபாதம்போற்றி. (739)

பரிதிக்குத்திரியாறே - ழெட்டுப்பத்துப்
பதினொருபரல்விதிப்படியூன்று
வருமதிக்கொன்றுமூன்று - றேழுபத்து
வருபதினொன்றுகவகுத்துக்கொள்ளே. (740)

செவ்வாய்க்கிரண்டுமூன்றைந் - தாறுநவம்
தெசம்பதினொன்றுவரவிசைந்துகொள்ளே
இவ்வாறுபுதற்கொன்றுமூன் - றீரிரண்டைக்
கேழெட்டுப்பத்துப்பதினொன்றுநாட்டு. (741)

பொன்னவற்கொன்றிரண்டுநாலே – ழெட்டுப்பத்துப்
பொங்குபதினொன்றுபரல்இங்கிதமீதே
டன்னுபுகர்மூன்றுநாலைந்தேழு - நவம்
பத்துப்பதினொன்றுபரல்வைத்துக்கொள்ளப்பா. (742)

செவ்வாய் அட்டவர்க்கம்

சனிக்குமூன்றைந்தாறு - பதினொன்று
தலைக்குமூன்றுறுபத்துப்பதினொன்றதாம்
இனிச்சேய்பாகத்தைச்சொல்வோம் - ரவிமூன்றைந்
திருமூன்றுபத்துபதினொன்றுகுமே. (743)

மதியொருமூன்றிருமூன்று – பதினொன்று
மண்மகனொன்றிரண்டுநாலேழெட்டுப்பத்துப்
பதினொன்றுபரலூன்று – புதனுக்குப்
பார்மூன்றைந்தாறுபதினொருபரலே. (744)

வியாழனுக்காறுபத்து – பதினொன்று
விரையம்புகர்க்காறெட்டுலாபம்விரையம்
தயாளமில்சனிக்கொன்று - நாலே
ழெட்டொன்பதுதசம்லாபம்பரலூன்று. (745)

தலையொன்றுமூன்றுபத்துப் - பதினொன்றும்
தாக்குபுதன்பாகந்தனைக்கேளு
நிலைபெறுகுருபாத – மலரிணை
நினைத்துக்கொண்டேயுனக்கனைத்துஞ்சொல்வேன். ()

தனதன்தனனு.

புதன் அட்டவர்க்கம்

ஆனந்தக் களிப்பு

விருதிட்டபுதனட்டவர்க்க - மினி
விள்ளுவேன்கவனமுடன்கொள்ளுவாய்மகனே

பருதிக்கஞ்சாறென்பதேகா – தசம்
பனிரண்டுபரலுண்டுநிலவுக்கிரண்டும்
நாலாறெட்டுப்பத்துபதினென்றும் - அழலுக்கு
நாட்டொன்றிரண்டுநாலேழெட்டொன்பதுபத்தே
லாபம்புதனென்றுமூன்றைந் – தாறே
டேழுநவந்தசமேகாதசம்வியமே. (746)

குருவுக்காறெட்டுப்பதினென்று - பனிரண்டு
கூறுபுகறோன்றிரண்டுமூன்றுநாலைந்தெட்
டுருவிற்றநவலாபமாகும் – சனிக்
கொன்றிரண்டுநாலேழெட்டொன்பதுபத்தாயம்
மேருவுக்கொன்றிரண்டுநாலா - றெட்டுபத்து
மேஷபதினென்றுகத்தூவுபரல்கொள்வாய்
சீருலவுகுருவட்டவர்க்கம் - நன்றுகச்
செப்புவேன்கணக்கறிந்திப்புவியில்மகனே. (747)

## குரு அட்டவர்க்கம்

### இதுவுமது

குருவுக்குப்பரலைம்பத்தாறும் - வருமாறு
கூறுகின்றேனிதைக்குறிப்பாகக்கேளே
இரவிக்கொன்றிரண்டுடன்மூன்று - நாலே
ழெட்டொன்பதுபத்துபதினென்றேமதிக்கு. (748)

துதியைந்தேழொன்பதுலாபம் - சேய்க்கொன்று
துவநாலேழெட்டுபத்துபதினென்றுகாணே
புதனென்றிரண்டுநாலைந்தன் - றென்பான்
புகல்பத்துப்பதினென்றுகுருவொன்றிரண்டு. (749

மூன்றுநாலேழெட்டுப்பத்துப் – பதினென்று
முழுவெளிரண்டஞ்சாறென்பதுபத்துலாபம்
தோன்றுசனிமூன்றேடைந்தாறு – பனிரண்டு
தோன்றுதலைக்கொன்றிரண்டுநான்கைந்தாரேழு. (750)

நொண்டிச்சிந்து

ஒன்பதுபத்துப்பதினொன்று – பரல்களை
மூன்றிக்கொளினிச்சுக்ரனட்டவர்க்கங்களே
அன்புடனேயுனக்குச்சொல்வே - னிதைநன்று
யறிந்துகொள்ளறிவொடுதெரிந்துகொள்மகனே. (751)

சுக்கிர அட்டவர்க்கம்

இதுவுமது

நொண்டிச்சிந்து

ரவியட்டம்லாபம்விரையம் - மதியொன்
றிரண்டுமூன்றுநாலைந்தெட்டொன்பதுபதினொன்
றீராறுபரலூன்று - குசன்மூன்
றீரிரண்டாறொன்பதேகாதசம்வியமே
சீரானபுதன்மூன்றைந் - தாறென்பது
செப்புபதினொன்றுபரற்றப்பிதமில்லை. (752)

பொன்பரலைந்தெட்டொன்பதுபத் - தேகாதசம்
புகரோன்றிரண்டுமூன்றுநாலைந்தெட்டோ
டொன்பதுபத்துலாபம் - கரிமூன்
றொருநான்கைந்தெட்டொன்பதுபத்துலாபம். (753)

லக்னமொன்றிரண்டுமூன்று - நாலைந்தெட்டு
நவம்பதினொன்றுபரல்நாட்டிக்கொள்ளு
சுக்கிரற்குப்பின்னேன்வர்க்கம் - விவரமாச்
சொல்லில்ரவிக்கொன்றிரண்டுநாலேழெட்டு. (754)

பத்துப்பதினொருபரலாம் - மூன்றாறு
பதினொன்றுமதிக்கெனப்பாடுவரே

ரத்தன்மூன்றைந்தாறுபத்து — பதினொன்று
நான்மூன்றுபுதனுறெட்டொன்பதுபத்து (755)

பதினொன்றீருறுபரலாம் — குருவுக்குப்
பஞ்சமாறுபதினொன்றுபனிரண்டதாம்
சீதனுக்கோராறுலாபம் — விரையமாம்
திரிபஞ்சமாறுலாபங்கரியவற்கே. (756)

லக்கினமொன்றுமூன்று — நாலாறு
நல்லபத்துப்பதினொன்றுசொல்லாமே
இக்கணக்கின்பிரகாரம் — அட்டவர்க்க
மெடுத்துச்சர்வாட்டவர்க்கந்தொடுத்துக்கொள்ளே. ()

குருபாதம்பணிந்துகொண்டு — சோதனைக்
குறிப்பின்றரமுனக்குவெளிப்படவே
திரிகோணசோதனைவிதி — முறையுடன்
தெரிவிக்கிறேனதிற்குறிவைத்துக்கேள். (758)

---

## திரிகோண சோதனை

—:❀:—

### இதுவுமது

நீடியதிரிகோண — சோதனை
நினைவாகச்சொல்லுகிறேன்முனையாய்க்கேளு
மேடசிம்மந்தனுசும் — பின்னால்
விடபகன்னியாமகரமொருமூன்று. (759)

மிதுனதுலாங்கும்பங் — கற்கடகம்
விர்ச்சிகமீனமும்மூன்றும்
கதிருறுதிரிகோணமாம் — இவைகளிற்
சாரவேபரல்மூன்றுஞ்சரியானால். (760)

பரிமுதலாகவேமூன்று - ராசிப்
பரலையெடுத்துவிடுதிரமுடனீ
ஒருராசிதனில்பரல்கள் - சூனியம்
முற்றிடில்மூன்றுக்குஞ்சோதனையில்லை. (761)

ஏகாதிபத்யசோதனை - தன்னை
யின்பமுடன்கூறுகிறேனன்புடன்கேளு
வாகாதமேடந்தேளுக்கும் - அதில்
வருமேறுகோலுக்குந்தண்டுகன்னிக்கும். (762)

வில்லுமீனுக்குஞ்சோதனை - பின்னும்
வெளியானகுடத்துக்குஞ்சோதனையாகும்
நில்லுங்கடகமரிக்கும்இது
ரெண்டுக்குஞ்சோதனையுண்டென்றெண்ணுதே. (763)

கோளிருந்திடும்ராசிப் - பரல்
குறையவேகோளில்லாராசியிலேறில்
தாழுமிராசிப்பரல்போல் - இரண்டும்
சமனுகச்செய்வதேசோதனையின்னம். (764)

இருராசியினுஞ்சமமாய்ப் - பரல்கள்
இருக்கினுங்கோள்களில்லாராசியில்
அருகிப்பரல்குறைந்தாலும் - அதனை
அடியோடேநீக்குவாயின்னமுங்கேளாய். (765)

இருராசியிற்கோளில்லாமல் - பரல்
ஏற்றங்குறைச்சலாவிருந்திடினே
வருமேகுறைந்தபரல்போல் - நின்ற
மற்றைப்பரற்களையுஞ்சுத்தப்படுத்து. (766)

சரியாகப்பரலிரண்டில் - வந்தாற்
றப்பாமலடியோடேகுப்புறத்தள்ளு
தெரிவாயிவைகளெல்லாங் - குருமுன்பு
தேட்டையாலிளங்கும்படிகேட்டறிந்துகொள். (767)

கோளிருராசிதன்னில் – நிற்கக்
குறையினுமேறினும்பரலதுதான்
நீளவிரண்டிற்சரியாய் - இன்னம்
நிற்கிலொருராசிசூன்யமாயினும். (768)

கிரகமிரண்டிலில்லாமற் – பரல்
கிட்டியொருராசியிற்சூன்யமாயினும்
வரலுறுமிவைகட்கெலாம் - சோதனை
வல்லமையாலில்லையென்றுசொல்லுவாயே. (769)

ஒருராசிகோளிருக்க - அதில்
ஒப்பிப்பரலுமேசூனியமாகில்
வருராசிப்பரலையகற்றி - யிந்த
மார்க்கமாயேகாதிபத்தியஞ்செய்வாய். (770)

இந்தச்சோதனைகளெல்லாஞ் – செய்தபிற
கிருக்கும்பரற்களுக்குவிதிகேளு
வந்திடிமிராசிகுண – காரத்தை
வரிசையாய்ச்சொல்லுகிறேனுரிமையாக்கேள். (771)

மறிகோலிரண்டின்பரலை - ஒன்றுக்கொன்று
மாட்டியேயேழினிற்கூட்டிப்பெருக்கு
குறியாகவரியிடபப் - பரற்களைக்
கூட்டியொருபத்திலுளீட்டிப்பெருக்கு. (772)

தண்டுதேளில்வரும்பரலை - யெட்டிற்
ருக்குவாய்நண்டையும்நாலிற்பெருக்கு
பெண்டொடுசுறவின்பரல் - அஞ்சினுற்
பெருக்கிக்கொள்ளின்னமும்பேசக்கேளு (773)

சிலையிலிருக்கும்பரலை - நீயும்
செப்பமாய்நவத்தினிலொப்பிப்பெருக்கி
நிலையானசாலின்பரலை - நீயும்
நிச்சயமாய்ப்பதினொன்றில்வைத்துப்பெருக்கி. (774)

மீனிலிருக்கும்பரலை - பன்னிரண்டால்
விரைவிற்பெருக்கிக்கொள்ளுமுறையிதுவே
ஆனபரலையெல்லா - மிவ்வளவென்
றறிந்துதொகைகூட்டித்தெரிந்துகொண்டு. (775)

கிரககுணகாரத்தை - யானும்
கீர்த்தியாயுரைக்கவேபூர்த்தியாயக்கேளாய்
இரவிமதிகரிபுந்தி - நால்வர்
இருக்கும்பரலையெல்லாமஞ்சிற்பெருக்கு. (776)

மங்கலன்வாழும்பரலை - எட்டினால்
மாட்டிப்பெருக்கித்தொகைகூட்டிக்கொள்ளு
சுங்கனுர்நின்றபரலை - யேழினாற்
கூட்டிப்பெருக்கித்தொகைகூட்டிக்கொள்ளே. (777)

பொன்னவர்நிற்கும்பரலைப் - பத்தினாற்
பொங்கமுடன்பெருக்கிச்சங்கைப்படுத்தித்
தன்னையொன்ருகக்கூட்டி - லிது
தானேகிரககுணகாரமாகும். (778)



## குணசமுகம்

—❀—

ராசிகுணகாரலக்கமும் - பின்னும்
நாடுங்கிரககுணகாரலக்கமும்
பாசமாய்ரெண்டையுமொன்ருய்க் - கூட்ட
பாரினிலேகுணசமுகமுமாகும். (779)

மாரகபலனறியும்படி

இந்திந்தவிதமாக - நீதான்
ஏழுகிரகத்துக்குமின்பமாய்ச்செவ்வாய்
அந்தமார்த்தாண்டனுக்கு - வந்த
அட்டவர்க்கக்குணசமுகங்கண்டு. (780)

மாரகங்கூறும்வகைகேள் - ரவிநின்ற
மனைக்கொன்பதின்பரலைக்குணசமுகத்தால்
நேராகப்பெருக்கிக்கொண்டு - வந்ததொகை
நீட்டியிருபத்தேழினாலேவகுத்து. (781)

முற்பக்கமாகிலதனை - யசுபதி
முதற்கொண்டுகணக்கெண்ணவந்தநாளிலும்
பிற்பக்கமெனிற்சித்திரை - முதலெண்ணப்
பிரிந்துள்ள நாளிலுங்காரிவருமேல். (782)

அந்தநாட்டந்தைகடைநாள் - மாரக
மாகுமென்றேயறிந்துநீதுறிப்பாய்
மைந்தனேகணக்கிலக்கம் - கூட்டவும்
வகுக்கப்பெருக்கமனம்வதங்காதே. (783)

இன்னமொருவிதமாக - இரவி
யேற்குங்குணசமுகமிதுகேளு
முன்னமேயேழில்பெருக்கி - யதனை
மொழியுமிருபத்தேழுக்குக்கொடுத்து. (784)

வந்திடுநாளைக்கண்டு - முன்னே
மன்னிப்பெருக்குந்தொகைபன்னிரண்டுக்கீந்
தந்தமாய்ராசியைக்கண்டு - காரி
யதில்வருங்காலத்திற்பிதுர்மாரகம். (785)

அதனையுமல்லாம - லின்னமும்
அட்டவர்க்கத்திடைச்சோத்தியஞ்செய்து
பதியெலாநின்றபரலைக் - கூட்டிப்
பார்க்கவனுக்கொன்பதாமிராசிப்பிந்தால். (786)

பெருக்கியிருபத்தேழுக்கீந்து - முன்
பேணுந்தொகையையீராறுக்கீந்து
வருநாள்ராசியுங்கண்டு - இதில்
வந்திடக்காரியுந்தந்தைமாரகம். (787)

இந்தவிதமூன்றுமாரகம் — நீயும்
எடுத்திடரெண்டுமொன்ருகவேகூடும்
சொந்தவினயமுஞ்சேர்த்துக் - காரி
தோன்றிடிற்கோணத்திற்றந்தைமாரகம். (788)

பொன்னவனின்றபரலை - யிரவி
பொங்குங்குணசமுகத்தாற்பெருக்கித்
தன்ஊேமூவொன்பதுக்கீந்து - சேடந்
தாக்கவந்நாளிடைக்குருவருங்காலை. (789

ஆதித்தனின்றபரலை - எடுத்துக்கொண்
டன்பாய்க்குணசமுகத்தாற்பெருக்கி
நீதிமூவொன்பதுக்கீந்து — மீதி
நிற்குநாள்சனிவரிற்றந்தைமாரகம். (790)

ஏத்துங்குணசமுகத்தைத் - தானே
எட்டில்பெருக்கியீராறுக்கீந்து
பார்த்துக்கிடைத்தராசி - தன்னிற்
பனிப்பகைவந்திடினுந்தந்தைமாரகம். (791)

சந்திரன்

அம்புலிநின்றபரலைத் — தப்பாமல்
அன்பாய்க்குணசமுகத்தாற்பெருக்கி
நம்பிமூவொன்பதுக்கீந்து - நின்று
தங்கியநாளிடைமதிவருங்கால். (792)

லக்கினம்

பாக்கியநின்றபரலைத் - தானே
பண்பாய்க்குணசமுகத்தாற்பெருக்கித்
தாக்கியீராறுக்கீந்த - மீதியில்
தப்பாமலேகண்டலக்கினந்தன்னில். (793)

முன்புரைத்திடுமைவர் - அவர்
முக்கியமாகவந்துதிரிகோணந்தன்னில்

தென்பாகவேயவர்களும் - வந்திடச்
செப்புவர்பிதாவுக்குத்தப்பின்மாரகம். (794)

இதுவகையன்றியுமின்னுந் - திசையுட
னேற்கும்புசிப்புமவையிரண்டுமொன்ருய்
அதுவுமொத்திடுங்காலே - யிவையுடன்
அந்தகக்காலச்சக்கரம்துகூடில். (795)

தந்தையுநமன்பதிக்கே - சேர்வனென்று
தப்பாமலேஎடுத்துச்செப்பாயப்பா
இந்தவிதமாகத்தானே - மற்றை
யேழாதிபதியர்க்குமெடுகணக்கே. (796)

---

## தாய் முதலியோர் மாரகவிதி

அம்புலியட்டவர்க்கந் - தன்னி
லமையுங்குணசமுகமதைத்தானே
தென்புடனேமதிக்கு - நாலிடைத்
திண்ணமாய்நின்றபரல்எண்ணமாயேற்றி. (797)

அன்னைமாரகமுரைப்பாய் - சேயின்
அட்டவர்க்கக்குணசமுகமதில்
வன்னமாமங்கலனுக்கு - மூன்றில்
வந்தபரலைக்கொண்டுதாக்கியேபாலா. (798

விந்தையாய்த்துணைவருக்குப் - பலன்களை
விரித்துரைப்பாய்புதன்குணசமுகத்தில்
புந்தியிருந்தபரலைத் - தாக்கிப்
புகலுவாய்மாமன்பலனைந்தும். (799)

இராசன்குணசமுகத்தில் - குரு
நண்ணியராசிக்கஞ்சின்பரல்கொண

டாசறதாக்கிக்கண்டு - புத்திரர்கள்
அழியும்வகையெடுத்துமொழிகுவையே. (800)

சுங்கன்குணசமுகத்தில் - புகர்
தோன்றும்ராசிக்கேழின்பரலைக்கொண்டு
வங்கணமாகநின்ற - களத்திரத்து
மாரகந்தன்னைச்சொல்லுபாரகத்தில் (801)

சவுரிகுணசமூகத்தில் - காரி
தங்கியராசிக்கெட்டின்பரலைக்கொண்டே
அவனியிலுதித்துவுந்த - சாதக
ரழியுமாரகபலன்றெளிவுசொல்லு (802)

ஆதித்தன்முதலான - நவக்கிர
காதிபர்நின்றநிலைநீதியையெல்லாஞ்
சோதித்துச்சாதகருக் - கேழதிபர்
சொந்தமாய்த்தந்ததவுமாயுளைச்சொல்லு (803)

குணசமுகத்தைத்தானே - யேழைக்
கொண்டுபெருக்கிமூவொன்பதுக்கீந்தே
எணவருமீவாண்ட - மதில்
வந்தவெச்சத்தையீராறிடைப்பெருக்கி. (804)

மதியுடனிருபத்தேழ்க்குக் - கொடுத்திட
வந்திடுமீவதுமாதமாகும்
அதனில்வருஞ்சேடத்தை - முப்பதி
லமையப்பெருக்கியேயொன்பதிற்கீந்து. (805)

நின்றிடுமீவுநாளா - மதில்
நிற்குஞ்சேடத்தையிருபதிற்ருக்கி
அன்றிருபத்தேழுக்கே - யீந்திட
வதிற்கண்டவீவினைநாழிகையென்பாய். (806)

மீதியீயாதசேட - மதனை
மேவியவிநாடியெனநீவகுப்பாய்

ஆதினமாயாண்டுயர்ந்தால் - நீயும்
பண்பாகவேயிருபத்தேழிற்கழித்து. (807)

நிற்குஞ்சேடத்தைத்தானே - நல்ல
நிலையுள்ளவாண்டெனக்குறித்துக்கொள்ளே
கற்குந்திங்களுந்தேதியு - நாழிகையுங்
காணும்விநாடியுமென்றுணிக்கொள்ளே. (808)

---

## அரண விரணம்



இந்திந்தவிதமாக - வாயு
ளெடுத்துக்கொலை டரணவிரணமுஞ்செவ்வாய்
அந்தவிதங்களைத்தானே - யுனக்
கறியச்சொல்வேனதையன்புடன்கேளாய். (809)

விரையத்திற்பாபரேகி - லந்த
வீரர்தந்தவாயுளைதூரத்தள்ளு
நிரைபதியுச்சமாகி - லந்தவுச்சர்
நீட்டுமாயுளிற்பாதிதாட்டிவிடு. (810)

புண்ணியர்வியமேறி - லவர்களாற்
புக்கிடுமாயுளிற்பாதிநிற்கு
தண்ணியமாய்ப்பதிநட்பாகி - லதில்கண்
டதில்மூன்றிலொன்றுகொன்றுநீக்கு. (811)

பதியவனுட்சியாகி - லதில்
பாங்குடனீக்குவாய்நான்கினிலொன்று
நிதியவருச்சமாகி - லதில்
நீக்குவாயஞ்சினிலொன்றதைத்தானே. (812)

ஏறிடிற்பகையிடத்தி - லவர்தந்த
தின்பமாய்மூன்றிலொன்றைப்பின்புறத்தள்ளு
பாரினில்லாபப்பதியிற் - கோளும்
பாபியாயிருந்திடிற்பாதிதள்ளு (813

பத்திடைப்பாபியேகில் :- நீயும்
பாங்காகமூன்றிலொன்றைநீங்கிடத்தள்ளு
நத்திசுபராகிற் - கொடுத்ததில்
நண்ணியவாறிலொன்றுசண்ணிப்போடு. (814)

நிதியிடப்பாபரேகில் - நீயும்
நீக்குவாய்நான்கினிலொன்றதைத்தானே
அதிசுபர்தர்மத்திலேறில் - நீயும்
அந்தமாயெட்டினிலொன்றுசிந்தித்தள்ளே. (815)

எட்டிடைப்பாபரிருந்தா - லவர்க
ளீந்ததிலைந்திலொன்றுதேய்ந்திடவிடு
தொட்டசுபர்விதியேகில் - நீயுந்
தூக்கியபத்திலொன்றைநீக்கிவிடு. (816)

ஏழிற்பாபியுமிருந்தா - லவர்தந்த
விலக்கத்திலாறிலொன்றைவிலக்கித்தள்ளு
வாழுஞ்சுபரேகில் - நீயும்
வரத்திலீராறிலொன்றுதுரத்திவிடு. (817)

அத்தமானத்துக்குமைந்தா - நீயு
மகற்றுவாய்பாவியைச்சகத்திடையே
சத்துருதானங்களேறும் - கோளுக்குத்
தள்ளிவிடுமூன்றிலொருபுள்ளியையப்பா. (818)

பொல்லார்சத்ருருக்குட்பட்ட - வதிலவர்
புகட்டுந்தொகையிற்பாதியகற்றிவீடே
அல்லாமற்குஜற்குச்சத்ரு - நோக்க
மப்பதியேகிடினரணமில்லை. (819)

சந்திரனுடனிருகோள் - கூடில்
சசியாலிருவர்க்கும்புத்தகங்களுண்டு
விந்தையாயிருவருக்கும் - வந்ததொகை
விள்ளுவாய்பாதியைத்தள்ளுவாய்பாலா. (820)

ஓர்மனையில்மூவர் நால்வர் – கூடி
லுயர்ந்தவராயுளைக்கயந்துதள்ளு
ஆர்மதி கூடிடினும்நோக்குப் – பட்டோர்
ஆயளில்பாதியைநீயும்விட்டிடு (821)

சொன்னேனிவ்விதம்நீக்கி – லதிற்
ரேற்றியவாண்டுக்குச்சாற்றுவேன்கேளு
முந்நூற்றிருபத்தினுலிற் – பெருக்கி
முந்நூற்றறுபத்தைந்துக்கீந்து. (822)

மீதிமூவொன்பதுக்கீந்த – வீவினை
விண்டிடுமாண்டென்றுகண்டுகொள்ளப்பா
சோதனையாய்நின்றசேடந் – தன்னைத்
துலங்கவீராறிலிலங்கப்பெருக்கி. (823)

இருபத்தேழுக்கொடுத்த – வட்ட
மெண்ணியமாதமென நண்ணிக்கொள்ளே.
வருமிந்தவிதிப்படியே – செய்துகொண்டு
வருடமாதந்தேதிநாழிகையுமாக. (824)

கண்டுமுன்சொன்னதையைந்து – பாகம்
கருத்துண்மதித்துக்கொண்டாயுளைக்கூறு
வண்டலர்ச்சோலையோகம் – வாழும்
மன்னனுமரங்கையபூபனீன்ற. (825)

என்குருவீரப்பபிள்ளை – கனிவா
லிந்தவிதமெனக்குபதேசஞ்செய்தார்
மன்னுசங்கரமுனியும்சொன்ன
மறைவுமிவ்விதமென்றுநிறையவறி. (826)

---

## இலக்கின ஸ்புட விவரணம்

ஐஞ்சீரடி யாசிரிய விருத்தம்

வாக்கியப்படிவழங்கிடுசுத்தபஞ்சாங்கம்
தூக்கிமாநவநாயகர்வரத்தொடுதொலைவில்

ஆக்குகாலத்தினுதியந்தத்தொகையாய்ந்து
வாக்கினுற்புடம்பாடவென்குருபதம்வாழி. (827)

இமைக்குங்காலமோர்மாத்திரையிப்படிமுப்பான்
சமைக்கநின்றதற்பரையறுபஃதுவிகலையாம்
அமைக்குமீதறுபதுகலையக்கலையறுபான்
ரமித்தபாகையாம்பாகையோர்முப்பதிராசி (828)

அழகதாயிவன்செனித்திடுங்கடிகையையறிந்து
பழகுதாரையிற்சென்றிடுகடிகையைப்பதிந்து
ஒழிவிராசியிலொன்பதுகூறிலோர்கூறு
வழுவிலாமலேபாகையைநவடுங்குவகுத்தே. (829)

படுத்தியேயிதைப்பகுத்ததற்கீந்திடுமீவை
நடத்தும்பாதத்தில்நாழிகைச்செலவினையறிந்து
தடுத்தவீவுக்குத்தாக்கிடவருபலன்புடமாங்
கொடுத்திடச்சென்றநாழிகையறியக்கூறுவனுல். (830)

கூறநாலரைவிநாடியுங்கலையொன்றைக்கூட்டும்
ஏறவேயெந்தப்பாதத்திற்சென்டுங்கலையோ
மாறுநாலரைவிநாடிக்குங்கலைக்குங்நீமாட்டித்
தேறுநாழிகைவிநாடியாப்படுத்திநீசெப்பே. (831)

செப்புவாயிதுலக்கினபுடமெனத்தேர்ந்து
தப்பில்லாநவக்கிரகத்தின்புடந்தனைச்சாற்ற
ஒப்பியேயெந்தக்கிரகமோவதுவொருபாதம்
கப்பியாதியுமந்தத்தின்கடிகையுங்காணே. (832)

கண்டுநீயொருபாதத்தின்கலைதனைப்பகுத்துக்
கொண்டுமேவந்தநாழிகைக்கிதனைநீகொடுத்தே
அண்டியேகிரகவாதியின்முதலிவன்செனித்த
மண்டுநாழிகைகண்டுமுன்னீவதால்மாட்டே (833)

மாட்டுவாய்முன்னம்வழிச்சென்றபாதத்தின்புடத்தைக்
கூட்டியேபாகைகலையொடுவிகலையுங்கூறு

பூட்டுவாயிதில்நாழிகைகாணவேபுகல்வேன்
நாட்டுநாலரைவிநாடியுங்கலையொன்ருனத்தே (834)

நத்துவாயிந்தப்படிநவக்கிரகத்தின்புடமாம்
கொத்துவெங்குணப்பாம்புடன்வக்கிரக்கோள்கள்
பத்தியாய்த்தலைகீழதாயோட்டிடும்பாகை
புத்தியாலிதைக்கண்டுநீயுலகர்க்குப்புகலே. (835)

உரைத்திடுமெழுவகையொடுதோற்றமுமதனிற்
பெருத்திடெண்பத்துநான்குலட்சத்திடபிறப்பை
விரித்துமேகுருவீரப்பமேகம்வாய்மலர்ந்த
அருத்தம்போலவேமொழிந்திடக்கவனம்வைத்தறியே. ()

---

## எழுவகைத்தோற்றமறியும்படி

பதினன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

வையகத்திடைதேவர்மானிடர்விலங்குடன்
மருவுபறவைச்சாதியும்
மண்ணினிடையூர்வநீர்வாழ்வதாவரபேத
மாற்றெழுவகைத்தோற்றமாம்
மெய்பெற்றமாமறையினுலதைக்கண்டிட
விளம்புவேன்கேண்மைந்தனே
மிக்கவொருலக்கினந்தன்னை நவபங்காய்
விரித்துவருகடிகைதனிலே
பையவிருநூறுகலையாய்ந்திடும்முன்சொன்ன
படியதைக்கண்டுகொள்வாய்
படுமெழுவகைத்தோற்றமிருநூறுகலையையும்
பரவிவரும்விபரமதுகேள்
செய்யுமேதேவரொடுமக்களும்விலங்கினம்
செப்புநீநாலேழதாச்
செல்பறவையூர்வநீர்வாழ்வுதாவரபேத
சீவர்நாலேழொன்பதே. (837)

உண்டவிருநூறுகலையும்மெழுவகைத்தோற்ற
முன்னதைச்சரியாக்கியே

ஓங்குமொருகலையிலெழுதோற்றமதுதிக்கின்ற
வுண்மையின்விபரமுங்கேள்
கண்டிடுந்தேவரொடுமக்களும்விலங்கினம்
விகங்கமூர்வனதாவரங்
கயம்வாழ்வமேழுமோரமிசமினியேழே
கண்டறிவிலங்குபறவை
ஒண்டியூர்வனதாவரமுநீர்வாழ்சீவ
ருயர்வுடையதேவர்மக்கள்
ஒன்றுநீர்வாழ்வதாவரமூவர்புள்விலங்
குயர்மக்கடேவரொன்றும்
அண்டநீர்வாழ்வமானிடர்தாவரமும்விலங்
கவையூர்வபறவைவானோர்
ஆயநாலேழுவகையுந்தேவவமிசமவ
ரடையவிருபத்தொன்பதே. (838)

ஆகுமிருபத்தொன்பதமிசமுந்தேவருக்
காதிதொட்டெண்ணுமக்கட்
கட்டமுதனாலேழ்விலங்கெனிற்பத்தாதி
யாகநாலேழமிசமா
நீகுறிபறவையெனிற்பதினைந்துமுதலாக்
நேர்கவூவவிற்பதி
னேழாதியாக்குதாவரமெனிலிருபதா
நீர்வாழ்வநாலேழ்முதல்
ஏகும்விபரம்தெரிந்தெண்ணியவ்வமிசமொன்
றிட்டறிந்தோசைகண்டால்
இராசிக்குமுற்பதந்தேவரங்கிசமா
மிரண்டுமனுடாம்சமாகும்
பாகமூன்றும்விலங்கீரிரண்டாகுமப்
பறவைகட்கைந்தூர்வன
பகராறுதாவரமொரேழுநீர்வாழ்வன
பகுத்தறிந்தாய்ந்துகாணே. (839)

அட்டமமுதற்றேவராதியாமுன்சொன்ன
வடைவிற்பகுத்தேவேழ
தாக்கழித்துக்கண்டுகொள்ளுமேமென்னிலோ
வவ்வரிசைதலைகீழதாய்

தொட்டிசைந்தெழுவகைத்தோற்றமுங்கண்டுதேர்
சுராமிசமக்கடோன்றிற்
றூயதேவரில்மக்களாம்வரினெழுவகைத்
தோற்றமுண்டெனவறிதியிற்
பட்டமற்றையவங்கிசங்களுமீவாறே
பகுத்தறிந்தமிசமொன்றிற்
பலர்வரினுமமிசாகுணுகுணம்பெறுவராம்
பனிமதிமுடித்ததேவுக்
கிட்டகுருராசன்வளர்திருவேரகப்பதி
யிருந்தெய்வீகசித்தன்
எங்கள்குருராசன்வீரப்பமழைமுகிலெனக்
கிவ்விதமொழிந்தனனரோ. (840)

## வேறு

### கலி விருத்தம்

அருமறைம்முதலானவஙீசொன்ன
விரிவியாவும்விளங்கக்கண்டேனின்னம்
பெருமையாயொரிராசியிரண்டுபேர் ;
வரவும்யோகம்வேருதல்வழங்குவீர். (841)

சொல்லவேயொருலக்கினத்தோய்விடை
வல்லயோகனும்நீசனும்வந்திட
வெல்லும்யோகமிருவர்க்கும்வேறுறப்
புல்லுங்காரணப்பூட்டிணைக்காட்டுவேன். (842)

கூறுவேனெரிலக்கினங்கொள்கலை
யேறுமாயிரத்தெண்ணூறதாமிதைத்
தேறவேபனிரண்டிற்சிதைத்திட
மீறிநின்றதைவிண்டிடக்கண்டிடே. (843)

ஓசையென்பதுமூக்குமமென்பதும்
வீசுமேடந்தொட்டொன்றைவிட்டொன்றதாம்
ஓசையாறுமிடபந்தொட்டொன்றைவிட்
டாசிலாதெண்ணவுக்குமமாகுமே. (844)

கண்டவோசைக்கதுவேதானுதியாய்க்
கொண்டுபார்க்கவிலங்கினங்கூடுமே
அண்டியுக்குமமாகிற்றலைகீழாய்
எண்டுருத்தியிலக்கினம்போட்டிடே. (845)

போடுவாய்நவக்கிரகமுமிவ்விதம்
நாடியோர்கலையும்மொருராசியாய்
ஓடுமோசையுமுக்கும்மேகண்டு
பாடியேயிதைக்கொண்டுபலன்சொல்லே. (846)

பலனைக்காணவும்பக்குவங்கேளுநீ
விலகிடாதவிராசியின்சக்கரம்
வலுவதானசதமஷ்டசக்கரம்
குலவியேயிதைக்கொண்டுபுகன்றிடே. (847)

புகழராசியினற்பலன்பூர்த்தியாய்
மகிழவேசதமட்டமத்தின் பலன்
திகழவேயிரண்டின்பலன்கண்டுபின்
சகலமுங்கண்டறிந்திடச்சாற்றிடே. (848)

அறிந்தபின்பதுதானுமல்லாமலே
மறந்திடுந்சவர்க்கமுங்கண்டுநீ
உறுந்தவாதசக்கரமுள்ளதூஉ
நிறைந்துகண்டுபலனை நினைந்திடே. (849)

திட்டமானதிருக்குருநாதநீ
சட்டமாவுரைதந்தையோர்ந்தனேன்
கட்டியதசவர்க்கத்தைக்கண்டிட
இட்டமாகவெடுத்துரைசெய்குவீர். (850)

---

# தசவர்க்கம்



## வேறு

*அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

பாலனே தசவர்க்கத்தைப் பாடவோர்மனதாய்நில்லு
சாலவேயிவனுதித்த சதிர்பெறுங்கடிகைகண்டு
கோலமாய்லக்கினத்தைக் குறிப்பிட்டுநவக்கிரகத்தின்
சீலமாம்பாதங்கண்டே தெரிந்திடிலிராசிதானே. (851)

ராசியாமிரண்டாஞ்சக்ரம் நண்ணிடிலோரையாகும்
பேசுமாறிராசிதன்னைப் பிரித்திடாயிரண்டாய்நீதான்
வாசமுற்பதமாதித்த மதியம்பிற்பாகமூன்னும்
ஓசைக்கிங்கிதுவேயாகும் உக்குமந்தலைகீழ்நாட்டே. (852)

நாட்டுமோசையினின்றோரி ரவியோரைபெறுவாராகில்
சாட்டியேயந்தராசி தனின்மருவுவர்நிலாவின்
பூட்டியவோரைபெற்றோர் பொங்கமாயிரண்டாம்ராசி
தாட்டிகமாகநிற்ப ருக்குமஞ்சாற்றக்கேளே. (853)

கேளுநீமதியினோரை கிடைத்தவரேழிற்போவார்
நீளவேரவியினோரை நிண்ணயமாகப்பெற்றே
கோளினைச்சப்தமத்தைக் கொண்டுநீவியத்திருட்டே
யாளுடைச்சுக்கிரநாடி யதுசொன்னபடிநீகாணே. (854)

போட்டிடுமிதற்குநாமம் புகலோரைச்சக்ரமாகு
நாட்டிடத்திரேக்காணத்தை நவிலவோர்மனதாய்நில்லு
நீட்டியோரிராசிதன்னை நிகழ்திரியாகஞ்செய்தே
வோட்டந்தத்திரிகோணத்தி லுட்சக்ரமாதிதானே. (855)

ஆதியாஞ்சர்ந்திரந்தா னுபயமூன்றுய்வட்டத்தைக்
கோதியேவரியாகக் கொண்டுநீயடைப்பாயின்னம்
போதினைகேளுகோட்கள் புக்குமிவ்விதங்களாகத்
தீதரப்பலனைக்காணத் திரிமிசாமிசத்தைச்செப்பே. (856)

செப்புமுப்பதுபாகைக்குஞ் சேயைந்துகாரியைந்தே
யொப்பும்பொன்னவற்கெட்டாகு மோங்குமாற்கேழதாகும்
தப்பில்லாப்புகர்க்கைந்தாமோ சைக்கிந்தவிதமேகொள்வா
யிப்படியுக்குமத்துக் கெண்டலைகீழாய்மாட்டே. (857)

மாட்டுமோசையினின்றோர்கள் மங்களபாகம்பெற்று
லாட்டினிலடைப்பாயுக்கு மத்திலேயணுகுவாரேன்
மூட்டிதேளதனிற்போடு முறையிந்தவகையேகண்டு
பூட்டுசத்தாங்கிசத்தைப் புகலவோர்மனதாய்க்கேளே. (858)

ஏய்ந்தவரிராசிதன்னை யேழுகூறுகச்செய்து
வாய்ந்ததானிராசியாகில் வரிகையாயோட்டிக்கொள்வா
யாய்ந்ததுக்குமமேயாகி லதனினேழாதியாகத் [கேளே.
தோய்ந்துநீயோட்டிக்கொள்வாய் சொன்னவாங்கிசத்தைக்

அங்கிசங்கிரகராசி யதைநவபாகஞ்செய்து
பொங்குமத்திரிகோணத்துட்புகழுள்ளசரத்தைக்கண்டே[று
அங்கதைமுதலாக்கொண்டே யடைத்துக்கொள்ளின்னங்கே
சங்கைகளறவேநன்கு தசாங்கிசமுரைசெய்வேனே. (860)

நிரலுறக்கிரகநின்ற நிலைதசபாகஞ்செய்து
தெரியுறுமோசையாகிற் செய்யதைமுதலாயெண்ணித்
தருவதுக்குமமேயாகிற் றருமமேமுதலாய்ப்போடு
சரிநவாங்கிசமீதென்றே சாற்றினரான்றநூலோர். (861)

சாற்றிடுமிதிற்றுவாத சாமிசமறியக்கேளு
பாற்றிடுமிராசிதன்னைப் பனிரெண்டுபாகஞ்செய்தே
ஏற்றிடுமாணும்பெண்ணு முதயத்திலிருந்தேயோடும்
போற்றியேபெரியோர்பாதம் புகன்றனவறிந்திடாயே. (862)

அறியவேகலாங்கிசத்துக் கதைப்பதினாறுசெய்தான்
மறிமுதனேராயோடும் பிரமன்மாலரன்மார்த்தாண்டன்
பெறுகவுக்குமமேற்பசு மார்த்தாண்டன்முதலாப்பேணு
நெறியில்சவ்வியமாக நீட்டவேவிளங்குந்தானே. (863)

விந்தைசஷ்டாங்கிசங்கோள் மேவியவிராசிதன்னில்
வந்ததையறுபதாக வகுத்தொற்றைராசிக்கெல்லாஞ்
சந்ததம்வரிசையாகச் சாற்றினருக்கமாகி
லந்தமேயாதியாகக் கீழ்நின்றுமேலாய்வாயே. (364)

செப்பிடவறுபதுக்குஞ் செயல்பெற்றவமிசந்தன்னை
யொப்பியானுரைக்குமார்க்க முயர்நவக்கிரகந்தன்னைக்
கொப்பெனவமிசங்கண்டு கூறிடிற்பலன்பொய்யாது
தப்பிலாதறுபதுக்குந் தனித்தனிப்பெயர்சொல்வாமே. ()

---

## தேவாங்கிசமறியும்படி



*பதினான்குசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்*

செய்யகோராமிசமிராக்கதாமிசமகா
தேவாங்கிசங்குபேரன்
திகழிரட்சோகணங்கின்னரமருட்டஞ்
செழுங்குதக்கீனுமிசம்
ஐயமில்கிரலகோளம்மக்நிமாயம்
பரேதாங்கிசம்புரிபதி
அமராமிசங்காலம்ராகியமமுதமுமதி
யதன்மயக்கமூவிருதுவும்
துய்யகோமளம்வனவாசம்லட்சுமிவாகீச
திகம்பரந்தொடர்மித்திரம்
சூட்டிகலிநாசபாசம்பூமிசுரமுந்
துலங்குகமலாகாரமும்
மெய்குளிகனவமிருத்துங்காலமுந்தவாக்
கினியகோரமியமகண்டம்
மேவுஞ்சுதாங்கிசமமிர்தமும்பூரணமதி
விடப்பிரிதிகுலநாசனம் (366)

முக்கியஞ்சேதமுற்பாதமுங்காலவுரு
மொழிசௌமியமுமிருத்து
முதிர்சீதளஞ்சந்த்ரமுகமுஞ்சுபாக்யமு
முதியபிரதக்கணந்தண்
டொக்குநிருமலமுடன்சுபமசுபமதிசீத
மோங்கியபயோததியுடன்
ஓங்கும்பிராணயமுஞ்சந்திராமிசமி
வோரறுபதமிசமாகும்
தக்கபடியோசைக்குவரிசைகொள்ளுக்குமந்
தலைகடையிருந்துகொள்க
தசவர்க்கமுன்சொன்னவிதிகண்டுகொண்டுநீ
சஷ்டியமிசத்திலேற்றிப்
பக்குவமதாகவேயிவ்விதங்கிரகாதி
பதிகளதுகதியையோர்ந்து
பகருவாயாகிலுன்சொற்படிபலாபலம்
பாலிப்பர்நவதேவரே. (867)

சதுர்பெருகுதசவர்க்கமதனில் நவக்கோள்கள்
தங்கியதுசுபவர்க்கமாய்த்
தனிமையுற்றுலக்த்துற்பலமிரண்டெனிற்
றருபாரிசாதமாகும்
சந்ததஞ்சுகியாவான்மூன்றென்னினுத்தமந்
தாங்குவாகனனுரோகி
சரியாகநாலெனிற்கோபுரம்வாகனந்
தனமும்பதிபாக்யமுண்டாம்
கதிபெருகுமைந்துசிங்காசனஞ்செல்வனுங்
காணுறுபார்க்கவதமாம்
கடலுலகில்வித்தையும்புத்தியாமேழெனிற்
கண்டறிகதேவலோகம்
கனயோகமெட்டுவைசேடிகமதன்பலன்
கண்யமிகுதன்யபதியாம்
கருணைபெறுநவமதுக்கயிராவதம்பலன்
காணுமஷ்டைச்வரியம், (868)

நிதிபெருகுதசமெனிற்தேவேந்திராமிசம்
நீணிலத்திந்திரயோகி. (868)

நிச்சயமதாய்ச்சார்வபௌமனுமிவ்வாறு
நீயறிந்துரைசெய்குவாய்
நிலமையாக்கோள்களினவஸ்தையதனிண்ணய
மிராசியைக்கூறுசெய்து
நிற்கும்வாலிபமோடுயௌவனங்கௌமார
நெடுவிர்த்தமரணமைந்தும்
பதிவுகம்மாகிலிருபாம்புக்குமேயதைப்
பார்த்திடுதலைக்கீழதாய்ப்
பாம்புகரிவார்த்திகஞ்சுக்ரன்வாலிபமரண
பயமதாமற்றவைசுபம்
பார்மகன்விருத்தமரணந்தவிரமற்றதும்
பச்சைக்குமரணமொழியப்
பார்க்கவன்பொன்மரணமொழியமதியௌவனம்
பகன்றதிதுவுத்தமமதே. (869)

துவாதசாமிசச் சக்கரம்

முதலாவது இராசி சக்கரம்

துவாதசாமிசச்சக்கரச்சூட்சியிற்
தவாதுகேள்முதற்சக்கரத்தன்மையை
யவாவிராசியின்சக்கரமாமெனுச்
செவாய்விரித்திடுவேதனைப்போற்றியே. (870)

2-வது ஓரைச் சக்கரம்

இரண்டின்சக்கரமெப்படியென்பையேற்
றெருண்டுபார்தசவர்க்கத்திற்செப்பிய
சுருண்டவோரையின்சக்கரச்சூட்சியே
மருண்டிடாதுசொல்வார்த்தைபொய்யாமலே. (871)

3-வது கடிகைச் சக்கரம்

வேறு

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

உன்னியேகடிகாலெக்ன
மொருராசியறுபதாக்கி

மன்னியபொங்கொன்றுக்கு
ராசியைவகுத்தபின்னர்
மன்னவனுகிற்பாலன்
வரிசைநின்றெடுப்பாய்பெண்ணேல்
பின்னுளமரணமாதி
மேல்வரப்பெரிதுகொள்ளே. (872)

## 4-து ஆரூடலக்கினமறியும்படி

போட்டவாரூடலக்னம் புகலக்கேளிலக்னமாதி
நாட்டியவிராசியோனை நவில்புடங்கண்டுகொண்டு
பூட்டியாங்கவனிருந்த புக்கிலேமுதலதாக்கொண்
டேட்டிலேயடைப்பாய் நீதா னிவ்விதங்கிரகங்காணே. (873)

## 5-வது நட்சத்திர லக்கினமறியும்படி

காணநட்சத்திரலக்னம் கருதவத்தாரை தன்னில்
ஊனமில்லாமற்சென்ற கடிகையைப்புடத்தாலோர்ந்து
போனநாழிகையைந்துக்கோ ரிராசியாய்ப்புகுத்திக்கண்டு
வானுறுகுதிரைமூல மகமிவைக்கிடமாக்கூறே. (874)

## 6-வது காரக லக்கினமறியும்படி

காரகச்சக்கரத்தின் கதிதனைச்செப்பக்கேளு
கோருமோரிராசிதன்னைக் கூறறுபதுதான்செய்து
பாரினிலைந்துகூறு பதியொன்ருய்ப்பாகஞ்செய்து
தீரதிற்பாகையந்தக் கிரகத்தின்முதலாச்சேரே. (875)

## 7-வது ஆதரிச் சக்கரம்

### வேறு

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆதரிச்சக்கரத்தையறையக்கேளா
யன்பானவிலக்கின நட்சத்திரம்பின்னும்
பாதமதைப்புடமதனுல்கண்டதாதிப்
பாதமதையம்பத்தஞ்சாகப்பார்த்துச்

சாதகமாயவரவர்களிந்தப்பாதந்
 தான்முதலாயைம்பத்தஞ்சாம்பாதத்தைக்
கோதறவேயடைந்துவகைகூறவேண்டுங்
 குறிப்புடனேவிரிப்பறிந்துகூறுவாயே. (876)

## 8-வது ஆயுர்ப்பாகச் சக்கரமும்

## 9-வது திரேக்காண சக்கரமும்

சுந்தரமாயாயுருசக்கரத்தைக்கேளு
 துலங்குமொருராசிதனைப்பனிரெண்டாக்கிச்
சந்திரனுரிருந்தநவாமிசாதியாகத்
 தானடைப்பாய்திரேக்காணச்சக்கரங்கேள்
விந்தையாயிராசியொன்றைமூன்றுசெய்து
 மேவுதிரிகோணசரமாதிகண்டு
சத்ததமாய்க்கண்டடைத்துப்பலனைக்கூறில்
 தப்பாதுபலன்களொன்றுந்தாக்கிக்காணே. (877)

## 10-வது அங்கிசச் சக்கரவிதி

அங்கிசச்சக்கரமதனையறியக்கேளா
 யந்தமுள்ளராசியொன்றைத்தசமாய்ச்செய்து
பொங்குமதிகாரகச்சக்கரத்தினின்ற
 புகர்பதியைத்தொட்டடைப்பாயின்னங்கேளு
மங்கைதடராசிதனிலிருந்தபேர்க்கு
 மதினின்றபதியொன்பான்மனையைத்தொட்டுச்
சங்கையதில்லாமலடைகுடந்தைவாழும்
 சற்குருவீரப்பபிள்ளைசாற்றுமாறே (878)

## 11-வது நவாங்கிச சக்கரமும்

## 12-வது பாவசக்கர விதிகளுங் காண்க

என்குருமுன்னருளுநவாங்கிசத்தைக்கேளா
 யின்பமுள்ளராசியொன்றைநவமாச்செய்து
நன்குதிரிகோணசரமுதலாக்கொண்டே
 நாட்டிடுவாய்பாவகச்சக்கரத்தைச்சொல்வேன்
பின்குறிக்குந்தாரைதுவாதசக்கூருக்கிப்
 பேசுமறிமுதல்வலமாயடைப்பாயின்னம்

முன்கொள்பதியுக்குமமேயானுன்மீன
முதலாக்கொண்டிடமாகவடைத்திடாயே. (879)

துவாதசாமிச சக்கர பலனறியும்படி

இராசியின்சக்கரப்பலனதையிலக்கினத்
திறைவனைக்கண்டுமோரைக்
கிரண்டாதிபதிதனைக்கண்டுமக்கடிகைக்
கிசைந்தமூன்ருதிகண்டும்
விராவுமாருடபலனுன்காதியைக்கண்டும்
விள்ளுநட்சத்திரபலன்
மேவுமைந்ததிபனைக்கண்டுமுரைகாரகம்
விளக்கிலாருதிகண்டு.
பராவுமாதரிசமெனிலேழாதிபற்கண்டு
பகராயுவட்டமாதி
பதியினைக்கண்டுரைதிரேக்காணமென்னிலொன்
பதினதிபனைக்கண்டுரை
தராதலத்தங்கிசந்தசனுதனைக்கொண்டு
சாற்றிடுநவாம்சமேகா
தசபதியையாய்ந்துமுரைபாவகமெனிற்றுவா
தசபதியையாய்ந்துமுரையே. (880)

V. M. K.

## மங்களப் பொருத்தங்கள்



### கடவுள் வணக்கம்

ஐஞ்சீர் விருத்தம்

தற்பரானந்தசொரூபனேஞானசற்குருவே!
விற்பனுபெண்ணுக்காணுக்கும்பொருத்தங்கள்விளம்ப

எப்படிச்சுபவிதியிதையேழையேனறிய
நற்பரத்துவநாயகாதயைசெய்துநவில்க. (881)

தினமகேந்திரம்யோனியிராசிராசிக்கோன்
கனமிரச்சுதீர்க்கம்பட்சியாயுள்சோதனையே
நினையும்வேதமும்வசியமுமரமுமாய்நின்ற
மனமயக்கறுபொருத்தமுந்நான்கொன்ருய்வகுப்பர். (882)

### 1 - வது தினப் பொருத்தம்

✓ m.K.

மங்கைநாள்முதல்மணமகனுள்வரையெண்ணி
அங்கிரண்டுநாலாறெட்டொன்பதுபத்துபனிரண்
டிங்கீரேழ்பதினுறுபத்தொன்பதீர்பதினென்
றுங்கிரண்டுபத்தெற்றமூன்ருறெட்டொன்பதுமாம். (883)

### 2 - வது கணப் பொருத்தம்

✓ m K.

குதிரைமான்றலைபுனர்வசுகாற்குளமஸ்தம்
உதயசோதியுமனுடமுமோணமுங்கடைநாள்
கதியதாமிதுவொன்பதுந்தேவர்கள்கணமாம்
பதியமாநரர்கணந்தனைப்பாடிடக்கேளே. (884)

பரணிரோகணியாதிரைபகருமுப்பூரம்
கரவிலாத்திரியுத்ரமொன்பதுநரர்கணமாம்
கருதுமற்றையவொன்பதுமிராக்கதகணமாம்
அருமைமாதொடுமணமகன்கணங்களையறிந்தே. (885)

சித்தமாயிருவருமொருகணம்வரிற்செழிப்பாம்
பத்தியாய்ச்சுரராட்சதகணம்வரிற்பகையாம்
நத்தியேநரராக்கராய்வரிலுயிர்நாசம்
மத்திமம்நரர்தேவருமாய்வரில்மதியே. (886)

### 3 - வது மகேந்திரப் பொருத்தம்

✓ mK.

கன்னிநாள்முதற்கணவன்றனையுங்கண்டு
முன்னியொன்றுநான்கேழ்பத்துப்பதின்மூன்றீரெட்டுப்

பன்னுபத்தொன்பதிருபத்திரண்டிருபத்தைந்
தின்னலக்கங்களுத்தமமகேந்திரமென்ப. (887)

## 4 - வது ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம்

கன்னிநாட்முதலாகவேகணக்கிடும்போது
மன்னநாட்பதின்மூன்றுக்குமேலதாய்வரினே
நன்னயந்தருந்தீர்க்கமுத்தமமெனநாட்டு
மன்னர்யோனியின்பொருத்தமும்பேசுவோங்கேளே. (888)

## 5 - வது யோனிப் பொருத்தம்

இருவர்யோனியுமுள்ளவாறிருக்கினுமேலும்
வருமிரண்டும்பெண்ணுக்கினன்றிருவருமாண்
உருவமாயினுமாறிநின்றுலுமொவ்வாதே
பெருகியோனியின்பெரும்பகைபெறவுமொண்ணுதே. (889)

## 6 - வது இராசிப் பொருத்தம்

நலமதாம்பெண்ணினுட்குளராசிதொட்டாறிற்
நிலவுராசிதானுறுக்குமேற்பட்டுநின்றுற்
குலமுமாயுளுஞ்செல்வமுங்கீர்த்தியுங் கூடும்
உலகமீதிலிராசியின்பொருத்தமாமுணர்தி. (890)

## 7 - வது இராசி நாயகர் பொருத்தம்

மங்கைராசியின்மன்னனிராசிபதியோர்
துங்கமாகநட்பாகவேயிருந்திடிற்சுகமாம்
பங்கமாய்ப்பகையாகிடிற்பழுதென்றுபகர்வார்
அங்கிராசியினதிபதிபொருத்தமென்றறையே. (891)

## 8 - வது வசியப் பொருத்தம்

மேடமாகிடிற்சிங்கமுந்தேள்மிருவசியம்
மாசிலாநந்தியாவெனினண்டுகோல்வசியம்
ஆசையாமிதுனத்துக்குக்கன்னியும்வசியம்
வாசமார்க்கடகத்துக்குத்தேள்வில்லுவசியம். (892)

வசியமாஞ்சிங்கமாமெனின் மகரமுவசியம்
இசைவிஞற்கன்னியாகிடவிடயமீன்வசியம்
அசையுங்கோலுக்குமகரமும்விருச்சிகமாகில்
வசையிலாதநண்டரிவைபால்வசியமென்றுரையே. (893)

தறைக்கும்வில்லுக்குமீனமும்முதலைக்கோகும்பம்
தறைக்குட்சாலுக்குமீனமும்மீனத்துக்கேதான்
உறக்குமேசுருவிப்படித்தம்பதியொத்தாற்
சிறக்கவாழுவர்வசியத்தின்பொருத்தமாஞ்செப்பே. (894)

## ரச்சுப் பொருத்தம்

### வேறு

நேரில்மூன்றுமுக்கோணங்கள்கீறியே
பாரில்நான்குவரைகுறுக்காகவே
தீருவாயிருபத்தேழ்பொருத்தமாம்
சாருங்கீழ்வரிவாசிவைத்தெண்ணிடே. (895)

எண்ணுவாய்கீழ்வரைக்குக்காலாமிதை
அண்ணுமேல்குறங்காம்வயிருமதை
நண்ணுமேல்வரிமேல்வரிநற்களம்
வண்ணமாமுடிமாமுடியென்பவே. (896)

கேளுகாலுற்பொருளொடுகேடுமாம்
நாளுமேதொடையின்மலடாநலாள்
மீளுவெவ்வயிற்றிற்சுதர்வீவரால்
வாளுலாங்கழுத்தில்லவமங்கலை. (897)

சிரசதாகிற்பெண்சிக்கெனத்தீங்குறும்
வருகுறங்கினுங்காலினுமத்திமம்
திருவுலாங்கழுத்திற்சிரத்திற்பொலாங்
கொருவிநிற்பதேயுத்தமமாகுமே. (898)

## வேதப் பொருத்தம்

உய்த்தமுக்கோணங்கீறியோர்மூலைக்குச்
சித்தமாகவறைநாலுகீறியே

நத்திக்கீழ்வரியிற்பரிநாட்டியே
சுத்தநாளிருபத்தேழுஞ்சூட்டியே. (899)

நாட்டவேதம்மதியிருநாட்களும்
காட்டவேகுறுக்காநேர்வரைதனிற்
சாட்டியேவரிற்றள்ளிடாகாதெனப்
பூட்டுவேதப்பொருத்தமிதாகுமே. (900)

## மரப் பொருத்தம்

ஆகும்மன்னன்வயிரம்பெண்பால்மரம்
ஓகையாய்வரிற்புத்திரருண்டுண்டு
பாகமாதுவயிரமாண்பால்மரம்
மோகமாகில்முழுமலடாவளே. (901)

இருவரும்வயிரம்மரமாகிடிற்
பெருகும்புத்திரர்சேதம்பெலத்திடும்
உரிமையாவிருவோர்க்கும்பாலோங்கினு
லருமையோவவர்க்கானந்தசெல்வமே. (902)

## புட் பொருத்தம்

இருவர்பட்சியுநல்லுறவேயெனிற்
பெருகிவாழ்வர்பகைதனைப்பெற்றிடில்
அருகிவாழ்வதுமற்பமெனுமுன்னோர்
தெரியக்கூறினரென்பர்சிறந்துளோர். (903)

## ஆயுட் பொருத்தம்

கண்டுமங்கைதன்னுண்முதற்காவலன்
கொண்டநாளினதெண்ணினைக்கூட்டியே
கண்டதேழிற்பெருக்கிமூவொன்பதில்
விண்டுதந்துமிருந்ததைவைத்திடே. (904)

மன்னனுண்முதன்மங்கையினுள்வரை
உன்னியேழிற்பெருக்கிமூவொன்பதிற்

பின்னமீந்துமேனின்றதைப்பெற்றிடு
முன்னம்வைத்ததொகையையுமுன்கண்டே. (905)

கூறுவாரிதிற்ருழ்தொகைகொண்டுளோ
ரேறுவார்பதவிக்குமுன்னென்பரால்
பாறவேபதின்மூன்றுபொருத்தமும்
ஓறுவாய்முனஞ்செப்புமுரைக்கணே. (906)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

செப்புகின்றவென்குருவேயுமதுபாதஞ்
சிரத்தணிந்தோர்விண்ணப்பஞ்செப்புகின்றேன்
இப்புவியில்மங்கையர்க்குமணவாளர்க்கு
மிருப்பதேபதிமூன்றுபொருத்தமெல்லாம்
தப்பிலாதெப்பொருத்தமிருக்கவேண்டும்
சங்கைதனைப்பங்கமறச்சாற்றுமையா
ஒப்பெதிர்வுமுயர்வுமிகத்தின்றியோங்கு
முத்தமாசித்தமாய்ந்தோதுவீரே. (907)

கலி விருத்தம்

அருள்செய்வாயென்றவன்புள்ளடாலகா
பெருகுந்தாரைகணம்ரச்சுவேதமும்
புரியுமேயிந்தநான்குபொருத்தமும்
வருகமங்களஞ்செய்யவழுத்துவாய். (908)

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

வருகவொருமன்னவனுங்குதிரைதன்னில்
மகந்தனிலேமங்கையருமுதிக்கவேதான்
இருவருக்கும்மணம்புரியமகவில்லாமல்
இடர்படாமனவெறுப்பாய்க்கலகமேய்வர்
வருபரியோன்மகந்தனிலேயுதித்தபெண்ணை
மணம்புரியவவனுமொரேதாரமாகப்
பெருகுபொருள்மைந்தர்களும்பெருவாளிந்தப்
பெட்பதனைத்திட்பநுட்பம்பேசுவீரே. (909)

கலி விருத்தம்

செப்பயானுந்திடமனதாகநில்
இப்புவியிலுடலின்பொருத்தமுந்
தப்பிலாவுயிரின்பொருத்தங்களு
மொப்பவேயிரண்டுண்டதுகண்டிடே. (910)

உண்டுசொன்னதுடலின்பொருத்தமே
அண்டியபதின்மூன்றுஞ்சரிவரில்
விண்டுயிர்ப்பொருத்தம்விலக்காய்விடில்
தண்டுளுச்சகடங்களிதாகுமே. (911)

அண்ணலேவுடலாம்பொருத்தங்களை
யுண்ணுமாமொழிந்தீரதையோர்ந்தனே
திண்ணமாமுயிர்சேர்பொருத்தங்களை
எண்ணியேமொழிந்தேதழையையாள்கவே. (912)

மேருசுங்கன்மதிநின்றராசிமே
லேர்கொளொன்றிரண்டேழெட்டிற்பாபர்கள்
யாருநின்றிடில்பாபமொன்றுகுமே
சேருநான்குமீராறுக்குஞ்செப்புவாம். (913)

செப்பச்சேயுமிருக்கக்காற்பாபமா
மொப்பிமற்றத்தீக்கோளுறவாட்சியில்
வெப்பமாகவிரித்தரைப்பாபமாம்
அப்பதியுச்சமாகின்முக்காலதே. (914)

நந்திலாதனன்னட்புக்குக்காலதாம்
வந்திடப்பகையின்முழுப்பாபமாம்
உந்துநீசத்திலொன்றேகால்பாபமா
மிந்தமார்க்கமெடுபாபந்தன்னையே. (915)

மங்கையாணுக்குமிவ்வணமாகவே
பங்கமாகியபாபத்தைக்கண்டிடு
அங்குப்பெண்ணுக்கமைந்ததைப்போலவே
தங்குமாணுக்கிரட்டிதான்வேண்டுமே. (916)

இரண்டுபாபங்கள்மன்னனுக்கேவரிற்
றிரண்டுபுத்திரர்யோகஞ்செழிப்பதாம்
உருண்டவொன்றினுக்கொன்றரையாயினும்
தெருண்டுகாணினுநன்கெனச்செப்புவார். (917)

பெண்ணின்பாபத்திற்பெற்றிடமேலதா
வண்ணல்பாபங்கால்கூடினுமாக்கமே
பெண்ணின்பாபங்கால்கூடிற்பெறும்பிழை
யண்ணலாயுளறுத்திடுமென்பரே. (918)

ஐஞ்சீர் விருத்தம்

வையகத்தினிலுடற்பொருத்தங்களுமலிய
வெய்யதாகவேயுயிர்ப்பொருத்தங்களும்விளைந்தாற்
செய்யவேமணஞ்சிறப்பொடுபுத்திரர்செழிக்கும்
உய்யுயிர்ப்பொருத்தஞ்சடப்பொருத்தத்தினுயர்வே. (919)

ஐயனேயிதுவரையில்யான்கேட்டதையறைந்து
மெய்யனேமனத்தையத்தையறுத்துநீர்விட்டீர்
துய்யனேயினிதுவாதசபாகமும்சொல்லி
வையகத்துளோர்மதிப்புறவிதிப்படிவழுத்தீர். (920)

கிரக வலிமை

அசைவற்றநிலையுற்றகுருவெற்பினிடைவைத்தொ
ரானுக்குமறைசொற்றவன்
அருள்பெற்றுநிறைவுற்றகணிதக்கலைமுற்று
மறிவுற்றுமிருசித்திசேர்
வசையற்றபேர்பெற்றவீரப்பனும்மெத்த
வள்ளலார்திருவடித்தா
மரைமலர்த்துணைமலர்வணந்துபுத்துநவ
மாக்கோள்படைத்துநின்ற
திசைபுத்திவிவரமிஃதொருவாறுபெறுமாறு
தேர்ந்தமட்டுஞ்செப்புவாம்
சென்மலக்னம்புருடராசியெனில்வலமாத்
திரித்துமதுபெண்ணேவிடம்

இசையத்திரித்துலக்கினமுதலவியமெலா
மிவ்வாருகண்டுகோயி
லேற்றவலமுன்பார்வையிடமெனிற்பின்பார்வை
யிராசியின்ருனமுமதே (921)

செப்புமுறையவரவரிராசிநிறைகண்டுபின்
றேவர்செலவுந்தெரிந்து
சென்மமதுபுண்யமோபாவமோவென்பது
தெரிந்துபின்றந்தையோக
மெய்ப்பலன்றீப்பலன்கண்டுமுன்சொல்லிய
விதிப்படியமைந்தவெண்ணில்
மேவுபத்தவனுலவன்வலிதெரிந்துபலன்
விணேகோசரங்குறித்துத்
தப்பிலாவிவ்வகைத்திறனெலாங்குருவினுற்
சாற்றத்தெரிந்துபின்பு
தடையறத்திசைபுத்தியந்தராந்தரநுண்மை
தக்கவருரைப்பரன்றிச்
சொற்பிழைபடும்படிபதட்டவாராய்ச்சியிற்
றுடிதுடித்தறையினூற்குஞ்
சொன்னசோதிடர்களுக்கும்பழுதுவருமென்று
தொல்லே நூல்சொல்லுமாறே. (922)

ஒன்றிரண்டொருநான்குபஞ்சமந்தசலாப
மோதுமேழதிபர்நன்மை
உதவுவாரிவரிற்சிரேட்டர்நான்கொடுபத்து
முடையராறெட்டுமூன்றேழ்
அன்றியும்வியத்தொடிவ்வதிபரெவர்திசையென்னு
மற்பசுகமுங்கொடுத்தார்
அவரைந்துபேர்களுந்தீங்குதருதொழின்முத
லாட்களாமின்னுநல்லோர்
தன்றிசையின்றப்பலன்செய்பாதியாகவே
தருவர்தீயோரென்னிலோ
தமதுதிசைநற்பலன்றருவதுவழக்கமிது
சந்ததமுநிலேநிலாது
துன்றியவிரண்டதிபனுச்சமேறிடினன்மை
சொல்லலாகாதுவியமேர்

சுபர்கூடில்வியபதிதிசைகணிவர்புத்தியிற்
சுகவாழ்வுதருவர்காணே. (923)

இடமொன்றிலிருவர்மூவர்களெய்தினுலிவரி
லெவன்வலியனேவவன்ருன்
இதரர்வலிகைக்கொண்டுதன்றிசையிலீவன்மற்
றிவன்வலியவற்களிப்பன்
தொடமென்றநாணுதனுக்கட்டமத்துளான்
சுபனெனின்முனுணயகன்
சொந்தமாந்திசையினிற்பயனளிப்பான்றீய
சூரனெனினிழிவுதருவன்
மிடல்கொண்டநட்சத்ரநாதனுங்கவன்வலியை
மேவியவனதுதிசைக்கண்
வீறுபெறுதன்பலனேமறவாதளிப்பனிவ்
விதங்கண்டுபுகல்வர்வீரர்
அடல்கொண்டசரதிரோபயராசிதோன்றின
வவர்க்குறுபலாபலன்கள்
அத்தனேயுமறியுமாறுய்த்தவிதிமுறைவழா
தறிவுறுப்பாமினியரோ (924)

சரராசிதோன்றினேர்க்குபயசரராசியோர்
தருவர்நற்சுகபலன்கள்
சாற்றுதிரராசியோர்தீப்பலன்றருவரித்
தன்மையேபோலமற்றுந்
திரராசிதோன்றினேர்க்குபயருந்திரருநற்
சீர்கொடுப்பார்சரத்தோர்
தீப்பயனளிப்பராலுபயராசியினிற்
செனித்தவர்க்குபயர்திரரே
வரமீவர்சரராசியதிபரோகொடியரா
மலையென்னேமனேவிகருமம்
வருமிந்தநால்வர்களேயட்டமாதிபனேக்கில்
வாங்கியவர்பயனேயொருதான்
தரவேகமடைவனேத்தொன்பத்திபலரவியத்
தானுதிபதிநோக்கினுல்
தன்பலனவர்க்களித்தவர்பலனேவவ்வியே
தன்றிசைகொடுப்பனுமே. (925)

தனபதிசகோதரப்பதியிவரையாறவன்
சார்கினும்பார்வைசெயினுஞ்
சற்பலன்றீயதாந்துர்ப்பலனெலாநல்ல
சற்பலனதாகமாறும்
இனமுநற்சுட்சுமுளவகைசொல்வோமொருவற்
கிரண்டாதிபத்யம்வந்தும்
இராசியதிபத்தியம்பெற்றுமட்டமனேக்க
மெய்தியுஞ்சரமேறியும்
சினமறுநலோர்மூவர்கூடினுமொருவாறு
தீங்குமொருவாறுநன்கும்
சேருமேலிவையெலாங்கத்திமுனைநிற்பவர்கள்
சிந்தைபோர்கூர்ந்துநோக்கி
அனகனேற்றிசைநாதனவன்வலுவுமிட்டுநன்
காய்ந்துவருதீமையெல்லாம்
அற்பமென்பாய்நன்மையொன்றுக்கிரண்டா
யளிப்பனென்றுரைசெய்கவே. (926)

திசைநாயகன்பாவியாகினுல்முன்சொன்ன
செயலெலாமுற்றிருந்தாற்
றீங்கையெல்லாமற்பநன்மையாய்நன்கெலாந்
தீங்கினுந்தீங்கதாக
நிசமேயளிப்பனினுமொருவன்திசைக்கணே
நின்றபேர்வலியராகில்
நிறைகேந்திரத்தோனுமவனுடனிருந்தோரும்
நெடுவிழிபடைத்துளோரும்
பசைமேவுதிரிகோணநின்றவருமத்திசைப்
பதிபலனிறுத்திவைத்துப்
பாங்குபெறுதங்களில்வலுத்தபேர்முற்பலன்
பாலிப்பர்வரிசைதவரூர்
விசைமேவியதிரிதனலாபாதிபதியர்திசை
மேவினுலுடன்வலுத்தோர்
விழிநோக்கினோர்திசைப்பதிபலனிறுத்திதம்
வீறுபலனீவர்பின்பு
மேவுமத்திசையரசுபயனெனக்கண்டுதாம்
விண்டுவராய்ந்துளோரே. (927)

விதியரசுவியநாதன் ஒருவற்கொருவர்மாறி
மேவிநின்ருர்களென்ருல்
வேண்டுமவர் திசை நடக்குதிறமைசொல்வாம்
விரும்பியவரோடிருந்தோர்
துதிபெறப்பார்த்துளாரிவர்களின் றம்பலன்
றுணை நின்றபேர்பலன் பின்
துரிதமாப்பார்த்தபேர்பலன்வரிசைதவருது
சொற்பெறவளிப்பரம்மா
இதிலொருகுறிப்புநாங்கூறுவோமாரக
மெவர்க்குரித்தென்னிலந்த
இயல்மாரகாதிபருடன்சேர்ந்திருந்தபே
ரேற்றவரைநோக்கிஞேர்கள்
அதைநன்கறிந்துநிலைபெற்றமேலானவதி
காரிதிசைகண்டுகொண்டே
அக்காலமற்றுளவர்வலியரெவரோவவ
ரரும்புத்தியென்பதறிவே. (928)

---

## முதற் பாவகம்



அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

இலக்கினமதனுற்கீர்த்தி யியல்பெறுங்குணங்கள்யோகந்
துலக்கியவழகேயாயுள் சுதேசத்தில்வாசநன்றி
பலுக்குநல்கிளைகள்கல்வி பக்குவவறிவுதூய்மை
வலுக்களையுரைக்கஞான வள்ளலார்காப்புத்தானே. (929)

### யோக்யதாமிசை

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பாக்கியத்திற்றனவானுமூன்றுளானும்
பஞ்சமத்தோன்றனத்திடையேபதிந்துவாழ
யோக்கியத்தோரிலக்கனத்திலிருப்பாராகில்
யோகவானிதிற்சனித்தோனுண்மையுண்மை
பாக்கியமெய்ச்சாமிசுகத்தமரவாக்கி
லமரகுருவுடன்சுபருமமர்ந்துநின்றுற்
றேக்கமழ்கல்வியும்புகழுந்தனமும்வாய்த்த
செல்வவானெனவிவனைச்செப்பலாமே. (930)

### வாய்மை

நவநிதிக்கோனுச்சமுறத்தனவானந்த
நலங்காணவிலக்கினத்தேநல்லோர்நின்றால்
உவமையிலாக்கொடையாளனுவன்மூன்றே
னென்னேன்றந்தலமாறியுறையவானத்
தவர்தருநல்லருள்விழியானேக்கப்பெற்றுற்
சக்தியவானுவன்வர்க்கபலமுஞ்சார்ந்தால்
இவனைரகுதசரதனென்றியம்பலாமற்
றெதிரிலாக்கொடையனுமாயிருப்பன்காணே. (931)

## சற்குணம்

பஞ்சமன்பத்தவன்கூடிச்சனிக்குமூன்றிற்
பதிந்துவரிலொருவனுச்சம்பாய்ந்துநின்றால்
வஞ்சமிலாக்கொடையாளன்றனவானென்ன
வழுத்தலாமதிக்கிரண்டோன்வானோர்நாதன்
கொஞ்சுதுணையாய்க்கூடிச்சந்த்ரகேந்த்ரங்
குலவினுற்சௌரியவான்குணவானென்ப
மஞ்சுகண்டமயிலேபோலிவனைக்கண்டோர்
மனங்களித்துச்செழிப்பரெனவழுத்தலாமே. (932)

## உதார குணம்

பஞ்சமன்பத்திடையிருக்கச்சனிக்கோரைந்திற்
பதினோராமிடத்தனுச்சம்பாயக்கண்டால்
வஞ்சமற்றகொடையாளன்கல்விகேள்வி
வல்லவனென்றேயுறுதிவார்த்தைகூறு
பஞ்சமமேசனிவீடாயதிலேயிந்து
பதிந்திருக்கச்செங்கதிரோனுச்சம்பாயிற்
கொஞ்சமெனுங்கபடமிலான்கபடியானோர்
குணந்தெரிவோனன்னடையான்கொடையான்காணே.

## பாக்ய சுகம்

திருமாலும்பாக்கியனுமைந்தினனுந்
திரியவனுங்கேந்திரமாளிகையிற்சேர்ந்தால்
ஒருமாலிங்கிவனெனவுமுலகஞ்சொல்லு
முதயம்திக்கொருமூன்றேனுச்சமாகக்
கருமாதிபதிபாக்யபதியொன்றாகிக்
கனிவுபெற்றுமூன்றிடத்திற்கதிந்துநின்றாற்
றருமாலிங்கிவனெனவேசொல்லற்பால
தனபதியென்றேயொருக்காற்சாற்றற்பாற்றே. (934)

## தருமமு மழகும்

சன்மபதிசுகபதியொன்றாகிக்கேந்த்ரத்
தானத்தேவீற்றிருக்கத்தாரைகேள்வன்

வன்மமின்றி நட்பாகிக்கடைக்கணேக்கம்
வழங்கிலிதுகிடைத்தோன் மன்னவர்போலாவன்
நன்மலேயோன்மூன்றவனென்ருகிக்கேந்த்ர
நடுமனேயிற்குடிபுகுதப்பாக்யநாதன்
மென்மலர்க்கண்ணேக்கருளக்கிடைத்தாலிந்த
வின்மதனைத்தன்மனென்றேவிளம்பலாமே. (935)

## கல்வி செல்வம்

இலக்கினத்தோன்கருமனிவர்கோணமேற
விவரையந்தோனருணேக்கமிட்டாலிந்த
நலக்கனத்தோன்பொருளிரண்டுங்கிடைத்துவாழ்வன்
நல்லலக்கினதிபதிதிரியிராசன்
துலக்கமுறவுச்சமாளிகையிலேறிற்
சுகவானுயிருப்பனென்றேனுச்சந்தோயத
தலத்திறைவன்கோணத்தேநிற்கவைந்தோன்
ருண் கண்டாலிவன்பெரியதனவான்காணே. (936)

## பாக்கியமும் யோக்கியமும்

தலேயிறைவன்கோணகண்டத்தலங்களேறத்
தக்கோர்களருணேக்கந்தழைந்தாலிந்த
நிலேயுடையான்பாக்கியவான்கனவானீதி
நிறைபுடையான்றரையுடையானேயனென்பர்
நிலவுதனபதிநிதியோனிலக்கினேச
னிருவரிவராட்சியுச்சனேயமூன்று
தலனை நிறைப்படியடைந்தாலிவனே நல்ல
தர்மவான்றனவான்மெய்ச்சார்ந்தவானே. (937)

## கல்வியுஞ் செல்வமும்

முடியுடையான்றனமுடையான்வாக்கினுதன்
மொழியுமிவர்தமிலொருவனுச்சமாகிற்
படியுடையான்றனமுடையானென்பாருச்சம்
பாய்ந்தபதிதரும்பலனேயதிகம்பாராய்
முடியுடையான்கண்டமுறநாலோன்கோண
முந்திணுற்பாக்கியவானுவான்கோணப்

படியடைவோன்றரும்பலனே நிலப்பாங்கேந்த்ரம்
பாய்ந்ததுரைப்பலன்வரும்போம்படித்தாம்பாரே. (938)

## கலேஞான தீரம்

தனபதியுந்தைரியனுங்கோணஞ்சேரத்
தாரைபதியருட்கடைக்கண்டருங்கால்வந்த
கனபதியைச்சோதிடநூல்சிற்பநன்னூல்
கணிதநூல்மூன்றுணர்ந்தகலேமானென்ப
தனதனதன்சரராசிமேவவந்தத்
தலத்திறையுமிலக்கினனுங்கண்டஞ்சார்ந்தால்
இனதரவான்குருவருளேமுடிமேற்கொண்டா
லிலக்கணமுமிலக்கியமுமிசைந்துளானே. (939)

## கவிதா தீரம்

சன்மபதிகேந்திரிக்கவாக்குநாதன்
ருரைபதிகேந்திரத்திற்றழைத்துவாழத்
தன்மபதியாட்சிபெற்ருலிந்தக்காளே
தமிழ்நூலுக்காசிரியதானியாவான்
நன்மைபெறுமிலக்கினத்தோனுட்சிமேவ
நயவாக்கில்வாக்கிறையுமாட்சிநண்ணப்
பொன்மயக்கோன்கேந்திரிக்கக்கிடைத்தகாளே
புலவருக்குப்புலவனெனப்பொருந்துவானே. (940)

## கலேஞான தீரம்

தலேயிறைவனுதாயத்தலத்தும்வாக்கோன்
ருரையிறைவர்க்கிடத்துந்தழைக்கப்பாக்யன்
நிலவின்மகனெடுகூடிமூன்றில்வாழ
நேர்ந்தமகன்றமிழ்நூலினேயமிக்கோன்
மலேயிறைவனுட்சிபெறவாக்கிலாசான்
வந்திருக்கக்குருகேந்த்ரம்வாக்கோன்வாய்த்தால்
கலேபலகண்டறிந்தநல்லமெய்யான்வேதக்
கல்விமானென்றிவனேக்கழறலாமே. (941)

## பூபாக்கியமுங் கல்வியும்

முடியிறைபாக்கியத்திருக்கவாக்குநாதன்
முதற்புலவன்கேந்திரத்தில்மூலைக்கப்பெற்ருேன்
படியிறையாயிருப்பதோடுமிதிகாசங்கள்
படித்துணருங்கல்விநிலைபடைத்தோனென்பர்
அடியிறையுந்தைரியனுங்கோணமேற
வருள்வாக்கோன்புதன்வாக்கிலமரப்பெற்ருேன்
நெடியகடலுலகுபுகழ்கணிதநூலு
நீடியசோதிடநூலுநிலைப்புள்ளோனே. (942)

## தனபாக்கியமுங் கல்வியும்

இலக்கினத்தோன்பிரபுவொடுதனத்தின்மேவ
எழிற்றனத்தோனிலக்கினத்தேயிருக்கநாலோன்
நிலைத்தகுருகோணமாளிகையில்வாழ்ந்தா
னிதிபதியாமிவனெனவேநெடுநூல்கூறும்
மலைக்கிறைவன்கேந்திரிக்கமலைமேற்செம்பொன்
வந்திருக்கத்தனத்திறையுமலைமேல்வாழத்
துலக்கினலக்கினத்துதித்தோன்றனவான்கல்வித்
துறையறிந்துநிறைவடைந்தசோமன்காணே. (943)

## வாகடவித்தையு மைஸ்வரியமும்

மூலைத்தெழுந்ததலத்திறையிலாபனேடு
முழுத்தனத்திலரசிருக்கவாக்குநாதன்
கிளைத்ததைரியத்திருக்கக்கிடைத்தகாலை
கிருபைமிக்கவாகடநூற்கிரியைதேர்ந்தோன்
விளைத்தமுடிக்கரசுவிரையத்தின்மேவ
விரையபதிமாறிமுடிமீதுவாழ
வளைத்ததிரிகோணமைஸ்வரியன்வாழின்
மைந்தனைஸ்வரியனெனவாழ்த்துவாரே. (944)

தலத்திறைவான்சந்திரகோணத்தில்வாழத்
தனத்திறைகேந்திரத்திலுற்சந்த்ரசாமி
நிலைத்தகேந்திரத்திருக்கக்கிடைத்தகாலை
நீணிதியுங்கல்வியொடுநெடிதுள்ளோனும்

மலைக்கரசன்கேந்திரிக்கத்தனபாக்யேசன்
வான்குருகோணத்திலுறச்சுகத்தோன்கோண
நிலைக்கிலிவன்புவிபுகழுங்கல்வியோங்கி
நிறைந்தசுகமடைந்துதவநெறிநிற்பானே. (945)

### சகல பாக்கியம்

சன்மத்தான்றனத்தானறம்மாட்சிக்காக்கத்
தனிப்பாக்யன்சுகத்தானந்தழைத்துவாழக்
கன்மத்தான்சன்மத்தேகலந்துவாழக்
கண்டவன்மெய்க்கல்விசெல்வங்கதித்துவாழ்வன்
தன்மத்தானுதாயத்தலத்தான்கூடித்
தைரியத்தானத்திலுறத்தழைத்தான்சத்ய
ஜென்மத்தானற்குணத்தானிலத்தான்கல்வித்
திறந்தெரிந்தான்கொடைக்கரத்தான்செல்வத்தானே.

### தனமுங் கல்வியும்

மலைமுகட்டிற்செங்கதிரோனுதயமாக
வாக்கிலேபுதனிருக்கப்பாக்யநாதன்
நிலைபொறுத்தவாதாயத்தலத்துவாழ
நிலத்துதித்தவிளங்காளைநிதியோனுவன்
தலைபடைத்தோன்றைரியத்தோன்சுத்தோன்கூடித்
தனிக்கோணமாளிகையிற்றழையவாக்கோன்
கலைபடைத்தகுருலாபத்திருந்தகாளை
கல்விசெல்வமெனும்பொருட்கள்கைக்கொள்வானே. ()

### தெய்வபக்தி பாக்கியம்

இலத்திறைவனிலத்திலுறத்தனத்தோனந்த
விருத்தனத்திலிருக்கநிதிக்கிறைவன்மோட்ச
நிலத்திருக்கக்கிடைத்துவந்தோன்மோட்சபாக்ய
நிலைக்கநெடுங்கலைக்கண்மனநிலைக்குங்கோளான்
தலத்திறைவன்காரியத்திலிருக்கவாய்த்த
தனத்திறைவன்பாக்கியத்திற்றழையநாலோன்
இலத்திலுறக்கிடைத்தவன்பாக்கியவானுகி
யிருதயத்திற்சிவயநமவெனுங்கோளானே. (948)



## கலைஞான வித்துவத்து

தலையிறைவன்கேந்திரிக்கவதற்குநாதன்
சத்தியகோணத்திருக்கச்சந்த்ரசாமி
நிலையிறையாயாட்சிபெறமோட்சசாமி
நிலாக்குருநேத்திரத்திலுச்சநிலையிற்சேரச்
சிலையிலேந்தோன்கேந்த்ரமுறக்கிடைத்தகாளை
செல்வமுற்றுலிராசசெல்வஞ்சேர்வனன்றேல்
கலையறிவிற்வாகடசோதிடசித்தாந்தக்
கணிதவில்க்கணவிலக்யகவிஞனுமே. (949)

## பூபாக்யம்

தலத்திறையுந்தனத்திறையுந்தலத்தேவாழத்
தாயிறைகாரியத்தலத்திலைஸ்வர்யேசன்
நலத்துணையாகக்கொடுவாழக்கிடைத்தோன்பாக்ய
நாயகனுய்வாழ்வனனிலீலாவிநோதன்
மலைக்கிறைவன்கேந்திரிக்கவதற்குநாதன்
மலைக்கேழிற்கேந்திரிக்கப்பாக்யநாதன்
நிலத்ததைரியத்திருக்கக்கிடைத்தகாளை
நிலநிதியுமிகுபுகழுநிலைத்துள்ளோனே. (950

## கல்வி

சென்மநாயகன்றனத்தோன்கேந்த்ரமேறச்
செழுஞ்சுகத்தான்பாக்கியத்திற்சிறந்துவாழக்
கன்மநாயகன்கோணமேறமேன்மை
கண்டுகுருமனமகிழ்ந்துகனியவாய்த்தோன்
தன்மநாயகனுகில்நெடுநாள்வாழ்வன்
றந்தைசொத்துக்கெழுமடங்குதழைத்துச்சேர்வன்
நன்மனுலயத்திடைமெய்யென்னுந்தேவை
நாட்டினுன்கல்விநிலைத்தேட்டினனே. (951)

## பிரபுத்வம்

இலக்கினத்தோன்சுகவாட்சிக்கிருக்கப்பாக்ய
னிருந்தனத்தோன்குருகோணத்தினிதுவாழத்

துலக்கியகாரியநாதன்கேந்த்ரமேறத்
தோன்றினேன்சிவனிறையன்சுகவாழ்வுள்ளான்
தலத்தோனுமாதாயத்தலத்துவாழத்
தாய்தலத்தோன்பாக்கியமாத்தலத்துவாழ
நிலைத்தகுருவீக்ஷணத்திற்பிரவுவாழ
நேர்ந்தவனைப்பிரபுவென்றேநிறுத்தலாமே. (952)

## அன்னிய தேசவாச சுகம்

முடிப்பதியான்பாக்கியத்திலிருந்துவாழ
முதிர்தனவானிலாபத்தேமுயன்றுவாழத்
தடித்ததனத்திடைக்குருவைக்கிடைத்தாலிந்தச்
சாதகன்வேற்றூரிருந்துதழைத்துவாழ்வான்
அடிப்பதியிற்பிரபுகுருகோணமேவி
யமர்ந்திருக்கச்சுகன்பாக்யத்தமரவாலோன்
படித்தகுருகேந்திரத்திலமரப்பெற்ற
பாலனுமவ்வாறிருந்தேபலிப்பான்காணே. (953)

## கல்வி

### கலி விருத்தம்

சரத்தின்மூன்றவனேறச்சரத்தனும்
கிரிக்குநாதனுங்கேந்திரமேறிடின்
விரித்தகீர்த்தியுங்கல்வியுமேவுமே
தெரித்தகுன்றிடைத்தீபமிட்டாலென (954)

## இரக்ஷணியம்

பாக்கியகேந்திரமூன்றவன்பற்றுற
ஆக்குநாதனோடம் புலிகேந்திரத்
தூக்கமாயுறவொள்ளியநோக்குறில்
காக்குத்தன்மைக்கருணையுளானரோ. (955)

## தன தானியம்

ஆயன்செந்தணன்கூடவதுற்றினோர்
தாயனுச்சந்துலங்குறப்பெற்றிடின்

பாயும்வாகனன் கண்ணருள் பட்டதேல்
தாயநற்றனதானியமோங்குமே. (956)

## வீரத்துவம்

தீரன்சன்மனிருவருஞ்சேரிடஞ்
சேரமாறியிருந்துசெழிக்கவே
சூரராரியன் கண்ணருடோயுமேல்
வீரர்வீரனெனப்பெயர்மேவுமே. (957)

## கல்வி

நான்கிரண்டுக்குநாயகர்கூடியே
வான்குலாமலேமாமுடிதோன்றுறுத்
தேன்குலாமதிமைந்தன்றிருக்கணேர்
தான்குலாவத்தழைத்திடுங்கல்வியே. (958)

## தனுதி வாகனம்

மூன்றிரண்டுபதினென்றின்முன்னவர்
ஆன்றபாக்கியத்தண்ணவைந்தாதிபன்
தோன்றநோக்கிற்சுகந்தனம்வாகனம்
ஈன்றதந்தைக்கிரட்டிகிடைப்பனே. (959)

## வாய்மை

சத்தமத்தன்றனன்றுனேக்கூடியோர்
சுத்தநான்கிற்றுலங்கச்சுகப்பதி
தத்தியுச்சந்தலேப்படிற்சத்திய
ருய்த்துநோக்கிலுறுதிச்சொல்லாளனே. (960)

## சற்குணம்

சன்மனுட்சித்தழைத்திடவைந்திலே
நன்மைச்சந்த்ரசுகாதிபனண்ணதே
தன்மதேவதைசற்குருநோக்கிறற்
பொன்ம[illegible]குண[illegible]னுமே. (961)

### புண்ணியம்

மதிக்குமூன் றவனுச்சத்தில்வாழ்வுறப்
பதித்தவுச்சம்படைத்துமனைக்கிறை
கதித்தவைந்திடைக்காவற்கிருப்பனேற்
றுதித்தசாந்தன்சுகிர்தனென்றெண்ணவே. (962)

### ஆசாரம்

ஓங்குசெந்தனன்மூன் றவனொன்றியே
தீங்கிலாப்ரபுத்தானத்திற்சேர்வுறீஇத்
தீங்கர்நோக்கமில்லாதுசெழிப்பரேல்
சாங்கமாகத்தழைக்குநற்சீலமே. (963)

### வைணவ பக்தி

தீரனைத்தனன்சீர்பெறநோக்குற
மேருநாயகன்கண்ணிடைமேவுறின்
வீரமால்விழிமேவக்கிடைத்தவ
ஞரணன்றிருநற்பதியாளனே. (964)

### கீர்த்தி

தீர்த்தவேதியன்சென்மத்திருப்பது
பார்த்துப்பஞ்சமன்மெய்த்தனபாக்கியன்
ஆர்த்துக்கெக்கலித்தானந்தங்கூர்ந்திடிற்
கீர்த்தியோங்கிக்கிளைத்திருப்பானரோ. (965)

### வீரத்துவம்

மெய்சுகத்தனலாட்சிவிளைந்திட
வுச்சனுய்க்குருவுத்தமநோக்கிடிற்
கொச்சைத்தீங்கர்க்குக்கோடரியாயிவன்
அச்சமின்றிநல்லாண்மைபடைப்பனே. (966)

### பல பாக்கியம்

குருவுஞ்சாமியுநான்கிடைக்கூடுற
மருவுநான்கன்மகிழ்ந்திதுநோக்கினுற்

திருவுங்கல்வியுஞ்சீலமுந்தாலமும்
உருவும்வாய்த்தங்குயர்ந்துசெழிப்பனே. (967)

## கீர்த்தி

மலையனல்லவரத்திற்சிறந்துறச்
சொலும்வரத்தன்சுகத்திற்பதிந்திட
நிலவுதீரத்திற்பாக்கியநிற்குமேல்
நிலையதாம்புகழ்நீடுநிறுத்துவான். (968)

உதையன்கேந்திரத்தோங்கிச்சிறப்புறச்
சுதன்மனைக்குட்சுரகுருமேவிடப்
பதவியோன்குருகேந்திரம்பற்றினுற்
சிதைவிலாப்புகழ்சேர்ந்தறந்தேடுமே. (969)

## சுதேச வாசி

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

உலப்பரியநிதியோனுஞ்சுகனுங்கூடி
யுயர்கிரியிலேறியுற்றவுறுதியோனும்
தலைப்பதியுபயமேவியதற்குநாதன்
றன்னேடுவலுத்திருக்குந்தகைமையோனும்
இலக்கினத்தோன்றிராசிகேந்த்ரமேற
வினியகுருநோக்கடைந்தாலிவனுமேரு
துலக்குதிரமாகவதிலுரியோன்மேவச்
சுபர்பார்க்கிலிவனுநல்லசுதேசவாசி. (970)

## சுதேச வாசம்

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

உதையமேசரமாயுரியனுஞ்சரத்தே
யுறைந்திடச்சரத்தவனேக்கச்
சிதைவிலாத்தனவானுய்ச்சுதேசத்தே
செழித்துவாழ்ந்திருப்பனென்றறிக

வுதையமேதிரமாயுபயனோடுரிய
னென்றியவ்வுபயத்தேயுறைய
இதையுளான்சுதேயத்தலத்திலேதனத்தோ
டிருந்துவாழ்வானெனலியல்பே. (971)

## சுக யோகம்

### ஐஞ்சீர் விருத்தம்

செனனமேருவேசரமதாத்தலைவன்கேந்திரத்தே
தனனோடேகிநற்சரத்திலேவசித்திடிலிவனுந்
தனதனேயெனத்தம்பதிவீட்டயற்பதியிற்
கனதையோடிவன்வாழுவானென்பதுகருத்தே. (972)

## அன்னிய வாசம்

செனித்தராசியேதிரமதாயுரியவன்சரத்தே
தனித்துநின்றிடத்தலையிலைசுவரியன்றழைந்தா
லினித்தசெந்தனனிலாபத்தேயிருந்திடிலிவன்றன்
சனித்தவூர்விட்டுமற்றவூர்ச்சுகமுண்டுதழைப்பன். (973)

## அன்னிய வாசம்

உதயராசியேயுபயமாயுரியனுபயத்துப்
பதியிலேவிரையாதிபனொடுநிற்கப்பௌமன்
புதர்கொள்புன்செயாம்பூமிகாரகனொடும்புகுந்தாற்
பதியைவிற்றிவன்பாழ்நிலம்வாங்கிவாழ்வானால். (974)

## அயோக்கிய தாமிசை

### கொச்சகம்

சென்மத்தோனெட்டுவியஞ் சேரத்திரிநாதன்
வன்மத்தோனுகி மரணத்தேவாய்ந்திருக்கத்
தன்மத்தோனுறிற் றளைப்பட்டாலிக்காளை
கன்மத்தாற்பாவிநிந்தைக்கைப்பொருளாக்கொள்வானே. ( )

ஒன்ருனிரண்டா னுறுநோய்மரணமுத
வென்ரேங்குதீரன் விதியடையப்புண்ணியனுர்
அன்றேமரணமடைந் திருக்கவந்தமகன்
பொன்ருதகீர்த்தியை யோர்போதுமடையானே. (976)

தாடாளனெட்டோன் றைரியத்திலொன்ருகத்
தாடாளனுக்குநல்லார் தண்ணருள்செய்யாதிருக்கக்
கேடாகநோய்க்கதிபன் கேந்திரிக்கச்சுன்சிறக்கில்
ஓடேறுங்கையா னெருகாசுபோதானே. (977)

சுந்த்ரசுகன்மோக்ஷத் தலைவனென்றியெட்டடைய
அந்தவிதிநோயடைய வர்ரேன்கதிக்கேற
வந்தவினையோனுலகோர் வாந்திசெய்யப்பேர்பூட்டி
யந்தரங்கத்தேகடவுட் காளாயிருப்பானே. (978)

நீசமனைக்கு னிலாவிரைப்பாம்புசனி
நேசமொடுநோக்க நெற்றியோரொதுங்கிவிடப்
பாசமாயிந்தப் பதவிபெற்றுவந்தமகன்
காசுபெருனுகிக் கடுங்குணனுய்க்காய்வானே. (979)

சாமிபகையேறத் தைரியனுமீற்ரேனு
நேமிநட்புற்றீங்கொருவ னீசமனைக்கடையத்
தோமில்குருசற்றேனுந் தோன்றப்பாராதுவிட்டாற்
பூமிமிசைவந்தோன் புலைக்குணத்துப்புல்லியனே. (980)

எட்டோன்சுகனே டிகலடைந்துமூன்றிலுற
வொட்டாப்பகையரச னுய்த்துவியத்துநிற்கக்
கெட்டோர்தைரியத்திற் கிட்டிநிற்கவந்தமகன்
றிட்டாந்தங்கூறிற் சிறுநெருப்பையொப்பானே. (981)

புல்லோர்சுகத்திற் புலையடையவப்பதியோன்
பொல்லாப்பகையேறப் போர்த்தீரன்கண்ணேக்க
நல்லோர்கண்ணேக்கமற ஞாலத்தேவந்தமகன்
எல்லாப்பொருளு மிழந்தலைவானென்பாரே. (982)

எட்டோன்கண்ணேக்கமந்த வீச்சுரகண்மன்மதனைச்
சுட்டாலெனச்சுகனைச் சுட்டுவிட மூன்றிலவன்
கெட்டோடிநீசக் கிணற்றில்விழக்கிட்டுமகன்
சுட்டாலுநல்லோர் துறைமிதியாத்துர்க்குணனே. (983)

புண்ணியவான்மோக்ஷம் புகுதவியத்தோன்சுகத்தே
நண்ணியிருக்கத்தீர னந்துபகையேறத்
தண்ணியர்நோக்கந் தலைக்கடைந்தாலன்றியிவன்
பண்ணியதாய்தந்தைசெய்த பாவமுருக்கொண்டவனே. ()

## புறனடை

சொல்லிவந்ததீமை தொலைக்கும்புறனடையொன்
றெல்லவுரைப்பமிஃ துண்மையுண்மையுண்மையுண்மை
வல்லகுருசாமி மலர்விழிகீர்த்திக்கடைந்தாற்
சொல்லிவந்ததோஷந் தொலைந்துபுகழோங்கிவிடுமே. (985)

## பூரண வாயுள்

ஆயுட்காரகற்கொருநான்கிடத்திலெட்டோ
னச்சனிக்கிரண்டில்மதியமரவெட்டோன்
தாயொப்பாநட்படைந்துதலையைநோக்கிற்
சாகாமலிருப்பனென்றுஞ்சாற்றவுண்டே
வாயப்போய்மூன்றில்விதிநிற்கப்பக்கம்
மருவியிருகுருமாரும்வாழச்சோமன்
தூயப்பால்வெள்ளிக்கோரேழில்வாழிற்
றெண்ணூறுவயதெனவேசொல்லலாமே. (986)

## பூர்ணுயுள்

செங்கதிரோன்றிருமகற்குநாலிற்பானு
சேயிருவரின்றிமதிசகடத்தின்றி
மங்கியறுபலமின்றிவியன்வாக்கோனிம்
மன்னர்சுபராகிலிவன்வயதுபூர்ணம்
துங்கமுறுகேந்த்ரரெல்லாங்கோணமேறச்
சுன்னிடத்திற்பாபரின்றித்துலங்கக்கண்டால்

புங்கமுறுசாதகற்குவயதுநூறு
புகலலாமென்றுமுன்னோர்புகன்றவாறே. (987)

## இதுவுமது

செவ்வாய்நற்சனிமுகத்தைப்பாரானுகத்
திருக்குருவின்கருணைவிழிசனிக்குச்சேரத்
தெவ்வோடுமூன்றவனுமுடியினுலுஞ்
சேர்ந்துநல்லோர்மனைக்கிருக்கத்திரியோனட்பேல்
இவ்வாறுகிடைத்தவற்குவயதுநூறே
எட்டிறைவன்மதிசுபாமிசத்தேநிற்க
அவ்வானமதிவிதியோனின்றராசிக்
காதிபர்கள்வலுத்தேறிலாயுள்நூறே. (988)

## இதுவுமது

மதிசனிக்கெட்டிடைப்புலவனறிவனிற்க
வாய்த்தவிதிநாதன்வியமன்னவேழ்நால்
துதிபொறுத்தநல்லவர்களிருக்கத்தீயர்
தூரநிற்கிலிவன்வயதுதொண்ணூறென்ப
விதியிறைவற்கிருபுறமுந்தூயர்வாழ
மேற்கோளுக்கேழ்நாளில்வெள்ளிசெம்பொன்
பதியுறநன்மதிரவிக்குவியத்துவாழ்ந்தால்
பல்லாண்டுநூறெனவேபாடலாமே. (989)

## பூரண வாயுள்

நல்லாயுட்காரகன்கேந்திரத்துவான
நாயகனுர்திரிகோணநயத்துவாழ
வல்லாயுட்பதிமதிசுக்கிரனிம்மூவர்
வானவர்கோன்கேந்திரத்துமலைக்கோணத்துஞ்
சொல்லாயுட்காரகனதாதாயத்துஞ்
சோதரகாரகன்கோணத்துங்கண்டாலிவ்
வுல்லாசநடையுடையானேய்க்காடின்றி
யொருநூறுவயதிருப்பனுண்மைதானே. (990)

இதுவுமது

ஆயுட்காரகனுயுட்கீசனுகி
யட்டமத்துக்கட்டமத்தேயமரவந்த
ஆயுட்காரகற்கிருபானல்லோர்வாழ
வணிமுடியினிருபுறமுநல்லோர்காக்க
ஆயுட்கோர்சஞ்சீவியாகிவானத்
தரசுபத்திற்கேந்திரிக்கவதிட்டம்வாய்த்தோன்
ஆயுட்காலங்களெல்லாநோயில்லாம
லாக்ஷேபமின்றிநூருண்டுவாழ்வான். (991)

இதுவுமது

ஒருமலையிலிருகுருவும்மதியும்வாழ
வோரெட்டோனிலாபனுடனுட்சியூன்றப்
பருமலைபோலாயுட்காரகனுயுட்குப்
பதிலாபமாமனையிற்பதிந்துவாழத்
திருமலைக்குத்தைரியத்தேபாக்யநாதன்
சிறந்திருக்கக்கிடைத்துவந்தசெல்வக்காளை
பெருமலைபோலொருநூறுவயதுவாழ்ந்து
பேரன்மக்கள்காணமுத்திபெறுவன்மாதோ. (992)

இதுவுமது

அட்டமத்திலிலாபத்தான்பாக்யன்வாழ
வாயுட்காரகன்குருகோணத்துவாழ
இட்டகருமாதிபதிகேந்த்ரம்வாழ
வெட்டாறுக்குடையர்வெள்ளிக்கிலாபம்வாழச்
சிட்டர்குருசுககேந்திரத்தாட்சிவாழச்
சிறப்படைந்துபுவியில்வந்தசெல்வக்காளை
திட்டமாயெண்பத்தேழாண்டின்மேலே
செல்வமக்கள்காணமுத்திசேர்வன்காணே. (993)

இதுவுமது

ஆயுட்காரகனுயுட்கீசனுகி
யனிசுகலாபத்தனெடுங்குடும்பனேடும்

போயுட்கேந்திரத்திருக்கவாயுள்வீட்டிற்
புதனிருக்கக்கேந்த்ரமதிப்புத்தேள்வாழத்
தாயொப்பாமிலாபபதிகோணமேவத்
தைரியத்தேகுருவாழத்தலந்துவந்தோன்
மாயப்போர்நோய்க்கனுகானுய்த்தொண்ணூறு
வயதிருந்துசிவன்பாதமலர்சேர்வானே. (994)

## பூர்ணயுள்

அட்டமத்துக்கட்டமத்தேயாயுட்கார
காதிபதிநிற்கவந்தவட்டமேசற்
கொட்டியிருபுறத்திலுநல்லோர்கணிற்க
வுயர்தலையினிருபுறமுத்தமரேவாழ
அட்டமந்தான்குருசாமிக்கிலாபமாக
வடித்தலத்தோன்கேந்திரத்தேயமர்ந்துவாழத்
துட்டர்கள்கேந்திரத்தலத்தேநிற்பாராகிற்
றெண்ணூறுவயதிவற்குச்சொல்லலாமே. (995)

## இதுவுமது

சனிமதிக்கெட்டவன்சந்த்ரகேந்தரவாழத்
தலைமலைக்கிலாபத்தேசான்றேன்வாழப்
பனிமதியின்கேந்திரத்தாதாயன்வாழப்
பகருமட்டமேசன்வியத்தானம்பாயக்
கனிமதியிலாத்தீயர்கேந்த்ரமேவக்
கண்டசாதகன்வயதுகணக்கினேடே
இனிமதிப்பானூறெனலாமெனிலுங்காலன்
எண்பத்தேழாண்டினுக்குள்எதிர்தோன்றுனே. (996)

## இதுவுமது

அட்டமத்தானுதிபதியாட்சிமேவ
வாயுட்காரகன்கேந்திரத்தேவாழ
வட்டமதியிலாபத்தேயாட்சிமேவ
மலைக்கரசுகேந்திரத்தேமகிழ்ந்துவாழத்

துட்டர்களுக்குடன் றுணையாத்தூயோர் நிற்கச்
சுரர்குருகோணத்தலத்தேதுலங்கிநிற்க
இட்டுவந்தஜாதகற்குவயதுகூறில்
எண்பத்துமூன்றெனவேயிசைக்கலாமால். (997)

இதுவுமது

இலக்கினத்தேயிருகுருவுமிருந்துவாழ
வெழிற்கருமனல்லாரோடிசைந்துவாழக்
கலக்குசனிசட்டாட்டவியத்தேநிற்கக்
கடியசட்டாட்டவிரயத்தோர்சுபராய்க்காக்கத்
துலக்குவியன்றைறியத்தேயிருந்துவாழச்
சுகிர்தநயம்பெற்றுவந்துதோன்றுங்காளை
நிலக்கியனுயிருந்துதொண்ணூருண்டி
நிருமலசைதன்யசுகநிரம்புவானே. (998)

இதுவுமது

எட்டவன்சொச்சேத்திரத்திலிருந்துவாழ
வினியசனியாட்சியுச்சங்கேந்த்ரமேறத்
துட்டரல்லாருட்கடைக்கண்டோயக்கண்டாற்
சொல்லலாமிவன்வயதுதொண்ணூறென்றே
எட்டவனுக்கிருபுறமுஞ்சுபர்கள்வாழ
வெழிலாயுட்காரகனுந்தீரமேறத்
தொட்டவிரண்டேழுடையார்நட்பிற்கூடச்
சொல்லலாமிவன்வயதுமுழுநூறென்றே. (999)

இதுவுமது

மூன்றவனுமெட்டவனுமாட்சிமேவ
முழுதுநல்லோர்கருணைவிழிமோதவெள்ளித்
தோன்றியமாமலையுதிக்கநல்லோர்பார்க்கிற்
சொல்லுமிவன்பெறுவயதுதொண்ணூருமே
ஊன்றும்விதியிரண்டில்வரச்சத்தமேசன்
உதயமுடிக்குதிக்கவொன்பான்வீட்டின்மிக்க

வான்றவர்களிருக்கவிதிக்கரசைப்பார்ப்பா
னருள்விழித்தாலிம்மகவுக்காயுணூறே. (1000)

இதுவுமது

எட்டோனுமாறோனும்வியத்துவாழ
விலக்கினத்திற்குருவுசன்னிருக்கக்கண்டால்
தட்டாமல்வயதுநூறென்றேசொல்வர்
சந்திரனுசனற்கேழிற்றழைக்கப்பொன்னேற்
குட்டேறசத்தமத்தான்சுகத்தில்வாழ
வுயர்சவுரிநட்பேறப்பாவர்கூட்டங்
கெட்டோடவிதிநோக்கங்கிடைத்தகாளைக்
கேடிலாப்பூரணனுய்க்கிளத்தலாமே. (1001)

இதுவுமது

முடிமனையிற்பகையிறந்துசுபர்கள்வாழ
முழுக்குருவும்விதியவனுமுகத்திலேற
வடிவுமதிவிதியோனைக்கடைக்கணேக்க
மங்களஜாதகன்றனக்குவயதுநூறே
கெடிபொறுத்தசனிவிதியோன்மதியோடொன்றேன்
கிளத்துமொருநால்வருச்சமாட்சிபெற்ருல்
படியிலிவனூருண்டுசெல்வத்தோடும்
பசந்திருப்பானென்றுமுன்னேர்பகர்ந்தவாறே. (1002)

இதுவுமது

அட்டமத்தோனுயுட்காரகனுங்கூடி
யழகியகேந்திரத்திருக்கக்கோணமீது
வட்டமதியிருக்கவிலக்கினத்தின்மீது
வானவர்கோனிலேத்திருக்கமலேக்கிராசன்
இட்டதிரிகோணமாளிகைக்கேவாழ
வீராறேன்சட்டாட்டவிரையமேவ
இட்டுவந்தசாதகனேரெழுபதாண்டி
லின்பசுகமோக்ஷநிலேக்கெய்துவானே. (1003)

இதுவுமது

எட்டுடையோன்றிரிகோணபீடமேற
வீருரேனுட்சிபெறவிலக்கினேசன்
றெட்டவிலக்கினமலையிற்காணிகாக்கச்
சுகிர்தவுயிர்காரகனுர்மோக்ஷந்தோய
வட்டமதிகேந்திரிக்கக்கிடைத்தகாலை
மண்ணிடத்திலோரெழுபான்வயதுவாழ்ந்து
விட்டுலகபாசபந்தங்கடந்துபோகி
மீண்டுவராமோட்சகதிமேவுவானே. (1004)

இதுவுமது

உயிர்க்கிறையுமட்டமனுமொருவனுகி
யோரேழிற்கேந்திரிக்கவிரையநாதன்
செயிர்த்தவட்டமத்திருக்கத்தன்னிலாபன்
சேர்ந்துகண்டகோணத்தேசெறிந்துவாழப்
பயிர்க்கெழுந்தமழைமுகில்போற்றையர்வீட்டிற்
பண்ணவர்கள்குருவிருந்துசனியைப்பார்க்க
வுயிர்த்தெழுந்தசாதகனுேரறுபதாண்டில்
உயர்பதிக்கெழுந்திருப்பானுண்மைதானே. (1005)

இதுவுமது

ஆயுளிறைகுருகோணத்திருக்கவெட்டோன்
அவ்விரையனெடுகூடியாறில்வாழத்
தூயபுகரட்டமத்தேதுலங்கநான்கிற்
சுகிர்தகுருகேந்திரிக்கக்கருமத்தோன்றல்
நேயமொடுகேந்திரிக்கக்கிடைத்தகாலை
நீணிலத்திநெடுங்காலநிலைத்துவாழ்ந்து
வாயுமெழுபத்தாண்டிற்சடத்தைநீக்கி
வானவரோடுடன்கூடிவாழ்வன்காணே. (1006)

இதுவுமது

உயிர்க்கிறைவன்கேந்திரத்தேயிருந்துவாழ
வுயிர்த்தலத்தோன்கருமத்தேயுவந்துவாழ

வயிர்த்தவட்டமந்தனிலேவிரையன்வாழ
மதிகுருவோராறிடத்தேமகிழ்ந்துவாழச்
செயிர்த்தவிடப்பாம்பிரண்டிலெட்டில்வாழச்
சென்மமெடுத்துலகின்வந்தசெல்வக்காளே
அயிர்ப்பிலறுபத்தாருண்டிருந்துவானத்
தமரர்பதிக்கெழுந்திருப்பானறுதிதானே. (1007)

இதுவுமது

நல்லவர்கள்விதித்திருக்கச்சனியினட்பி
னண்ணவெட்டோனிரண்டோனுஞ்சுகத்தில்வாழ
வல்லகுருகண்விழிக்கக்கிடைத்தகாளை
வயதெண்பத்தாறுபெற்றுவாழ்வானென்பச்
சொல்லுசனிக்கிருபுறத்துஞ்சுபரேவாழத்
தூயசனிக்காறிடத்துஞ்சுபரேநிற்க
வெல்லும்விதியாட்சிபெறக்குருநால்வாழ
விதிகிடைத்தோன்றெண்ணூறில்விளிவன்காணே. ()

இதுவுமது

அட்டமத்தோற்கீராறினிலவுவாழ
வந்தனுக்காறிடத்தில்வெள்ளிநட்பினுகக்
கட்டமிலாக்குருநாதன்கருணைவாய்த்த
காளையெண்பத்தெட்டாண்டுகனிந்துவாழ்வன்
அட்டமன்விரையனுரோனுயமூவர்
அவரவரும்நாற்குநாலமரத்தூயர்
இட்டவருணேக்கடையக்கிடைத்தகாளை
யெண்பத்துமூன்ருண்டிலிறப்பன்காணே. (1009)

இதுவுமது

விதிக்குவிதியோன்கிரியோன்கருமமேவ
வேதவேதியன்மூன்றில்விளைந்துதோன்ற
மதித்தசனியட்டமனுங்காணிகாக்க
வந்தமகன்றெண்ணூறுவயதிற்சாவன்.

மதிக்கடவுள்வலுக்கவிதிநல்லோர்கூட்டில்
வாய்த்திருக்கச்சுபத்தலத்தின்மந்தன்வாழப்
பதிக்கிறைவனுட்சிபெறக்கிடைத்தகாலே
படைத்தவயதொருநூறுபாடுவோமே. (1010)

இதுவுமது

பாவரெல்லாம்வலிகுறையநல்லோரோங்கப்
பரிதிமகன்தந்தைதாய்ப்பதியோனுக
மேவுசட்டாட்டவிரையங்கள்சுபர்வீடாக
வியாழபகவான்கருணைவிழிபெற்றுனைத்
தேவரெல்லாங்காலனுக்கேசகாயராகிச்
சினந்தாலுநூருண்டுசென்றுலன்றிக்
கேவலமாயுயிர்விடுமோவிடிலிந்நூலைக்
கிழித்தெறிந்துவிடுவார்த்தைகெட்டிதானே. (1011)

இதுவுமது

தலைக்கிறைவன்கேந்திரிக்கவட்டமேசன்
சந்த்ரசுக்ரசங்கமனுய்க்கோணமேவப்
பலத்தகுருவாதாயத்திருந்தேயாயுட்
பதிகளிருவர்க்குமருட்பார்வைதாவ
வலுத்தபிணித்தானத்தேவிரையநாதன்
வைத்தியனுய்வந்திருக்கவாய்த்தகாலை
நிலைத்துலகிற்றெண்ணூறுவயதுவாழ்ந்து
நெறியினின்றுபரமபதநேர்வன்காணே. (1012)

இதுவும்து

தைரியத்திற்சனியிருக்கச்சந்த்ரகேந்த்ரந்
தலைக்கடையமுழுச்சுபனுதாயமேவச்
செயிர்படைத்தவெட்டாறுக்குடையோர்நல்ல
தேவராய்வந்திருக்கக்குருகோணத்தி
லுயிர்படைத்துப்புவியில்வந்தசெல்வக்காலை
யொருநூறுவயதிருந்துமோட்சவீட்டிற்

பயிர்படைத்தவேளாளனுகித்தூயப்
பரமபதமடைவனென்றுபாடலாமே. (1013)

இதுவுமது

ஒருகுருகேந்திரத்திருக்கவவன்கோணத்தி
லுயிர்க்கிறைவரிருக்கமலைக்குடையோன்கோணம்
பெருகுறநல்லமுதமதிபிணிக்குவாய்க்கப்
பெரியமோட்சாதிபதிசுகத்திற்பின்னக்
குருகருணைதலைக்கடையக்கிடைத்தகாளை
குலவியொருநூருண்டுகுறித்துவாழ்ந்து
திருமகணுயகன்கருணைக்குருகனுகித்
தேவபதிசேர்வனெனச்செப்பலாமே. (1014)

இதுவுமது

கேந்திரத்திற்குருவிருந்துசனியைப்பார்க்கக்
கெடிபொறுத்தவட்டமத்தோன்கேந்த்ரகோணஞ்
சாந்தகுணனுயிருக்கத்தெரியதானஞ்
சந்திரனுமிரண்டவனுஞ்சார்ந்துவாழப்
போந்துலகில்வந்துதித்தகாளையாண்டும்
புனிதனுய்த்தொண்ணூறுவயதுவாழ்ந்து
நீந்தரியமோட்சபதநெறியைச்சார்ந்து
நிலையடைவானென்றுறுதிநிகழ்த்தலாமே. (1015)

இதுவுமது

புண்ணூறுபிணிக்கதிபன்மதியினேடு
புகுந்தாட்சியட்டமனைப்பொருந்திவாழ
விண்ணூறுமோட்சபதியறிவனேடும்
வெற்றியொடுங்கருமத்தேமேவிவாழத்
தண்ணூறுமலைக்கிறையாதாயம்வாழத்
தவம்புரிந்துவந்தமகன்றரணிமீது
தொண்ணூறுவயதிருந்துவாழ்ந்துபின்பு
சொர்க்கபதமடைவனென்றுசொல்லலாமே. (1016)

இதுவுமது

உரைத்ததெல்லாம்மெய்யேயாம்பொய்யொன்றில்லை
உயிர்த்திசையுமுடற்றிசையும்விரோதமாகி
நிரைத்தவருய்மரணம்வந்துநேர்ந்திட்டாலும்
நிறைவயதோராறுபதுக்குணீங்கார்நீங்கார்
நரைத்தவறுபதுவயதுகடந்துவாழ்ந்தால்
நாணிலத்தினிறைவயதாய்நாட்டிகந்து
அரைத்தமரமாயைம்பதுக்குளிறப்போரெல்லா
மற்பவயதாளரென்பாரறிவினுரே. (1017)

மண்புதல்வன்புதன்றலத்திலிருக்கவெள்ளி
மதிதலத்திலிருக்கவுயிர்வளர்ப்போனுட்சித்
தண்புதுமகேந்திரத்திற்ருயாய்நிற்கச்
சந்திரனுங்குருவுமமுதத்தினேடும்
பண்புதெரிவைத்தியனுமாய்நோய்வீட்டிற்
பதிந்திருக்கப்புந்தியெட்டிற்பலித்தபாலன்
எண்பதுசம்வற்சரம்வாழ்ந்தரனுர்பாத
விணமலரைத்துணையெனச்சேர்ந்திருப்பன்மன்னே. ()

---

## இரண்டாம் பாவகம்



### குரு வணக்கம்

*அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

இந்திரதருவாய்ந்தோங்கு மேரகப்பதியில்வாழ்வோன்
விந்தைவாழ்புயத்தோனுன வீரப்பமுகிலின்பூந்தாள் [ம்
சொந்தமாய்ப்பணிந்துபோற்றிச்சொல்லவேயிரண்டாம்பாக
சந்ததங்கலைவலாளென் ருலத்துவசிக்கின்ருளே. (1019)

இரண்டதைநோக்கியாரு மெண்ணியகருமஞ்சொல்லத்
திரந்தரும்வாக்குவித்தை சிறந்தநற்றனங்கணேத்ரந்

தரம்பெருங்குடும்பமியோகஞ் சாற்றியமணங்கள்யாவுங்
கரந்திடுமரணமற்றுந் தாட்டுவோங்கேட்டுவாவே. (1020)

## தன பலன்

பாக்கியன்றனவான்கூடிப் பசந்தகேந்திரத்திற்பாய
நோக்கியேமேருச்சாமி நுணித்தருள்செய்வானுகிற்
றூக்கியேசிறிதுகாலந் துன்பமுற்றுப்பானல்ல
யோக்கியதனவானுவன் யுகாந்தவாழ்வுடையனென்னே. ()

தலைக்கிறைலாபசாமி தனபதிமூவர்தாந்தாம்
நிலைக்குறுகோணகேந்த்ர நெறியிடைவாழ்வரேனும்
பலத்தனத்திலாபனேறம் பாக்கியத்திறண்டோன்பற்ற
வலுத்தபாக்கியன் காணிக்கே வாழினுந்தனவானுவர்.(1022)

எண்சீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

ஆட்சிபெற்றசாமியதின்றனவான்கூட
வறிவனிதிக்கிருக்கவெள்ளியவனைநோக்கக்
காட்சிபெற்றகுருகருணைமலைக்குவாய்த்த
காளைமூன்றிறையிரண்டோன்கலந்துகூடி
மாட்சிபெற்றபாக்கியத்தினிற்கப்பொன்னேன்
மலைக்கிருந்துகடைக்கணருள்வழங்கினும்
நீட்சிபெற்றதனமோங்கிநிலைத்துவாழ்வர்
நிதிபதியென்றெருநாமநிலைப்பார்காணே. (1023)

தனபாக்யபதிமலையோன்விரையன்மூவர்
தலைமலையில்வீற்றிருக்கச்சந்த்ரசாமி
சொனபாக்யத்துறைந்தாரேன்வதனம்பார்க்கச்
சோதரனிலாபத்தேதுலங்கிவாழ
நினைவாக்கம்பெருகுகுருகேந்த்ரமேறி
நின்றுதனசுகவீட்டைநெடிதுபார்த்தால்
கனபாக்யபதியாகிச்சதுரங்காதி
காவலனுயுலகமெல்லாங்கமழ்வான்காணே. (1024)

தனபதியுமூன் றவனுந்தலத்துவாழத்
தனத்திறையும்புத்திரனுந்தலத்துவாழச்
சினமறுபாக்யாதிபதிகுருபார்வைக்குட்
செழித்திருக்கக்கிடைத்தமகன்செல்வவானே
தனபதியேதலத்திருக்கந்தலத்துநாதன்
றனிச்சுகத்திலிருந்திடமால்சந்த்ரனேடு
சினமறுகேந்திரத்திருக்கக்கிடைத்தகாளை
செல்வவானெனத்துணிந்துசெப்பலாமே. (1025)

தனபாக்யன்சந்திரற்குத்தனத்தில்வாழச்
சத்தமசுகாதிபதிதலையில்வாழச்
சொனபாக்கியன்கேந்திரத்திற்றலைவன்வாழச்
சொற்பெரியதைரியன்சத்தமத்தேதோய
இனபாக்யம்படைத்துவந்தசெல்வக்காளை
யின்பாதிமனைவியெனவிசைந்துவாழ்வன்
கனபாக்யபதியெனவேகொடையாலோங்கிக்
காசினியிற்பரிமளிப்பன்கண்டுதேரே. (1026)

பாக்யபதிகாரியத்தேபதிந்துவாழப்
பருந்தனவானிலக்கினத்தேபடர்ந்துநிற்கக்
காக்குமுடியரசுகேந்திரத்தேநிற்கக்
கனசுகத்தோன்விரையத்தேகலந்துநிற்கத்
தூக்கியலக்கினத்திரண்டுபாலுநல்லோர்
சூழ்ந்துநிற்கக்கிடைத்தமகன்றுயரிலானுய்
யோக்கியனுத்தனவானுயிருப்பானுயத்
துறவிரையஞ்சமமெனவுமுரைக்கலாமே. (1027)

தனபதியுஞ்சந்திரனும்விரையமேவச்
சத்தமத்தோன்றைரியத்தேசார்ந்துவாழக்
கனமுறுபாக்யாதிபதிகுருகோணத்தே
கலந்துநிற்கக்குருலாபங்கதித்துவாழச்
சொனலாபாதிபதியைசுவரியனேடு
சுகப்பதியிற்கலக்கவந்துதோன்றுங்காளை
வினவுறிற்பாக்கியனெனவேசொல்லாஞ்செம்பொன்
விரையமிட்டுப்புகழ்படைத்துவிளங்குவானே. (1028)

குடும்பபதிசுகலாபனேடு கூடிக்
குலவியகேந்திரத்திருக்கபாக்யகோமான்
நெடும்பற்ருந்தைரியத்தேயிருக்கப்பாக்ய
நிலத்திடைக்காரியப்பதியோனின்றுவாழப்
படும்பற்பாம்பொடுசுகத்தேமதியநிற்கப்
பதங்கிடைத்துவந்தமகன்பாக்யவானுய்க்
கொடும்பற்ருர்க்காளரியாயிருந்துவாழ்வன்
குன்ருதவாழ்வனெனக் கூறலாமே. (1029)

பாக்கியவானுட்சிபெற்றகதிரோனேடும்
பனிமதியினெடுவாழப்பத்திலாட்சி
யோக்யமுறும்புகருடனேகுருசேய்வாழ
வுயர்லாபத்திடைத்தலைவனேங்கிவாழ
ஆக்குதனத்தைஸ்வரியன்வாழவாய்த்த
வதிட்டமுளான்தனகனவானுகியாண்டு
நீக்கமிலா நன்செய்புன்செய் நிலத்திேைடு
நெடுவாழ்வுவாழ்வனென நினைக்கலாமே. (1030)

நாலவனுமிரண்டவனுமலையிலேற
நாலிலேநிதிபதிதானண்ணினுலும்
சீலமுறுசத்தமனுந்தனனுங்கூடிச்
செப்பியசத்தமத்தலத்தேசெழித்துவாழக்
கோலவெள்ளியாட்சிபெறவிவனுக்கேழோன்
குளிர்ந்தநட்புப்பெற்றிருக்கக்கூடினுலும்
பாலரிவரோரிருவரெந்தநாளும்
பாக்கியவானுவரென்றுபாடுவோமே. (1031)

பாக்கியவான்குருகோணம்பலித்திலாபன்
பாங்கனுய்வாழ்வுறச்சத்தமகாமேசன்
யோக்கியகேந்திரத்துலக்கினசுகேச
னுயர்ந்தசுகத்தானத்தேயோங்கிவாழக்
காக்குமதிகுருதைரியத்தில்வாழக்
காசினியிலவதரித்தகாலையாண்டும்
ஆக்கியபாக்கியவானுயோக்யவானு
யழியாதவாழ்வுடையனுகிவாழ்வான். (1032)

தனபதிகேந்திரத்திடையைஸ்வரியனேடுந்
தழைக்கநாலோன்பாக்யத்தானமேவச்
சினமறுசுக்கிரனுட்சிகிடைத்துச்சந்த்ர
தேவனெடுகோணமிசைச்சிறந்துவாழக்
கனகுருவாதாயத்தேகனிந்துவாழக்
கதித்ததவஞ்செய்துவந்தகாலையாண்டுந்
தனபதியாய்விளைநிலமும்பசுக்களோடுந்
தழைத்துலகில்வாழ்வனென்றுசாற்றலாமே. (1033)

தனத்திலேயைஸ்வரியன்றழைத்துவாழத்
தனபதிபாக்கியத்தலத்திற்றனித்துவாழக்
கனத்தசுகனுட்சிபெற்றுக்குருவாதாயக்
களத்திருந்துகுருச்சந்த்ரக்காட்சிகாண
முனர்த்தலைவன்காரியத்தேயிருந்துவாழ
முயன்றுலகிற்பிறந்தமகன்முழுதுநாளும்
தனத்திலேயுயர்ந்தவனுயிருந்துவாழ்வன்
சத்தியவானென்றிவனைச்சாற்றலாமே. (1034)

புண்ணியவான்றனவான்செங்கதிரோன்மூவர்
புனிதகண்டகோணமிசைப்பொருந்தவைந்தோன்
தண்ணியநன்னேக்கருளக்கிடைத்தகாலை
சன்மார்க்கபாக்கியவான்ருனேயின்னுந்
திண்ணியநற்றனபதியுஞ்சுகனுங்கூடித்
திரிகோணகேந்திரத்தேசிறந்துவாழ்ந்தாற்
பண்ணியபாக்கியத்துதித்தகாலையாண்டும்
பாக்கியவானென்றுநிசம்பகரலாமே. (1035)

---

## அவதன பாகம்

### கலி விருத்தம்

தனனுநோயனுநீசஞ்சஞ்சரித்திடச்
சினமுறுங்கொடுந்தீங்கர்கண்பார்க்கவன்
மனம்வருந்தித்தன்மங்கைபொருட்டினுற்
றினமுங்காலஞ்செலுத்துவனென்பரே. (1036)

மதியும்பானுவும்வாக்கில்வதிந்திடப்
பதியுநோயிடைவாக்கிற்பற்றுறத்
துதிபொறுத்தபொன்னேன்வியந்தோய்ந்திடிற்
பதியிழந்துபந்தைத்துத்திரிவனே. (1037)

உச்சமாறவனிச்சயமாயுற
வொச்சமாய்த்தனனச்சுவியத்துறக்
கொச்சைவீரர்கண்கூடக்கிடைப்பனேற்
பிச்சையன்றிப்பிழைப்பொன்றுமில்லையே. (1038)

மேருநாதன்வியன்சுடுங்காமிமுப்
பேருங்கூடிப்பெருத்தவிழிவிழச்
சீருள்ளார்கண்டிருட்டியுநீங்கினுற்
சேருஞ்செல்வங்களுவிலுஞ்சித்தியான். (1039)

சந்திரன்றனன்கூடத்தழலவன்
சுந்தரக்கண்டந்தோன்றத்தலைக்கிறை
வெந்துநீசம்விதியிடம்வீழ்வனேற்
நந்தையின்றிக்கலங்கிடுவானரோ. (1040)

சந்திரற்கிரண்டோனிரண்டாறினேன்
வந்தவாறவன்வாக்கவனுல்வரும்
வெந்தவெட்டிடைவீழக்கிடைத்தவன்
னைந்துகாலநுணுக்கத்திற்போக்குவான். (1041)

விரித்தநல்லவர் தீப்பதிமேவிடப்
பருத்ததீயவர் நற்பதிபற்றுறக்
கரித்தசாவகன் கண்ணெதிர்நோக்கினுற்
றரித்திரத்திற்றரித்திரனுவனே. (1942)

## வாக்கு மனம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

தலையரசு நாலவனுங்குருவுநல்ல
தானத்தேகோணகேந்திரங்கள்சார
நிலவுவெள்ளிபுதனிவரிலொருவர்வாக்கி
னின்றிடிற்சோதிடவானெடியபொன்னேன்
இலகுதிருகேந்திரத்திலிருக்கவெள்ளி
யிலங்குசுகத்திருக்மால்கோணமேற
நிலவுபுதன்வாக்கிலுறக்கிடைத்தகாளை
நீணிலத்திற்சோதிடத்தினிபுணனுவான். (1043)

## இதுவுமது

குருகோணத்திருக்கவெள்ளிகுருவின்கேந்த்ரங்
கூடிநிற்கப்புதன்கேந்த்ரங்குலவிவாழக்
குருகேந்த்ரத்திடைமதியம்ஞானியோடு
கூடிநிற்கக்கிடைத்துவந்தகுணவான்யாண்டும்
பெருகோகையிலக்கணநூலிலக்கியாதி
பெருநூலும்வாகடசோதிடங்கள்யாவுந்
தருகோடைமழைபோலத்தருவானுகித்
தமிழ்ப்புலவனெனப்பெரும்பேர்தழைப்பன்காணே. ()

## இதுவுமது

தலையிலேகுருவிருக்கப்புதனூர்பாக்யத்
தானத்தேவீற்றிருக்கப்புதற்குப்பத்தில்
கலையிலேசிறந்தபுகரிருக்கப்பெற்றேன்
காவியநூலுணர்ச்சியுளான்கனிந்தவாக்கி

நிலையிலேசுகநிலைக்கட்புகரோன்மின்ன
நெடுமாலுந்தைரியத்தேநிற்கப்பார்ப்பான்
சிலையிலேபிறந்தவற்காதாயத்தானஞ்
சேரநல்லவாக்குவளஞ்சிறப்பன்காணே. (1045)

இதுவுமது

வாக்கிலேபுதனிருக்கக்கோணமாடம்
வானவர்தங்குருவிருந்துவாழநாலிற்
றேக்கமுதகதிரோன்வாழ்ந்திருக்கப்பெற்றத்
திருவாளன்புலவருக்குட்சீமானுவன்
வாக்கிறைவன்மலைத்தலையில்வாழவேழில்
மதிபுதனும்பொன்னவன்கண்வலுப்பெற்றேறப்
பாக்கியஞ்செய்துலகில்வந்தகாலைசெல்வப்
பண்டிதனுய்ப்பலசுகமும்படைப்பன்காணே. (1046)

இதுவுமது

வாக்கரசுதலைக்கிருக்கமதிமால்கேந்த்ர
மன்னிநிற்கச்சுகத்தரசுலாபம்வாழக்
காக்குமறிவாளன்கேந்திரம்பெற்ருேங்கக்
காப்பியன்சேய்தைரியத்தேகலந்துவாழப்
பாக்கியஞ்செய்துலகில்வந்தசெல்வப்பாலன்
பலபாஷைப்பண்டிதனுய்ப்பாக்யமான
மாக்கடலிற்பள்ளிகொண்டதிருமால்போல்
வாழ்ந்திருப்பனெனத்தெளிவாய்வழுத்தலாமே. (1047)

இதுவுமது

வாக்கிடத்திற்புதனிருக்கவாக்குநாதன்
மலைக்கிருக்கச்சுகத்திலேமேதியம்வாழ
மாக்குருகாரியத்திருக்கவவற்குமூன்றில்
மழைக்குநாயகனிருக்கவந்தகாலை
யோக்கியவாக்குடையவனுய்க்கல்விமானு
யூகனுமாயோகனுமாயுகந்துபூவிற்

ரேக்கமழுங்கவிதைமழைபொழியுஞானச்
சீமூதமாயிருந்துசெழிப்பன்காணே. (1048)

இதுவுமது

தலையரசு தலைக்கிருக்கவாக்கிற்புந்தி
தழைத்திருக்கச்சுகத்தில்மதிதனித்துவாழ
நிலைமைதருகுருகோணமாடமேவி
நெடுங்கிரியைக்கண்ணுேக்கநிலைத்தமைந்தன்
கலையறிவிலகத்தியனுய்த்தேனும்பாலுங்
கலந்திமயமுகட்டிடைப்பெய்கனமேபோல
மலைதனுவாக்கொண்டசிவபெருமானருட்கு
வளைந்திருந்துமுத்திநிலைவாய்ப்பன்காணே. (1049)

இதுவுமது

வாக்கிலேகுருவிருக்கவாக்குநாதன்
வானகுருநோக்கருளில்வாழக்கல்விக்
காக்கமருள்பண்டிதனுர்குருவாதாயத்
தமரவளர்கவிதலைமேலமர்ந்துவாழ
யோக்கியபாக்கியம்படைத்துப்பிறந்தோன்கல்வி
யூகனுயோகனுயுத்திமானுய்
நீக்கரியசத்தியநன்னிலையுள்ளானுய்
நீணிலத்துவாழ்வனென்றுநிலைக்கலாமே. (1050)

இதுவுமது

தலையிடத்துக்குருபுகர்சந்திரனும்வாழத்
தைரியத்தேபுதனிருந்துதழைக்கவாக்கு
நிலையிடத்திலறிவனுதாயன்வாழ
நிலத்துதித்தோன்கல்விநெறிநிபுணனென்பர்
கலையறிவன்புதகேந்த்ரத்திருக்கச்சோமன்
கவிஞனுடன்கோணமணைகலந்துவாழ
நிலைமைதருகுருலாபங்கிடைத்தமைந்த
னெடியகலையாராய்ச்சிநிரம்புவானே. (1051)

குருவாக்கில்வாக்கிறைவன்குலவிவாழக்
குளிர்ந்தமதியவனேடுங்கூடி வாழப்
பெருவாக்குத்தருபுதன்றைரியத்துவாழப்
பிரபலபுண்ணியன்புதனைப்பின்னிவாழ
மருவாக்குஞ்சுகத்தலத்தேபுகரோன்வாழ
வந்தமகன்கல்விநெறிவரம்புதேர்ந்து
திருவாக்கிற்பிறந்தகவிமாலையீசன்
றிருவடிக்கேபுனைந்துசுகச்செயல்காண்பானே. (1052)

புகர்புதன்வாக்கிடத்தமையவிவரைஞானப்
புனிதகுருதிருவருட்கண்பூட்டினலு
நிகரின்மதிபுகர்புவிவன்வாக்கினிற்க
நெடியகுருவருணேக்கநீட்டினலும்
பகரிரண்டுமூன்றுநான்கைந்தேழொன்பான்
பத்திவைகள்சுபராட்சிபரவினலும்
புகலுமிவர்மூவர்களுங்கல்விமானுய்ப்
புகழ்பெறுவரென்றுமுன்னேர்புகன்றவாறே. (1053)

சூரியனைவாக்கிறைவன்பார்க்கச்சேயைச்
சுரர்குருபார்த்திடக்கிடைத்தசுதனுஞ்சிந்தை
கூரியனையிலக்கினத்தான்பார்க்கக்காரி
குளிர்ந்தநட்புப்பெறக்கிடைத்தகுமரன்ருனுஞ்
சீரியநற்புகருபயமேவநேரிற்
றிங்கள்புதன்குருவிருக்கச்செனித்தசேயும்
ஆரியநூல்செந்தமிழ்நூற்புலவராகி
யலர்தலைமாநிலம்புகழவணிசேர்வாரால். (1054)

இரண்டவனும்புகருமொன்றுகூடமாலோ
னெதிர்நோக்கக்கிடைத்தவனுமிரண்டோன்மாலோன்
திரண்டொருவனுச்சமுறமலையிலாசான்
சேர்ந்துநிற்கக்கிடைத்தவொருசெல்வச்சேயும்
இருண்டநிறக்காமபதிகோணமேற
யுசமானன்கேந்திரிக்கவிசைந்துள்ளானும்

தெருண்டவிலக்கண நன்னூற்றெளிந்தோராகிச்
செந்தமிழ்ப்பாவல்லவராய்ச்சிறந்துவாழ்வார் (1055)

### இதுவுமது

பண்டிதனும்வாக்கிறையுங்குருவுங்கோணம்
பதிந்திருக்கக்கிடைத்தவனும்பௌமனேடி
ரண்டிறையும்வாக்கிருத்தல்புதனேர்பார்க்க
ரமித்தவனுஞ்சேய்புதனிரண்டில்வாய்த்தல்
அண்டர்பிரான்மலர்விழியானேக்குங்காலத்
தமைந்தவனும்புதன்வாக்கிற்சேய்கோணத்தில்
மிண்டர்குருநிலேமேவக்கிடைத்துள்ளோனு
மேதினியிற்புலவனெனவெளிப்பட்டோனே. (1056)

### இதுவுமது

மலர்வாக்கிற்புதன்செவ்வாய்கோணமாட
மழைக்கிறைவனுட்சிநிலேமதியேநட்பாய்ப்
பலர்வாக்கைத்துலக்குகுருநிதிக்கேநின்று
பகர்ந்தவொருநால்வரையும்பார்ப்பானுல்
சிலர்வாக்குப்படியிரவிகீர்த்திசேரிற்
செனித்தமகனினித்தபுகழ்திகாந்தமன்றே
அலர்வாக்குமின்னுரைத்தனக்கேசொந்த
மாக்கியுயர்காவியங்களமைப்பான்காணே. (1057)

### இதுவுமது

திரிகோணமாளிகையில்வானேர்போற்றுந்
தேவர்பிரானிருந்துமலர்த்திருக்கண்ணேக்க
விரிகோடைக்கதிரவனேப்புகரைச்சேயை
வெண்மதியையிலக்கினத்தைவிரும்பிப்பார்க்கக்
கரிகோணகேந்திரத்திற்பொருந்தவாய்த்த
காலேயுலகுள்ளளவுங்கழியாக்கீர்த்திக்
கிரிகோட்டின்மணிவிளக்காய்ச்சிவன்முன்பாடற்
கிணைவிளக்குநிலேநிறுத்துங்கெடிபெற்றேனே. (1058)

இதுவுமது

ஐந்திலேகுருவிருந்துஞானவானை
யசுரகுருவைத்தலையையருளானேக்கில்
வந்தமகன்ஞானவான்றவவான்கல்வி
மானெனவேதேனென்வேவழுத்தலாகும்
ஐந்திலேகுருவிருந்துகரியபாம்பை
யசுரர்குருவைத்தலையையருளானேக்கில்
வந்தமகன்மேற்குறித்தவண்ணனேயாம்
வன்மனத்தன்சினத்தனெனவழுத்திக்காணே (1059)

இதுவுமது

தலையிலேகுருவிருந்துபுதனைவாலச்
சந்திரனைச்சுக்கிரனைத்தளிர்த்துநோக்கத்
தலைமனையுந்திரமனையேயானுலிந்தத்
தவமுடையோன்புலமையொடுதனவானுவன்
தலையிலேகுருவிருந்துஞானவானைச்
சந்திரனையறிவனைப்புதனைக்கண்ணேக்கும்
நிலையிலேயுதித்தமகன்கல்விமானன்
னேயவான்றனவானன்னிலைமையோனே. (1060)

இதுவுமது

ஆதாயங்குருவிருந்துபுதனைவாலை
யவிர்மதியைமெய்ஞ்ஞானத்தவனைநோக்கில்
ஆதாயமாயுதித்தோன்கல்விகேள்விக்
கதிபதியாய்த்துதிபதியாயமைந்துவாழ்வன்
ஆதாயங்குருவிருந்துசோமனுசா
னவர்கதிரோன்சனிராகுவைவரார்க்கும்
ஆதாயங்கருணைசெய்யில்வந்தோன்கல்வி
யறிவுடையன்பொருளுடையனுவன்காணே. (1061)

இதுவுமது

ஆதாயங்குருவிருந்துபுதனைப்பார்க்கில்
ஆதிபதியைக்கருணையழுதலாட்டும்

ஆதாயங்கிடைத்துவந்தோன்கல்விகேள்விக்
காசிரியபீடமெனவமைந்துவாழ்வன்
ஆதாயங்குருவிருந்துபுகர்மால்சந்த்ர
னழல்ஞானிதலைத்தலமிவ்வாறும்பார்க்கு
மாதாயம்பெற்றுவந்தோன்ஞானநூலுக்
காசிரியபீடமென்றேஅறையலாமால். (1062)

## இதுவுமது

இலாபத்தேகுருவிருந்துபுதனைவானத்
தெரிகதிரையிளமதியையினிதுநோக்கில்
நிலாவப்பேரடைந்தகல்விநிலையனுகி
நிலநிலையுமுடையோனுய்நெடிதுவாழ்வன்
இலாபத்தேகுருவிருந்துபுகரைச்சேயை
யிளநிலவைப்புதனைநெடிதினிதுநோக்கிற்
குலாவிப்பூவுலகில்வந்தோன்கலைகளாய
குலக்கடலைக்கடைந்தவடற்குன்றெப்பானே. (1063)

## புறனடையங்கம்

வடித்தெடுத்துமேலுரைத்ததுண்மையேனும்
வழுத்துமந்தநாயகர்கள்வருக்கமேறித்
துடித்தசுபவர்க்காங்கிசங்களேறித்
துலங்கினுற்பிடித்தபிடிதோலார்மாக்கள்
தடித்தவர்க்காங்கிசந்தளர்ந்துகலையுமானுற்
சாதகருங்கல்விநிலைதளர்வரேனும்
படித்தவர்க்கமுயர்வோர்க்குத்தளர்வாரன்றிப்
பண்டிதராவதிற்றடையோபகருங்காலே. (1064)

## புறனடையங்கம்

சொல்லியநன்னிலைமைகளிற்கிரகநாதர்
தோய்ந்துசிலர்தோயாதுதூரத்தோயிற்
சொல்லியநற்பலங்கள்பலதோய்ந்துங்கொஞ்சந்
தோஷமுமாய்நிற்குமிதிற்சொல்லார்வந்துச்

சொல்லியநற்றலங்களிலே நிற்பாராகிற்
ஞேஷமன்றுனே றுபலந்துலங்கித்தோன்றும்
வல்லியனற்குருதலையைந்தொன்பானுயம்
வரக்கிடைத்தாற்கல்விநிலைவலியர் தாமே. (1065)

## கணிதநூல் வளம்

நாலவனுந்தலையவனுங்கூடிக்கோண
நன்மனையில்வீற்றிருந்துவானோர் நாதன்
சீலவிழிகிடைத்தாலுந்தலையோனைந்திற்
செங்கதிரோனுடனிருக்கத்தலையிலாசான்
கோலவிழிநேர்ந்தாலுமசுரர்தேவன்
குருவிழிக்கமறுவிழிதான்கொடுத்திட்டாலும்
பாலரிவரொருமூவர்கணிதநூலிற்
பண்டிதர்களாவரென்றுபகரலாமே. (1066)

## வைத்திய வளம்

நாலிலேகுருவிருந்துசனியைப்பார்க்க
நல்லபுதனிலக்கினத்தேநண்ணவாக்கிற்
சீலவெள்ளிசூரியனோடிருந்துசொன்ன
தீச்சனிமேலருணுேக்கஞ்செழித்திட்டாலும்
நாலிலேசனியிருந்துசுக்ரகோண
நற்கோளின்கேந்த்ரவலிநண்ணினுலும்
பாலரிவரிருவரும்வாகடநூல்வல்ல
பண்டிதராவாரெனவேபாடலாமே. (1067)

## விநோத வித்தியாவளம்

ஏழவனுமாறவனுநாலில்வாழ
விலக்கினத்தேபாம்பிருக்கவிசைந்துள்ளோனும்
வாழொளியோன்சந்திரனட்புச்சமேற
வாக்கிலேசுகன்கருமன்வந்துற்றேனும்
சூழுமலையோனுலோனிதியிலேறச்
சுடுநாகந்தொடர்ந்தேறப்புதனைந்தேறக்

கேழொழியதலையினின்றுகுருவேபார்க்கக்
கிடைத்தோனுவிநோதவித்தைக்கீர்த்திமானே. (1068)

## கண்மயக்க வித்யாவளம்

இரண்டவனுநாலவனும்புதனுங்கூடி
யிருநிதிக்கணேறவிதியொருவனுச்சந்
திரண்டொருவனுட்சிபெறக்கிடைத்துற்றேனுந்
திரிவீட்டில்விதிசுகனேய்த்தீரன்கூடத்
தெருண்டநிதியிடையிருந்தசெவ்வாய்நோக்கஞ்
சேருங்காற்பிறந்தவனுஞ்செகத்தோர்மெச்ச
மருண்டசிலவித்தைகளைத்தெரிந்துதத்த
மணத்திருத்தியடைதலிலாவாய்ப்பினரே. (1069)

## சம்ப்ரதாயவுபாய வித்யாவளம்

பத்திலேயிரண்டவனுஞ்சனியுஞ்சேயும்
பதிந்திருக்கக்குருநோக்கம்படைத்திலானுஞ்
சுத்தமதிக்கிரண்டவனுந்தனனுமேழிற்
றேயவருட்குருநோக்கந்துலங்கிலானுஞ்
சத்தமத்தேயிருக்கவிறைதயைசேரானும்
சால்புடனேபார்க்கவனும்சசியுஞ்சேர
ஒத்தவிவர்மூவர்களுஞ்சம்ப்ரதாய
வுபாயவித்தையாளரெனவுரைப்பர்முன்னோர். (1070)

## வாக்கூனம்

### குறம்

வாக்கிறையுஞ்சுக்கிரனும்பண்டிதனுங்கூடி
வண்பிணியிலிருக்கச்செம்பொன்மறைந்திருக்குமாகில்
வாக்கறியுராமூங்கையெனவழுத்துவெனனம்மே
வானவர்கோன்பார்வைபட்டும்வாயுளறும்பாராய்
ஆக்கிறைவெண்புகர்தூமனுறிலெட்டிலிருக்க
வட்டமனும்வாக்கவனுமந்தரத்தேதவிக்க

வாக்கறியாவூமையென்பேன்குருபார்வைவாக்கில்
வாய்ந்திருந்துந்தோய்ந்திருந்தும்வாய்குளறுமம்மே. ()

இரண்டவனுங்குளிகனும்பன்னிரண்டுறையத்தலையி
லியமகண்டனுறத்துபனிரண்டதனைநோக்க
மருண்டுவந்தோன்வாயூமையாவனடியம்மே
வாக்கிடத்திற்குருவிருந்தும்வாய்குளறும்பாராய்
இரண்டவனுந்தூமனுடனேமகண்டன்மூவ
ரெட்டிலுறக்குருபார்வையிலேயெனில்வாயூமை
தெருண்டகுருவாக்கிற்சிலவிசைவாயுளறுந்
திங்களும்வாக்கிடத்திருக்கிற்பங்கமிலைவாக்கே. (1072)

ஊன நிவர்த்தி

சனிநாலிலிருக்கமலைத்தலனீசமடையச்
சந்திரற்குப்பத்திடத்தேவந்துவிதிதரிக்க
அநியாயவூமனெனவறைவனடியம்மே
ஆங்குரைத்தபடியவர்களப்படியேயிருக்க
இனிதானவைந்திடத்தேயிமையவர்கோனிருந்தா
லெவ்விதப்பீடையுந்தொலையுமித்துடனுயத்தே
பனிமதியம்ஞானியுடன்பதிந்திருப்பானுற்
பாரியகாவியங்களெல்லாம்பகருமிவன்வாக்கே. (1073)

இதுவுமது.

பிணிவீட்டிற்சுக்கிரனும்பாம்புமொன்றுகூடிப்
பெருஞ்சனியனுதாயப்பேதையைக்கைப்பற்ற
மணிவீடுஞ்சூனியமேலூமையடியம்மே
வழுத்துமந்தநாயகரவ்வண்ணமிருந்திடவே
தணியாதமலைத்தலையிற்சத்யகுருவிருக்கச்
சந்திரனும்பண்டிதனுஞ்சத்தமத்தில்வாய்த்தால்
கணிதாதியிலக்கணநூலாரியநூல்கற்ற
கவிஞனிவனென்றெடுத்துக்காட்டுவனுனம்மே. (1074)

## இதுவுமது

புதன்சனிசூரியன்கூடிவிரையமனைபுகுதப்
பூமகனுர்விதியடைந்தாலூமையடியம்மே
இதன்படியேயவரிருக்கப்புகர்தலேமேலேற
விரண்டிற்குருதெருண்டுநின்ருலிவன்றமிழிற்புலவன்
மதம்பிடித்தசனித்தேவன்மதியினெடுங்கூடி
மண்டலத்தின்கடைக்கிருக்கில்வாய்குளறுமம்மே
கதந்துறந்தகுருலாபங்கதித்துநின்ருலிவனைக்
காவியநூலளவெடுத்தகவிஞனெனக்காணே. (1075)

## புறனடை யங்கம்

நீசனின்றராசியிறையாட்சியுச்சமேவி
னீசபங்கம்ராசசுகமெனவுரைத்தநெறிபோல்
பேசிவந்தவூமரதன்பின்னுரைத்தவிதியாற்
பெரும்புலவரானதன்மைபிரித்துணர்த்துகோடி
மாசிறந்தவாக்குவலிநாலிரண்டைந்தொன்பான்
வளராயமிவைகளையும்வானவர்கோன்சுங்கன்
ஆசில்புதன்மதியறிவனுமிவைகடமையு
மளந்தறிதிபுதன்குருவுமதிகரிதிலம்மே. (1076)

இந்தவிதமேலெடுத்துங்கீழெடுத்துமுரைத்த
விவர்களல்லாச்சாதகர்களெத்தரத்தரென்ருல்
மந்தவிதக்கல்விநிலேவலியுடையவராவர்
வந்தகடிதம்படிக்கவல்லவனென்றறியே
முந்துரைத்தபுலவர்கள்போல்மல்லர்பின்னருரைத்த
முழுப்புலவர்போலுமல்லர்மூங்கையர்போலல்லர்
தந்தரத்தெழுதப்படிக்கச்சமர்த்தரிவராவர்
தமிழ்முதலெப்பாஷைகட்குஞ்சமமாமிவ்விதியே (1077)

---

## துர்வசனம்

### கட்டளைக் கலிப்பா

வாக்கிேனேன்றிரியோன்சுகன்மேருவோன்
வழுத்துநால்வருந்துற்பலமன்னினும்
காக்குநாலவனைந்தவனெட்டவன்
கடையிற்காந்தக்கடைக்குலமாயினும்
வாக்குக்காரகனுலவனீசத்தே
வதியவட்டமன்வன்கண்கிடைக்கினும்
வாக்கினின்றுபிறப்பதெல்லாம்பொய்யும்
வன்புந்துன்புமேமற்றதொன்றில்லையே. (1078)

நீலன்வாக்கிலுமைந்திலிராகுவு
நெடியவட்டமனுன்கிலுநீண்முடி
காலேச்சூரியனுங்கட்டவட்டமக்
கதியிற்புந்தியுங்கார்முகிற்கீசனும்
கோலலாபத்திற்பாம்புங்கிடைத்தவன்
குளிர்ந்தவார்த்தைகுறித்தும்புகன்றிலன்
சாலமவஞ்சகந்தப்பொடசத்தியஞ்
சலிப்புவீண்சொற்றழைத்துடையானரோ. (1079)

## புறனடை யங்கம்

புதனைப்பார்பின்புநான்கினைப்பார்பின்பு
புகரைப்பார்மதிபோக்கினைப்பார்பின்பு
சுதனுக்காதினம்பார்தனம்பாக்கியஞ்
சுத்தலாபமித்தானங்கள்சுற்றிப்பார்
இதனைப்பார்த்ததெல்லாம்பெரிதன்றுவா
னிறைவனிற்குமியற்கையைநன்குபார்
அதனத்தேவருந்தானமுநன்மையே
லவர்க்குவாக்கினதிட்டமுநன்மையே (1080)

## நேத்ரஊனம்

கண்ணையட்டமன்கவ்வுறநான்கினைக்
கடுமையாளர்கள்கைப்பற்றிக்கொண்டுற
விண்ணையாள்பவன்கண்விழியானெனில்
விழியிரண்டுமிலேசமுமில்லையே
நண்ணும்பன்னிரண்டாதிபன்கண்ணுற
நான்கைம்பாம்புநறுக்கெனக்கவ்வினுற்
புண்ணிருப்பதுபோலிருகண்களும்
புகைந்தெரிந்துபுலன்பற்றிடாதரோ. (1081)

### இதுவுமது

கண்ணுக்காதிபனேயுறக்கண்ணினைக்
காவில்சூரியன்கண்கொண்டுநோக்குறிற்
கண்ணிரண்டுமிழப்பர்முற்கூறியக்
கதியர்மூவருமித்திரர்யாவருந்
திண்ணச்சுக்கிரனுட்சியுச்சங்களுந்
திங்கள்பாலகன்கோணகண்டங்களுந்
தண்ணிலாமதியைந்திலுமந்தணன்
றலையிலும்பெறிலோர்கண்டழைப்பாரே. (1082)

### இதுவுமது

நேத்திராதிபனீசமும்பாவமு
நேரவங்கவனேடுடன்கூடியே
காத்தலக்கினத்தாதிபனீற்றெடுக்
கட்டவட்டமநோயுற்கலங்குதல்
கோத்ததெஞ்சனிகண்கொண்டுநோக்கினுற்
குழந்தைகர்ப்பக்குருடெனக்கூறுவர்
ஆத்தன்மெய்யருளப்படியாமெனி
லந்தப்பாலன்முன்செயவினையாமரோ. (1083)

### இதுவுமது

கண்ணுக்காதிபனுதவன்கூடியே
கடியநோயிடைக்கட்டுணக்காரிதன்

புண்ணெப்பாங்கண்ணைக்கண்ணிலுங்கண்ணெனும்
பொறியினுயகன்பேரிலும்போக்கினுல்
விண்ணுக்காதிபன்சுக்கிரன்கண்ணருள்
விழிவிழிப்பதிமேலும்படாவிடிற்
பண்ணப்போதவன்பாரிடைத்தோன்றினும்
பலித்திடாதுகண்பாலைப்பழிக்குமே. (1084)

இதுவுமது

ஆடுஞ்சிங்கமுநேத்திரத்தானமா
யகிற்சுன்சேயவனத்தலத்தோனுற
நீடுஞ்சுக்கிரன்கண்ணருளங்கணே
நேரிடாதெனிற்பேரிவற்கந்தகன்
தேடுந்தங்கமும்வெள்ளியுங்கர்மனுந்
தீப்பிணிக்கிறையும்பிணித்தீயுறில்
ஈடிலாதகண்பெற்றுநடுக்கணே
யிறைவர்தண்டனையாற்கண்ணிழப்பனே. (1085)

இதுவுமது

விழிக்குநாதனுஞ்சேயொடுமர்ந்தியும்
விழித்தலத்துறவேதன்கண்மேவுறில்
வழிக்குளான்கண்கிடைத்துநடுக்கணே
வலியநோயினுல்மாண்டிடுங்கண்ணனே
பழிப்பிலாவிழிநாதனுஞ்சுங்கனும்
பனிநிலாவும்பகைத்துடன்கூடினுல்
அழிக்கிலார்கண்தொடுப்பர்நருக்கணே
யருகிமாலைக்கணுமிவற்கென்பவே. (1086)

தலைக்குநாயகன்கண்ணுக்குநாயகன்
சத்தமன்கறைச்சந்திரனுல்வருங்
கலக்கவாறெட்டினேரிட்டுச்சுக்கிரன்
கண்ணெனுங்கிடைக்காவிதிநேர்ந்தகண்
குலைக்குநோய்களிற்குற்றுண்டுரிப்புண்டு
கொடுங்கலிக்கங்கள்கொட்டுண்டும்பட்டுண்டும்

நிலைப்பதின்றிக்கரைந்திடுமென்றுநீ
நிரம்பக்காட்டிமருந்தைநிறுத்திடே. (1087)

சுக்கிரன்கடுஞ்சூரியன்கண்ணிலே
தோயப்பொன்னருட்சோதியுமில்லையேற்
வக்ர மேகப்படலத்தினுல்விழி
மங்குமென்றுவலுத்துச்சொல்வெள்ளியு
முக்ரமந்தனுஞ்சாமியுங்கூடியே
யொளிவிழிக்குப்பழியெனவுட்புகிற்
சக்கிரேஸ்வரன்கண்பெறினல்லது
தலம்பழிக்கவிராக்குருடாவனே. (1088)

கண்ணைச்சாவகன்கவ்வுறமூன்றிலே
கதிருதிக்கக்கரக்கவிராக்கதிர்
கண்ணின்காரகனுறிற்கலங்கினுற்
கண்ணினேய்தொனூற்ருறையுங்கண்பெறும்
கண்ணின்காரகன்கண்ணுக்குநாதனுய்க்
கடும்பிணிக்குட்டனிப்பட்டுகாந்தினுற்
கண்ணுஞ்சூனியமாகிற்கண்சூன்யமே
கடவுள்மெய்யுறிற்கண்ணென்றிநல்குமே. (1089)

தலைக்குநாயகனுறவன்சூரியன்
றலையைக்கண்ணைத்தழுவுறப்பெற்றவன்
நிலைக்குங்கண்களப்பூனையின்கண்ணென
நிறங்கொடுக்கும்பழுதில்லைநிச்சயம்
வலுத்தகண்ணிறையெட்டுறச்சந்திரன்
மந்தனேடுகண்மாடத்தைநோக்கவக்
குலக்கொடுங்கதிர்கண்ணுறிற்பூனைக்கட்
குணங்கொடுக்கும்பழுதன்றுகூறிடே. (1090)

நண்ணினுதனீராறிற்கலங்குறக்
கண்ணைவெஞ்சனிகண்ணுறக்காண்பனேற்
கண்ணுஞ்சூனியமாகக்கிடக்குமேற்
கண்ணிழப்பதற்கேதுவுங்காணுமால்

கண்ணின்காரகன்சந்திரகோணத்தே
கதித்தநல்லசுகாலையமேவினுற்
கண்ணிற்கண்ணடிசாத்தவிடான்முழுக்
கமலம்போலக்கலந்தொளிகாட்டுமே. (1091)

## உண்ணும் பாத்திரம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

தனபதியுமதியும்விண்ணோர்குருவுங்கண்டத்
தலமலதுகோணமாத்தலத்திலேறக்
கனபதியாம்வெள்ளிதருத்திருக்கவாய்த்தோன்
களிம்பில்லாச்சுத்தவெள்ளிக்கலத்திலுண்பான்
தனபதியுஞ்சுகபதியுமதியும்பாம்புந்
தனத்திருக்கக்கிடைத்தவனத்தகையனுவான்
கனபதியாம்வெள்ளிமதிபொன்னும்வாக்கிற்
கலந்தவனுஞ்சுத்தவெள்ளிக்கலத்துண்பானே. (1092)

இரண்டவனுந்தலையரசும்வியத்தினுனு
மிலக்கினத்தேதுலக்கினபொன்னென்னத்தோன்ற
விரண்டையிருங்குருபார்க்கவிந்துபாக்யத்
திருக்கவந்தோன்பொன்கலத்திலினிதுண்பானுல்
திரண்டதலையரசுமுழுக்குருவுமைந்திற்
சிறந்திவரிலொருவருஞ்சஞ்சேரவெள்ளி
தெருண்டகனபாக்கியனுய்க்கேந்த்ரமேறச்
செழித்தவனும்பொன்கலத்திற்றினமுண்பானே. (1093)

தனத்தரசுதலைத்திருக்கப்பச்சைமாலும்
சந்திரனுங்கேந்திரத்தேதழைக்கப்பெற்றோன்
கனத்தவெள்ளிப்பாத்திரத்திலினிதுண்பானுங்
கதிர்முடிமேற்சந்திரனுங்கதிரும்வாய்க்கத்
தனத்தில்வெள்ளிபுதனிருக்கக்கிடைத்தோன்வெள்ளித்
தாலத்தினினிதருந்தித்தளிர்ப்பன்வெள்ளி
நினைத்தகருமத்திருக்கக்குருலாபத்தே
நிற்கவந்தோன்வெள்ளியினன்னீருண்பானே. (1094)

வெண்கலத்துமிலைக்கலத்துமரப்பாத்ரத்தும்
வெள்ளீயப்பாத்திரத்தும்மினிக்கிவாய்ந்த
மண்கலத்துங்குயக்கலத்துமுண்போர்க்கெல்லாம்
வரையறுக்கிற்பெருகுமெனமறுத்துவிட்டோம்
விண்கலக்குங்கிரகநாயகர்களின்ற
விதம்பார்த்துப்பதம்பார்த்துவெகுநாட்டொட்டு
மண்கலந்துபுதைத்திருந்ததனங்காண்பாரின்
வன்மையினையுண்மையினுல்வழுத்துவாமால் (1095)

கலி விருத்தம்

சுகனெடிலாபனுநிதியிற்ரேயப்பூ
மகனதைநோக்கினுல்வாய்க்குஞ்சேமமே
செகம்பொலியம்புவிசேய்தனன்சுகன்
மகம்பொலிதனத்துறவாய்க்குஞ்சேமமே (1096)

நிதிபதிசுகபதியாயநீண்பதி
பதிவுறத்தனத்திலேசுகனப்பான்மதி
துதிபெறநோக்கப்பொன்முடியிற்ரேன்றினுற்
பொதிவுறும்பெருந்தனப்புதையல்கிட்டுவான். (1097)

நிலவுசேய்க்கிலாபனுநிதிக்கிலாபனுங்
குலவுவான்குருவுமுக்கோணஞ்சேர்வுற
நலமுறுசுகன்றிரிநாதனேக்கினு
னிலமுறுபுதையல்கள்கைக்குநேருமால். (1098)

இலக்கினன்றலத்திலேயிருக்கவத்தனன்
றுலக்கியவிலாபத்தேதுலங்கலாபத்தன்
நலச்சுகனிருவருநண்பினேக்கினு
னிலத்துறுபுதையல்கைநேரவாழ்வனுல். (1099)

இவ்வகைக்கூறியவிலக்கணங்களுக்
கொவ்வொருபுறநடையுணர்த்துவோமிவர்
செல்வருக்கம்பெறிற்றிரண்டசேமமாம்
அவ்வவைமட்டெனிலற்பச்சேமமே. (1100)

## மிடறு மயிர்

அரவுடன்றனன்மரீஇயாறெட்டெய்துதப்
பரவியசேயுமட்டமனும்பார்க்கினும்
வருமதிக்கிரண்டிருமூன்றின்மன்னரும்
பரிவிதிக்கெட்டனுமிரண்டிற்பாயினும். (1101)

ஆறினுக்காறவன்றனற்கிரண்டவன்
வீறுறுசுகனுக்காறுடையவீரனும்
ஏறியட்டமத்துறுமெனினுந்தொண்டைக்குட்
டுறெனவுரோமங்கள்சுழன்றுண்டாகுமே. (1102)

## பல்

வாக்கிடைப்பாவியர்வளரப்பாவியர்
நோக்கினுமட்டமன்றனத்தனேன்பிலாப்
பாக்கியருடன்மரீஇப்பல்லைநோக்கினும்
வாய்க்குமேல்வளர்ந்துபல்வெளிற்றேன்றுமால் (1103)

வாக்கிறையாறிலேமயங்கச்சூரியன்
ருக்குறுமட்டமந்தாவினுலும்பாம்
பாக்கியசுகதலத்தையொப்போரொடு
காக்கினுங்டுக்குப்பல்காணுங்கண்டிடே. (1104

சுகத்திலேபாம்பொடுசுகனுஞ்சேரப்பல்
லகத்தவன்மதியுடனழிவுசேரினுஞ்
சிகைதலத்தாதித்தன்சேரப்பல்லவன்
மிகைத்தலம்புகினும்பல்பருத்துண்மேவுமே. (1105)

சூரியன்மங்கலன்சுங்கன்மூவரும்
பூரியவட்டமம்புகுதப்புந்தியும்
ஆரியன்றனுநீசம்பெற்றுலவன்
சீரியபல்லொளிதிகழ்ந்திருப்பனுல். (1106)

சொல்லிறையாறிறைதுட்டப்பாம்பொடும்
பில்லியபிணியிலேபுகுதநாலிலே

சல்லியனீசனுய்த்தங்கப்பெற்றவன்
பல்லிலேதந்தநோய்பற்றிவாங்குமே. (1107)

சொல்லிலேகரும்பணிசுழலவெட்டிலே
சல்லியன்பல்லவன்றரிக்கவாறிலே
நல்லியலாரியனண்ணவந்தவன்
பல்லிலேசிலவுடைபட்டுவீழுமால். (1108)

வாக்கிறையிரவியுஞ்சேயுமட்டமங்
காக்கநற்புதன்குருபங்கக்காடுறிற்
போக்குவன்பல்லெலாம்புதன்சிறப்பனேல்
வாக்கொளிசொல்வளமயங்குருதரோ. (1109)

## செவிநோய்

சோதிசேர்சேயொடுசொலுமிரண்டவன்
ஆதிமாமலையிடையமரத்தீயவற்
கோதுறுகண்களாற்கொதித்துநோக்கினுற்
காதுநோய்வலுத்திடுங்கண்டுதேர்தியே. (1110)

## வேறு

### கலி விருத்தம்

கும்பத்திற்புகார்நோக்கப்பிணியிலே
தம்பிக்காதிபன்ருழவித்தன்மைகள்
வெம்புச்சாவகன்பார்க்கில்வெதும்பிய
செம்பிற்காய்ந்துசெவிப்பிணிப்பற்றுமே. (1111)

ஆறிரண்டுக்கரசர்களட்டமத்
தூறவுட்பகையாய்ச்சுகனேக்குறிற்
தேறுங்காதிற்செவிப்பிணிப்பற்றியே
சீறும்வாட்டுஞ்செவிடும்படுக்குமே. (1112)

மதிக்கோராறவன்மூன்றவன்மாவலி
விதிக்கொன்பானவன்மூவரும்விம்மியே
துதிக்குங்கும்பத்திற்ருேய்ந்துறவந்தவன்
கதிக்குமோசையுங்காதிற்கொள்ளானரோ. (1113)

இரண்டுமூன்றிலிரவிபுகுந்தந்த
விரண்டுமூன்றவனைக்கண்டெதிர்த்திடிற்
திரண்டுமண்ணிற்செனித்தவன்செய்யநாச்
சுருண்டகார்ப்புச்சுவைவிருப்பாளனே. (1114)

முந்துரைத்திட்டமூன்ரோரிரண்டிலே
சந்த்ரனின்றந்தத்தானரைநோக்குங்கால்
வந்தபாலன்குளிர்ந்ததுவர்ப்புள
கந்தமூலங்கறிவிருப்பாளனே. (1115)

சொன்னதானங்கள்சேய்நின்றதானத்தர்
பொன்னின்மாமுகம்புக்குறத்தோன்றிடி
லன்னசாதகர்சீதளத்துப்படர்
மன்னலந்தருபண்டம்புசிப்பனே. (1116)

தானமுன்னேயசௌமியன்புக்கியத்
தானத்தாரிடைச்சார்த்திகண்ணேக்குமேல்
தேனளாயவறுசுவைச்சேர்க்கையின்
ஞானமுள்ளவனற்சுவையாளனே. (1117)

மூன்றிரண்டில்முதற்குருநின்றந்த
மூன்றிரண்டவர்தம்முகநோக்கினும்
ஆன்றநட்பிலமர்ந்திருந்தாலுநற்
றேன்றதும்பியதித்திப்புனுட்டனே. (1118)

சொன்னதந்தனத்திற்சுக்கிரனின்றதன்
மன்னனுர்மென்மலர்முகநோக்கிடி
லின்னவன்சுகநட்பிலிருக்கினும்
பின்னமானபுளிப்பின்பிர்யத்தனே. (1119)

தானமங்கவைசாவகனின்றந்தத்
தானத்தார்முகஞ்சாரவிழித்திடி
லீனமானகசப்பினினிப்புளான்
ஊனமானமதுக்களேயுண்பனே. (1120)

இன்னுமொன்றுளதெத்தலந்தோன்றினர்
அன்னதானத்தரசரைக்கண்டுநீ
இன்னவர்க்கிதுரித்தெனவெண்ணிமுன்
சொன்னநீர்மையிற்சொல்லுநிலைக்குமே. (1121)

## மாரக விதி

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

இரண்டிடமுமாரகமேயாதலாலே
யிதிற்சிலமாரகவிதியையியம்புகின்றேம்
தெருண்டநவிசேயாறேழெட்டின்மேவச்
செஞ்சுடரோன்மைந்தனதுதிருக்குப்பட்டால்
மருண்டவசூரிப்பிணியிற்சாவானென்றே
வழுத்துவார்புதனிரண்டினீசம்வாய்ப்ப
விருண்டசனிகேந்திரித்துப்பார்ப்பானுகி
விரணகளத்திடைமடிவனென்பர்நூலோர். (1122)

இரண்டேழுக்குடையவர்களிருந்தவீட்டோ
ரிவரைநெடுஞ்சனிபார்க்கிலிவரோபாவர்
திரண்டுவருநோய்களினுலுயிரைக்கொல்வர்
செயவிதிக்குவிதியாறேன்செறுத்துநின்ற
மருண்டசதிக்கொராறேனித்கேழாறேன்
வந்திடுங்காற்கொல்வரிந்தவண்மையாகத்
தெருண்டுவருமாரகரையிடத்தாற்கண்டு
செயலறிந்துமாரகங்கள்செப்பிக்காணே. (1123)

---

## மூன்றும் பாவகம்

விருத்தம்

மூன்றும்பாகத்தைநோக்கி மொழியும்வீரியம்போகஞ்சீர்
தோன்றிடுந்துணைவரோடுந் துலங்குமாபரணமேவற்
கேன்றவாளடிமையாதி யின்னவைவருதல்போதல்
ஊன்றியமுறையினுலே யுரைக்குவான்றொடங்குவோமே. ( )

## சுக சகோதரம்

### வெண்பா

ஏரகத்துவாழ்வுபெறு மென்குருவீரப்பழகில்
சீரகத்துவைத்த திருக்கருணை — நேரயான்
மூன்றும்பாகத்தை மொழியவவன்சீரருளே
ஊன்றுக்கொடுக்கு முணர்வு. (1125)

## சந்த ஓயிற் கும்மி

மண்டலந்தன்னிற்றிரிபாகந்தன்னை
வழுத்துவேனொயிற்கும்மியினால்
மருவொன்றியதுளவம்புனைமருமன்பதவுப்பங்கய
மாமுடிக்கேமுடியாகக்கொண்டே. (1126)

ஏழவன்நாவலன்கூடித்திரியிடை
யேகவத்தீரனுங்கண்டம்வர
எழிலந்தணனினிதைந்திடைநிலைநின்றிடவருவன்றுணை
யென்புதற்கையமில்லைகாணே. (1127)

சேய்க்குமூன்றவனுச்சம்பெறவதன்
றீரனுங்கோணத்திலேறிடவே
திரியின்றலமிறைவன்புதவதைநன்சுபர்விழிகண்டிடச்
செல்வன்றுணைவர்பலராமே. (1128)

திரியோன்கோணத்திலேறவேசேயுடன்
சிகண்டிசன்கூடிக்கண்டும்வரத்
திருமானிகர்துணைவீரர்கள்வருவாரெனநிறைவாயுரை
— செப்புவதற்குத்தடையில்லையே. (1129)

சுக்னுநிதியுமிலாபமுறவதன்
றுரையுமூன்றினிலேறிடவே
சுழல்சந்திரனழல்கண்டமுமெழுமன்றிருவிழிவந்துறிற்
சோதரர்பேதமிலாதவரே. (1130)

இராசிக்குமூன் றவன்மூன் றினைக்கூடியே
ஏறுறக்கோணத்திலேயதன்மேல்
எழில்வேதியன்விழிமேவுறிலழல்கோணமதுறினேவரும்
எண்ணியபுண்ணியசோதரரே. (1131)

## நிர்ப்பலித சகோதரம்

மூன்றிற்புதன்பனிரண்டிற்சனியுற
மூன்றுக்குமூன்றிடஞ்சூனியமேல்
முதிருத்தமவனுசற்கிறைவிழிபத்திவையெதினிற்கினு
மூன்றிருந்துங்கடைக்கொன்றிலேயே (1132)

சோதர நாயகன்சோதரகாரகன்
ஸ்ரேஷ்ச்சனியுடனேகலந்து
சுபமங்களதலநின்றிடில்வருவன்றுணையொருவன்படு
தோஷியிருந்தும்பயனிலேயே. (1133)

சோதரகாரகன்சோதர நாயகன்
றுட்டவட்டமங்கூடிநிற்கச்
சுடர்மாமுடியவனீசமுநிறைசோதரதலநாசமுஞ்
சோதரஞ்சொப்பனங்காட்டாதே. 1134)

மூன்றவனேயின்முழுகிவிடமூன்றுக்
கட்டமன்கூடமுளைத்துநிற்க
முதிர்சோதரதலசூனியம்வரவாதிபன்விதிமேவிடில்
மூவருஞ்சாவருமூன்றிலைவார். (1135)

மூன்றுடைப்பாம்புமுளைத்தாடவதன்
மூன்றிடஞ்சூனியமாய்க்கிடக்க
முதிருத்தமதுணைவற்கிறைகொலும்ட்டமன்வசமுற்றிடில்
முன்னிலைபின்னிலைசோதரரே. (1136)

மூன்றுக்கிறைவனிலாபமுறமூன்றுக்
காயுளன்கோணமுனைக்கேற
முடியாயுளனளிர்மாமதியவனோடுறில்வருவானோடு
முத்துணைவந்தொன்றுநிச்சயமே (1137)

திரியோன்சேயுடன்கூடிவியமதிற்
சேரச்சனியுமதைநோக்க
திரிவீடதில்விதிமேவிடவருசோதரருயிர்மாளுவர்
செத்துமிருந்தும்பயனிலேயே. (1138)

காரிரவியுமிலாபமுறவதைக்
கண்டிடவேவிதிநாதனிவர்
கனபாவியர்வருவார்வரிலுயர்கோருவர் நீசமேயிவர்
காட்டுக்கிறைத்தநிலாவாமே. (1139)

திரியுடன்கரிகூடிவியமேகச்
சேரவிதியுந்திரிமீதிற்
வசயலாலனேயுடல்வேதனைபடுவாளலதுளவோபயன்
தீவினையோர்துணையாகுவரே. (1140)

பத்தவன்மூன்றவன்கூடிவிதியேகப்
பதியனுஞ்சேயுங்கூடிடவே
பனியானதைமழையாமெனவுழவோர்துணிவதுபோலிவர்
பம்பியதம்பியைநம்புவதே. (1141)

ஆபரணம்

திரியிலேபுகரேறிடவேயந்தத்
தீரன்குருடன்பதியேக [ஞ்
வியன்முத்தணிரவியொத்தொளிர்மணிவச்ரமணிவர்நிச்சய
செம்பொன்னிலங்கியமேனியரே. (1142)

வேந்தன்றிரிதனிலேறப்புதனுடன்
மேவித்திரியோனுங்கோபமுற
மிளிராரலுமதுகாணிறமணிமாலிகைபுனைவாரிவர்
வெள்ளியைச்சுள்ளியொன்றுமதியார். (1143)

சாமியுடன்தனன்கூடியேகண்டத்தில்
தங்கிடமாலுமதைநோக்கச்
சரமாலிகைநவமாமணிபுனைவாரென்றடையோவொரு
சந்திரன்போலவிளங்குவாரே. (1144)

அம்புலிமூன் றினிலேகச்சுர்குரு
வைந்தினிலேகவிச்சாதகனுர்
அழல்போலொளிர்முழுமா மணியரிமாலிகையணிவாரென
அச்சமில்லாமற்கைபோட்டுரையே. (1145

பாம்புடனே திரிநாயகன்கூடியே
பாக்கியமாளிகையேறிடினே
பசுமேதகம்வைடூரியமணிமாலிகையணிவாரெனப்
பட்டயந்தீட்டிக்கொடுப்பாயே. (1146)

திரியினில்கேதுவேறிடவேயுந்தத்
தீரன் றனன்கூடிக்கோணம்வரச்
செம்மாமணிபொன்மாமணியெம்மாலையுமம்மாபுனே
செல்வனிவனெனச்சொல்லுவாயே. (1147)

வேதன்றிரியான்காமம்வரவதை
வீரன் திரியினிலேறிடவே
மிகவேபொருளுளனுயினுமணியாயினுமணியானிவன்
வீணுக்குப்பூணுக்குடையவளே. (1148)

ராசிக்குமுன்னேன்வியமேகவதை
நாடியேபூமனுநோக்கமிட
நானுவகைப்பூணாமுளானுயினும்பூணுனிவன்
நாய்க்குச்சலங்கையுங்கட்டானே. (1149)

திரியோனெட்டினிலேறிடவேயதன்
றீரன்குணத்தினிற்பாய்ந்திடவே
திருமாமணிமிசையாசைகளுடையானலதொருகாசிடைச்
செம்பொனணியவிதியிலனே. (1150)

சுங்கன்வியமீதிலேகிடவேய்ந்தச்
சூரன்றிரியினில்வந்திடவே
சுழல்வான்முனமுழல்வான்மனமழல்வானெருமணிபூணலன்
துக்கமயமாயிருப்பானே. (1151)

வீரியம்.

இதுவும்து

மூன்றவன்பாபருடன்கூடிவிய
மோதப்பதியுச்சமாகிடவே
முனைவீரியர்பொருபோரொருதினையாமென நினைவானிவன்
முதண்டகோதண்டவீரியனே. (1152)

பூமன்திரியவனுகிப்பெலன்கெடப்
புக்கிடப்பாபர்வியந்தனிலே
பொருவீமனும்வருகாமனுமிணையாமெனவுயர்வீரியன்
புண்ணியன்றிண்ணியன்கண்ணியனே. (1153)

சேயுடனேமதிகூடிவிய்மேகத்
தீரனுமாங்கதைநோக்கிடவே
திசைகாவலனிசைமேவியபுஜவீரியன்விசையாதிபன்
தேசம்புகழுஞ்செயவீரன். (1154)

அஞ்சவன்சேய்திரியாதியன்வேதியன்
மூன்றிடைக்கூடியினிதிருக்கின்
அதிவீரமுமதினுகமுநிதியோகமுமுதியோனென
வையமிலாமற்றெளிந்துரையே. (1155)

மங்களன்காரிகருமந்திரியினில்
மன்னவத்தீரனும்கண்டம்வர
மறுவீரருமுளரோவெனவரைகூறிடுநிறைவீரியன்
வஞ்சகர்நெஞ்சைப்பிளப்பவனே. (1156)

பரம்புடனேதிரிகூடிக்கோணம்வரப்
பார்த்திடப்பொன்னவருமதனைப்
பதிபெற்றுழல்திருடர்க்கொருபுலியொப்பவனரசர்க்கொரு
பட்சமிகுத்ததுணையாவன். (1157)

வீரியத்திற்சிந்தைகூரியன்கூரியன்
வேதியன்கோணத்தைமேவிநிற்க

வீதிமுப்பதியவரட்டமவிரையத்தலமுறவுற்றவன்
வீரியன்சூரியன்சீரியனே. (1158)

## அவ வீரியம்

புகர்தனன்றிரிக்கூட்டிக்கோணத்திற்
போகவைந்தோனுமதைநோக்கப்
புகனூலிடையதிவீரியனரிகூவினும்மருள்வான்மனம்
பூவின்மெலிந்தமனத்தானே. (1159)

ஆறவனுந்திரிபஞ்சமனுங்கூடி
யந்தமுடன்வியமேவிடவே
அரசானவர்சபைமேவினுமுறவோர்சபையிடைமேவினு
மச்சம்படைத்திடுகொச்சையனே. (1160)

அன்னைதிரிசேர்ந்ததிலொருகோணீச
மாகியட்டமனேக்கமிட
அதியேழையுமதிகோழையுமுடையார்களில்முதலாகுவன்
ஆந்தைகுளறிற்பயமடைவான். (1161)

## போகம்

ஏழினிலேகரும்பாந்தளிருந்திட
ஏழவன்கேந்திரமேறிடவே
இனிதாயிவன்மனையாளொடுமதநூல்விதிபுணர்லீலையன்
என்றென்றும்போகசுகத்தானே. (1162)

தனன்றிரிகூடிக்கோணமுறவிதி
தானேதிரிநின்றுநோக்கிடவே
தானேபிறர்மானுர்மனநோகாவணமேகூடுவன்
சந்ததங்காமலோலாதிபனே. (1163)

மதிக்குமூன்றிலேழோன்வரவேயதன்
மன்னனவனைவிழிநோக்க
மலைபோல்வளர்விலைமாதரின்முலையேசுகநிலையுமெனை
மயங்கிவீழ்ந்துகிடப்பவனே. (1164)

புகர்தனன்றிரிகூடிக்கோணமேகப்
பொன்னவனேக்கிடவேயிவனைப்
புணர்மாமுலைமடவார்பலர்தொடர்வார்சுகமடைவாரிவன்
பூங்கணைமன்மதன்பாங்குடையான். (1165)

## அடிமை

அஞ்சவன்மூன்றவன்கூடிடக்காரியு
மச்சமில்லாமற்றிரிக்கேக [ன்
அடியோர்பலகுடியோர்மிகுகெடியோர்துணையுடையானிவ
அண்டினபேர்குடிதாங்கிடுவான். (1166)

சப்தமனுந்தனன்கூடித்திரியினில்
தங்கவத்தீரனுச்சம்பெறவே
தலமீதிவன்விலையாகவேபலசேவகர்கொளும்வாழ்வினன்
சத்திரம்போலுமனையுடையான். (1167)

பாக்கியன்மூன்றவன்பத்தவன்கூடியே
பஞ்சமமேகப்புதனேக்கப்
பரதேசிகள்வருவார்களைநிறையாசையோடருள்கூறுவன்
பஞ்சத்தைக்கெஞ்சவடிப்பவனே. (1168)

சுகன்திரிபுதன்கூடிக்கண்டமீதில்
தோன்றிடநீசம்பெறவொருவர் [ன்
தொடக்காகியருலத்தோர்களையடிக்காளெனவதித்தோனிவ
சுந்தராஞ்சிதசற்குணனே. (1169)

## போகம்

மூன்றவன்சத்தமகேந்திரத்தேறி
முதற்குருவீட்சம்பெருக்க
வதிற்சத்தமன்மலையிற்றெருபுதனைப்புகரைவிழித்திடிற்
றுத்தினுமுத்தமிபோகனிவன். (1170)

மூன்றிடைக்காமனும்பாக்கியனும்புக்கு
முதுரைவேதியன்கண்கிடைக்கில்

முகமதியனையாரிருசுகமர்தர்கருட்பேர்கமு
முழுதுநாளுஞ்சுகிப்பவனே (1171)

## அடிமை

பஞ்சமன்மூன்றவன்சத்தமகேந்திரம்
பற்றத்தலைப்பதிபாக்யமுறப்
பரமன்றலையுறவைந்திடைவளர்சந்திரனுறவந்தவன்
படியிலடிமைநூறுடையான். (1172)

பாக்கியன்காரியன்மூன்றிலுறக்குரு
பார்த்துமனதுமகிழ்ந்திருக்கப்
பருலாபபதிசுகாலயமொருராகுடனுறிலோவிவன்
பாரிலடியர்பலருடையான். (1173)

---

# நான்காம் பாவகம்

---

## குரு வணக்கம்

*கலி விருத்தம்*

மாலாம்பாகவதர்க்கன்பன்சோதிட
மேலாம்பாகவதன்வீரப்பமுகில்
காலாம்பாகங்கருத்துளிருத்தியே
நாலாம்பாகநடத்துகின்றும்ரோ. (1174)

*அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

நாலதைநோக்கியன்னை நற்பலன்வாகனங்கள்
கோலவர்த்தகமும்வித்தை கூடியநிதிநிட்சேபம்
பாலுறுபசுநற்கன்று பரவிஷயங்களோடு
கீலமாந்தேவபத்தி சிறந்திடுமென்றுகூறே. (1175)

## மாதுரு பாகம்

நாலாதிபதியாட்சிநண்ணிமதிதிரிகோண
நயப்புற்றுலும்

ஆலோன்பாக்கியமேறித்தன்வீரனுன்கினிடை
யமர்ந்துற்ருலும்
மேலானதலைப்பதிநாலதிபனவமுற்றேழோன்
விழிபெற்ருலும்
பாலாவிம்மூவர்களின்ருயர்பரிபூர்ணுயுள்
பலிப்பரின்னும். (1176)

த்லையதிபதிபனுலதிபனென்றுபட்டுக்கோணமுறத்
தலைவன்கோண
நிலையதிபனின்ருலும்பெற்றதாய்பூரணமாய்
நிற்பளென்பாய்
நில்வினுக்குநாலவனுஞ்சுபபதியுமெட்டாதி
நின்றுகாரி
யிலகுமதியிருவர்விழிநோக்கடையிலன்னையுயி
ரிழப்பளன்றே. (1177)

சனிநாலினீசமுறவிதிவிழிக்கநால்திபன்
றசமுற்ருலும்
பனிமதிதேய்ந்தெட்டாறிலுறவிதியினுலதிபன்
பாய்ந்திட்டாலு
மநியாயமாயிவளையலறவிட்டுத்தாய்நமனூ
ரடைவளென்பாய்
இனியாறுநால்திபா்நிதியுறத்தாயேழுறத்தாய்
வேசையென்பாய். (1178)

நிதிபதியுஞ்சுகபதியுந்தலைப்பதியுநாலிடத்தே
நிற்கப்பொன்னேன்
பதியெனுமிலக்கினத்தைப்பார்த்திடினும்மதிசுகன்பொன்
பளிங்கிந்நால்வர்
துதிபெறக்கூடியராசிக்கதிபதினுச்சநட்பாட்சி
தோய்ந்திட்டாலும்
அதிகநிதிவாகனம்பொன்னுடைகிடைத்தரசர்சுக
மடைவர்மாதே. (1179)

சல்லியன்வந்துறுராசிக்கொன்பதுபத்தவர்கூடித்
தலைவனோடு
புல்லினராய்ச்சுகவீட்டிற்பொருதுறினுஞ்சுபன்பாக்யன்
புகரிம்மூவர்
சொல்லுமதிகேந்திரத்திற்றேயவந்தராசியோன்
சுகத்தினண்ண
எல்லையிலாப்பொருள்பூமியேவல்படைத்தனந்தசுகத்
திருப்பர்மன்னே. (1180)

தனபதியுஞ்சுகபதியுநிதியினுறக்குருநிலவுக்
கிரண்டிற்சார்ந்தும்
அனைமனையிற்றனனுறையவவன்மனையிலனைமாறி
யமர்ந்துநல்லோர்
சினமறுநோக்கடைந்தாலும்பத்தொன்பான்மூன்றவனுந்
திரியிலேறி
வினைநலத்தோர்நோக்குறினுமிம்மூன்றுசாதகரும்
வித்வவேந்தே. (1181)

நாலிடமேசுபர்வீடாயதற்குரியோன்குருவுடனே
நவனைக்கூடி
ஞாலமகன்பார்வைபெற்றுநின்றாலுஞ்சுகன்பாக்ய
னயந்துகூடிக்
கோலவியற்கீரிரண்டினின்றாலுமதிக்குவிய
னுச்சங்கூடி
நாலவனைமூன்றவனைக்கலந்துவிரையற்குவிய
நண்ணினாலும். (1182)

சொல்லியவிச்சாதகரோர்மூவர்களுங்கருங்கல்செங்கல்
சுண்ணச்சாந்து
மெல்லியநுண்களபச்சாந்திட்டகெட்டிமாளிகையை
மேவிவாழ்வர்
அல்லதின்னும்விரையனுடனெத்தனைபேர்கூடினுமத்
தனைவீடுண்டாம்

வல்லவமாக்கிரகநின்றநிலையறிந்துபலனிவற்கு
வழுத்துவாயால். (1183)

நாலாதிபதியஸ்தம்பகையடையவிதிநோக்க
விரையனுலின்
மேலாகவரினுமதிக்கெட்டிறைவனுலிறைவன்
வெள்ளிகூடி
வாலாயமாய்நாலில்வந்தாலுநாலிடத்தின்
மருகிற்பாபர்
கோலாலமாய்ச்சூழ்ந்துநோக்கிடினுமின்னமுங்கேள்
கூறுவோம்யாம். (1184)

சந்திரற்குநாலிடத்தில்விதிமேவியனேக்கஞ்
சார்ந்திட்டாலும்
இந்தவகைநான்குடையசாதகர்க்குங்குச்சின்மனை
இருக்குமன்றேல்
சொந்தமனையின்றியயல்வீட்டிருப்பரொழுகிடத்திற்
றாக்கமின்றி
நொந்திருப்பர்சத்திரமடாலயத்திற்குச்சிலிடை
நுணங்கிவாழ்வர். (1185)

ஆட்சிபெற்றசந்திரனைச்சுகன்புகர்கூடிடப்பொன்னே
னவரைநோக்க
நீட்டியுடற்சேதாவின்பாற்குடிப்பனுலிடத்தோ
னிலவினுலோன்
மாட்சியுறும்பஞ்சமத்திற்சுபர்காணமேவில்வெள்ளை
வண்ணமான
காட்சிதருசுரபியின்பாற்பெருமிவற்குவற்சையும்பால்
கறக்குமாதோ. (1186)

அன்னையோன்சுபனுகியைந்திடையேறிடப்புகரோ
டைந்தோன்கூடி
மன்னியநாலிடையுறினுமறையவனுநாலவனு
மதிக்குநாலிற்

றுன்னவந்தப்பதியவனுன்கிடைமருவிநின்ருலுந்
துகடீர்கற்ருன்
பன்னிறத்தவாயிவர்தந்தொழுவினிடைக்குழுவினெடும்
பலிக்குமன்னே (1187)

இரவியுநாலாதிபனும்பத்திலுறத்தாய்வீட்டி
லெட்டோன்மேவிக்
கரியவன்கண்ணேக்கடைந்துநின்ருலும்பிறைநர்லோன்
கருமனேக்கம்
கரவடைந்துமூன்றிடத்தினின்ருலுமதிப்பதியோன்
கருமன்ருவிப்
பெருகியநாலுக்காறினிற்கமதிவிதிநான்கிற்
பிணிப்புற்ருலும் (1188)

ஐந்திறைநாலிறைபிருகுமூவர்களுநின்றமனைக்
கதிபரெல்லாம்
வெந்துபுகைநீசமத்தமனமுதலாங்கேடடைந்து
மெலிவுற்ருலும்
இந்தவகைநான்குடையசாதகர்வான்கபிலையைநே
ரெய்திருலும்
பிந்துவும்பால்கிடைப்பரிதென்ருலிவற்குப்பசுபலிதம்
பேசற்பாற்ரே (1189)

சந்திரனுந்தாய்வீட்டுக்குரியவனும்வலியவராய்த்
தாய்வீடெய்தி
யந்தணனிலாபன்விழிபெற்ருலுநிதிப்பதியோ
டசுரர்கோமான்
வந்தனைவீடுறவிதன்கோணுயமுற்றுச்சுபர்நோக்க
மருவிருலும்
ஐந்தவனுநாலவனுமாறிநிற்கக்குருவேழி
லிமைந்துற்ருலும். (1190)

ஒன்பதிலேநாலதிபன்புகர்நோக்கம்பெற்றுநிற்க
வொன்பான்வீரன்

பின்பதிலேமாறிநின்றுசுபர்நோக்குங்கிடைத்தாலும்
பேரானந்தம்
என்பதிலேயிந்நால்வரிந்திரனையொத்திருப்ப
ரிதுவுமன்றித்
தன்பதிலேசாயுறினும் பிறர்பதியிற்புகுந்துமின்பந்'
தழைப்பர்மன்னே. (1191)

பனிரண்டினலவன்போய்ப்படுக்கமதிக்கொருநாலோன்
பகைநீசம்பெற்
றனியாயமுறினுமதிக்கனைமலைக்கனைபகை
நீசமாகித்
தனிநாலில்விதியுறினுஞ்சனிநாலுற்றவ்விறையி
ரவியைச்சார்ந்து
முனிவானநோய்விழுந்துவிதிநோக்கப்பெற்றிடினு
மொழியக்கேண்மின் (1192)

அவ்வகையமூவர்களுஞ்சுகமிருந்தவூரிலிருந்
தறியார்பின்னும்
செவ்வியநற்சுகம்பிறராற்கிடைத்தாலுஞ்சுகித்திருக்கத்
தெரியாரின்னும்
ஒவ்வியனுப்வித்தாலுமுளத்துயரான்மறுப்பர்சுக
முண்பாரைக்கண்
டெள்வியமுற்றுளம்வேவரகத்திடையேசுகத்தைநினைத்
தழல்வாமன்னே. (1193)

---

## ஐந்தாம் பாவகம்

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அருமறையினுட்பொருட்கு:மெய்ப்பொருளைச்சொற்பொருளா
லருளிச்செய்த
குருமறைவிலாமலன்பாக்கிருமறையிலிருந்துவரங்
கொடுக்கும்பெம்மான்
திருமறையேவடிவாகச்செழித்ததிருவேரகத்துச்
செல்வன்நன்னூல்

வருமையினறைவடித்திங்கெனக்கருள்வீரப்பமுகில்
மலர்த்தாள்வாழ்க. (1194)

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

அஞ்சின்பாகத்திலேதாமாதரித்திடுந்தெய்வங்கள்
கொஞ்சியபிதிர்பாகங்கள்குலவியகருமம்பின்னும்
மிஞ்சியயோகத்தோடுமிகுபரவிஷயங்கூறத்
தஞ்சமென்றுசான்பாதஞ்சார்ந்துநின்றிறைஞ்சுவேனே.

## தெய்வ வழிபாடு

கட்டளைக் கலிப்பா

அஞ்சிடைப்புருடகிரகமேவிட
லவர்களைப்புருடகிரகநோக்கிடப்
பஞ்சமன்னெற்றைராசியிலேறிடப்
பாலனுண்டெய்வம்பாடிப்பராவுவான்
பஞ்சமுக்குமமாயதிற்பெண்கிரகம்
பதியப்பெண்கிரகம்பார்க்கப்பெண்டெய்வத்தைத்
தஞ்சமாய்ப்பணிவன்கதிர்வீட்டிற்பஞ்
சமன்புகச்சவிதாவறைநோக்கவே. (1196)

ஐந்தெழுத்திலமர்ந்திடுந்தேவனை
யடிவணங்குவன்ஐந்திடைவெண்மதி
வந்தவ்வீரன்செவ்வாயுடன்கூடிட
மஞ்ஞையூர்தியைவாழ்த்துவன்பஞ்சமன்
புத்தியோடிடமாறியிருக்கினும்
புதனைந்தோனைப்புரிந்துகண்ணோக்கினுஞ்
செந்திருப்பெண்மணந்தமணாளனைச்
சித்தமாளிகைவைத்திருப்பானரோ. (1197)

பொன்னனைந்துறவவ்விறைகன்னியாம்
புதன்பதிக்குட்புகப்பெற்றசாதகன்
கன்னியாயிருந்தேபலகோடி
சகங்கள்பெற்றகௌரியைப்போற்றுவன்

சென்னிநாதனும்பஞ்சமனும்பகை
சிறந்துகாம்மாந்தீநெறிசேர்வரேல்
இன்னவன்றெய்வமென்பதொன்றில்லையென்
றென்னியோதும்மிடும்பக்கசடனே. (1198)

## புத்திர லாபம்

### வேறு

*அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

சனியுடன்பஞ்சமன்கூடித்திரியிலுறப்பொன்னெடுபஞ்
சமனட்பாகி
இனியநிதிமேலுறவிச்சாதகற்குக்கடைக்காலத்
தெய்தும்பாலர்
புனிதகுருபஞ்சமனுங்கேந்திரிக்கத்தீயரஞ்சிற்
புகுதப்பெற்றால்
வனிதையர்கள்பழித்தகிழவயதிலேபுத்திரரை
வாய்ப்பனென்ப. (1199)

சூரியனும்பஞ்சமனுஞ்சனிவீட்டிற்புகுந்துமந்தத்
துட்டனேக்க
நேரிடநின்றால்வெளியில்விளம்பவொண்ணுவழிப்பட்டா
னிலைக்கும்பிள்ளை
பாரின்மதிவிதிநாதன்பஞ்சமனிம்மூவருஞ்சேய்
பதியின்மேவிக்
காரிகுசன்பார்வைபெற்றுநின்றாலுமுன்னுரைத்த
கருத்தேகொள்க. (1200)

நாலவனுமைந்தவனுந்தந்தமில்லமாறிநிற்க
நாலுக்கைந்தோன்
சீலருடன்கலந்தாட்சிபெறமேருகேந்திரிக்கத்
திங்களாயப்
பாலனுகவிரையபதிபாக்யபதிகேந்திரத்திற்
பாயவாக்கோன்
கோலசந்த்ரகேந்த்ரமுறப்புத்திரபௌத்திரருடனே
குலவிவாழ்வர். (1201)

பொன்னவன்மூன்றுறமூன்றேன்பஞ்சமனேநோக்கமதி
யிரண்டிற்புக்கு
நன்னலவர்நோக்கமுறிற்புத்திரரைமிகப்பெறுவர்
நவராசிக்குட்
பன்னுமைந்தோன்புகுதவந்தராசிக்கோன்பஞ்சமத்திற்
பாயவாறின்
சன்னிருக்கவாறேழுபுத்திரரைநிலேப்பரெனச்
சொல்வரான்றோர். (1202)

சந்திரபஞ்சமனுடனேதனபதியுங்கூடியைந்திற்
சாரவைந்தோன்
சொந்தஉச்சம்பெற்றுநல்லோர்பார்வையுங்கொண்டாற்சுகு
சுதரைச்சேர்வர் [ணச்
ஐந்தவனுமிரண்டவனுஞ்சுகனுமூன்ருமிடத்தி
லமர்ந்துவேதன்
சுந்தரக்கண்பெற்றுநின்ருல்மக்கட்பேறுபெற்றுச்
சுகிப்பர்மாதோ. (1203)

பஞ்சமனுநாலவனும்புதனுட்சியுச்சமதிற்
பாயவேழோன்
செஞ்சுடரோனேடுகூடியாட்சிபெறவிதிநாதன்
சென்னியேறக்
கொஞ்சுபுகர்சந்த்ரகுருதிரிகோணகேந்திரத்திற்
குவலமாலோன்
விஞ்சைவல்லோன்மனேக்கிருக்கயௌவனத்தேபுத்திரரை
மேவுவாரால். (1204)

## புத்ர ஹீனம்

ஏழதிபன்பாபருடனேந்திலுறநிறையிருந்த
சேய்சுன்னேக்கின்
தாழும்வியத்தைந்ததிபன்விழப்பாபர்நோக்கவைந்திற்
பாம்புசார்ந்தும்
வாழுமதிபொன்னிவற்குப்பஞ்சமத்தோனத்தமன
மருவவைந்தோன்
பாழடைந்துநீசமுற்றக்காலுமிவர்பிள்ளேயிலாப்
பதடியென்பர். (1205)

பொன்னவனேழவனைந்தோன்மேருவிவர்பலவீனம்
பொருந்தினாலும்
மன்னுசுகன்பஞ்சமத்திலுறவேருவிதியிவர்க்
ளெட்டிற்பாய்ந்து
வின்னமுறுதீயர்விழிப்பட்டாலுமிரண்டுநா
லேழெட்டாதி
மன்னர்வியமுறவிழிஞர்கண்டாலும்பிள்ளைபெரு
மலடராவர். (1206)

பெற்றுலும்வானரம்போற்பேயேபோற்பெறுவர்பெற்றுப்
பேறதென்னும்
முற்றுதகன்னிதலையாகிமீனத்திரவி
முதிர்சேய்கூடப்
பற்றுதகாரியைந்தினின்றுலுமைந்தொன்பான்
பதிகளேழில்
உற்றுதிச்சனிவிதிகண்பட்டாலும்பெற்றிழப்ப
ருண்மையாமால். (1207)

செங்கதிருநிதிபதியுநட்புடனேபஞ்சமத்திற்
சேர்ந்துநாலோர்
துங்கவிழிநோக்கருளப்பெற்றுலும்பஞ்சமத்தோர்
சுபனேயாகி
யங்குசுபருடன்கூடரவிசுபரோடுடன்கூடி
நட்பிலாகத்
தங்குசுபரைந்திடத்தினிறைந்துமிகுகருணையொடு
சார்ந்திட்டாலும். (1208)

சரமதனிலிரவியுடன்பிதிர்க்கிறையுந்தங்கவந்தச்
சரத்துநாதன்
திரமதனிற்றிரிகோணமுறவவனைக்குருநோக்கஞ்
செழித்துற்றுலும்
இரவதிபற்கோன்பதின்கோலுச்சமுறத்தலைகோணத்
தேகநாலோன்
விரவியநீசத்தடைந்துமிந்நால்வர்பிதிர்நெடுநாள்
விளங்குவானே. (1209)

உதயனெடுபஞ்சமனும்பகைநீசமுறக்காரி
யொன்பானேக்கிற்
பிதிர்மடிவனிம்மகவைப்பெற்றதாய்கைகொடுத்துப்
பிணியாற்போவன்
நிதிசனிபோய்விழியில்விழப்பஞ்சமனிரவிவியத்தே
நிற்கிலந்தோ
கதிர்மணிபோலிருந்ததந்தைநமனுலகம்புகவிளஞ்சேய்
கலங்குவானல். (1210)

இரவிமதியுஞ்சனிவீடெய்தவந்தப்படுபாவி
யிவரைநோக்க
அருகியணைநிதியதிபர்பகைவீட்டில்மறையவிவ
னன்னைதாதை
யிருவரும்போயொழிவர்மதியிரவிநாலொன்பதிறை
பகைநீசத்தே
மருவியஸ்தாங்கிசமேறின்மாதாவுந்தாதாவு
மடிவாரென்ப. (1211)

பதினன்குசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

சுகனுமைந்தவனுமட்டமம்வியத்திற்
றெலைந்திடவப்பதிநாதன்
றெண்டுபுக்கிருக்கக்கருமனுரோகன்
துணையுற்றுக்காமத்திற்றேயின்
மகனிருந்தப்பன்கடன்செயாணைந்தோன்
மறவனுய்ச்சுகத்திடைநீசம்
மருவவந்நாதனிதித்தலம்புகுத
மலையவன்பகைபணிகூடச்
சகமிசைப்பிதிர்க்குத்தீக்கடன்செய்யான்
றுவுபட்டைந்தவனிதியோ
தர்மகர்மாதிபதிக்குவிரையத்திற்
சரித்திடச்சேய்புதன்கருமம்
புகினுமைந்தவனுமிரவியுமெட்டிற்
போயதனிறைகர்மமுறவப்
புரவலன்வியத்தேமருவினுங்கருமம்
புரிந்திடார்நெடுந்திசைபோவார். (1212)

மறையவன்மாலோன்மழைக்கிறைமூவர்
மருவினர்பஞ்மமல்க
மலையவனிதியன்கூடினர்நான்கில்
வதியவப்பதியிறைவரைமேல்
உறையவாய்த்துடையோன்சக்கரதரனு
யுலகினையாண்டுதன்மகனுக்
குறுதிசேர்செல்வபாக்கியங்கொடுத்தாண்
டும்பர்வான்பெரும்பதமுறுவான். (1213)

இறையவனைந்தோனுென்பதோன்கூடி
யேறினர்பாக்கியத்திருக்க
இனியகீர்த்தியினட்போடுங்கிரியி
லிருந்திடக்கிடைத்தவன்யோகம்
நிறைமதிசெல்வம்பரிகரிசிவிகை
நிதிவினைநிலங்கள்மெய்யடிமை
நீட்டியகீர்த்திபிதிர்தெய்வநேய
நிலைத்திடநிலத்திடைவாழ்வன். (1214)

---

## ஆறும் பாவகம்

*அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

ஆறினைநோக்கிப்பாரி லருங்கடன்பகைதாயத்தா
ரேறியசத்ருபீடை யிகழ்ச்சிதண்டனையுரோகம்
மீறியவிரணகாயம் வேதனைபலவுமெல்லாம்
கூறவீரப்பநாமக் குருபதம்வணங்குவேனே (1215)

*பதினான்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

விரையனார்விழியின்மீதிலேறிடவவ்
வீரனேயடையவொன்பதோன்
மெலிவுபெற்றுவிடினும்பிணிக்கிறைவன்
வீறுகேந்திரமுமுச்சமாம்
புரையின்மேவநவநாயகன்விரையப்
பூமியேகிடினும்விரையனார்
பூதராதிபனுடன்கண்மேவநில
வுக்கிரண்டிறைபுலைப்படின்
உரைசெய்சந்தரதனவிரையன்மேருவிற்
வுபயநாதன்மதிரோகவீ
டுற்றிருக்கினும்வட்டமாதிபனு
மொன்பதாதிபனும்வியமுறப்
பரவுமப்பதியன்விழியின்மேவினு
மிலக்கினாதிபதிவிழியினிற்
படியவேழவன்வியத்திலேகமதி
ரோகனுச்சமதுபாயினும். (1216)

நிதியுரோகனொடுகூடியுச்சமுற
விரையனீடுதனமேறினும்
நிருபசாமிவிதிமருவுகாமிவிய
நிலவுரோகனுச்சமாயினும்
அதியுரோகனொடுதனன்வியத்தினிடை
யுச்சமாகியினிதமையினும்

அரியரோகனெடுநிதியுமுச்சநெறி
யாய்வியன்சுகமதேகினும்
முதிரவேயுரைசெய்பதினொராடவரு
மொய்த்தவெங்கடனின்மூழ்குவர்
முடிவுநாளளவிறுத்திடாதிருண
பாதகத்தொடுயிர்முந்துவார்
திதியிருந்ததுதொலைத்துமைந்தனிவ
ரிருவுகைக்கடமைதீர்க்குவன்
செத்தபின்புகடன்விட்டதென்றுலகு
செப்புமாறுவிதியுடையரே. (1217)

புதனுமாறவனுநிலவுமேருவுறப்
புனலவன்கணதுபுக்கினுர்
புகலுமான்குறியில்விரிவுலாயபல
புண்ணடைந்துயிரிழப்பனுல்
மதியுரோகனெடுகாமிமூவர்விதி
மன்னவின்னலினர்நோக்கவே
மைந்தன்மேனிமிகுபுண்களாகிமனம்
வாடுமென்பர்மறைவல்லுநர்
விதியிலேசுகனும்ரவியுமூன்றவனு
மேவநீசமுறநாலவன்
வீறுமார்பிரணநோயினுலுயிர்
மெலிந்துசாவனெனவிள்ளுவார்
துதிகொள்மேருவிலுரோகமுச்சமுற
மேருநாதன்விதிதோயவே
தொந்தமேகரணவந்தனுகியுயிர்
துஞ்சுவானெனவழுத்துவார். (1218)

இர்விரோகபதிலக்கினுதிதிரி
கோணமேறவதனிறைவனுர்
இழிவடைந்துவிதிவிழவுடைந்துசுர
ரோகமேயுயிரிழப்பனுல்
பெரியமேருபதிசுகனொடேவிதியு
மட்டமத்தினிடைப்பின்னவே
மழைபெறக்கொடியவுதரநோயுயிர்
பிரிந்திடப்படுவனென்பரால்

அரசனேடுவிதியாறிலேறியுற
வந்தனங்கவரைநோக்கவே
யையநோயடைவன்வெள்ளிலக்னபதி
யட்டமத்திலுறவட்டமன்
உரைசெயேழிலுறமேகநீரிழிவி
னுயிரிழப்பன்விதியாவினே
டொன்பதேறவழல்மலையினீசர்விழி
யுறிலிறப்பர்குருநோயினே. (1219)

மலையிலேசனியுமட்குசந்திரனும்
வஞ்சரோடுபுகவாறவன்
மருவவொன்பதிடைக்குன்மநோயின்மிகு
வாதைபட்டுழல்வன்மண்ணிலே
நிலவினுரதிபன்மூன்றிலேறரவி
நிலமகன்கண்ணடிதுய்க்கினும்
நெடுவியத்திலிருமூன்றவன்கொடிய
நீசமேவமலைநாயகன்
இலகுமெட்டினிடைமேவினுஞ்சதி
யிலக்கினதியொடுமூன்றவ
னெய்தவேசனியனேக்கினுநிதி
யிறைவனுச்சமுறமேருவோன்
கலகநோய்மனையிலெய்தினுமிவர்
நால்வரும்திடசரீரராய்க்
கனவிலும்பிணியுமகலுமின்றுசுகக்
கவினராகியுயிர்வாழ்வரே. (1220)

சட்டன்மேரிரவிகைமைநீசமுற
வஞ்சர்தஞ்சிரசிலேறினும்
தனவுரோகன்மதிகேந்திரத்திலுற
வீரியன்பிணிதணிக்கினும்
கொட்டவக்ரனெடுதனனுமந்தனது
கோணமேறிடினுமேருவிற்
கொடியரோகனுறவதனிராசனிழி
நீசமானமனைகூடினும்
தொட்டநால்வருமுடன்பிறந்தவர்கள்
துன்னுதாயமுரியோர்களாற்

தொந்தமானபகைகொண்டுநேர்வரினி
வேறுகூறுதறுணிந்துமால்
இட்டவன்னைவிதியாறிலேறவிவ
னறவினேடுசுகமேறினும்
இலக்கினுதிபன்வியத்தில்வீழவத
னிறைவன்ஒன்பதுறவொன்பதோன். (1221)

மெலியரோகபதியுச்சமேறினுமிவ்
விருவர்சாதகருமரசனுல்
வெஞ்சிறைப்படுவர்விடுதலுண்டென
விளம்புதற்குமிடமில்லையால்
வலியவேறுசிலகிரகநாதரருள்
வரவுகாலமதையுன்னியே
வழுத்துவாய்சிறைவிடுக்குநாளவை
வரப்பெருரெனில்முகிழ்த்துவாய்
ஒலியபாடலுடனுறுபாகமு
முரைத்தனமிதுவரைப்பதோ
உங்கள்புத்திகொடுநன்கியற்றுத
லுமக்குமிக்கபுகழ்நல்குமால்
கலிகடற்புவியின்முறைமைபெற்றுநிறை
கணிதவுத்தமனூழ்வழிக்
காட்டுசத்தமவிதிக்கொள்பாமுறை
களறுவான்றுணிவுகொண்டனம். (1222)

---

## ஏழாம் பாவகம்

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

சத்தமபாகநோக்கிச்சாற்றுபலன்களாவ
நத்தியமனைவிசெட்டுநன்மணங்கூடுங்காலம்
எய்த்துறுமரணகாலமின்னணமுன்னூல்சொன்ன
பத்தியினுசான்பாதம்பரவுதுபகர்கின்றுமால் (1223)

பதினான்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பத்தினேனென்பான்பதியினேனைந்திற்
பாய்ந்திடவொன்பதைப்பாபர்
பார்த்திடாதிருக்கச்சத்தமன்சுபமாம்
பதத்துறவாய்ப்பினுநிதியிற்
சுத்தனும்வெள்ளியெய்திடத்தனத்தோன்
சுபனுமாயுச்சனுமாகித்
துலங்குறவேழோன்மூன்றிடையிருந்து
சுகிக்கினுமேழிடைத்தீயோர்
நத்திடவேழோன்ஒன்பதிலிருக்க
விரண்டவனேன்பதினணினும்
நளிர்நிலாக்கிரியிற்சுங்கனுக்கேழோன்
நற்றிரிகோணமாயிரண்டை
யுத்தமரன்றிப்பாபர்நோக்காம
லுறினும்வாக்காதிபன்மூன்றி
லுலவுறமூன்றோன்சத்தமத்தேக
வொன்பதோன்சுகனைநோக்குறினும். (1224)

சுகமதினேழோனிற்கவச்சுகத்தோன்
சந்திரவியனேடுதோய்ந்து
துனியிலாதொன்பான்மேவினுஞ்சந்த்ர
சத்தமன்றுவனிவர்கூடிப்
பகைபெறுத்திரிகோணத்திடைவியாழன்
பார்வைபெற்றிருக்கினுமூன்றிற்

பரவுமேழதிபன்சந்திரற்கேழோன்
பார்வைபெற்றிருக்கினுமிந்தத்
தகைமைசேரெண்மர்மரணநாளளவுந்
தாரமொன்ருகவேவாழ்வர்
சக்களமனையார்வருகையெடுத்துச்
சாற்றுவான்றுணிந்தனமிலாபன்
தொகைபடவேழோனிரண்டிடைமேவ
லாபத்திற்ருண்டவன்வெள்ளி
துரோகரோடமரத்தாரமூன்றெய்திச்
சுகிப்பரென்றுரைப்பர்நூறுணிந்தோர். (1225)

சந்திரற்கேழிற்சனிவரத்தீயோர்
தனத்துறலாபனும்புகரும்
தலமொன்றிற்கலந்தாற்றூரநாலென்ப
சத்தமத்திடைவிதிசாரச்
சுந்தரமதியுந்தனனுமிலாபந்
தோன்றிடச்சுக்கிரனுடனே
தோய்ந்தவர்தொகையையெண்ணியேதாரத்
தொகைசொலலாபதானத்தின்
மந்தன்மாமழைக்கோள்சப்தமன்மூவர்
மருவிலாபத்துறலாபன்
வாக்குறீஇச்செவ்வாய்நோக்குறீஇநிற்க
மனையவள்மூவரென்றுரைப்பார்
இந்துவுக்கேழோன்றனதிலாப
னிவரொடுமூவருமிணங்கு
மெழிற்புகர்க்கிலாபத்துறமனைநன்கென்
றியம்புவர்வியன்புவியறிஞர். (1226)

சீதகனுடனேசேர்ந்தவரன்னுன்
றிருக்கிடைப்பட்டவர்தொட்போ
திருத்தொகைகூட்டிமனையவளிலக்கஞ்
செப்புவரப்படியுரைக்கும்
போதவர்யோகமுடனவயோகப்
புணர்ப்பையுந்திசையொடுபுசிப்பின்

போக்கையுங்கிரகர்நோக்கையுங்கண்டு
பூவைவார்தொகைபுகலுவரால்
பாதகப்புணர்ச்சிவகையினியுரைப்பாம்
பாபர்களேழிடையேறப்
பாவியாயேழோன்பாபரோடிணங்கிற்
பார்மனைத்தொடக்கிடைப்படுவன்
ஓதுமேழிடத்தேலாபனும்புகரும்
உறினுமப்புகரரவேழோன்
ஓரொருமூவரொன்றியேசுகத்தி
லோங்கினுமயற்சுகமுண்பன். (1227)

சுங்கனுக்கேழோன்சத்தமன்செவ்வாய்
சோமனுக்கேழிடத்துறினுந்
துணைக்கைநாயகன்சத்தமன்றனக்காறிற்
றுயர்ச்சனிநோக்கடைந்தாலும்
மங்கலன்வெள்ளியேழிடத்தெய்த
வேழவனுறிடைவரினும்
வழுத்துமிவ்மூவர்பரத்தையைவிதவை
மாதரைநீசமங்கையரைத்
தங்குலத்துதித்தகன்னியர்தம்மைத்
தழுவியேசுகமனுபவிப்பர்
சாதகர்தமக்குவிவாகமாங்காலஞ்
சாற்றுவோம்சத்தமன்றனவான்
வெங்கவியுடனேமதிக்கிரண்டேழில்
பத்திடைவிரவினுரிவர்தம்
விழிப்படநின்ருர்தந்திசைபுத்தி
மேவுங்கால்மங்களமாமே. (1228)

வத்தகப்பலிதம்பகருவாம்நாலோ
னிதியவன்மலைமிசையேற
மலையவனுச்சமாயுறிற்கெம்பு
வச்சிரமுதன்மணிவிற்பன்
சத்தமன்கிரியோன்மூன்றினிலேறித்
தருமனேக்கடைந்திடின்மணிகள்

தங்கம்பொன்னுடைவிற்பனுலேழோன்
சந்திரன்வாகனன்கோண
மொய்த்துறிற்பரிமாவிற்பன்மங்கலற்கு
மேழதிபன்நாலிடத்தே
முதிர்வியனிருவரிலாபனேக்கடைந்து
முந்திவீற்றிருந்திடிற்றவசம்
வித்தினம்விற்பனுலவனேழோற்
கட்டமத்தலத்திடைநீச
மேவினுநாலேழ்வியத்துறவியன்வாக்
குறிற்புலால்விறருவிற்பாரால். (1229)

மாரணகாலத்திசைபுத்திவிவர
மலர்மிசையடனுக்குமரிதாம்
மண்ணிடைச்சிறுவேன்சொலவெற்றேமுன்னோர்
வழுத்தியமுறைகொடுதுணிந்தேன்
தாரகனுனசத்தமன்மூன்றி
லல்லதுசந்திரற்கெட்டிற்
றங்குறிற்சத்தமாதிபன்றிசையிற்
சாற்றுவர்மாரகமேழோன்
ஏர்தனனுகியாறிடைக்காரிக்
கெட்டவனுகவீற்றிருக்கில்
ஏழவன்றிசையேமாரணமென்ப
ரிவ்வழிவினையங்களெல்லாம்
சீர்பெறவிடுத்தசக்கரபலமும்
சிறப்புறுமட்டமப்பலமுந்
தெறுநெருப்பாற்றிற்கிடுமயிர்ப்பாலஞ்
சேறல்போற்செப்புவரறிஞர். (1230)

---

## எட்டாம் பாவகம்

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

அட்டமபாவகப்பலனுலாயுட்டன்மை
யக்கிரமச்செய்கைகுணமறிவினங்கள்

துட்டமரணங்கள்பிணியிரண்டுநோய்கள்
தொடரரசதண்டனையித்துறைகள்கூற
மட்டலர்பூஞ்சோலைகுலாங்குடந்தைவாழ்வோன்
மாமனுமல்லாற்குருவாயெனக்குவாய்த்தோன்
தொட்டபுகழாளன்வீரப்பநாமச்
சுந்தரன்றருள்மலரிணைகடுணைக்கொள்வேனே. (1231)

## குணாதிசய விதி

அட்டமபாகப்பலனைக்கூறலுற்ற
மந்தணனூர்விதியிடத்திலமரப்பாக்யன்
தொட்டசந்த்ரகோணமுற்றுநீசம்பாய்ந்த
துட்டவட்டமன்பார்வைத்தொடக்குற்றாலும்
இட்டவனைக்கிறைவனுறிடத்திலேற
விதற்கிறைவன்மெய்த்தசத்திலிருந்திட்டாலும்
கிட்டியுச்சத்தாறவன்போய்க்கருமன்காரி
கெட்டவியம்புகுந்தாலுங்கேண்மினின்றும். (1232)

மறையவனூர்சுகமேவக்கருமனோடு
மதிகருமன்வியமேகிவந்திட்டாலும்
குறைசனியுஞ்சட்டாட்டத்தோருங்கூடக்
கூடித்தொனுறிடத்தைக்கூடினாலும்
நிறைநிதியோனட்டமனட்டமத்திலேக
நிலவினுக்கெட்டவன்றவத்தேநின்றிட்டாலும்
கறைமதிறிக்காறிடையானுலோன்மேவிக்
காரிவிழிபெறினுமிவர்கள்தாமே. (1233)

## ஆயுள் விதி

வல்லாயுள்விதிபகர்வாமட்டமாதி
மன்னனெட்டுக்கெட்டிடத்துமதிக்கெட்டாதி
நல்லானுய்மூன்றிடத்துஞ்சாமிகோண
நல்லிடத்தும்வாழ்வுறினுமிலக்னநாதன்
சொல்லாரும்விதிதிரியோன்மூவர்கூடித்
தொடுவியத்தேயரசன்விழிதோய்ந்துற்றினும்

அல்லோனுக்கொருவிதியோன்மூன்றிலேறி
யமர்ந்துவிதிநாதன்வலியமைந்துற்ருலும். (1234)

சந்திரனுக்கெட்டிலந்தனறிலெட்டோன்
ருவமலேகோணநட்புத்தழுவினுலுஞ்
சந்திரனுக்கெட்டோனுந்தலேக்கெட்டோனுஞ்
சனியிருந்தபதிக்குடையோன்ருனுந்தந்தஞ்
சுந்தரகேந்திரகோணமடைந்திட்டாலுந்
துலங்குசரமேருவிதிதோய்ந்துற்ருலும்
இந்தவலியுடையவைவர்பூரணுயு
ளெய்தியுடல்பிணிக்கரிதாயிருப்பரென்ப. (1235)

ஐம்பதுக்குளிறப்படையுமனிதரெல்லா
மற்பாயரவர்விதியையறைந்துங்கேண்மின்
வெம்புசனிக்கெட்டவனேத்தலேவனுன
மேருபதிவியபதிதாம்விரும்பிக்கூடி
நம்புகண்டகேந்திரங்களடைந்திட்டாலும்
நாட்டியஎட்டவனுமெட்டுக்கெட்டினுனும்
அம்புலிக்கெட்டவனுமுயர்சுகத்தில்வாழ
வாறெட்டுவியத்தைமலேயடைந்துற்ருலும் (1236)

தீயர்மதிவிதியில்வரவிதிதனுதிச்
சேய்விதியிற்பகைபடைத்துச்சேர்வரேனும்
மாயவிதியோன்மதிவாழ்பதியோன்கூடி
மதிகாரியிவர்க்குவியமருவினுலும்
ஆயவிவர்நால்வர்களும்வளர்வர்வாழ்வ
ரற்பாயரெனப்பெரியோரறைவரின்னும்
மாயுமவருயிர்பிரிதற்கேதுவாய
மரணவகையிரணவகைவகுத்துமாதோ. (1337)

மங்களனுமாறவனும்விதியுமூவர்
மதியவற்குச்சட்டாட்டமருவியந்தத்
திங்களொடுவிதிநோக்கமடைந்திட்டாரேற்
றெவ்வர்கள்கையாயுதத்தாற்சிதைந்துசாவர்

பொங்குசுகன்விதிமதிக்குநாலோன்மூவர்
புலையர்களாய்வியமடைந்துபோகிலந்தோ
வெங்கண்விலங்கினங்களிஞற்சாவாரென்று
மேதாவிவியன்புலவோர்விளம்புவாரால். (1238)

அட்டமனிரவிசெவ்வாய்மூவரெட்டி
லமர்ந்துசனியரவுநோக்கடைந்துற்ருரேல்
நெட்டமலைகோபுரநீண்மரத்திலேறி
நிலைதவறிவீழ்ந்துயிரைநீப்பரென்ப
எட்டிடச்சேய்சனியுமதிக்கெட்டிற்சோதி
யிரவியுநின்றிட,நீரிலிறப்பர்காரி
சுட்டபிறையிரவிகுஜனுலவர்கோணந்
தோன்றிமறர்விழிபெறிற்றீச்சூட்டாற்சாவர். (1239)

ஆறவனுமட்டமனுஞ்சேயுங்கூடி
ஆறெட்டுப்பன்னிரண்டிலமர்ந்தாற்றீயோர்
வீறுறுகைபடையிஞல்மாள்வர்சேயும்
மேருவும்வெம்பகையாகில்வெட்டுண்டோய்வர்
கூறிரவிமதியரவுமேருநால்வர்
கூடியாறெட்டிலுறக்குன்ருேனீசப்
பேறடையின்மரணகாயத்திஞலே
பிராணனிழந்திடுவரெனப்பெரியோர்சொல்வர். (1240)

மேருவிதிசேய்கூடிப்பிறைக்கெட்டாகி
வெம்பாம்புசனிநோக்கமேவிலந்தோ
காரிருளினிடிவீழ்ந்துசாவராருேன்
கனகிரியோன்விதிநாதன்கண்டகோணஞ்
சேரிலிவர்திசையிலிவர்புசிப்பில்வெந்நிற்
செறிபிளவைதோன்றவுயிர்தீய்ந்துசாவர்
காரியுமட்டமனுமலையவனைத்தொட்டாற்
காட்டுமவர்திசைபுசிப்பிற்காய்ந்துசாவார். (1241)

சேய்சனிபொன்மதியரவிவைவர்கூடிச்
சேரவிதியின்கணிவர்திசையிலந்தோ

பேய்மதிகொண்டிறப்பரேழ்க்குபயமாறு
பேசுமெட்டொன்பதுக்குடையோர்பெருங்காலத்தும்
தூய்மதிக்குத்தொகையுடையோர்திசைகாலத்திற்
சுரரோகவாதனையிற்றுஞ்சுவாரால்
பாயுமொருவர்க்கிருவர்பதியாய்மேவப்
பதிபலனிற்பவர்புசிப்பிற்பயந்துசாவார். (1242)

மாந்தியுறும்பதிசேர்ந்தவமிசைகோணம்
வந்திடச்சுன்பகற்றிசையில்வந்தோர்கொல்வர்
ஆய்ந்தவிதியோனிருந்தபதியோர்தங்க
ளமிசைகோணத்தில்மார்த்தாண்டன்சேரிற்
காய்ந்திடுவன்றிங்களிலேயருக்கன்வாய்ந்த
கனராசிக்குரியவமிசைக்கோணத்தில்
வாய்ந்தமதிகாலத்திற்கொல்வன்மேரு
மந்தவிராசிக்கமிசைக்கோணமாயப்பன். (1243)

## சாதக மாரகம் வருமாறு

### எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

சத்தாகிச்சித்தாகிச்சுகமாயெங்குந்
தானுகித்துவிதமற்றசாட்சியாகி
வித்தாகிவினைவாகியின்பதுன்ப
விகற்பமற்றபேரொளியாய்விண்ணும்மண்ணும்
எத்தாலுமறியவொண்ணுவறிவாய்நின்ற
வேதாந்தமணிவிளக்கையிதயவீட்டில்
வைத்தாதிநிலைக்கிரகப்புடத்தினுலே
மாரகத்தையெளிதறியவகுத்துமாதோ (1244)

## ஜாதக மாரகம்

எட்டவன்புடத்தினைச்சுன்புடத்தாலேற்றி
யிதனுடனேகாலனதுபுடமுங்கூட்டி
வட்டவிராசித்தொகையால்வகுக்கவோசை
வருமாகில்வகுக்கவந்தநாட்பாதத்துங்

கிட்டியதுக்குமமானுலமிசபாகங்
கிடைக்கினுமச்சனியுயிரைக்கொடுப்பானென்ப
திட்டமிதுவெனக்கோளினிலேயும்பார்த்துத்
தீதகலவாயுள் நிலைதெரிந்துகூறே. (1245)

இதுவுமது

சனியிருந்தபதிக்கிறைவன்புடத்திற்பார்ப்பான்
றன்புடத்தின்றொகை நீக்கிமுன்போற்ருக்கித்
தனியிருந்தநட்பாதங்குருநின்ருலச்
சாதகனைக்கொல்லுமென்பசவிதாவெண்ணுந்
துணியிருந்தகுளிகனெண்ணுங்கூட்டிமுன்போற்
சுழலிராசியின்வகுத்தநாட்பாதத்தில்
கனியிருந்ததென நிறத்தகதிரோனின்ருற்
கட்டாயஞ்சாதகனைக்காய்வரென்பார். (1246)

இதுவுமது

மதிபுடத்தில்மாந்திபுடத்தொகையைக்கூட்டி
வட்டவிராசித்தொகையால்வகுக்கநின்ற
வதில்மதிநின்ருலுயிரையறுப்பனென்பர்
அம்மதிகுளிகன்மேருவதின்மூவர்
துதிபெறுமெண்கூட்டிமுன்போலிராசிக்கீந்து
தொலையநின்றதொகைகொடிலக்கினத்தைக்கண்டு
கதிரவனுல்மாதமுமிந்துவினுளுங்
கண்டுகொண்டவிராசியிலேகழிவனென்பாய் (1247)

பிதிர் மாரகம்

நிதிபதிபுடமுமிரவிபுடமுங்கூட்டி
நீயேழிற்பெருக்கிமந்திபுடமுங்கூட்டி
விதிமுறையினுல்வகுக்கச்சனிநின்ருலும்
விடவராவேமகண்புடத்தைக்கூட்டிக்
கதிர்புடத்தால்பெருக்கிமுன்போல்வகுத்தநாளிற்
காலனின்ருலும்பிதிரைக்காலன்கொல்வான்
மதியூகமும்பொருந்தியெவர்க்குங்கூறில்
வழுவாதுசெவ்வேளனுரைத்தவாக்கே. (1248)

## மாதுர் மாரகம்

கதிரவன்றன்புடத்தின்மதிபுடத்தைநீக்கிக்
கணக்கின்முறைவகுக்கநின்றகலையிற்றுரா
பதிவரினுமதிபுடத்திற்சனியைநீக்கிப்
பகுக்கவதிற்சனிவரினுமாதாநாதன்
துதிபுடத்திற்கதிர்நீக்கிப்பகுத்தபாகைச்
சூரியன்வந்துறினுமதிபுடத்திற்சந்த்ரன்
சதுரிடத்தோன்புடங்கூட்டிவகுத்தபாகைச்
சந்திரன்வந்துறினுமன்னைசாவாளென்பர். (1249)

## சகோதர மாரகம்

கிரிபுடத்திற்றிரிபுடத்தைநீக்கிமுன்போற்
கிளைந்துநின்றபாகையிற்கீழ்மகன்வந்தாலும்
பொரியரவின்புடத்திலழல்புடத்தைநீக்கிப்
புகுத்தநின்றபாகையிடைப்பொன்வந்தாலும்
திரியிருந்தபதிபுடஞ்சேய்புடத்தினுலே
செய்குணனம்பண்ணிரவிபுடமுங்கூட்டிப்
பிரிவுசெய்துநின்றகலைரவிவந்தாலும்
பிறந்தசகோதரனுயிரைப்பேதிப்பாரால். (1250)

## களத்திர மாரகம்

வாக்கிறைவன்புடத்தில்மந்திபுடத்தைநீக்கி
வகுக்கநின்றகலையின்மந்தன்வந்துற்றாலும்
வாக்கிறையன்புடத்தில்யமன்புடத்தைநீக்கி
வகுக்கநின்றகலையிடைப்பொன்வந்துற்றாலுங்
காக்குறுசத்தமன்புடத்தில்காலனீக்கிக்
கழித்தகலையிடத்திரவிகலந்துற்றாலும்
தாக்குபுகர்புடமுமதிபுடமுங்கூட்டித்
தகர்த்தகலைமதியுறினுந்தாரஞ்சாவள். (1251)

## புத்திர மாரகம்

சனிபுடத்தோடைந்தவன்புடத்தைக்கூட்டித்
தகர்க்கநின்றகலையிடத்தேசனிவந்தாலுங்

சனிபுடமுங்குருபுடமுங்கூட்டியொன்பான்
றனிப்புடநீக்கிப்பகுக்கக்குருவந்தாலுந்
தினகரன்புடத்திடைப்பொன்னிரவிராசித்
தேவனதுபுடனீக்கிவகுத்துத்தீர்ந்த
தினகலையிற்செங்கதிரோன்வந்துற்ருலுஞ்
சிவசிவாமைந்தனுயிர்சேதமாமே. (1252

## மாமன் மாரகம்

பஞ்சமனுர்புடத்திடைமால்புடத்தைநீக்கிப்
பனிமதிக்கேழவன்புடத்தைப்பரிந்துகூட்டி
முன்சொல்விதிப்படிவகுக்கச்சனிவந்தாலு
முழுக்கதிரோன்கிரிமாந்திபுடங்கள்மூட்டிப்
புஞ்சகுணனப்படுத்தநின்றநாளிற்
பொன்னவரினுமாமனுயிர்போகுங்கண்டாய்
வஞ்சமற்ருேரிக்கணக்கின்படிசோதித்தால்
மாரகத்தின்சீரகத்தின்மலருமாதோ. (1253)

## விவாக காலம்

சந்திரன்வாழ்பதிக்கிறைவன்புடத்தோடந்தச்
சந்திரசத்தமன்புடமுஞ்சாரக்கூட்டி
முந்துரைத்தபடிவகுக்கக்குருவந்தாலு
முழுத்தலைவன்புடம்வாக்கோன்புடத்தாலேற்றி
வந்திரவிநின்றபதிபுடமுங்கூட்டி
வகுக்கவதிற்செங்கதிரோன்வந்துற்ருலுஞ்
செந்திருவைநிகர்த்தபெண்ணேமணஞ்செய்காலஞ்
சேர்ந்ததென்றுமனத்தெளிவாய்ச்செப்பலாமே (1254)

---

# ஒன்பதாம் பாவகம்

## குரு வந்தனம்

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பாக்கியந்தன் னேநோக்கிப் பகுந்தவத்தாசான்பத்தி
பாக்கியவிருத்தியோடு பலகலையுணர்ச்சிதந்தை
தாக்குமச்செயல்கடுன்பந் தானென்றுக்கிரண்டுபாகம்
ஆக்கவீரப்பநாமத் தண்ணருள்முடிக்கொள்வேனே. (1255)

## பாக்கிய யோகம்

### வேறு

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

இலக்கனத்திற்செவியிறையும்விழியிறையுமெய்த
இவரைநல்லோர்விழிநோக்கவிலக்கினத்தோன்றருமத்
தலத்திலுறக்கிடைத்தாலுமலையரசன்மலைமேற்
றங்கநிலமகன்குருவுமொன்பதிற்சார்ந்தாலும்
நலத்துடையோன்குருவுடனேயறத்திருக்கத்தூயோர்
நாட்டுதசமுற்றிடினுஞ்சந்திரலக்கினத்தோன்
துலக்குகண்ணோனிதிபதியாம்மூவர்பத்திற்றேயத்
துளக்கபதியெண்பதிலேதோன்றிடினும்கேண்மோ. ()

---

தலையதிபன்பத்திலுறவப்பதியோன்றலைமேற்
றனபதியோடுறவிழியோன்வளர்பிறைகட்சார்ந்தும்
இலகுபுகழதிபனைந்திலுநவதன்கோன்றவத்தில்
எய்தநிதிபதியிதயத்திருக்கமலையேழோன்
நிலைபெறினுநிலவுபொய்கைகுருவீட்டிலெய்த
நெடுங்குருவுநாலவனுங்கருமநின்றிட்டாலும்
சொலுமிவர்களெழுவர்களுந்தனபாக்யசுகராய்த்
தொல்லுலகில்வாழ்வரெனத்தொகுப்பர்பெரியோரே. ()

## அவ யோகம்

விதிபதியுங்கெஜபதியும்பகையவனுந்தவமு
மேலு,நதியனுஞ்சினமுமிரண்டிரண்டால்விழினும்
முதுமகனுஞ்சேயும்நெறிமுன்னவியத்திடையே
முதிர்தவனுநாலவனுமோதவிழிதன்னில்
நதியிறைகண்ணிறைகருமன்றத்தமிற்சட்டாட்ட
நாட்டமுறினுங்கணிடை நாலவனுஞ்சேயும்
பதியவிழியிடத்துநிதித்னன்குஜனும்பெறினும்
பகருமிந்தநால்வர்களும்பாபஜென்மமாமே. (1258)

நவபதிபோய்வயிற்றிருக்கவயிறுடையோன்முகத்தில்
நண்ணமலையோன்வியத்தினணுகிடினுங்கதிரோன்
செவியுறையவவற்குவியமதியுறையப்பத்தோன்
றீயபசியுறைந்திடினுமிவ்வெழுவருலகில்
தவயோகமுடையவர்போற்சந்திதெருத்திண்ணை
தலைக்கடையன்னியதேசசஞ்சாரராகி
அவயோகசிரோன்மணியாய்ருணபாதகருமாய்
ஆடையன்னங்கிடையாமலலைந்திடுவரென்ப. (1239)

தலையிறைவன்றவத்துமதிதாத்துநவன்றனத்துஞ்
சதுமறையோன்பதத்துநிலைதங்கிடினுமேழோன்
நிலைதவத்தும்வியத்துமுகத்திறையுமுறைமறையோன்
நெடுந்தருமாதியனுமொன்றிநின்றிடினுஞ்சிலையோன்
மலையதிபனிதிபதிசுக்கிரன்றயத்துங்கருமன்
மன்னுதவத்துற்றிடினுங்கருமனயம்வைகத்
தலையதிபன்றுவத்திருக்கப்பதுமனிதயத்தே
சார்ந்திடினுமின்னுமுளசாற்றுதும்யாங்கேண்மோ. ( )

பத்ததிபன்றவன்றீயர்பார்வையற்றுதயத்தே
பதிந்துகிரிநாகியிலேசனிவிழிப்படாமல்
கைத்திடினுமலைப்பதியுந்தசபதியுந்தருமத் [யோர்க்
தைத்திடினுமலைப்பதியுந்தசபதியுந்தருமத்
தலத்தினல்லோர்கருணைபெற்றுந்தழைத்திடினுங்கலை

கொத்தசுகன் றருமனிவர்மதிபதத்தின்மறையோன்
உயர்கருணைபெற்றுவதிந்துறையினுமும்மூவர்
சத்தொடுசித்தானந்தமயமானசிவமே
சற்குருவென்றடைந்துமுத்திசார்வரென்பர்சான்ருேர்.()

## குரு துரோகி

குருவணக்கமில்லாதார் நிலைமையொருவாறு
கூறுதும்யா நிதியிலறக்கோனிருந்துகாரி
பிருகுவிதியடையமதிநிதிநிசமேபெற்ருற்
பேயனிவன்குருமனைவிபெண் மைவிருப்புறுவன்
மருவுகுருவுக்கிரண்டிற்றலைவனிதிமேவ
வளர்சுகனுர்பதத்திலுறச்சனியிவனைநோக்கக்
குருமகளைப்புணர்வன் வெயில்சனியழல்நல்லறத்தே
கூடவதனேக்கரியந்தனனேகிலவனே. (1262)

கண்ணிறைவன்பதத்திறைவன்மதிவிதிவீட்டிடத்துக்
காரிவிதிநோக்கடையக்கம்மிறைவனிசத்தே
நண்ணிடின்முன்னவற்குமிவனல்லவனுமின்னும்
நல்லமுகநிதிபுதலவர்பதிமூவர்கூடித்
தெண்ணிலவன்விதியிடத்தேசனிகுளிகனேக்கச்
சேர்ந்துதனபதிவியத்தேதெரியவிருந்தாலும்
அண்ணலுரைதவறியவன்மனநோவத்தீங்கை
யடையுமவர்தமிலொருவனுவனிவன்மன்னே. (1263)

அன்னையன்னைக்கன்னைமகர்நிதிவதிபதிகள்
அடையவவர்களுடன்கூடவிதிநோக்கமடைந்து
மன்னுசந்த்ரலக்கினத்தில்வீற்றிருந்தாற்குருவின்
மனநோவத்தீங்குசெய்யுமாபாவியாவான்
இன்னுமரப்பதியில்வயிற்றிறைநிதிக்கோன்மருவ
விருங்காரித்வத்தினிடவியநிலவொடெய்தத்
துன்னுநெறிபதியையழல்பார்க்கவமைந்துற்ருற்
ரேசியிவன்குருவுரைத்தசொல்லையழிப்பவனே. (1264)

## அவபுத்திர பாவகம்

தந்தைசுகந்தாமிழக்குமைந்தர்விதியொருசார்
சாற்றுகிற்றேமனத்தனத்தின்மூன்றவன்பதத்தோன்
முந்துநிதியிருக்கவயிற்றேனருக்கன்பார்த்தும்
முதுமகன்சல்லியன்மதியிம்மூவர்தனத்திருக்கத்
தொந்தியெயிற்றிடையருக்கனிதிபதிநின்றாலும்
தூமுடியிற்பிறைநிதிபனிருந்துதனத்தோனை
வெந்திரவிநோக்கிடினுந்தன்னிதிக்கட்புகுத
வியாழன்வெள்ளிரவிமூவர்மேவியொருவீட்டில். (1265)

காரிவிதிமோட்சபதிமூவர்விழிபெறினுங்
கார்முகத்தோனறத்திருக்கமதிக்குவிதியிடத்தே
சீர்நிதியோன்புகச்சனிக்குமூன்றிடத்திலிரவி
சேர்ந்திடினும்செவிதிகோல்மதிநிதிக்கோன்புகுந்து
சூரியன்கீழ்மகனேக்கம்பெறினுமிவராறுவர்
தொடுதவத்தாற்பெற்றதந்தைசொத்தடையாராகிப்
பாரிலலைந்திடுவர்தந்தைபணிவிடையுஞ்செய்யாப்
பாதகரென்றுலகரெலாம்பழிக்கவுழல்வாரே. (1266)

குருதியறத்துறமுகத்தோனிதியிலுறமூன்றேன்
கொழுஞ்சுடரோன்விதியிலுறக்கொடுமையினர்நோக்க
கருதியநல்லோரினங்கள்சட்டாட்டமேவக்
கடையர்நல்லதானமெல்லாங்கைக்குள்வசமாக்கப்
பரிதிநிகர்தந்தைதந்தமண்ணெடுபொன்னெல்லாம்
பரத்தையர்க்குஞ்சூதினர்க்கும்பாதகர்க்குங்கொடுத்துத்
தெருவினிடைக்காசுபெருத்துரும்பனெனத்திரிவன்
சித்திரத்துமிவனைநல்லோர்வைத்தெழுதிடாரே. (1267)

## வித்தை பாவகம்

### எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

நிதியிடத்துமதியிருக்கநிதியன்வெற்பன்மதிமகன்
நிறைசுகத்துமறைதனத்துநிற்கினுஞ்சொலைந்திலே

மதியிருக்கநிதியின்வெள்ளிமறையிருக்கமுகமதில்
வந்துபஞ்சசுகரிருக்கமதியை நீதிபார்க்கினும்
துதிபொருத்தநிதியைவெள்ளிகுருவிழிக்கவெதிர்விழி
தூதுவன்கொடுக்கவிந்துசுகன்றனத்துமேவினும்
உதையநிற்கமதிசுகாதிநிதியில்வெள்ளிபுதன்மதி [னும்.
என்றவன்செழித்திடப்பொன்னுறுதிகொண்டுநோக்கி

கண்டமீதுகதியிராசனெய்திடத்தவத்திலே
கனதனுதிபதிசுகாதியிருவர்மஞ்சமாதிகண்
கொண்டுநிற்கவிலக்கினதிகமலபீடமேற்கோளீஇக்
குலவிநாலுநிதிபன்லக்கினங்கிசன்முகத்திலே
யண்டவெள்ளிதனனிணங்கியிதையராசிகுருவிழிக்
காகினுலுமெய்ச்சுகத்திலட்டமாதிகுருநீதி
விண்டயங்குமதிதனுதிவெள்ளியாறுபேர்களும்
மேவினுலுமேழுபேரும்வித்தைவல்லவிரகரே. (1269)

வாக்குமன்னனுட்சியுச்சமேறுசெய்திவாகரன்
மருவிமூவராசிகேந்த்ரமன்னலக்கினுதிபன்
ஆக்குகேந்த்ரமேறவேதனங்குகோணமேறமாற்
கைந்திலேநிரம்புசந்த்ரனுட்சிபெற்றுநிற்கவே
தாக்குஞானியன்பினின்றகுருசுகேந்திரமேறினுற்
றப்பிலாதுவித்தையிற்சமர்த்தன்ஞானவானுமாம்
பாக்கியங்கள்மெய்ச்சினேகர்வலியதேகமைந்தர்நற்
பத்திசேர்களத்திரம்படைத்துநீடுவாழ்வனே. (1270)

## பிதிர் யோகம்

### வேறு

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

மதிநிதியினிமேவவரசன்விழியுதின்மேவ
வளரிரவிகோணமிசைவலியோடுவரினும்
மதிவுதிசெய்பதியோனுநிதிதனனுமொருமூவர்
வண்கோணகண்டமிசைப்பொன்காணமலேமேற்

கதிர்வரினுநிதிமீதுபதவிகிரிகுருமூவர்
கனநிதிபன்விழிமேவமேவிடவிரவிபொன்
துதிமருவுகுருகேந்த்ரமுறினுமிவரொருமூவர்
துயரறுதிருத்தாதைசுகயோகவானும். (1271)

குஜபாக்யனிதிமேவவயிறுபதவிறைவர்மதி
கோணமுறரவிகோணமேவிவலியுறினும்
நிசமோக்கநிதிமேவநிதிமோக்கபதமேற
வயிறுபுகழ்நெடுமேருநின்றுநிலைபெறினுந்
திசைபோற்றுகுருவினெடுவியபாத்யனிதிபனொரு
திருவீட்டின்மருவிரவிமதிநிதிகண்ணுறினும்
இசைபோர்த்தகதிநாதனைந்திலுறநிதிபன்வயி
றேறமதிநிதிகாணரவியுச்சமுறினும் (1272)

பஞ்சமங்குருமேவக்குருகேந்த்ராவியுச்சம்
பாய்ந்தாட்சியுறுசேயைப்பரிவுடனேகூடப்
பஞ்சமன்கேந்திரிக்கப்பஞ்சமகோணத்துப்
பால்வெள்ளிசந்திரற்குப்பத்தினிடையுறினும்
வஞ்சமற்றமனத்தோடுநிறைசெல்வவானய்
வளர்பூர்ணவயதனுய்மருவுதிருத்தாதை
கஞ்சமலரடிதினமும்பணிந்தவன்கொடுக்குங்
கனபாக்யயோகங்கள்கைப்பெறுவர்தாமே. (1273)

## பிதுர் மாரகம்

### எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

துதிபடைத்ததந்தைமாரணங்களெய்துதிசையினிச்
சொல்லுமாறுகுருவருட்டுணைக்கொளீஇத்துணிந்தனம்
நிதியொடுற்றதனன்விழித்துளோர்மதிக்குநிதியவன்
நின்றராசிக்கிவ்விதத்துநின்றுளோராகடிசையிலும்
நிதியவற்கொரிருபுறத்துநின்றுளோர்கடிசையினும்
நின்றந்தபாக்யவிதியினேடுநின்றுளோர்கள்கண்டு
ததியினுற்றதிசையினுஞ்சொல்நிதிபவன்றிசைக்கரே[ளோர்
சாற்றுமந்தநிதிவிதிக்கோரேழவன்புசிப்பினும் (1274)

பத்தவன்றிசைக்கண்ஞானபானுவுக்கேழெட்டுளோர்
பகுந்தபுத்திநாளினுங்கணுயகன்பருந்திசை

சுத்தவெண்ணிலாவினெட்டுமொன்பதோன்புசிப்பினும்
சோமனூர்நிதித்திசைக்கணிரவியோடுதுன்னினோர்
புத்திசெல்லுநாளிலுந்திரிக்குநாயகன்றிசை
புந்தித்ந்தைக்கேழவன்புசிப்பினுப்பிதாப்பதிக்
கொத்ததந்தைதிசையிறந்தைவிதியவன்புசிப்பினும்
உற்றதந்தைமாரணங்களோதுவாருயர்ந்துளோர். ()

சந்திரற்குநிதிதிசைக்கணிலவினேழ்சிப்பிடைச்
சந்திரற்குவிதிவரிற்றரித்திடான்பிதாவுயிர்
முந்துரைத்ததிசைபுசிப்பிலக்கணங்கள்யாவையும்
முழுமணஞ்செலுத்திநன்குகண்டறிந்துமொழியினே
வந்தடுத்ததிசைவிளக்குசக்கரம்முயிர்த்திசை
வலியகோசரச்சனிப்பலங்குருப்பலங்களிற்
சிந்தைவைத்துநிதிநிதிக்குவிதிகர்மாதியிரவியித்
திறனுளோர்குறிப்பறிந்துபிதுர்சமாதிசெப்புவார். ()

இதினுமுண்டுவினையமென்பர்கணிதநூலிலக்கணத்
திசைபடைத்தவிஜயசித்தரவர்கருத்திசைக்குநாம்
பிதிர்விதிச்சிறப்புயர்ந்துசிசுதிசாதிகுறைதலும்
பேசிடுஞ்சரந்திராதிசுற்றமைந்தபேதமும்
முதிர்புடத்தினிட்டெடுத்தலக்கினத்தினுரிமையும்
மொழியிலக்கினத்ததிக்கணிறைவர்நின்றமுறைமையும்
கதிர்மதித்திறத்தினுலுமதிநிறைந்தபுலவர்பாற்
கற்றறிந்ததுணிவினுலுமுற்றளர்ந்துகாட்டுவார். (1277)

---

## பத்தாம் பாவகம்

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

புத்தினைநோக்கிமேன்மைப்பயன்றருவேதாந்தக்கோள்
உத்தமகங்காஸ்நானமுயர்கருமங்களோடு
புத்திரகருமந்தன்னுற்புரிகருமஞ்சன்யாசம்
இத்தனைபலனுமெந்தமிறையடிவணங்கிச்சொல்வாம். (1278)

## குரு வணக்கம்

### வேறு

*அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

பலகலைதேர்குறுமுனிதம்மடியருளக்குறையகற்றும்
பரிசின்முல்லை
நிலனுரியகோகுலத்திற்றிருக்குடந்தைப்பெரும்பதியி
னிலைத்தியாண்டும்
இலகொளிவீரப்பபிள்ளையென்னவபிதானம்பூண்
டிருந்தானந்த
நலமருவுங்குருராசனிருபாதமொருபோது
நமைவிடாதே. (1279)

### சந்நியாச பாவகம்

*பதினைன்குசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

கிருநிதிகருமந்தனமிவற்றிறைவர்
கேந்திரித்தருட்குருகடாட்சங்
கிடைக்கினுமிலாபநிதிகருமத்தின்
கேழ்வருச்சம்பெறீஇத்தனத்தோன்
'பரிவுறுமன்னைவீட்டிடம்பெறினுஞ்
சதிவிதிகருமமிப்பதியோ .
பான்மதிநிதியிலசுரர்தங்குருவின்
பார்வைபெற்றிருக்கினுநிதிவில்
விரிநிலாவுடனேசற்குருவிருக்க
வெற்பிடைக்காரிவீற்றிருக்க
விரும்புசற்கருமனுச்சவீட்டுறினும்
வெள்ளிமாமேருதில்விளங்கிக்
கரியவன்வதனநோக்கினுமிந்தக்
காளையரைவருமியார்க்குங்
கடப்பருமாயமும்மலங்கன்மங்
கடந்துமெய்ச்சமாதியைக்காண்பார். (1280)

நிதிகிரிகருமம்பஞ்சசத்தமத்தி
னிருபரோரைவருந்தவத்தே
நிசாசரகுருவீட்சணபலம்பெற்று
நிற்கினுமொன்றுநாலைந்துக்

கதிபரோர்மூவர் தனமுறீஇக்குருவி
னருள்விழிவீட்சணம்பெறினும்
அம்புலிசவுரியிருந்தநற்பதியோ
ரசலநாயகன்விழிபெறினும்
மதியணைகிரியினன்னையோரிருவர்
வான்குருவீட்சணம்பெற்று
மன்னுநற்கருமந்துன்னினுமிந்த
மாதவர்நால்வருமறையின்
துதிபெறும்புனிதசைவசிந்தாந்தத்
துறையிலேமூழ்கிமெய்ஞ்ஞானத்
தூயநீராடிச்சிவானந்தவமுதந்
துய்த்தினிதிருப்பரென்றுரைப்பர். (1281)

## தீர்த்தயாத்திரா பருவம்

பதவியிற்புதனுமிரவியுமிருக்கப்
பத்தவன்குருவொடுகோணம்
பாய்ந்திருந்தாலும்உச்சத்திற்கருமன்
பத்திடைநிலவுவீற்றிருக்கச்
சிதைவிலாக்கிரியோன்கருமனைநோக்கிச்
செழுக்கினுங்கருமனும்புகரும்
சிறந்திடுமுச்சத்திங்களுக்கடைந்து
சேணுயர்கோணமீக்கொளினும்
சிதனெடும்பாந்தள்கருமமீதேறக்
கருமன்சீர்தன்னிதிநிதியிற்
சேரினுமிந்தச்சாதகர்நால்வர்
சிவகாமவிதிநெறிதேறி
மூதன்மைசேர்தெய்வக்கங்கைநீராடி
மூர்த்திதாளருச்சனைபுரிந்து
மூவர்வாய்வேதம்பண்ணெடுபடித்து
முடிவினிற்சிவபுரம்பெறுவர். (1282)

## யாகாதி கருமம்

பத்தவன்சனிமால்மதிக்கொருபத்திற்
பாய்ந்திடக்குருவிழிப்படினும்
பதமலிநிதிபர்மதியொடுந்தனத்திற்
பதிந்துசற்குருவிழிப்படினும்

சுத்தவெண்மதியின் கருமனுச்சத்திற்
றேய்ந்துசற்கருமன்வான்குருவித்
தூயவர்கருணைபெறினுமால்பொன்பாம்
பிவருறுசூழலோர்கதிவீ
டுய்த்திட நிதியோன்காணினுஞ்செம்பாம்
புசிதமால்கருமனிம்மூவர்
உம்பரார்குருவின்பத்திடமேவி
யுயர்நிதிநோக்கடைந்தாலும்
முத்தியோனிதியன்பத்திடைமுந்த
வுச்சஞ்சேர்புதனெடுகேது
முனிவிலாதுறினுமிவர்களோரறுவர்
முதுமறைவேள்விகாவலரே. (1283)

## ஜீவன பாவகம்

மதிகுஜன்கருமன்மூவருநான்கின்
மல்கிடிற்சலத்தினுனிலத்தால்
மருவுஜீவனராஞ்சுகபதியோடு
மதிச்சுகனிருவர்பத்திடத்தே
பதிபெறநிதியோன்பார்த்திடிற்செட்டுப்
பண்ணியேபொழுதுபோக்குவனுல்
பகரறஞ்செவியில்லதிபர்கூடி
யன்னைதன்பதியினட்புற்றல்
நிதியிலக்கத்துக்கதிகம்வாணிபத்தி
னேடுவன்கிரிதசநாலேழ்
நிருபரோர்நால்வர்நான்கிற்குநான்காய்
நின்றினடிமைச்சனேயாவன்
துதிபெறுதந்தைதசபதியிருவர்
தொன்னிதியடைந்திடவிலாபன்
சொற்பெறுபத்தினிற்கிலுத்யோகத்
தொழில்செய்வான்கீர்த்தியுமடைவான். (1284)

மேருவிற்கருமன்மோகனிவ்விருவர்
மேவிடவொன்றிரண்டதிபர்
விழியிடம்பாயினுத்தியோகத்தின்
மேவிப்பின்னிழந்தலைந்திடுவன்
சேர்நிதிநிதிக்குப்பத்தினேன்மதியிம்
மூவருந்திங்கட்குநிதிவாழ்

தெய்வமந்திரியிஞேக்கடைந்திருந்தாற்
செகந்தொழுமந்திரியாவன்
சூரியவிழியிற்றலைபல்லுக்கிறைவர்
பஞ்சமன்பாவனுங்கூடிக்
குபேரனூர்தசத்திலிருக்கிலிக்காலை
கோமகார்சேவகத்தொழிலோன்
மாரன்வாகனன்பத்தினன்கிரிநால்வர்
மகிழ்ந்துகர்மத்திடையிருந்தால்
மன்னவர்க்குண்மையுத்தியோகத்தில்
மாநிலம்புகழவாழ்ந்திருப்பன். (1285)

சத்தமன்கருமன்கிரியுறக்கிரியோன்
றனபதியுடன்றனத்திருந்தால்
சத்தியவமைச்சராகிடவாழ்வன்
றன்னனைசந்திரற்கன்னை
யித்தலத்திறைவர்பத்திடைச்சுபமா
யிருந்துசெவ்வாய்விழிபெற்ருல்
இராசர்செங்கோலாயிருந்துதீங்கினரை
யெரியினிற்சுட்டுவாழ்ந்திருப்பன்
முத்தியோனிதியோன்சந்திரபாக்யன்
மூவரும்பத்திடைநின்று
முழுமறையாளன்விழிபெறினிலத்தின்
முயன்றுவேளாண்மையால்வாழ்வர்
பத்திசெய்தவத்திற்சுகபதிநிதிபன்
பலித்திடக்கருமனுச்சத்திற்
பாய்ந்திடிற்பூமிச்செல்வமுத்யோக
பாக்கியம்பெற்றுவாழ்பவனே. (1286)

## கரும பாவகம்

கருமனூர்தருமந்தருமனூர்கருமங்
கலந்தனர்மாறிடமறையோன்
கனிந்துமூன்றெட்டிலிருந்திடிலிருந்து
கருமந்தாய்தந்தைக்குஞ்செய்வன்
கருமனூரன்னை நிதிபர்முத்தேவர்
கலந்தனைக்கன்னைவீட்டிருந்தாற்
கருமங்களிரண்டுந்தருமங்கள்பலவுங்
கண்கொண்டுகண்டுசெய்திடுவான்

அருமதிக்கன்னே தன்னனையதிபர்
பத்துறப்பிதிர்சுபனுகில்
அனைபிதிர்கருமங்கனிவொடுசெய்வ
னப்பிதிற்பாபனேற்பிறரால்
மருவுலவிருந்தக்கருமங்களிரண்டும்
வனைகுவன்மதலையென்செய்வன்
மதலையன்ருகிலறிவிலானன்றேல்
மனத்திடையன்பிலாதவனே. (1287)

தந்தையுந்தாயுங்கோணமீதேறச்
சந்த்ரகர்மாதிபன்பத்தோன்
தந்தமின்மகிழ்ந்தாட்சியுச்சமேறிடிற்கல்
யாணம்போற்கருமங்கள்சமைப்பன்
சந்திரகருமன்வலம்பெறீஇய
யுச்சங்கடமுவுறப்பத்தோன்
தனிவலம்பொருத்துநின்றிடிற்பிதிரின்
றங்கருமங்களேழியற்றும்
வந்துபத்ததிபனுச்சமீதேற
வேழிடைவிரையன்வாய்த்தேழே
வன்மநோக்குற்ருலனைபிதிர்க்கியற்றி
மனைவிதன்கருமஞ்செய்வாரார்
முந்துபத்ததிபன்மூன்றவனுறெட்
டாட்சியுச்சம்பெறிற்கருமம்
மூன்றதாந்தந்தைதாய்துணைவந்தோன்
மூவர்க்குஞ்செய்குவன்முயன்றே. (1288)

தலையவன்மூன்ருேனிருவருங்கருமத்
தலத்துறக்கருமன்மூன்றடைந்து
சலத்தொடைந்தவனைநோக்கினுல்மகற்குத்
தான்கருமஞ்செய்வன்சலித்தே
நிலைபெறுமைந்துக்கைந்தினனைந்தோன்
கருமனுநிலவுக்குப்பத்தில்
நின்றிடின்மக்கட்கொன்றிரண்டியற்றி
நெடுந்திசைபுகுந்துயிர்நிலைப்பன்
நிலவினுக்கைந்தோன்கருமத்தினிலைக்க
மதிதசனேர்விழிதரினும்
நெடுங்குருகுருவின்பஞ்சமன்பத்தி
னிலைபெறக்குசன்விருப்படினும்

இலகுபொன்வெள்ளிசனிகருமாதி
யிவரொருநால்வருமைந்தி
லிருக்கினும்விதியோன்குசன்றசனீந்தி
லெய்தினுமகர்க்கியற்றுவராகில் (1289)

காட்டியகருமவிதியிலோர்விநயங்
கற்றவர்குறிப்பரென்னென்றல்
கருமனர்கருமத்தலத்திடைநின்றோர்
கருமனைக்கண்டவர்சேர்ந்தோர்
திட்டியமதிக்குப்பத்தவனிவர்போற்
செயல்வலிபெற்றவர்திசையிற்
திருமறைப்பார்ப்பனவனொடுசேர்ந்தோர்
திசையிடக்கருமமண்டலத்திற்
பூட்டியகருமகாரகரவரைப்
போன்றவரேன்றவர்புசிப்பிற்
புண்ணியகருமம்வேறும்வந்தமையாப்
பொழுதினிற்கோசரச்சனியன்
ஊட்டியபலமுங்குருபலத்திறனு
முற்றறிந்துரைப்பராற்கருமம்
ஒன்றைவிட்டொன்றுபிதற்றிடினூற்கு
முரைப்பவர்க்கும்புகழன்றே. (1290)

---

## பதினோராமிடப் பாவகம்



### குரு வணக்கம்

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

பாக்கியமிலாப்நல்லறிவாக்கஞ்
செட்டனும்பலன்றனையெடுத்துத்
தாக்கியேபதினொன்றாமிடவிகற்பாற்
சாற்றுபுதுணிந்ததுகணித
மாக்குருராசன்குடந்தைவீரப்ப
மழைமுகிலுபயதாமரைத்தாள்
நாக்கிடைநின்றுசொற்பிறழாது
நடத்துமென்றுதினமைந்தே. (1291)

## பாக்ய பாவகம்

### கட்டளைக் கலிப்பா

பத்தவன்பதினொன்றவனன்னிதி
பாயப்பாக்யனிரண்டிற்பதிந்திட
நத்திக்கண்ணவன்கண்ணுறிற்சாதக
னன்குபாக்கியயோக்கியனண்ணுவான்
தத்திலாபனுமுச்சத்திற்கேந்திரந்
தங்கவாகனன்சௌமியன்கூடியே
யுய்த்துநோக்கக்குஜன்கோணமேறினு
லுறுதிக்கல்விநிதிபரியோங்குமே. (1292)

முகனிலாபன்றுணைக்கொடுகண்டத்தில்
முந்திமேருசுகன்விழிபெற்றிடில்
அகமிரண்டுமூன்ருக்கித்துணைவரோ
டாக்கமோங்குவனுயம்பத்தாதிபர்
சுகபரத்துறச்சத்தமன்பஞ்சமன்
ருேயவாயஞ்சுரேசன்விழித்திடிற்
புகழுங்கல்வியுஞ்செல்வமும்பெற்றுநற்
புனிதனுச்சிவபோகங்கிடைப்பனுல். (1293)

ஆயன்சந்திரற்காயனிரண்டுபே
ரைந்தினிற்கக்கர்மாதிநிதிப்பதி
தூயலக்கினத்தேறிடிற்கல்வியுஞ்
சுகமும்வாகனத்தோற்றமுங்கூட்டுமால்
மேயபஞ்சமன்கேந்திரமேறவவ்
வீரன்பஞ்சமன்வீட்டிலிருந்திட
வாயனுயனுக்காயனுங்கேந்திரித்
தமரக்கல்வியுஞ்செல்வமுமாக்குமால். (1294)

கண்ணினன்விதியானிதியானிவர்
கலவியெட்டில்வியத்திற்கயங்கினும்
தெண்ணிலாவுக்கிலாபன்றனுதிபன்
விதியிற்சேய்சனிகண்பெறச்சோர்ந்துபொன்
வண்ணமாநிதியாருடிராறிடை
வதியினுந்தலைமன்னவற்காயனுந்
திண்ணவாயனுஞ்சந்திரன்சாமியு
மாறிராறிற்றியங்கினுந்தீனரே. (1295)

பத்துநாலவராயத்திருந்திடப்
பச்சைலாபத்திருந்திவர்பார்த்திட
மத்தகப்பதிநாலிடைநட்புறீஇ
வாழினுஞ்செல்வவானிவனுயனு
நத்தியாயனுறுபதிக்காயனு
நளிற்நிலாவுக்கிலாபனுமாயன்வாழ்
உய்த்தநற்பதியோனுமொருவருக்
கொருவர்கண்டமுதிக்கினுஞ்செல்வனே. (1206)

சந்த்ரலாபனிதிவிழிமூவருஞ்
சந்த்ரலாபத்திற்றங்கிடவேழினின்
றந்தனுளன்விழிக்கினுமேருவோ
டாயன்மெய்த்தனன்மூவருங்கண்டங்கள்
வந்திடத்திருத்தாய்நட்பிலாட்சியில்
மருவப்பாவர்மறைந்துகிடக்கினுஞ்
செந்திருப்பெண்மணுளனெனப்புவி
செப்பவாழ்வரிச்செல்வரிரண்டுபேர். (1297)

குருவுஞ்சந்த்ரசுகாதியுங்கண்டத்திற்
குலவப்பாதன்சுகத்திற்குதித்திட
விரியிலாபத்திற்சந்திரகர்மனுர்
மேவினுலுநல்லுத்தமர்மத்தியில்
அரியலாபனுச்சம்பெறவப்பதிக்
கரசனுயத்தமர்ந்திடினும்மிவர்
இருவரெத்தொழில்செய்யினும்லாபமே
யேறுமன்றியிறங்குவதில்லையே. (1298)

மலையிராசனிலாபனென்ருகியே
மாந்திகண்ணின்மறைந்தனர்நின்றிடக்
குலவுபுத்திரத்தானத்தன்காந்தியாய்க்
கூடினுலுநிதிக்கிறைபஞ்சமன்
றலையில்வாழ்வுறச்சந்திரபஞ்சனு
தாயமேவுத்தலைவன்சுகன்சுப
நிலையின்மேவினுமிவ்விருசாதகர்
நெறிவழாதுநிதிபடைப்பார்களே. (1299)

புத்திராதிபன்சாமியிலாபத்திற்
புகுதவைந்திடைப்பொன்பசைக்கோன்புக
நத்துகோணத்துநாக்கிறைநண்ணினும்
லக்கினன்சந்த்ரலக்கினனிலாபத்தோன்

மொய்த்ததுமூவரும்பஞ்சமத்தேசுப
மூர்த்தராகினுங்கன்னிமின்மால்புகர்
அத்துவண்ணன்புகுந்ததுலக்கின
மாகினுஞ்செல்வராவரிம்மூவரே. (1300)

மதியிருந்தவிராசிக்கிரண்டவன்
வாழலாபத்திலாபனைநந்தேறிடின்
நிதிமிகுந்திடுநல்லறிவோங்கிடு
நேத்திரப்பிணியின்வதைக்குமால்
துதிசெய்மேருவில்மூன்றவன்பத்தவன்
லக்கினாதிபனுக்குறவக்கிரன்
உதயபானுவொடாட்சிபெற்றேங்கினு
லுயருஞ்செல்வம்வைத்தொண்டொடிபின்செல்வான்.

அட்டமத்திற்றனனுறக்கண்ணிலே
வாயன்சாரக்குசன்மனந்தன்னின்மெய்ச்
சிட்டராரியன்கண்பெறவன்னையோன்
றிங்கள்வீட்டிடைத்தங்கிவிங்கிவற்
கிட்டசோதரர்மூவரையாயுள்மட்
டிடைவிடாதுகிடைத்தந்தமட்டுக்கும்
அட்டபாக்கியயோக்கியசிலாக்கியத்
ததிபராய்ப்பின்னகன்பதஞ்சேர்வரே. (1302)

அந்தணன்பதினொன்றுறவப்பதிக்
கரசன்சந்திரனுயத்திற்சேய்விழி
தந்திடப்பெறச்சத்தமன்புத்திரத்
தானத்தானிடமாறித்தழைக்கினும்
வந்தலக்கினன்மங்களனுயத்தோன்
மருவுமப்பதியோர்பதினொன்றுறச்
சந்திரனுயத்திற்பொன்னுறினுமிவர்
தமையன்செல்வத்துட் சந்ததம்வாழ்வரே. (1303)

ஆயத்தானத்திலக்கினனுகண்ணிறை
யமையக்கண்ணிற்பத்தாதிமதிவிதி
வாயுத்தாபதமந்திரிநோக்கினும்
மைந்தன்சேட்டன்மகிழ்ந்திடுஞ்செல்வவான்
சேயப்பொன்னிதிலாபனிந்நால்வருஞ்
சீவன்வீடுறச்சத்தமன்மெய்த்தனன்
தாயத்தான்கண்பெறப்பகையோன்பட
விரதவாதம்புதையலிச்சைக்குளான். (1304)

## வேறு

### எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

எட்டிராறிடத்திலேகண்விதிநிதிக்கிராசரும்
இந்துவுக்குலாபனூர்தனேசனூரிரண்டுபேர்
துட்டவக்ரன்விதிமுகன்கண்ணுேக்கவேவிதிக்கணே
தோன்றவேதனிதிவியத்துமாறினுந்துயங்கினும்
தொட்டலக்கினுதிபற்கிலாபனுேடிலாபனூர்
சோமலக்கினுதிபன்னெருத்தருக்கொருத்தர் தாங்
கெட்டவாறுக்காறதாய்க்கிடந்திம்மூவர்கழியினுங்
கெதியிழந்தவிந்தமூவர்விதியிழந்துகெடுவரே. (1305)

ஆயமீதுசுகபதிக்கிலாபனேறவிதியிலே
அசலசாமிநிதியிருந்தபதியவற்கிலாபனூர்
வாயவந்தமைந்தன்மண்பொன்மங்கையாதிசெல்வமும்
வைத்திருந்துமென்னலாபமார்க்கமற்றமூர்க்கனும்
ஆமனுேடுதிரியுமுன்பராயமேவவந்தணன்
அவரைநோக்கவேழிலிந்துவிதியில்வெள்ளியணுகவே
யேயமைந்தன்முந்தையோர்களீட்டிவைத்தநிதியெலாம்
எச்சிமாதர்கைக்கொடுத்தியந்துவாடுமீனனும். (1306)

நிலவிருந்தபதியிராசன்பொன்னிருந்தநிலைமையோன்
நேயசத்தமேசன்மூவர்நெறியிருக்கலாபனூர்
இலகுகண்கொடுக்கவாயமீதுரோகனிதிவிய
னிருக்கில்வம்பர்சோரராவிழப்பனுள்ளபொருளெலாங்
குலவுவேதனவனிருந்தபதியனுயமேறவக்
கோமகன்படுக்கைவீடுகூடவன்னேவிதியிறை
மலர்விழுக்கிருக்கினிந்தமுகடிதொட்டதொழிலெலாம்
வரும்விழற்கிறைத்தநீரின்மட்கியுட்கிமாளுமே. (1307)

ஆறுமாரூடாறுமெட்டுமாயதாயவீட்டிலே
வாயனிற்கநட்டன்மேருமாறியங்குநிற்கவே
கூறுநாவினேன்மதிக்கொராறிலேகுதிக்கினிக்
குழலிதொட்டதொழிலெலாங்கடற்குரைத்தகோட்டமே
ஏறுதுக்கவீட்டிலானனத்தனிற்கவன்னேவீட்
டிந்துவுக்குநாலினேனிருக்கமைந்தனிடம்விதி
தேறிநிற்கமதிவிழிக்கிராசன்மோகவீடுறிற்
செத்துவீழுமட்டுமின்மைதுய்த்தலைந்துதிரிவனே. ()

இடதுகாதினிறைவன்மூன்றினிறைவியுத்திருக்கவே
இரவிமைந்தனோக்கிலிவன்றெழில்கள்பழுதுறூஉம்
படவிநாலுமைந்துமாறுமுடையமூவர்கூடியே
பன்னிரண்டிருக்கவேதனுயன்மேருபதிமதி
கெடவுணங்கியாறிலெட்டில்வீழின்மூர்க்கனுய்க்குணக்
கேடடைந்துகளவுசூதுகிருஷிகத்தனுகுவன்
சுடுநெருப்பின்வறுமைபற்றத்துடிதுடித்துவாடுவான்
சுகிர்தவிட்டர்மனம்வெறுக்கவுரைபிதற்றுதோஷியே. ()

தன்னுடன்றனத்திலாபனிதிருட்டிதந்தனை ந்
தனவர்முன்றிருக்கமேருதரமிழிந்துகீழுறிற்
கனமிழந்துசூதுபொய்கொலைதொழிற்கிணங்குவன்
காரிசாமிவியமிருந்துகாதலன்றலத்திலே
தனைநிகர்த்தநிதிவிதிக்குமன்னர்நின்றுபஞ்சமன்
றுவநீசம்லாபமீதுதந்தசூகமேறினல்
நனவிலன்றுகனவிடத்துநல்லசெங்கையெண்ணலா
நரர்களின்குருக்களாகிநாடுதூறவாழ்வனே. (1310)

ஐந்துநான்குமுடையவர்கூடியட்டமத்தில்வீழவே
யாயமீதுவிழியிழுக்கடைந்துவீழின்மிடியனும்
தந்த்ரவானுமாயுனுமிடக்கணின்றுசந்திரன்
தழைசுகத்தினிற்கவன்னைதலமடுத்துமூன்றவன்
வந்தபானுவுடனிருக்கநீசர்கண்களங்ஙனே
மாநினத்தைவலைவனைந்தவண்ணமாவளைக்கவே
மந்தகாலம்வந்தபாலன்மாயதந்த்ரசூதெனும்
வழியிலேதிரிந்துழன்றுவயிறுதுற்கும்வன்பனே. (1311)

கண்டமேற்பன்னென்றுபன்னிரண்டினேன்கலக்கவே
கதிரையிந்துநோக்குலாபமீதுசேய்கதிக்கினே
உண்டுதம்பிநங்கையில்லையண்ணனில்லையென்பரால்
ஓதுமெட்டிலாபநாதர்சோமலாபமுற்றிடில்
அண்டிநட்டனிரவியாரலாபமேற்குதிக்கினே
அண்ணனென்றுசாவனென்றலைந்துசாவன்வினையினல்
விண்டபத்திலாயனுகமேவலாபமதிதசன்
மேவநட்டநிதியிருந்துசேய்விழிக்கின்வீணனே. (1312)

ஆயனிந்திடச்செவிக்கிராசன்மேவவிதியிடை
அவரைநொந்துசனிவிழிக்கமுகன்வியத்திலணுகவே

காயுமாறுமாரெடாறுமெட்டுமுள்ளகாவலர்
கதிக்கவேசுபத்தர்வீறுகரையவந்தசாதகன்
தூயதந்தையன்னசேட்டனோடுகாலமுழுவதூஉம்
துன்பியற்றிவன்பியற்றியவனின்முந்துதொலேவனும்
ஆயவிந்தைவகையனைத்துமறிவினுலளந்துகண்
டவர்கள்கொண்டதிசைபுசிப்பறிந்துசொல்வரறிவிலோர்.

---

## பனிரெண்டாம் பாவகம்



*அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்*

வியனுஞ்சுகனும்பொன்னவனு நிதியிலுறையின்மேவுசெல்வப்
பயனும்புகழும்பரிமாவும் படைப்பர்வியனைப்பிணிபார்த்து
நலமிலாதாருடன்கூடில் நட்டன்றிசையிலவன்புசிப்பில்
துயரமடைந்துநிதியிழந்து தந்தையிழந்துசோர்வானுல். (1314)

பாபர்குடும்பந்தனையடைய வேழைச்செவ்வாய்ப்பார்ப்பதொடு
கோபருடன்சேய்கூடிடினுங் கொண்டமனைப்போய்பின்னெருபெ
சோபமகற்றமக்கள்செல்வச் சுகமுமடைந்துதுலங்கிமணித் [ண்
தீபமனையபுகழோங்கிச் செழிப்பானென்பர்சிறந்தோரே. (1315)

அச்சம்கலச்சந்த்ரவிதி நல்லதானத்தமர்ந்திருந்தால்
உச்சமாட்சிநிதிபனுறப் பொன்னேனவனையுறநோக்கப்
பிச்சங்குடைவெண்சாமரைபொன் னரசர்செல்வப்பெருக்கடைவ
ஒச்சமிறையுமடையானென் றுயர்ந்தோர்நூலினுரைப்பரால். [ன்

பத்தாதிபனுவித்துருவும் பகையில்கோணம்பாய்ந்துமணி
முத்தாமதியநாலவனுங் காணநின்ருன்முழுப்பாக்ய [ஞ்
வித்தாய்வாழ்வன்பகைபிணியும் வெல்வான்மனைவிமக்களுண்டா
சத்தாமருளுநல்லறமுந் தடையவாயுள்பெறுவானுல். (1317

தனத்தோனிதியோனுடன்கூடிச் சயனத்தானத்துறங்கிடநல்
வினத்தோர்நோக்கமறப்பாவர் நோக்கம்வாய்ந்தாலேழையிவன்
மனத்தேகவலையெஞ்ஞான்று மாருதிருத்திவலைமான்போற்
தினத்தாயினுநன்கடையாத தீங்கனுகித்திரிவானுல். (1318)

எட்டிற்கண்ணுதிபனிருக்க விவனைப்பிருகுகண்ணேக்க
நட்டன்சுபத்தானத்திலுறிற் கண்ணேயடைந்துநலிபெறுவன்
கட்டவியத்தோன்சனியுடனே கலந்துகோணங்கண்டமுற்றுத்
தொட்டதருமநோக்கடைந்தால் சிவயோகத்தேதுலங்குவனுல். ()

பகைத்தானத்தோன்வியத்தானம் பார்க்கிற்படுபாதகனுகித்
திகைத்தாரழலார்நரகினிடைச் சேர்வனுதயவிலக்கினத்தை
நகைத்துமதிபார்த்திடிற்ருதை பதியையிழந்துநாடோடும்
பகற்றேவேழெட்டொன்பதுற வுபயம்பாழேற்பரதேசி. (1320)

வியனைச்சனியுநாலவனு வெறுத்துநோக்கிற்பரதேசம்
பயனற்றலைவன்சுபர்வியத்தே பாயவாறெட்டிற்சுபக்கோள்
சயனச்சனியோடுடன்கூடிச் சாரநீலன்பார்ப்பானேற்
செயனற்றுணையோடிழந்துநெடுந் தீக்காடேடித்திரிந்துழல்வன்.

எட்டோன்கரும்பாம்புந்தன்வலு வேறிவியத்திலிருப்பானேற்
கெட்டோனுயிகௌரவத்துட் கிடைப்பான்பாபரொடுபளிங்கு
தொட்டேவியத்திற்கிடைப்பானேற்ருயொப்பானைத்
தோய்வன்வெள்ளி
துட்டாங்காரனுடன்வியத்தே துன்னிநீசசுகந்துய்ப்பான். ()

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்

மங்கியவியத்திற்பாபர்கள்கூடி
வன்பகையோடுவந்துறினுந்
திங்களுஞ்சனியுஞ்சேயுமீராறிற்
சேரினுநோக்கினுமதியுஞ்
செங்கதிரவனும்வியப்பதியுறினு
மாறெட்டோர்தீயவராய்வியத்தே
தங்கினும்வியத்தேநால்வர்கூட்டுறினுந் (1323)
தகர்ந்துபோம்நிலனெடுதனங்கள்.

வியத்திலேநல்லோர்நாலவனுடனே
மேவினுற்சினேகிதர்க்காக
நயத்திலேசெலவிட்டிழப்பன்மெய்ப்பொருள்க
ணற்குருபனிரண்டினனுகிற்
சுயத்திலேவல்லபுலவர்கள்மறையோர்
சொந்தபந்துக்களாதுலர்கள்
வயத்திலேதனங்களனைத்தையும்வாரி (1324)
வழங்குவன்வறுமையில்வாடான்.

அதியுச்சம்பாகத்தமர்வியத்தோனை
யாட்சிசேர்பாக்கியனேக்கி

னிதிமிக்கசெல்வனுகுவன்வியத்தோ
னிறைசுபரோடுவெள்ளிநின்று
துதிபெற்றநல்லோர்கடாட்சமுங்கிடைத்தாற்
றூங்குபொன்னூசலிற்சுகிப்பன்
மதிசித்ரபானுவியத்துறிற்சிலநாள்
வாழ்ந்துபின்ருழ்ந்திடுவானுல். (1325)

வெள்ளியுஞ்சனியுந்திங்களுமொன்பான்
வீட்டிடைக்கூட்டுறச்சனித்தோன்
தெள்ளியவிராசயோகபாக்கியத்திற்
சிறந்தவனுவன்பன்னிரண்டோன்
ஒள்ளியவதியுச்சத்திடையமர்ந்தா
லூஞ்சலின்மாடத்துளுறங்கும்
அள்ளொளிமதிசுங்கன்குருவியத்தே
யமர்ந்திடிற்செல்வவானுவான். (1326)

## கடையூட்டுப் புறனடை

உரைத்தவிலக்கணங்களெல்லாமுணர்ந்தபின்பா
லோதுவதோருத்தியதனுண்மைகேளாய்
நிரைத்துநின்றவிலக்கினத்தோனந்தமாதி
நேர்ந்துவருஞ்சுபங்களெல்லாநெறியேசேர்த்துத்
திரைத்தெழுந்தவசுபமெலாஞ்சேர்த்தாதாயஞ்
செலவுசெய்துநன்குயரிற்செல்வஞ்சொல்லு
தரைக்குளசுவப்பலனேயோங்குமானுற்
றரித்திரவான்களற்கொளிற்றேசகலமாமே. (1327)

## வாழி

வாழிமுதன்மறைநான்கும்வாழிவேத
மணத்திருக்கும்வாய்வாழிவடிவடிவேவாழி
வாழிமறைமுதலாகியதற்கப்பாலாய்
மணியரங்கன்கோயில்கொண்டவள்ளல்வாழி
வாழிதிருவேரகத்தெங்குருவீரப்ப
மாக்கலைஞன்றிருவடித்தாமரைபூம்போது
வாழிதமிழ்க்கவிஞர்சோதிடநூல்வல்லோர்
மறைமுகிலும்புவிமகளும்வாழிதானே. (1328)

உ

சுகர்நாடி என்னும்

# ஜோதிட சிகாமணியின் உரை

## பாட்டின் இலக்கம்

## 27

(இதன் பொருள்)--[a] இராசிச்சக்கரத்தின் இலக்கினுதிபதியானவர் நவாங்கிஷச் சக்கரத்தில் எந்த இராசியில் நின்ருரோ அதற்குடையவர் இராசியில் சந்திரன், குரு, இராகு ஆகிய மூவரும் வருங்காலத்தில் ஜாதகருக்குத் தடையின்றி விவாகம் நடக்கும்.

(உதாரணம்) இந்த இராசிச் சக்கரத்தில் இலக்கினம் துலாம்; இலக்கினுதிபதி யாகிய சுக்கிரன், நவாங்கிஷ சக்கரத்தில் கன்னியி லிருக்கின்ருர். அக்கன்னிக்கும் மிதுனத்திற் குமுடையவர் புதன்

| | | | |
|---|---|---|---|
| | ராகு | சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| சந் செ | சுக் சூரி | ல-பு கே | |

| | | | |
|---|---|---|---|
| | | | கு-ரா சந் |
| | நவாம்ஸ சக்கரம் | | |
| | | | |
| | | | சூரி சுக் |

ஆகையால் அந்த மிதுனத்தில் சந்திரன், குரு, இராகு ஆகிய மூவரும் சுமார் 27-ம் வருஷம் கூடுவார்களாகையால் அப்போது கல்யாணம் நடக்குமெனக் காண்க.

[b]—7 க்குடையவரும், அசுரகுருவென்னும் சுக்கிரனும் ஆகிய இருவருமிருந்த இராசியில் ஆலோனென்னுஞ் சந்திரன், மறையவனென்னுங் குரு ஆகிய இருவரும் வரும்போது உடனே சுப கலியாணம் கூடும்.

(உ-ம்.) இராசிச் சக்கரத்தில் 7-க் குடையவர் செவ்வாய்; அவர் வீடாகிய மேஷத்தில் செவ்வாய், சுக்கிரன், குரு, சந்திரன் ஆகிய நால்வரும் சுமார் 28-ம் வருஷத்தில் ஒன்ருய்க் கூடுவார்களாகை யால் அப்போது கலியாணங் கூடுமெனக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | ச-செ சு-கு | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | ல | |

சுக்கிரன் வீட்டில் குரு சந்திரன் கூடும்.

உதாரணம்:—வந்தவிடத்திற் காண்க.

[c]—7-ம் இடத்தில் புதன் பலமடைந்திருந்தால், மாமன் பெண்ணை விவாகம்செய்து சுக மடைவான்.

(உ-ம்.) இது மீனலக்கினம், இலக்கினத்திற்கும் 7-ம் இடம் கன்னி, அதற்கு உடைய புதன் அதில் ஆட்சியுச்சமடைந்து பலம் பெற்றிருப்பதைக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | | புத |

28

(இ-ள்.) 7-ம் இடத்துக்குடையவர், 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றில் நின்று இலக்கினத்தைப் பார்க்கவும், ஏழுக்கு ஏழாமிடமாகிய இலக்கினதிபதிக்கு ஆதாயமென்கிற 11-ம் இடத்திற் குருவிருந்து சந்திரபார்வை பெற்றும், காமியென்னும் இராகு சுபர்களோடு 5-ல் நிற்கவும், வாக்காதிபனென்னும் 2-க் குடையவர் உச்ச மடைந்தவரோடும் ஆட்சி பெற்றவரோடுங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் பக்தியுள்ள மனைவியை விவாகஞ் செய்து நல்ல புத்திரரைப் பெற்றுச் சுகம் பெறுவார்.

| | | | |
|---|---|---|---|
| புத | சு செ சூ | | |
| | இராசிச் சக்கரம் | | சந் கே |
| குரு ராகு | | | |
| | | | ல |

(உ-ம்.) இந்தச் சக்கரத்தில் இலக்கினம் கன்னி; இதில் 7-ம் இடமாகிய மீனத்துக்குடைய குருவானவர் இதில் திரிகோணமாகிய 5-ம் இடத்தினின்று இலக்கினத்தைப் பார்ப்பதையும், இதில் 7-ம் இடமாகிய மீனத்திற்கு 7-ம் இடமாகிய கன்னிக் குரிய புதனுக்கு, 11-ம் இடமாகிய மகரத்தில் குருவிலிருந்து கடகத்திலிருக்கிற சந்திரன் பார்வைபெற் றிருப்பதையும், இதில் 5-ம் இடமாகிய மகரத்தில் இராகுவானவர் சுபராகிய குருவோடு நிற்பதையும், இதில் வாக்கு ஸ்தானமாகிய துலாத்திற் குரிய சுக்கிரன் உச்சமடைந்த சூரியனோடும் ஆட்சிபெற்ற செவ்வாயோடு மிருப்பதையும் காண்க.

## 29

(இ-ள். 7-க்குடையவர் ஆட்சியடைந்து, இரண்டாமிடத்துக் குடையவருமாகி களத்திரக்கோளாகிய சுக்கிரனோடும் ஆதாயத்தோனாகிய 11-க்குடையவரோடுங் கூடிநிற்கவும், குருவின் வீட்டில் பாக்கியாதிபதியாகிய 9-ம் இடத்துக்குரிய புதனிற்கவும் பெற்ற ஜாதகர் அத்தை மகளை விவாகஞ்செய்து சுகமாகிய புத்திரரைப் பெற்றுப் புண்ணியமுங் கண்ணியமும் பெறுவாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| புத | செ சு-சூ | ல | |

(உ-ம்.) இந்தச் சக்கரத்தில் இலக்கினம் துலாம்; இதில் 7-ம் இடமாகிய மேடத்துக்குடைய செவ்வாய் ஆட்சியடைந்து 2-ம் இடமாகிய விருச்சிகத்திற்கு முடையவராகி களத்திரக்கோளாகிய சுக்கிரனோடும் ஆதாயத்தோனாகிய 11-ம் இடமென்னும் சிங்கத்துக்குரிய சூரியனோடும் கூடியிருப்பதையும் குருவின் வீடாகிய தனுசு, மீனம் இவ்விரண்டில் தனுசில் 9-ஆம் இடமாகிய மிதுனத்துக் குரிய புதனிருப்பதையுங் காண்க.

குரு, சுக்கிரன், சந்திரன் ஆகிய இவர்கள் கூடி இலக்கினத்திலிருக்க, இதிற் பிறந்த ஜாதகரும் மேற்கூறிய விதியுடையவரேயாம்.

## 30

(இ-ள்.) 7-ம் இடத்துக்குக் குடையவர் 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றில் நிற்கவும், சந்திரனும் 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றில் நிற்கவும், நிதியென்னும் 9-ம் இடத்தில் பச்சையென்னும் புதனிற்கவும், 7-ம் இடத்துக்குடையவர் 7-ம் இடத்தைப் பார்க்கவும், களத்திரகாரனாகிய சுக்கிரன் வலுத்து நிற்கவும், சந்திரனுக்கு 7-க்குடையவரைக் குரு பார்க்கவும், செவ்வாய் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும், காமியாகிய இராகு ஆயமென்னும் 11-ம் இடத்தினிற்கவும், அவரைச் சந்திரன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் அருந்ததிக் கொப்பாகிய பெண்ணை விவாகஞ் செய்வராம்.

(உ-ம்.) இந்தச் சக்கரத்தில் இலக்கினம் கன்னி; இதில் 7-ம் இடமான மீனத்துக்குடைய குருவானவர் இதில் திரிகோணமான இலக்கினத்தில் நிற்பதையும், இதில் சந்திரன் திரிகோண மான 5-ம் இடத்தினிற்பதையும், இதில் 9-ம் இடமாகிய இடபத்தில் புதன் நிற்பதையும், இதில் 7-ம் இடமாகிய மீனத்திற்குரிய குரு 7-ம் இடத்தைப் பார்ப்பதையும், இதில் களத்திரக்காரனாகிய சுக்கிரன் 6-ம் இடமாகிய கும்பத்தில் பலமடைந்து நிற்பதையும், இதில் சந்திரனுக்கு 7-ம் இடமாகிய கடகத்துக் குரிய சந்திரனைக் குரு பார்ப்பதையும் இதில் செவ்வாயானது 7-ம் இடமாகிய கேந்திரத்திலிருப்பதையும், இதில் இராகு 11-ம் இடமாகிய கடகத்தில் நிற்பதையும், அந்த இராகுவைச் சந்திரன் மகரத்தினின்று பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| செ | | புத | |
| சுக் | இராசிக் சக்கரம் | | ராகு |
| கே சந் | | | |
| | | | லகு |

## 31

(இ-ள்.) 7-க்குடையவர் சந்திரமங்கள யோகமடையவும், குரு 1-4-7-10 ஆகிய கேந்திரங்களொன்றில் நிற்கவும், 7-ம் இடத்தில் காமியென்னும் இராகு விருக்கவும், 9-ம் இடத்துக் குடையவர் இலக்கின கேந்திர மடையவும், ஏழுக்கேழுக் குடையவராகிய

இலக்கினுதிபதி கண்ணென்னும் இரண்டினிற்கவும் பெற்ற ஜாதகர் பூமியின்கண் யோக்கியமும் பாக்கியமுமுடைய பெண்ணை விவாகஞ் செய்து புத்திர பாக்கியமும் பெற்றுக் களத்திர வழியாற் செல்வமும் பொருளும் மிகுதி பெற்று உயர் வடைவராம்.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| செ சந் | சு | ல-பு கே | |

(உ-ம்.) இச்சக்கரத்தில் இலக்கினந் துலாம்; இதில் 7-ம் இடம் மேடம். அதற்குடைய செவ்வாய் சந்திரனேடு கூடி சந்திர மங்களயோக மடைந்திருப்பதையும், இதில் குருவானவர் 4-ம் இடமாகிய கேந்திரத்தினிற்பதையும், இதில் 7-ம் இடமாகிய மேடத்தில் இராகு இருப்பதையும், இதில் 9-ம் இடமாகிய மிதுனத்துக்குடைய புதன் இலக்கின கேந்திரத்தி லிருப்பதையும், இதல் ஏழுக்கேழாமிடமாகிய இலக்கினுதிபதி 2-ம் இடத்தி னிற்பதையும் காண்க.

## 32

(இ-ள்.) களத்திரதானுதிபதி யென்னும் 7-க்குடையவர் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றி னிற்கவும், காமியாகிய இராகு 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றி னிற்கவும், நிதிக்கோ னென்னும் 9-க்குடையவர் களத்திரகாரகனென்னுஞ் சுக்கிரனுகி கிரிக்கோ னென்னும் லக்கினுதிபதியினேடும் மங்களாதிபனென்னும் செவ்வாயோடுங் கூடினிற்கவும், மதியென்னும் சந்திரனுனவர் குருவுக்கு ஆதாயமென்னும் 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் அருந்ததிக் கொப்பாகிய பதிவிரதையை விவாகஞ் செய்து அப்பெண்ணுள்ளவரையில் சிதையாச் செல்வம் பெறுவராம்.

| | | | |
|---|---|---|---|
| | சந் | | குரு |
| | இராசிச் சக்கரம் | | கே |
| ராகு | | | சு-பு செ |
| | | | ல |

(உ-ம். இந்தச் சக்கரத்தில் இலக்கினங் கன்னி, இதில் களத்திரத்தான மென்னும் 7-ம் இடமாகிய மீனத்துக்குரிய குருவானவர் கேந்திரமாகிய 10-ல் நிற்பதையும், இதில் இராகுவானவர் திரிகோணமென்னும் 5-ம் இடத்தி னிற்பதையும், இதில் 9-ம் இடமாகிய இடபத்துக்குடையவர் சுக்கிரனுகி லக்கினுதிபதியாகிய புதனேடும் செவ்வாயோடுங் கூடி நிற்பதையும் இதில் சந்திரனுனவர் குருவுக்கு 11-ம் இடமாகிய மேடத்தி னிற்பதையுங் காண்க.

## 33

(இ-ள்.) காமாதிபதி யென்னும் 7-க்குடையவர் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும்,ஏழுக்கேழுக்குடையவ ராகிய இலக்கினதிபதி 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றில் நிற்கவும், சுக்கிரன் 1-4-7-10 ஆகிய கண்டமென்னும் கேந்திரங் களிலொன்றில் நிற்கவும், வாமத்தோனென்னுஞ் சந்திரனவர் ஆட்சி யடைந்த செவ்வாயோடு கூடவும், காமக்கோளாகிய இராகு வியமென்னும் 12-ம் இடத்தினிற்கவும், சோமனெனும் சந்திரனுக்கு 7-ம் இடத்தில் நிதியோனென்னும் 9-க்குடையவர் காமி யென்னும் இராகுவோடு கூடி நிற்கவும், சுக்கிரன் வீட்டில் தூதனென்னும் புதனிற்கவும், பூமனென்னும் செவ்வாய்க்கு 7-க் குடையவர் சுகதானமென்னும் நான்கினிற்கவும் பெற்ற ஜாதகர் புண்ணியமுடைய நல்ல மனைவியோடு பொருந்தி வாழ்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | ராகு சனி | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| குரு | ச-செ கே | புத | சுக் |

(உ-ம்.) இச்சக்கரத்தில் மிதுன லக்கினம்; இதில் 7-ம் இடமாகிய தனுசிற்குரிய குருகேந்திர தானமென்னும் ஏழிலிருப்பதையும், இதில் ஏழுக்கேழா மிடமாகிய இலக்கினத்திற்குரிய புதன் திரிகோணமாகிய 5-ம் இடத்தி லிருப்பதையும், சுக்கிரன் கண்ட மென்கிற 4-ம் இடத்திற் கேந்திரித்திருப்பதையும், சந்திரன் செவ்வாயோடு கூடி நிற்பதையும், இராகு 12-ம் இடமாகிய இடபத்தி லிருப்பதையும், இதில் சந்திரனுக்கு 7-ம் இடமாகிய இடபத்தில் 9-ம் இடம் ஆகிய கும்பத்துக்குரிய சனி இராகுவோடு கூடி யிருப்பதையும், சுக்கிரன் வீட்டில் புதனிருப்பதையும், செவ்வாய்க்கு 7-ம் இடம் ஆகிய இடபத்துக்குரிய சுக்கிரன் 4-ம் இடமாகிய கன்னியி லிருப்பதையுங் காண்க.

## 34

(இ-ள்.) 7-ம் இடத்துக்குடையவர் செவ்வாயின் வீட்டினிற்கவும்,ஏழுக்கேழுக்குடைய புதன் களத்திரகாரனாகிய சுக்கிரனுடன்

கூடி வாக்குஸ்தானமாகிய இரண்டில் நிற்கவும், 9-க்குடையவரும் இராகுவுஞ் செவ்வாயோடு கூடி நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும், 4-க்கும் 5-க்கு முடையவர்கள் கூடி குரு பார்வையைப்பெற்று சந்திரனுடைய வீட்டினிற்கவும் பெற்ற ஜாதகர் இரண்டு உத்தம குணமுடைய பெண்களை விவாகஞ்செய்து ஓங்கிய செல்வத்தோடு நெடுநாள் வாழ்வராம்.

| | | | |
|---|---|---|---|
| | | சு-ரா செ | ல |
| | இராசிச் சக்கரம் | | சுக் புத |
| | | | |
| | குரு | | |

(உ-ம்.) இச்சக்கரத்தில் மிதுன லக்கினம்; இதில் 7-ம் இடம் தனுசு; அதற்குடைய குருவானவர் செவ்வாயின் வீடுகளாகிய மேடம் விருச்சிகம் இவ்விரண்டில் விருச்சிகத்தி லிருப்பதையும், 7-க்கு 7-ம் இடமாகிய இலக்கினத்திற்குடைய புதனானவர் களத்திரகாரகனாகிய சுக்கிரனோடு கூடி இரண்டாமிடமாகிய கடகத்தி லிருப்பதையும், 9-ம் இடமாகிய கும்பத்துக்குரிய சனியும் இராகுவும் செவ்வாயோடு கூடி நிற்பதையும், அவர்களை குரு பார்ப்பதையும் இதில் 1-ம் இடத்துக்குரிய புதனும் 5-இடத்துக்குரிய சுக்கிரனுங்கூடிக் குரு பார்வைபெற்றுச் சந்திரனுடைய வீடாகிய கடகத்தி லிருப்பதையுங் காண்க.

35

(இ-ள்.) களத்திர காரகனும், களத்திர ஸ்தானாதிபதியாகிய ஏழுக்குடையவனும் காரியாதிபதி யென்னும் 10-க்குடையவரோடு கூடி நிற்கவும், குரு 1-5-9 ஆகிய திரிகோணத்தி லொன்றில் நிற்கவும், 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் புதனுஞ் சந்திரனுங் கூடி நிற்கவும், செவ்வாய் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும், சந்திரனுக்கு 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் இலக்கினாதிபதி நிற்கவும், காமியாகிய இராகு 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் 2-3 உத்தமப் பெண்களை மணஞ்செய்து வாழ்வராம்.

| | | | |
|---|---|---|---|
| | சு-கு கே | சந் புத | |
| | | | |
| செ | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | ல-கு | ரா | |

(உ-ம்.) இச் சக்கரத்தில் விருச்சிக லக்கினம்; இதில் களத்திர காரகரும் களத்திர ஸ்தாநாதிபதியென்னும் 7-ம் இடமாகிய இடபத்துக்குரியவரும் சுக்கிரனாக இருந்து 10-இடமாகிய சிங்கத்துக்குரிய சூரியனோடு கூடியிருப்பதையும், குருவானவர் இலக்கின திரிகோணத்திவிருப்பதையும், கேந்திரமாகிய 7-ம் இடமென்னும் இடபத்தில் புதனும் சந்திரனுமிருப்பதையும், செவ்வாய் 4-ல் கேந்திரமேறி யிருப்பதையும், இதில் சந்திரனுக்கு 10-ல் இலக்கினாதிபதி கேந்திர மடைந்திருப்பதையும், இராகு 12-ம் இடமாகிய துலாத்தி விருப்பதையும் காண்க.

## 36

(இ-ள்.) 7-க்குடையவரோடு கூடி நின்றவர்களும், இரண்டுக்குடையவரோடு கூடி நின்றவர்களும் ஆகிய இரு தரத்தாருடைய ஆட்சி உச்சம் நட்பு முதலிய க்ஷேத்திர பலமும், தசவர்க்க பலமும் உயர்ந்திருக்கப்பெற்ற சாதகருக்கு உத்தமப்பெண் சேர்வளென்றும், க்ஷேத்திரவர்க்கபலங் குறைந்தால் அதமப்பெண் பொருந்துவளென்றும், முன்கூறிய 7-க்குடையவரோடும் 2-க்குடையவரோடும் உத்தம கிரகங்கள் எத்தனை சேர்ந்தனவோ அத்தனை உத்தமப்பெண்களை மணம் புரிவரென்றும், பாபக் கிரகங்கள் எத்தனை கூடி நின்றனவோ அத்தனை அதமப் பெண்களை விவாகஞ் செய்வரென்றுங் காண்க.

## குறிப்பு

## 37

| | | | |
|---|---|---|---|
| | ராகு | சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| சந் | சூ-சு | ல-பு | |

(இ-ள்) [1] தலையிறைவ னென்னுமிலக்கினாதிபதியினுடைய ஸ்புடமும், 7-க்குடையவனுடைய ஸ்புடமுஞ் சேர்த்து இராசி பனிரண்டில் வகுத்து வந்த மீதி இராசி, நாள், பாதத்தில் குருவரும் காலத்தில் விவாகம் நடக்குமென்றும், அப்படி விவாகம்நடக்கப்பெற்ற பெண்சுத்தகுணமுடைய கற்புடையவளாக வாழ்வாள்.

[2] மேற்கூறிய மீதி இராசிநாள், பாதத்தில் பாபக் கிரகங்கள் வந்தால் ஒருவேளை மண நாளெய்தபோதினும் நீசகுண முடையவளாயும் பூஷணியாயும் வாழ்வள்.

(உ-ம்.) இத் துலா லக்கினச் சக்கரத்திற்கு லக்கினுதிபதியினுடைய ஸ்புடம், ராசி-7, பாகை-6, கலை-59

7-க்குடைய செவ்வாயின் ஸ்புடம், ராசி-8, பாகை-11, கலை 29, விகலை-59.

இவ்விரண்டு ஸ்புடத்தையும் கூட்ட ராசி-15, பாகை-19, கலை-28, விகலை-59.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | சனி | |
| | நவாம்ஸ சக்கரம் | | |
| குரு | | | |
| சந் செ | சூரி சுக் | ல பு கே | |

இவற்றை ராசி 12-ல் கழிக்க மீதி ராசி-3, பாகை-19, கலை-28, விகலை-59

ஆனதால் மேட முதல் மூன்று ராசியுந்தாண்டி நான்காவது, கடகராசியில் ஆயிலிய நட்சத்திர முதற் பாதத்தில் குரு வரும் போது விவாகமாம். அப்பெண் சுகுணவதியாயிருப்பாள்.

மேற்கண்ட இராசியில் சனி முதலிய பாவக்கோள் வருங் காலத்தில் ஒருவேளை விவாகம் நடக்கப்பெற்ற போதிலும் அப் பெண் அவகுண முடையவளா யிருப்பாளெனக் காண்க.

[3] இந்தத் துலா லக்கினச் சக்கரத்தில் லக்கினுதிபதியுடன் சந்திரன் கூடி இலக்கினத்தில் நின்றால், தாய் வீட்டிற் சேர்ந்து வாழும் பெண்ணை விவாகஞ்செய்பவனெனக் காண்க

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | ல-சந் சுக் | |

38

(இ-ள்.) [1] சுக்கிரனின்ற ராசிக்கு 7-ம் இடத்துக்குடையவர் இலக்கினத்திற்கு 7-ல் சுபக் கிரகங்களோடு கூடி நிற்கவும், 7-க்குடையவரும் இரண்டுக்குடையவரும் கூடி இரண்டில் நிற்கவும்

பெற்ற ஜாதகருக்கு 9-க்குடையவர் திசையில் 10க்குடையவர் புத்தியில் கலியாணம் நடக்கும்

| | | | |
|---|---|---|---|
| சனி | | | ல |
| | இராசிச் | சக்கரம் | சந் குரு |
| | | | |
| செ புத | | சு | |

(உ-ம்.) இச்சக்கரத்தில் மிதுன லக்கினம்; இதில் துலா ராசியில் சுக்கிரனிற்பதையும், அதற்கு 7-ம் இடமாகிய மேடத்துக்குரிய செவ்வாயானது சுபக்கிரகமாகிய புதனோடு கூடி இலக்கினத்திற்கு 7-ம் இடமாகிய தனுசில் நிற்பதையும், இதில் 7-ம் இடமாகிய தனுசுக்குடைய குருவானவர் 2-ம் இடமாகிய கடகத்துக்குரிய சந்திரனோடு கூடி இரண்டாமிடமாகிய கடகத்தில் நிற்பதையுங் காண்க. இச்சாதகருக்கு 9-ம் இடமாகிய மீனராசிக்குரிய குரு புத்தியில் கல்யாணங் கூடும்.

[2] மங்கலத்தோனாகிய செவ்வாயும், 9-க்குடையவரும் சுபக்கிரகங்களும் ஆகிய 3-தரத்தாரும் ஒருவர் மனையில் மற்றொருவர் மாறிநிற்கப்பெற்ற ஜாதகருக்கு பாக்கிய விர்த்தியோடுங் கூடி விவாக முடியும்.

| | | | |
|---|---|---|---|
| செ | | பு | சு |
| | இராசிச் | சக்கரம் | ல |
| | | | |
| | குரு | | |

(உ-ம்.) இச் சக்கரத்தில் லக்கினம் கடகம்; இதில் செவ்வாயும்,9-ம் இடமாகிய மீனராசிக்குரிய குரு ஆகிய இருவரும் செவ்வாயின் வீடாகிய விருச்சிகத்திற் குருவும், குருவின்வீடாகிய மீனராசியில் செவ்வாயும் ஆக ஒருவர்க்கொருவர் மாறியிருப்பதையும்,இதில் சுபர்களாகிய சுக்கிரனும் புதனும் இருவரும் சுக்கிரன்வீடாகிய இடபத்திற் புதனும், புதன் வீடாகிய மிதுனத்தில் சுக்கிரனுமாக மேற் கூறியபடி ஒருவருக்கொருவர் மாறி யிருப்பதையுங் காண்க.

39

(இ-ள்.) சந்திரன் எந்த ராசியில் நிற்கின்றாரோ அந்த ராசியாதிபதியின் ஸ்புடமும், சந்திரனுக்கு 7-க்குடையவருடைய ஸ்புட

முஞ் சேர்ந்து இராசி யென்னும் 12-ல் வகுக்க வந்த பாக்கியின் இராசியில் குருவரும்போது, தலைவன் ஸ்புடமாகிய இலக்கின ஸ்புடமும், இரண்டுக்குடையவருடைய ஸ்புடமும் பெருக்கிச் சூரியன் நின்ற ராசியாதிபதியின் ஸ்புடத்தை அத்தொகையுடன் கூட்டி 12-ல் வகுக்க, வந்த பாக்கி யெந்த இராசியில் வருமோ அந்த ராசி மாதத்தில் சூரியன் வருங்காலத்திலும் இலட்சுமிக்குச் சமானமான பெண்ணை விவாகஞ் செய்யுங்காலஞ் சேர்ந்ததென்று திடமாகக் கூறுவாயாக.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | னி | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| சந் செ | சூரி சுக் | ல-பு கே | |

(உ-ம்.) இதில் சந்திரனின்ற இராசியாதிபதி குரு; அவர் ஸ்புடம் ராசி-9, பாகை-4, கலை-11, விகலை 45, சந்திரனுக்கு ஏழுக்குடையவர் புதன், அவர் ஸ்புடம் ராசி–6, பாகை–17, கலை-45, விகலை-15, இவ்விரண்டு ஸ்புடத்தையும் கூட்ட ராசி-15, பாகை-21, கலை-57. இதை 12 ல் வகுக்க பாக்கி ராசி-3, பாகை-21, கலை–57, இதை மேட ராசி முதல் எண்ணும்போது கடக ராசியில் ஆயிலியம் இரண்டாம் பாதமானதால் அதில் குரு வரும்போதும்; இலக்கினுதிபதி சுக்கிரன், அவர் ஸ்புடம் ராசி–7, பாகை-11, கலை-29, விகலை-15, இவ் விரண்டையும் பெருக்க 60–5/8-ராசி வந்தது. அதனோடு சூரியனின்ற ராசியாதிபதி செவ்வாய்; அவர் ஸ்புடத்தையுங் கூட்ட ராசி-69, பாகை-0, கலை–14, விகலை-15 இதில் 12-ல் வகுக்க பாக்கி இராசி–9, பாகை-0, கலை 14, விகலை-15 வந்தது. மேட முதல் எண்ண மக ராசி வருகிறபடியால் அந்த ராசியில் சூரியன் வரும்போதும் விவாகம் நடக்குமெனக் காண்க.

40

(இ-ள்.) ஐந்துக்குடையவர் குருவினுடைய வீட்டில் கேந்திர மேறவும், ஐந்தாமிடத்தில் குருவிருக்கவும், ஆட்சிபெற்ற சந்திரன் குருவைப் பார்க்கவும், சூரியன் உச்சம் பெற்று ஒன்பதுக்குடையவரோடும் சந்திரன் பஞ்சமாதியோடுங் கூடியிருக்கவும், ராசியென்

னும் சந்திரனைக் குரு நோக்கவும் பெற்ற ஜாதகருக்குக் கொஞ்சும் படியான புத்திரர் பலருண்டு. கேந்திரத்திலிருந்த புதன் திசையில் குரு புத்தியில் ஜேஷ்ட புத்திரனுண்டாம்; அப்புத்திரனே ஆயுசுடையவனும். மற்றப் புத்திரர் நிலைப்பது அரிதாகும், பெண்ணாகப் பிறக்கிற் சில நிலைக்குமென்று கூறுக.

(உ-ம் இச் சக்கரத்தில் கன்னியா லக்கினம்; இதில் 5ம் இடமாகிய மகரத்துக்குரிய சனி குருவின் வீடாகிய 4-ம் இடமென்னும் தனுசில் கேந்திரமடைந்திருப்பதையும், இதில் 5-ம் இடமாகிய மகரத்தில் குருவிருக்க அவரை ஆட்சியடைந்த சந்திரன் கடகத்திலிருந்து பார்ப்பதையும் இதில் சூரியன் மேடராசியில் உச்சமடைந்து 9-ம் இடமாகிய இடபத்துக்குரிய சுக்கிரனோடும் சந்திரனுக்கு 5-ம் இடமாகிய விருச்சிக ராசிக்குரிய செவ்வாயோடுங் கூடி யிருப்பதையும், இதில் இராசி யென்னுஞ் சந்திரனை குரு பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| புத | சு செ சூரி | | |
| | இராசிச் சக்கரம் | | சந் |
| குரு | | | |
| சனி | | | ல |

41

(இ-ள்) குருவும், 10-க்குடையவரும், சுக்கிரனோடு கூடி இலக்கினத்தி லிருக்கவும், சந்திரனுக்கு 9-க்குடையவர் குருவின் வீட்டிலிருக்கவும், 5-க்குடையவருமாகிய செவ்வாய்க்கு 11-ல் இருக்கவும், 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலாகிலும், 1-5-9 ஆகிய திரிகோணங்களிலாகிலும் சுக்கிரன் ஆட்சிபெற்று நிற்கவும், 5-ம் இடத்தை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு விசேட புத்திரருண்டு. குரு திசையில் கேது புத்தியில் ஜேஷ்ட புத்திரனுண்டாம். இப்புத்திரன் தந்தையின் தொழிலைச் செய்து தந்தைக்குப் பணிவிடை புரிந்து, பிதாமகற்கும் தந்தைக்கும் அவ்வாறு புரிந்து புகழுங் கீர்த்தியு முடையவனாவான்.

(உ-ம்.) இச்சக்கரத்தில் துலா லக்கினம்; இதில் குருவும் 10 ம் இடமாகிய கடகத்திற்குரிய சந்திரனும் ஆகிய இரு

வரும் சுக்கிரனோடு கூடி கேந்திரமுந் திரி கோணமுமாகிய லக்கினத்தி னிற்பதை யும், இதில் சந்திரனின்ற ராசிக்கு 9-ம் ராசியாகிய மிதுனத்துக்குரிய புதன் குரு வின் வீடாகிய தனுசில் நிற்பதையும், இதில் 5-ம் இடமாகிய கும்பத்துக்குரிய சனியானவன் செவ்வாய்க்கு 11-ம் இட மான கன்னியில் நிற்பதையும் இதில் கேந் திர திரிகோணங்களில் சுக்கிரன் ஆட்சிபெற்று நிற்பதையும் இதில் 5-ம் இடமாகிய கும்பத்தை குரு பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| புத | செ சூரி | ல-கு ச-சு | சனி |

## 42

(இ-ள்.) 5-ம் இடத்துக்குடையவர் 4-ம் இடத்தினிற்கவும் குருவானவர் சுக்கிரனுக்குக் கேந்திரத்திலிருக்கவும், அதுவன்றி அவர் இலக்கின கேந்திரமேறி ஆட்சியடைந்திருக்கவும், சந்திர னுக்கு 5-க்குடையவர் லக்கினத்தைப் பார்க்கவும் அல்லது லக்கி னத்திலிருக்கவும், சந்திரனுக்கு 9-க்குடையவர் ஆட்சிபெற்று விளங்கிய செவ்வாயோடுகூடி சுக்கிரனுக்கு 3-ல் நிற்கவும், புதன் 1-5-9 ஆகிய திரிகோணங்களிலொன்றில் நிற்கவும், குருவுக்கு 11-ல் சூரியனிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் பல புத்திரருண் டாம்; இதில் ஓர் வினயம் யாதெனில், சுக்கிரன்றிசையில் புதன் புசிப்பிற் கொடுக்கும், புத்திரன் நிலைத்து அப்புத்திரன் புத்தியுஞ் சித்தியுமுடையவனும் என்பதே. அதன்மேல் சந்திர திசையிலும் செவ்வாய் திசையிலும் புத்திரருண்டாவ ரென்றுங் கூறுக.

(உ-ம்.) இச் சக்கரம் மிதுன லக்கி னம்; இதில் 5-ம் இடமாகிய துலாத்துக் குரிய சுக்கிரன் 4-ம் இடமான கன்னியி னிற்பதையும் இதில் குருவானவர் சுக்கிர னின்ற ராசிக்குக் கேந்திரமென்னும் 4-ம் இடமாகிய தனுசிலிருக்க அல்லது இலக் கின கேந்திர ஸ்தானமென்னும் 7-ம் இட மாகிய தனுசிலிருந்து ஆட்சியுமடைந்

| | | | |
|---|---|---|---|
| புத | செ சூரி | | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| ராகு | | | |
| குரு | | | சுக் |

திருப்பதையும் இதில் சந்திரனின்ற ராசிக்கு 5-ம் இடமாகிய மீன ராசிக்குரிய குரு, லக்கினத்தைப் பார்ப்பதையும், இதில் சந்திரனின்ற ராசிக்கு 9-ம் இடமாகிய கடகத்திற்குரிய சந்திரன், ஆட்சி பெற்ற செவ்வாயோடு கூடி சுக்கிரனின்ற ராசிக்கு 3-ம் இடமாகிய விருச்சிகத்தில் நிற்பதையும், புதனனவர் திரிகோணமென்னும் 5-ம் இடத்தி னிற்பதையும், குருவுக்கு 11-ம் இடமாகிய துலாத்தில் சூரிய னிற்பதையுங் காண்க.

## 43

(இ-ள்.) 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் 5-க்குடையவர் 3-க்குடையவரோடு கூடிநின்று, அவர்களை குரு பார்க்கவும், சந்திரனுக்கு 9-ம் இடத்திற் குரு நிற்கவும், அக்குரு நின்ற ராசிக்குடையவர் சந்திரனுக்கு 5-ல் நின்று இவரையும் குரு பார்க்கவும், சந்திரனுக்கு 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றிற் சூரியன் நிற்கவும், சந்திரன் 1-5-9 ஆகிய திரிகோணத்தி லொன்றில் நிற்கவும், 9-க்குடையவர் 9-ம் இடத்திற்கு 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும்பெற்ற ஜாதகருக்கு ராகு திசையில் புதன் புத்தியில் பெண்மக்களுண்டாம்; குரு திசையில் சனி, புதன், கேது இவர்கள் புசிப்பில் மூன்று பெண்கள் உற்பத்தியாகி குரு திசையில் சந்திர புசிப்பில் ஆண் புத்திரருண்டாமென்க.

| | | | |
|---|---|---|---|
| செ சனி | கு | புத | |
| சுக் | இராசிச் சக்கரம் | | |
| சந் | | | |
| | | | ல குரு |

(உ-ம்) இச் சக்கரத்தில் கன்னியா லக்கினம்; இதில் கேந்திரஸ்தானமென்னும் 7-ம் இடமாகிய மீனத்தில் 5-ம் இடமாகிய மகரத்துக்குரிய சனியானவர் 3-ம் இடமாகிய விருச்சிகத்துக்குரிய செவ்வாயோடு கூடிநின்று அவர்களை குரு பார்ப்பதையும், சந்திரனின்ற ராசிக்கு 9-ம் இடமாகிய கன்னியில் குருவும், அக்கன்னிக்குரிய புதனனவர் சந்திரனின்ற ராசிக்கு 5-ம் இடமாகிய இடபத்தில் நிற்பதையும், இவரை குரு பார்ப்பதையும், இதில் சந்திரனின்ற ராசிக்கு கேந்திர ஸ்தானமென்னும் 4-ம் இடமாகிய மேடத்தில் சூரியன் நிற்பதையும், சந்திரன் லக்கினத்திற்குத் திரி

கோண மென்னும் 5-ம் இடமாகிய மகரத்தில் நிற்பதையும், 9-ம் இடமாகிய இடபத்திற்குரிய சுக்கிரன் 9-ம் இடத்திற்கு கேந்திர ஸ்தானமாகிய 10-ம் இடமாகிய கும்பத்திலிருப்பதையும் காண்க.

## 44

(இ-ள்.) [1] 5-க்குடையவர் நவாம்ச சக்கரத்திற் சொட்சேத்திரம் பெற அல்லது அவரிருந்த நவாம்சாதிபதி அந் நவாம்சத்திற் சொட்சேத்திரம் பெற்ற ஜாதகருக்குப் பூரண ஆயுளுள்ள ஏகபுத்திர னுண்டென்றுங் கூறுக

[2] மேற்கூறிய 5-க்குடையவரை பொன்னென்னும் குரு பகவான் இலக்கனத்திலிருந்து நட்புடன் நோக்கினும் புத்திர னுண்டென்றுங் கூறுக.

[3] இலக்கினத்திலிருந்தவர்களும், புண்ணியமென்னும் 9-ம் இடத்தி லிருந்தவர்களும், இவர்களைப் பார்ப்போரும், இவருடன் கூடி நின்றோர்களும், புண்ணிய கிரகங்களென்னும் குரு, சுக்கிரன் சந்திரன், புதன் ஆகிய இவர்களாகில் இளமையிற் புத்திர னுண்டாமென்றுங் கூறுக.

[4] 5-க்குடையவர், 5-மிடத்தில் வலிமை பெற்ற கிரகங்களோடும், சுபக் கிரகங்களாகிய சந்திரன், சுக்கிரன், புதன், குரு ஆகிய இவர்களோடுங் கூடி குரு வீட்சண்யமும் பெற்ற ஜாதகருக்கு சிறப்புப் பொருந்திய பூரண வயதுள்ள புத்திரருண்டு என்றுங் கூறுக.

(உ-ம்.) இச் சக்கரத்திற் கன்னியா லக்கினம்; இதில் 5-ம் இடமாகிய மகரத்துக்குரிய சனி 5-ம் இடத்தில் பலம் பெற்றிருக்கின்ற செவ்வாயோடும், சுக்கிரன் சந்திரன் இவர்களோடுங் கூடிநின்று, இவர்களைக் குரு பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | குரு | |
| | இராசிச் சக்கரம் | | |
| செ சு சநி-ச | | | |
| | | | ல |

## 45

(இ-ள்) [1] இலக்கினத்திற்கு 5-ம் இடத்திற் சூரியனிற்கவும், 5-க்குடையவர் பலம் பெற்று நிற்கவும், தாரை மணுளனுகிய சந்திரன் 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றிற் சிறந்து நிற்கவும் பெற்ற ஜாதகன் பொன்னிறம்போன்ற புத்திரரைப் பெற்று பலவிதமான சுகங்களைப் பெறுவன்.

(உ-ம்.) இச் சக்கரத்திற் கன்னியா லக்கினம்; இதில் 5-ம் இடமாகிய மகரத்திற் சூரிய னிற்பதையும், அம் மகரத்திற்குரிய சனி உச்சமடைந்து துலா ராசியில் வலுப்பெற்று நிற்பதையும், இதில் சந்திரன் 9-ம் இடமாகிய இடபத்தில் திரிகோண வலுப்பெற் றிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | சந் | |
| | இராசிச் | | |
| கு | சக்கரம் | | |
| | | சனி | ல |

[2] புரோகிதனுகிய குருவானவர் 5-ம் இடத்தினிற்கவும், 5-க்குடையவர் பலமடையவும், அவர்களைச் சுபக்கிரகங்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரருண்டா மென்க.

(உ-ம்.) இச்சக்கரத்தில் கடக லக்கினம்; இதில் 5-ம் இடமாகிய விருச்சிகத்தில் குருவிருப்பதையும், அவ்வைந்துக்குடைய செவ்வாய் ஆட்சி யடைந்து வலுப்பெற்று, 5-ம் இடத்தி னிற்பதையும் அவர்களைப் புண்ணிய கிரகங்க ளென்னும் சந்திரன், சுக்கிரன், புதன் ஆகிய இவர்கள் பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | சு-பு சந் | |
| | இராசிச் | | ல |
| | சக்கரம் | | |
| | குரு செ | | |

[3] மேற்கூறிய கிரகங்களில் நன்மையைத் தருகின்ற குருவானவர், வைசேடிகாங்கிஷமெனும் தசவர்க்கத்தில் ஆறு ராசியிலுமேறி மேற்கூறிய சுபர்களுடைய நேர் பார்வையும் பெறுவாராகில் மேன்மையான புத்திரரைப் பெறுவார்.

## 46

(இ-ள்.) [1] இலக்கினதிபதி 5-ம் இடத்தினிற்கவும், அவரோடு இராகு அல்லது கேது கூடவும், 5-க்குடையவர் வலுப்

பெற்று நிற்கவும் அவரோடு வேதனுகிய 4-க்குடையவர் கூட அல்லது பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு வாலிபத்திற் புத்திர னுண்டாம்.

(உ-ம்) இச் சக்கரத்தில் மேட லக்கினம்; இதில் இலக்கினதிபதியாகிய செவ்வாய் 5-ம் இடமாகிய சிங்கத்தினிற்பதையும், அவரோடு கேது கூடியிருப்பதையும், 5-ம் இடமாகிய சிங்கத்துக்குரிய சூரியன் மேட ராசியில் உச்ச வலுவடைந்து நிற்பதையும், அவரோடு 4-ம் இடமாகிய கடகத்திற்குரிய சந்திரன்கூடி நிற்பதையும் காண்க

| | | | |
|---|---|---|---|
| | ல-ச கு | | |
| ரா | இராசிச் சக்கரம் | | |
| | | | செ கே |
| | | | |

[2] 5-க்குடையவர் நவாங்கிஷ சக்கிரத்தில் எந்த ராசியில் நிற்கின்ருரோ அதுமுதல் ஜாதகனுடைய ஜென்மலக்கினம் வரையில் எண்ணிஞல் எத்தனை யிராசி வருமோ அத்தனை புத்திரர் பெறுவர்.

(உ-ம்.) இந்த நவாம்ஸ சக்கரத்தில் மேலெழுதிய மேட லக்கினத்திற்கு 5-க் குடையவர் சூரியன், அவர் இந்த நவாம்ஸ சக்கரத்தில் தனுசு ராசியி லிருப்பதால் அவை முன் ஜென்ம லக்கின மாகிய மேட முதல் எண்ணும்போது 9-ராசியாகிறபடியால் 9-புத்திரருண்டா மெனக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | நவாங் கிஷம் | | |
| | | | |
| சூ | | | |

[3] இலக்கினதிபதி 7-ம் இடத்தி னிற்கவும், 7-க்குடையவரும், 4-க்குடையவருங்கூடி பலஹீனமடையாமல் பலத்து நிற்கவும், 2-க்குடையவர் லக்கினத்திலாகிலும், 5-ம் இடலத்திலாகிலுமிருக்கவும்; அவரைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு நிலைத்த புத்திரனுண்டாம்.

(உ-ம்.) இச்சக்கரத்தில் கடக லக்கினம்; இதில் லக்னுதிபதியாகிய சந்திரன் 7-ம் இடமாகிய மகரத்தி லிருப்பதையும், 7-க்குடையவராகியசனியும், 4-க்குடைய வராகிய சுக்கிரனும் கூடி உச்சமும் ஆட்சியு மடைந்து பலம்பெற்று நிற்பதையும், இரண்டா மிடமாகிய சிங்கத்துக்குரிய சூரியன் 5-ம் இடத்தி லிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| சந் | | | |
| | கு | சு சனி | |

## 47

(இ-ள்.) 5-க்குடையவர் நின்ற ராசியாதிபதியின் ஸ்புடத்தையும், சூரியன் ஸ்புடத்தையும் கூட்டி 12-ல் வகுத்து வந்த பாக்கி ராசி-பாகை-கலை ஆகியவைகளில் குரு வருங் காலத்தில் அழகிய புத்திர னுண்டாம்.

(உ-ம்.) இந்தச் சக்கரத்தில் லக்கினம் துலாம்; 5-க்குடையவர் சனி, அவரிருந்த ராசி இடபம், அவ்விடபத்துக்குரிய சுக்கிரன் ஸ்புடம் ராசி-7, பாகை-6, கலை-59, விகலை-45 இதில் சூரியன் ஸ்புடம் ராசி-7, பாகை-23, கலை-45, விகலை-$3\frac{3}{4}$ இவை இரண்டு ஸ்புடத்தையும் ஒன்ருய்க் கூட்ட மொத்தம் ராசி-15, பாகை-0, கலை-45, ஊகலை-$15\frac{3}{4}$, இதை 12-ல் வகுக்க பாக்கி ராசி-3 பாகை-0, கலை-45, விகலை-$15\frac{3}{4}$ இதை மேடம் ஆதியாக எண்ணும்போது கடகம் வருகிறபடியால், அக்கடகம் முதற்பாதத்தில் குரு வந்த காலத்தில் புத்திரனுண்டானதைக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | சு கு | ல | |

[2] 5-க்குடையவர் புடத்தில் முதுமகனென்றும் சனியின் ஸ்புடத்தைக் கழித்து நின்ற பாக்கி ராசியில் குருவருங் காலத்தில் விசேட புத்திரனுண்டாம்.

(உ-ம்.) மேற்கண்ட சக்கரத்தில் 5-க்குடையவரும் சனியும் ஆகிய இருவரும் ஒருவராகி அவர் ஸ்புடம் ராசி-1, பாகை-17, கலை-39, விகலை-7, தற்பறை-3 வந்தன. இதை மேடமாதியாக எண்ணும்போது இடபராசியில் உரோகணி 3-ம் பாதம் வந்தபடியால் அந்தராசி பாதத்தில் குருவந்தபோது விசேட புத்திரனுண்டானதைக் காண்க.

[3] 5-க்குடையவர் சுபனுகி உச்சமடைந்தாலும், அல்லது 11-ம் இடத்தில் நட்படைந்து நின்ருலும், சுகமாகிய புத்திரனுண்டாம்,

(உ-ம்) இச் சக்கரத்தில் மிதுன லக்கினம்; 5-ம் இடம் துலாம்; அதற்குடைய சுக்கிரன் சுபனுகி மீனத்தில் உச்சம் பெற்றிருப்பதைக் காண்க.

சுக்
ல
இராசிச்
சக்கரம்

[4] இவ்விதச் சக்கரத்தில் 11-ம் இடமாகிய மேடத்தில் சுக்கிரனை அமைத்து நட்பு பெற்றிருப்பதைக் காண்க·

[5] 5-க்குடையவரோடு கூடினவர் எத்தனை பேரோ அத்தனை புத்திரருண்டாம்.

[6] லக்கினத்தில் சந்திரன் நிற்கவும், சுக்கிரன் 6-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு ஏக புத்திரனுண்டாம்.

ல—ச
இராசிச்
சக்கரம்
சு

(உ-ம்.) இதில் இடப லக்கினம்; இதில் சந்திரன் நிற்பதையும், 6-ம் இடமாகிய துலாத்தில் சுக்கிரன் நிற்பதையுங் காண்க.

## 48

(இ-ள்.) கதிரென்னுஞ் சூரியனும், மதியென்னும் சந்திரனும் ஆகிய இருவர்களுக்கும் உரிய கேந்திர ஸ்தானங்களில் முன்கூறிய இடப லக்கினச் சக்கரத்தில் நிற்கப்பெற்ற ஜாதகருக்குப் புத்திரனிருந்தும் கருமஞ்செய்யானும்.

ல
இராசிச்
சக்கரம்
ச—சூ

(உ-ம்.) [1] இதில் இடப லக்கினம்; சூரியன், சந்திரன் ஆகிய இருவர்களுக்கும் உரிமையான கேந்திரமாகிய 10-ம் இடத்தில் இருப்பதையுங் காண்க.

[2] 5-க்குடையவர் சூரியனேடு கூடி நிற்கப்பெற்ற ஜாதகருக்கு பன்றியைப் போல் பல புத்திரருண்டாம்.

(உ-ம்.) இதில் மிதுன லக்கினம்; 5-ம் இடமாகிய துலாத்துக்குரிய சுக்கிரன் சூரியனோடு கூடி நிற்பதைக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சு—சூ | | | |

[3] சூரியனுக்கு 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் சந்திரன் நிற்கப் பெற்ற ஜாதகர் தன் பிதாவுக்குக் குறைந்த யோகமுடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | சூ | | |
| | இராசிச் சக்கரம் | | |
| சந் | | | |
| | | | |

(உ-ம்.) இச் சக்கரத்தில் மேட ராசியில் சூரியன் நிற்பதையும், அதற்கு 10-ம் இடத்தில் சந்திரன் நிற்பதையுங் காண்க.

சந்திரன் லக்கினத்திற்கு 11-2-5-8 ஆகிய இந்த இடங்களிலொன்றிலிருக்கில் பிதாவுக்குச் சமமாயிருப்பன். சந்திரன் ஆபோகிலிய மென்னும் 9-12-3-6 ஆகிய இந்த விடங்களிலொன்றிலிருக்கில் பிதாவுக்கு மேலாயிருப்பன். சந்திரன் 5-7-9-12 ஆகிய இந்த விடங்களிலொன்றில் நட்பாட்சி யுச்சம் பெற்று இராஜ பார்வையு மடைந்தால், தனக்கு மேல் பத்தாயிரம் பங்கு கொண்ட புதல்வனைப் பெறுவன்.

## 49

இடப லக்கினத்திற் செனிக்க, அந்த லக்கினத்திற்கு 5-ம் இடத்தில் குருவிருக்க, ஐந்துக்குடையவர் இந்த மண்டலமாகிய சந்திரன் வீட்டிலிருக்க, ஏழாம் இடத்திற்குத் திரிகோணத்தில் செவ்வாயிருக்க, உடுபதியாகிய சந்திரன், குரு வீட்டிலும், குரு கேந்திரத்திலுமிருக்க, அவரை ஒள்ளியோனாகிய சுக்கிரன் பார்க்க, சந்திர கேந்திரத்தில் அறிவனாகிய செவ்வாயிருக்க, அவரைக் குரு நோக்க செனனமான ஜாதகருக்கு சுக்கிர திசை மத்தியில் விவாகம் முடியும்.

| | | | |
|---|---|---|---|
| செ | | ல | சு |
| | இராசிச் சக்கரம் | | பு |
| | | | |
| | சந் | | குரு |

சந்திர திசையில் புத்திரிகளுண்டாம். அதில் இளைய பெண் இலட்சுமிக்குச் சமமாக பாக்கியவதியாய் இப் பெண்ணால் செல்வமும் புகழும் சித்திரமாட உப்பரிகையுங் கிடைக்கும். சந்திர திசை செவ்வாய் திசை இவற்றில் புத்திரன் கிடைப்பான்.

## 50

### கேந்திரங்கள்

இலக்கினத்திற்கு இலக்கின கேந்திரமென்றும், இலக்கின முதல் 4–ம் வீட்டிற்கு சுக கேந்திரமென்றும், இலக்கின முதல் 7-ம் வீட்டிற்கு – சத்தம கேந்திரமென்றும், இலக்கின முதல் 10–ம் வீட்டிற்கு-தசம கேந்திரமென்றும் பெயராம்.

(உ–ம்.) இந்தச் சக்கரத்திற் காண்க.

| | | | |
|---|---|---|---|
| 6 | 7–சத்தமகேந்திரம் | 8 | 9 |
| 5 | இராசிச்சக்கரம் | | 10 தசம கேந்தி |
| 4 சுக கேந்திரம் | | | 11 |
| 3 | 2 | 1 சுக்கிர கேந்தி | 12 |

### திரிகோணங்கள்

1–5-9 ஆகிய இடங்கள் திரிகோணமாம்.

(உ–ம்.) இந்த சக்கரத்தில் லக்கினம் துலாம்; இதில் 1 ம் 5-ம் 9-ம் இடங்கள் திரிகோண மெனப்படும்.

| | | | |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| 5 | இராசிச் சக்கரம் | | 10 |
| 4 | | | 11 |
| 3 | 2 | ல 1 | 12 |

## பண்பரங்கள்

லக்கினத்திற்கு 11-ம் இடம், 2-ம் இடம், 5-ம் இடம், 8-ம் இடம் ஆகிய இந்நான்கு ராசியும் பண்பரங்களாம்.

## ஆபோகிலியம்

லக்கினத்திற்கு 9-ம் இடம், 12-ம் இடம், 3-ம் இடம், 6-ம் இடம் இந்த நான்கு ராசிகளும் ஆபோகிலியமாம். மற்றைய நான்கு ராசியுங் கேந்திரமாம்.

மேற் சொன்ன கேந்திரம், திரிகோணம், பண்பரம், ஆபோகிலியம் ஆகியவைகளை இச்சக்கரத்தில் முறையே காண்க.

| | | | |
|---|---|---|---|
| 6 ஆபோ கிலியம் | 7 கேந்திரம் | 8 பண்பரம் | 9 ஆபோ கிலியம் |
| 5 பண்பரம் | இராசிச் சக்கரம் | | 10 கேந்திரம் |
| 4 கேந்திரம் | | | 11 பண்பரம் |
| 3 ஆபோ கிலியம் | 2 பண்பரம் | 1 ல கேந்தி | 12 ஆபோ கிலியம் |

## காரகாதிபத்தியங்கள்

[1] சூரியனுனவர்-பிதிர், பிரதாபம், உட்டிணம், சத்திய வசனம், ஞான உதயம், ஆன்மா, உத்யோகம், பத்தியம் பரிபாலனம், சித்தம் ஆகிய பத்து காரகாதிபத்தியமுடையவர். அதுவன்றி அவருக்கு தான வலுவாலும், கதியாலும், அவரடைந்த வுரிமையாலும், கணிதமுணர்ந்த நாதர்கள் இன்னும் பல காரகாதிபத்திபம் கூறுவார்கள்.

51

[2] சந்திரனுனவர் மாதுர், இடபாகம் அழகு, குளிர்ச்சி, முகம், சிலேற்றுமம், பூ முதலிய வாசனை திரவியங்கள், சந்தனுதியனுலேபனம், அறம், நேசம் ஆகிய எட்டு காரகாதிபத்தியமுடையவர்.

[3] செவ்வாய்-சகோதரம், சிறந்த போர், பூமி, பித்தரோகம், பராக்கிரமம் ஆகிய ஐந்து காரகாதிபத்திய முடையவர்.

[4] புதன்-வித்தை, மாதுலன், தீர்க்கமாகிய அதிசெய பந்துத்வம், கேள்வி, செட்டு முதலிய காரகாதிபத்திய முடையவர்.

[5] குருவானவர் - புத்திரன், வேதத்தெளிவு, பொன்னிருக்குமிடம், ஆபரண முதலிய காரகாதிபத்தியமுடையவர் .

52

[6] (இ-ள்.) சுக்கிரன்-களத்திரம், சந்தோஷம், சுகம், மாணிக்கம், மந்திரம், சம்போகம், களப கஸ்தூரி வாசனை, மங்களகரம், அலங்காரம், வாகனம், பசுக்குலச் சேர்க்கை, சுகிர்தம் ஆகிய12-காரகாதிபத்தியங்க ளுடையவர்.

[7] சனி-ஆயுசு, பசி, தாகம், துற்பலம், ஆபத்து, அவஸ்தை,வாதரோகம் ஆகிய ஏழு காரகாதிபத்தியமுடையவர்.

[8] ராகு-தீர்த்த யாத்திரை, சாஸ்திர, சம்பன்னம், ஐஸ்வரியம், காம சம்போகம், எக்ஷணியாட்டம், பொய்க்குடிலம், பக்குவம், வைத்தியம், தைரியம், பகைமை, பாண்டுரோகம், களவு, பரஸ்தலப்பிரவேசம் ஆகிய 13-காரகாதிபத்தியங்க ளுடையவர்.

53

[9] (இ-ள்.) கேது-ஞானம், கேவலம், தெய்வத்தியானம், தவசு, மௌனம், வைராக்கியம், சன்னியாசம், நிதானம், மாதுர் மகீகாரம், திடசித்தம், மனவெறுப்பு, இலாகிரிப்பழக்கம், வீடின்மை மோட்ச சாம்பிராச்சியம், வாழ்வு ஆகிய 14-காரகாதிபத்திய முடையவர்.

இந்த நவக்கிரக காரகாதிபத்தியங்களை அக் கிரகங்களின் பெலம், பெலஹீனம் ஆகிய உச்சம், ஆட்சி, நட்பு, பகை, நீசம் என்பனவற்றையே வலுச்செலவென்றுங் கூறுவர். அவையன்றி அந்தக் கிரகங்களுக்குள்ள உட்பகை, நட்பு இவைகளைக்கொண்டும் சொல்லாதவைகளை யறிந்துணர்ந்தும் சொல்லுவர் உத்தமம்,

## பாலாரிட்டம்

## 54

[1] (இ-ள்.) லக்கினத்திற்கு 3-ம் இடத்திற் பாவக்கிரகமும் 8-ம் இடத்திற் பாவக்கிரகமு மிருக்கவும், சந்திரனுஞ் சனியும், இராகுவுக்கு 7-ம் இடத்தி லிருக்கவும், சூரியனுக்கு நான்காமிடத்திற் சுக்கிரனும், குருவு மிருக்கவும் பெற்ற ஜாதகன் ஜீவிப்பான்.

| | | | |
|---|---|---|---|
| ராகு | | குரு சுக் | |
| சூரி | இராசிச் | சக்கரம் | |
| | | | ல |
| | | செ | சனி சந் |

(உ-ம்.) இதில் சிம்மலக்கினம்; லக்கினத்திற்கு 3-ம் இடமாகிய துலாத்தில் செவ்வாயும், லக்கினத்திற்கு 8-ம் இடமாகிய மீனத்தில் ராகு இருப்பதையும், சந்திரனும், சனியும், ராகுவிற்கு 7-ம் இடமாகிய கன்னியிலிருப்பதையும், சூரியனுக்கு 4-ம் இடமாகிய ரிஷபத்தில் குரு, சுக்கிரன் ஆகிய இவர்க ளிருப்பதையுங் காண்க.

[2] 4-க்குடையவருக்கு 6-ம் இடத்திற் சனியிருக்க, அந்தச் சனிக்கு 4-ம்இடத்திற் செவ்வாயிருக்க லக்கினத்திற்கு 8-க்குடையவர் கேந்திரமேறில் ஜாதகன் ஜீவிப்பான்.

(உ-ம்.) இது இடப லக்கினம்; லக்கினத்திற்கு 4-க்குடைய சூரியனுக்கு 6-ம் இடமாகிய கன்னியில் சனியிருப்பதையும், அந்தச் சனிக்கு நான்காமிடமாகிய தனுசில் செவ்வா யிருப்பதையும், லக்கினத்திற்கு 8-ம் இடத்திற்குரிய குரு லக்கின கேந்திரம் பெற்றிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சூரி | ல குரு | |
| | இராசிச் | சக்கரம் | |
| | | | |
| செ | | | சனி |

[3] ராகுவுக்கு 4-ம் இடத்தில், சனி யிருக்கவும், அந்தச் சனிக்கு 10-ம் இடத்தில், சூரியன், புதன், சுக்கிரன் ஆகிய இவர்கள் இருக்கவும், சந்திரனும் 8-ம் இடத்திற் குரியவரும் ஆகிய இருவரும் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகன் 2-வருஷத்தில் அரிஷ்டமடைவனும்.

(உ-ம்.) இது சிங்க லக்கினம்; இடபத்தில் ராகு இருப்பதையும், அந்த ராகுவுக்கு நான்காமிடமாகிய சிங்கத்தில் சனியிருப்பதையும், அந்தச் சனிக்கு 10-ம் இடமாகிய இடபத்தில் சூரியன், புதன், சுக்கிரன் இவர்கள் இருப்பதையும், சந்திரனும், 8-ம் இடத்திற்குரிய குருவுங் கூடி 7-ம் இடத்திலிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | ரா-பு சூ-சு | |
| குரு சந் | இராசிச் சக்கரம் | | |
| | | | சனி ல |
| | கே | | |

[4] சூரியனுக்கு 8-க்குடையவர் லக்கினத்தி லிருக்கவும், சனிக்கு 8-க்குடையவர் சந்திரனுடன் கூடி நிற்கவும், 8-க்குடையவருக்கு 8-ம் இடத்துக்குடையவர், லக்கினத்திற்கு 7-ம் இடத்திலிருக்கவும், அவரைச் சுபக்கிரகங்களாகிய குரு புதன், சந்திரன், சுக்கிரன் இவர்கள் பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகன் ஒரு வருஷத்தில் மரிப்பான்.

(உ-ம்.) இது மீன லக்கினம்; மிதுனத்தில் சூரியன், அச் சூரியனுக்கு 8-ம் இடம் மகரம், அதற்குரிய சனி லக்கினத்தி லிருப்பதையும், அந்தச் சனிக்கு 9-ம் இடம் துலாம், அதற்குரிய சுக்கிரன் சந்திரனோடு கூடி நிற்பதையும், லக்கினத்திற்கு 8-க்குடையவராகிய சுக்கிரனும் 8-ம் இடத்துக்குரிய செவ்வாய் 7-ம் இடமாகிய கன்னியி லிருப்பதையும், அவரைச் சுபக்கிரகங்கள் பார்க்காதிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சனி ல | சந் சுக் | புத | சூரி |
| | இராசிச் சக்கரம் | | ராகு |
| கே | | | |
| | | குரு | செ. |

[5] லக்கினத்திற்கு 4 ம் இடத்தில் சனி யிருக்கவும், 2-ம் இடத்தில் ராகு விருக்கவும், 12 ம் இடத்தில் சூரிய னிருக்கவும், புதனும் செவ்வாயும் 10-ம் இடத்திலிருக்கவும், குரு 4-ம் இடத்தி லிருக்கவும் பெற்ற ஜாதகன் 4-வருஷத்தில் சந்தேகமில்லாமல் அரிட்டமடைவனும்.

(உ-ம்.) துலா லக்கினம்; லக்கினத்திற்கு 4-ம் இடமாகிய மகரத்தில் சனியும், குருவுமிருப்பதையும் 2-ம் இடமாகிய விருச்சிகத்தில் ராகுவும், 12-ம்இடமாகிய கன்னியில் சூரியனும், 10-ம் இடமாகிய கடகத்தில் புதனுஞ் செவ்வாயும் கூடி யிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | கே | |
| | இராசிச் | | புத செ |
| குரு சனி | சக்கரம் | | |
| | ரா | ல | சூரி |

[6] 8-ம் இடத்திற்குடையவர் நீச பங்கமடையவும், 7-ம் இடத்திற்குடையவர் அதிபாபர்களாகிய சனி ராகுவோடும் கூடி பங்கமடையும், லக்கினுதிபதி சூரியனேடு கூடி அஸ்தங்கமடையவும், சனியும், சந்திரனும் பலக்குறைவடைந்து கேந்திரஸ்தானத்திலிருக்கவும் பெற்ற ஜாதகன் மாந்தரோகத்தில் ஒரு வருஷத்தில் அரிட்டமடைவன்.

(உ-ம்.) இது கன்னியா லக்கினம்; லக்கினத்திற்கு 8-ம் இடம் மேடம்; அதற்குடைய செவ்வாய் 11-ம் இடமாகிய கடகத்தில் நீசமடைந்திருப்பதையும், 7-ம் இடம் மீனம்; அதற்குடைய குரு ராகுவோடு கூடி இழிவடைந்திருப்பதையும், லக்கினுதிபதியாகிய புதன் சூரியனேடு 6-ம் இடத்திலிருந்து அஸ்தங்கமடைந்திருப்பதையும், சந்திரனும் சனியும் பகைபெற்று, 7-ம் இடத்தில் கேந்திரமடைந்திருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சந் சனி | | | |
| சூ—பு | இராசிச் | | செ கே |
| குரு ராகு | சக்கரம் | | |
| | | | ல |

[7] சகோதரகாரகனை செவ்வாயும், 8-ம் இடத்துக்குடையவருங் கூடி 10-ம் இடத்திலிருக்கவும்; அவர்களை 7-க்குடையவர் 4-ம் இடத்திலிருந்து பகையாகப் பார்க்கவும், சந்திரனும் சனியும் பகையாகக் கூடி 3-6-8-12-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் இரண்டு வருஷத்தில் மரணமடைவன்.

(உ-ம்.) இது கன்னியா லக்கினம் இதில் செவ்வாயும், 8-ம் இடத்துக் குரியவரும் ஒருவராயிருந்து 10-ம் இடமாகிய மிதுனத்திலிருப்பதையும், அவரை 7-ம் இடத்துக்குரிய குரு பகைத்துப் பார்ப்பதையும் சந்திரனும் சனியும் பகையடைந்து 6-ம் இடமாகிய கும்பத்திலிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | செ |
| சந் சனி | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| குரு | | | ல |

[8] இலக்கினத்திற்கு 6-க்குடையவரும், சந்திரனுக்கு 3-க்கும் 6-க்கு -முடையவர்களுமாகிய 3 கிரகங்களும் ஒன்று கூடியிருக்கவும், அவர்களை சுபக்கிரகங்கள் பாராதிருக்கவும் பெற்ற ஜாதகன் 1-வருடத்தில் அரிட்டப்படுவனும்.

(உ-ம்.) இது மகர லக்கினம்; லக்கினத்திற்கு 6-ம் இடம் மிதுனம், அதற்குடைய புதனும் சந்திரனுக்கு 3-ம் இடத்துக்குரிய சனியும், 6-ம் இடத்துக்குரிய செவ்வாயும், இம்மூன்று கிரகங்களும் ஒன்று கூடியிருப்பதையும், அவர்களைச் சுபக்கிரகங்களாகிய குரு, சுக்கிரன், புதன், சந்திரன் ஆகிய இவர்கள் நோக்காதிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | இராசிச் | | |
| ல | சக்கரம் | | பு-செ சனி |
| | ச | சூ | சு |

[9] சந்திரனுக்கு 10-4-7 இம்மூன்று ஸ்தானங்களில் சனியும் செவ்வாயு மிருக்கவும், ஐந்துக்குடையவரும் இலக்கினாதிபதியும் கூடி 12-ல் இருக்கவும் பெற்ற ஜாதகன் இரண்டு வருஷத்தில் அரிட்டப்படுவனும்.

(உ-ம்.) இது இடப லக்கினம்; லக்கினத்திற்கு 7-ம் இடமான விருச்சிகத்தில் சந்திரன்; அந்த சந்திரனுக்கு 10-ம் இடமான சிங்கத்திற் சனியும் செவ்வாயு மிருப்பதையும், 5-ம் இடத்துக்குரிய புதனும், லக்கினாதிபதியுங் கூடி லக்கினத்திற்கு 12-ல் இருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | பு-சு | ல | |
| | இராசிச் | | |
| ராகு | சக்கரம் | | சனி செ |
| | ச | | |

[10] 8-ம் இடத்துக்குடையவரும், 6-ம் இடத்துக்குடையவருங் கூடி சந்திரனுக்கு 4-ம் இடத்தி லிருக்கப்பெற்ற ஜாதகன் அரிட்டமுடையவனும்.

(உ-ம்.) இது மீன லக்கினம்; லக்கினத்திற்கு 6-ம் இடமான சிங்கத்துக்குரிய சூரியனும், 8-ம் இடமான துலா ராசிக்குரிய சுக்கிரனும் ஆகிய இருவர்களும் சந்திரனுக்கு 4-ம் இடமான கும்பத்திலிருப்பதைக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| சூ சு | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | ச | | |

[11] 4-ம் இடத்துக்குடையவரும், சந்திரனுக்கு 6-க் குடையவருமாகிய இருவருங் கூடி இருக்கவும், அவர்களை 8-க் குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகனுக்கு அரிட்டமுண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| சனி குரு | | | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | சந் |
| | | | ல செ |

(உ-ம்.) இது கன்னியா லக்கினம்; 6-ம் இடம் தனுசு; அதற்குடைய குருவும், சந்திரனுக்கு 6-ம் இடத்துக்குரிய சனியுங் கூடி நிற்பதையும், இவர்களை 8-ம் இடத்துக்குரிய செவ்வாய் பார்ப்பதையுங் காண்க.

[12] 8-ம் இடத்துக் குரியவர் 4-ல் இருக்கவும், சந்திரன் 8-ம் இடத்திலிருக்கவும், சனிக்கு 7-ம் இடத்தில் சூரியன் நிற்கவும் பெற்ற ஜாதகன் அரிட்டப்படுவன்.

| | | | |
|---|---|---|---|
| சூ | ல | | |
| | நவாம்ஸ | | செ |
| | சக்கரம் | | |
| | சந் | | சனி |

(உ-ம்.) இது மேடலக்கினம்; 8-ம் இடம் விருச்சிகம்; அதற்குடைய செவ்வாய் 4-ம் இடத்திலிருப்பதையும், சந்திரன் 8-ம் இடமாகிய விருச்சிகத்திலிருப்பதையும், சனிக்கு 7-ம் இடத்தில் சூரியன் நிற்பதையுங் காண்க.

[13] 7-ம் இடத்தில் சனி யிருக்கவும், 7-க்குடைய சுக்கிரனுக்கு 8 க்குடையவரும் அவரோடு கூடிநிற்கவும், அவர்களைச் சுபர்கள் பார்க்காதிருக்கவும், 8-ம் இடத்தில் சந்திரனேடு பாவக் கிரகங்கள்கூடி நிற்கவும் பெற்ற ஜாதகன் 5-வருஷத்திற்குள் அரிட்டமடைவன்.

| | | | |
|---|---|---|---|
| | ல | கே | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | சந் ராகு | சனி செ | சுக் |

(உ-ம்.) இது மேட லக்கினம்; அதற்கு 7-ம் இடமாகிய துலாத்தில் சனியும், 7-ம் இடத்துக்குரிய சுக்கிரனுக்கு 8-ம் இடத்துக்குரிய செவ்வாயும், அச்சனியோடு கூடி நிற்பதையும், சந்திரன் 8-ம் இடத்தில் பாவரோடி கூடி நிற்பதையுங் காண்க.

[14] லக்கினாதிபதியும் சந்திரனுக்கு 8-க்குடையவரும் லக்கினத்திற்கு 10-க்குடையவரும், 8-க்குடையவருமாகிய நால்வரும் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும், இவர்களை 2-க்குடையவர் பார்க்கவும், சந்திரனுக்கு 7-ல் சனி யிருக்கவும் பெற்ற ஜாதகன் 5-வருஷத்தில் அரிட்டமடைவனும்.

(உ-ம்.) லக்கினம் விருச்சிகம்; லக்கினாதிபதியாகிய செவ்வாயும், சந்திரனுக்கு 8-க்குடையவராகிய சுக்கிரனும், லக்கினத்திற்கு 10-க்குடையவராகிய சூரியனும் 8-க்குரிய புதனும் ஆகிய நால்வரும் கேந்திரத்திலிருப்பதையும், இவர்களை 2-க்குடைய குரு பார்ப்பதையும், சந்திரனுக்கு 7-ம் இடத்தில்சனியிருப்பதையுங்காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | குரு |
| செ சு சூ-பு | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | ல | சந் | |

[15] சனியும் 8-ம் இடத்துக்குடையவருங் கூடி 12-ம் இடத்திலிருக்கவும், அதில் ஒரு கிரகம் நீசமடையவும், சனிக்கு 8-ம் இடத்தில் பாவர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகன் 5-வருஷத்தில் அரிட்டமடைவனும்.

(உ-ம்.) இது தனுசு லக்கினம்; லக்கினத்திற்கு 8-ம் இடம் கடகம், அதற்குரிய சந்திரன் நீசமடைந்து சனியோடுங் கூடி 12-ம் இடத்தில் நிற்பதையும் அவர்களுக்கு 8-ம் இடமாகிய மிதுனத்தில் பாவக்கிரகங்களாகிய சூரியன் செவ்வாய் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | செ கு |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல | சந் சனி | | |

[16] 8-க்குடையவர் 10-ல் நிற்கவும், 10க்குடையவரும் 7 க்குடையவரும் சந்திரனுக்கு 8-க்குடையவருமாகிய மூவர்களும் 11-ம் இடத்தில் நிற்கவும், இவர்களை சுபக்கிரகங்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் 7-வருஷத்தில் அரிட்டப்படுவன்.

(உ-ம்.) லக்கினம் கும்பம்; லக்கினத்திற்கு 8-ம் இடம் கன்னி, அதற்குரிய புதன் 10-ம் இடமாகிய விருச்சிகத்தில் நிற்ப

| | | | |
|---|---|---|---|
| சந் | | | |
| ல | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| சூரி செ-சு | புத | | |

தையும், 10 ம் இடத்துக்குரிய செவ்வாயும் 7-ம் இடத்துக்குரிய சூரியனும், சந்திர னின்ற ராசிக்கு 8-ம் இடத்துக்குரிய சுக் கிரனும் ஆகிய மூவரும் 11-ம் இடமாகிய தனுசில் நிற்பதையும், இவர்களைச் சுபக் கிரகங்கள் பார்க்காதிருப்பதையுங் காண்க.

[17] 2-ம் இடத்துக்குடையவரும் 6-ம் இடத்துக்குடைய வரும் லக்கினுதிபதியுமாகிய 3-கிரகங்களும் 8-ம் இடத்தில் நிற்க வும், சந்திரனுக்கு 8-க்குடையவர் 6-ம் இடத்தில் நிற்கவும், இவ ரைச் சுபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் 9-வருஷத் தில் கபரோகத்தால் அரிட்டபபடுவன்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | சந் | சூ-கு செ | பு |

(உ-ம்.) இது மீன லக்கினம்; 2-ம் இடம் மேடம்; அதற்குடைய செவ்வாயும் 6-ம் இடம் சிங்கம்; அதற்குடைய சூரிய னும் லக்கினுதிபதியாகிய குருவும் ஆகிய 3-கிரகங்களும் 8-ம் இடத்தில் நிற்பதை யும், சந்திரனின்ற ராசிக்கு 8-ம் இடத் துக்குடைய புதன் 7-ம் இடம் ஆகிய கன்னியில் நிற்பதையும், இவரைச் சுபர் கள் பார்க்காதிருப்பதையும் காண்க.

[18] 3-க்குடையவரும், 6-க்குடையவரும், சனியும் ஆகிய மூவரும் 8-ம் இடத்தில் நிற்கவும், 8-ம் இடத்துக்குடையவர், 6-ம் இடத்தில் நிற்கவும், 12-ம் இடத்தில் ராகு அல்லது கேது இருக்க வும், அவரைப் பாபக்கிரகங்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் 10-வருஷத்தில் அரிட்டமடைவன்.

| | | | |
|---|---|---|---|
| | கே | ல | |
| | நவாங் | | |
| | கிஷம் | | |
| புத சனி | | குரு ராகு | செ |

(உ-ம்.) இதில் லக்கினம் இடபம்; 2-ம் இடத்துக்குடைய புதனும், 6-ம்இடத் துக்குரிய சுக்கிரனும் சனியும் ஆகிய மூவ ரும் 8-ம் இடத்தில் நிற்பதையும், 8-ம் இடத்துக்குரிய குரு 6 ம் இடத்தில் நிற் பதையும், 12-ம் இடத்தில் கேது விருப் பதையும், அவரைப் பாபராகிய செவ் வாய் ராகு ஆகிய இவர்கள் பார்ப்பதை யுங் காண்க.

# 55

## மத்திமவாயுசு

(இ-ள்.) 8-ம் இடத்தில் ராகு நிற்கவும், 7-க்குடையவரும், 8-க்குடையவரும் 11-ம் இடத்தில் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகன் ராகு திசை சுய புத்தியில், அல்லது ராகுவிருந்த ராசியாதிபன் புசிப்பில் மத்திமவயதில் மாரகமாவனும்.

(உ-ம்.) இது கும்ப லக்கினம்; லக்கினத்திற்கு 8-ம் இடமான கன்னியில் ராகு நிற்பதையும், 7-ம் இடத்துக்குரிய சூரியனும் 8-ம் இடத்துக்குரிய புதனும் 12-ம் இடமான மகரத்தில் நிற்பதையும், அவர்களைப் பாபராகிய கேதுவுஞ் சனியுஞ் செவ்வாயும் பார்ப்பதையுங் காண்க

| | | | |
|---|---|---|---|
| கே | | | செ |
| ல | இராசிச் சக்கரம் | | சனி |
| சூ-பு | | | |
| | | | ராகு |

இதில் ராகுதிசை சுய புத்தியில் அல்லது புதன் புத்தியில் மாரகமெனக் காண்க.

# 56

(இ-ள்.) சந்திரனுக்கு 8-க்குடையவரும், லக்கினத்திற்கு 8-க்குடையவரும், 10-ம் இடத்துக் குடையவருமாகிய மூவருங் கூடி 1-4-7-10-ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும் அவர்களை இரண்டுக்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 2-க்குடையவர் திசையில் 10-க்குடையவர் புத்தியில் மத்திம வயதில் கடின நோயினுல் வருத்தமுற்று மாரக மடைவனும்.

(உ-ம்.) இது மகர லக்கினம்; இதில் 9-ம் இடமாகிய கன்னியில் சந்திரன்; அச்சந்திரனுக்கு 8-ம் இடம் மேஷம், அம்மேஷத்துக்குரிய செவ்வாயும், லக்கினத்திற்கு 8-ம் இடம் சிங்கம், அதற்குரிய சூரியனும் 10-ம் இடம் துலாம் அதற்குரிய சுக்கிரனும் ஆகிய மூவரும் 10-மிடத்தில் நிற்பதையும், அவர்களை 2-க்குடையவராகிய சனி பார்ப்பதையுங் காண்க. இதில் 2-க்குடைய சனி திசை சுக்கிர புத்தியில் மாரகமென்க.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | இராசிச் சக்கரம் | | |
| ல | | | |
| | | சு–சூ செ | சந் |

## 57

(இ-ள்.) 8-க்குடையவரும் சனியும் பகை பெற்று ஒருவரை யொருவர் பார்க்கவும், பாபர்கள் 8-ல் நிற்கவும், லக்கினாதிபதியும் 2-க்குரியவரும், 12-க்குரியவரும் ஆகிய மூவரும் கேந்திரத்தில் நிற்கவும், ராகு 2-ல் அமரவும் பெற்ற ஜாதகர் மத்திம வயதில் ராகு திசை சனி புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | கே | சனி | சூ-பு சு |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | செ | ராகு | ல |

(உ-ம்.) இது கன்னியா லக்கினம் இதில் 8-ம் இடம் மேடம், அதற்குரிய செவ்வாயும் சனியும் ஆகிய இருவரும் பகைபெற்று 7-ம் பார்வையாய் ஒருவரை யொருவர் பார்த்துக்கொண் டிருப்பதை யும், பாபராகிய கேது 8-ம் இடமாகிய மேஷத்தில் நிற்பதையும், லக்கினாதிபதி யாகிய புதனும், 2-ம் இடத்துக்குரிய சுக்கிரனும், 12-க்குரிய சூரியனுமாகிய மூவர்களுங் கூடி 10-ம் இடமாகிய மிதுனத்தில் நிற்பதையும், 2-ம் இடமாகிய துலாத்தில் ராகு நிற்பதையும் காண்க.

## 58

(இ-ள்.) 3-ம் இடத்தில் 12-க்குடையவர் நிற்கவும், 8-ம் இடத்துக்குடையவர் 6-ம்இடத்தில் நிற்கவும், 6-க்குரியவர் கிரி யென்னும் லக்கினத்திற் குடையவர் திரியென்னும் 3-க்குடைய வரும் ஆகிய மூவரும் கூடி சந்திரனுக்கு 8-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் 12-ம் இடத்துக்குடையவர் திசையில் 8-ம் இடத்துக்குரியவர் புத்தியில் மத்திம வயதில் மாரகமடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | சு-சூ சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | ல |
| | | சந் | |

(உ-ம்.) இதில் லக்கினம் சிங்கம், லக்கினத்திற்கு 3-ம் இடமாகிய துலாத் தில் 12-க்குடையவராகிய சந்திர னிற் பதையும், 8-ம் இடத்துக்குரிய குரு 6-ம் இடத்தில் நிற்பதையும், 6-க்குடையவரா கிய சனியும், லக்கினாதிபதியாகிய சூரிய னும், 3-க்குரிய சுக்கிரனும் ஆகிய மூவரும் சந்திரனின்ற ராசிக்கு 8-ம் இடத்தில் நிற்பதையும் காண்க.

இதில் 12-க்குரிய சந்திர திசையில், 8-க்குரிய குரு புத்தியில் மாரகமென்க.

59

(இ-ள்.) சந்திரன் நின்ற ராசிக்கு 8-ஆமிடத்துக்குரியவரும், லக்கினத்திற்கு 8-ஆமிடத்துக்குரியவரும், காரியென்னும் சனியும் ஆகிய மூவரும் கூடி 12-ம் இடத்தில்நிற்கவும், அவர்களை சுபக்கிரகங்கள் பார்க்காதிருக்கவும், 12-க்குரியவர் 11-ஆமிடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன், 12 க்குடையவர் திசையில் 12-ல் இருந்தவர்கள் புத்தியில் மத்திம வயதில் மாரகமடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | சூ |
| | | | செ-பு சனி |
| | சந் | | ல |

(உ-ம்.) இது கன்னியா லக்கினம்; இதற்கு 3-ம் இடமான விருச்சிகத்தில் சந்திரன். அச்சந்திரனுக்கு 8-ம் இடம் மிதுனம், அதற்குரிய புதனும், லக்கினத்திற்கு 8-ம் இடம் மேடம்; அதற்குரிய செவ்வாயும், சனியும் ஆகிய மூவரும் 12-ம் இடத்தில் நிற்பதையும், அவர்களை சுபக்கிரகங்கள் பார்க்காதிருப்பதையும் 12-ம் இடத்துக்குரிய சூரியன் 11-ம் இடமாகிய கடகத்தில் நிற்பதையும் காண்க.

இதில் 12-க்குடைய சூரியன் திசையில், 13-ல் நிற்கும் செவ்வாய், புதன், சனி இவர்கள் புத்தியில் மாரகமெனக் காண்க.

60

(இ-ள்.) 7-க்குடையவரும், 6-க்குடையவருங் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும், 8-ம் இடத்துக்குடையவர் சனிக்கு 2-ம் இடத்தில் நிற்கவும், இவரை மாலோனுகிய புதன் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் 7 க்குடையவர் திசையில் 6-க்குரியவர் புத்தியில் மத்திம வயதில் மாரக மடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| சனி | குரு | ல | |
| | இராசிச் சக்கரம் | | புத |
| | | | செ சுக் |
| | | | |

(உ-ம்.) இது இடப லக்கினம்; இதற்கு 7-ம் இடத்துக்குரிய செவ்வாயும், 6-க்குரிய சுக்கிரனும் ஆகிய இருவரும் 4-ம் இடமாகிய சிங்கத்தில் நிற்பதையும், 8-க்குரிய குரு, சனிக்கு 2-ல் நிற்பதையும், அவரைப் புதன் பார்க்காதிருப்பதையுங் காண்க.

இதில் 7-க்குரிய செவ்வாய் திசையில், சுக்கிரன் புத்தியில் மாரகமாம்.

## 61

(இ–ள்.) 8-க்குரியவர் கேந்திரமேறவும், சனியானவர் சந்திரனுக்கு 8-ம் இடத்தில் நிற்கவும், சனிக்கு 7-ம் இடத்தில் சூரியனிற்கவும், விடமாகிய ராகு 3-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன், 3-க்குடையவர் திசையில், 8-க்குரியவர் புத்தியில், மத்திம வயதில் மாரக மடைவனும்.

(உ–ம்.) இது கன்னியா லக்கினம்; லக்கினத்திற்கு 8–ம் இடம் மேடம், அதற்குரிய செவ்வாய், 4-ம்இடத்தில் கேந்திரமடைந்திருப்பதையும், சனியானவர் சந்திரனுக்கு 8-ம் இடத்தி னிற்பதையும், அச்சனிக்கு 7-ம் இடமாகிய கும்பத்தில் சூரியன் நிற்பதையும், ராகு 3-ம் இடத்தில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | கே | |
| சூரி | நவாம்ஸ | | |
| சந் | சக்கரம் | | சனி |
| செ | ராகு | | ல |

இதில் 3-க்குரிய செவ்வாய் திசையில், 8-க்குரிய செவ்வாய் புத்தியில் மாரகமாம்.

## 62

(இ–ள்.) சந்திரன் நின்ற ராசிக்கு 8–க்குரியவரும், லக்கினத்திற்கு 8-க்குரியவரும், 10-க்குரியவருமாகிய மூவரும் 11-ல் நிற்கவும், 10–ஆமிடத்தில், 11–க்குரியவர் நிற்கவும் பெற்ற ஜாதகன், லாபாதியென்னும் 11-ஆமிடத்துக்குரியவர் திசையில் அல்லது 11–ஆமிடத்தி லிருந்தவர்கள் திசையில் 8–க்குரியவர் புத்தியில் அல்லது அதிலிருந்த சனி புத்தியில் மத்திமவயதில் மாரக மடைவனும்.

(உ–ம்.) இதில் கும்ப லக்கினம்; லக்கினத்திற்கு 2–ஆமிடமான மீனத்தில் சந்திரன், அச்சந்திரனுக்கு 8–ஆமிடம் துலாம், அதற்குடைய சுக்கிரனும், லக்கினத்திற்கு 8 ஆமிடம் கன்னி, அதற்குடைய புதனும், 10–ஆமிடம் விருச்சிகம், அதற்குடைய செவ்வாயும், இம்மூவரும் 11–ஆமிடமான தனுசில் நிற்பதையும், 10–ஆமிடத்தில், 11–ஆமிடத்துக்குடைய குரு நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சந் | | | |
| ல | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| சு·பு செவ் | குரு | | சனி |

இதில் 11-க்குரிய குரு திசையில் அல்லது 11-ல் நிற்கின்ற செவ்வாய், புதன், சுக்கிரன் இவர்கள் திசையில் 8-க்குரிய புதன் புத்தியில் அல்லது அதிலிருக்கிற சனி புத்தியில் மாரகமாம்.

## 63

(இ ள்.) 2-ம் இடத்துக்குடையவரும், 6-ம் இடத்துக்குடையவரும், சனியும் ஆகிய மூவருங் கூடி 8 ம் இடத்தில் நிற்கவும், அந்த 8-க்குடையவர் 6-ம் இடத்தில் நிற்கவும், இராகு 10-ல் நிற்கவும், அவரைப் பாபக்கிரகங்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன், 6-க்குடையவன் திசையில் 6-ல் இருந்தவன் புத்தியில் மத்திம வயதில் மாரகமாவனும்.

| | | | |
|---|---|---|---|
| | ல | | |
| | இராசிச் சக்கரம் | | கே |
| ரா | | | |
| | சு-பு சனி | | செ |

(உ-ம்.) இதில் மேட லக்கினம்; லக்கினத்திற்கு இரண்டாமிடம் இடபம்; அதற்குடைய சுக்கிரனும், 6-ம் இடம் கன்னி; அதற்குடைய புதனும், சனியும் ஆகிய மூவர்களும் 8-ம் இடமான விருச்சிகத்தில் நிற்பதையும், அவ் விருச்சிகத்திற்குடைய செவ்வாய் 6-ம் இடமான கன்னியில் நிற்பதையும், ராகு 10-ம் இடத்தில் நிற்பதையும், அந்த ராகுவைத் தீக்கோள்களாகிய கேது, சனி யிவர்கள் 7-ம் 3-ம் பார்வையாகப் பார்ப்பதையும் காண்க.

இதில் 6-க்குடைய புதன் திசையில், 6 லிருக்கிற செவ்வாய் புத்தியில் மாரகமாம்.

## 64

(இ-ள்.) 4-ம் இடத்துக்குடையவரும், 9-ம் இடத்துக்குடையவரும், 2-ம் இடத்துக்குடையவரும் ஆகிய மூவரும் பகைவரோடு கூடி கேந்திரத்தில் நிற்கவும், 6-க்குடையவர் 11-ம் இடத்தில் நிற்கவும், ராகுவானவர் சந்திரனுக்கு 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர், 6-ம் இடத்துக்குரியவர் திசையில் சந்திரனுக்கு 8-ல் இருந்தவர் புத்தியில் மத்திம வயதில் மாரகமாவாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | சனி |
| சூ-பு செ | இராசிச் சக்கரம் | | |
| | | | ல |
| | கே | சந் | |

(உ-ம்.) இங்கு லக்கினம் சிங்கம்; லக்கினத்திற்கு 4-ம் இடத்துக் குரியவரும், 9-ம் இடத்துக்குரியவருமாகிய செவ்வாயும், 2-ம் இடத்துக்குரிய புதனும் ஆகிய இருவர்களும் பகைக்கிரகமாகிய சூரியனேடு கூடி 7-ஆமிடத்தில் கேந்திர மடைந்து நிற்பதையும், 6-ஆமிடத்துக் குரிய சனி 11-ஆமிடத்தில் நிற்பதையும் சந்திரனுக்கு 8-ம் இடத்தில் ராகு நிற்பதையுங் காண்க.

இதில் 6-க்குரிய சனி திசையில் சந்திரனுக்கு 8 லிருக்கிற ராகு புத்தியில் மாரகமாம்.

## 65

(இ-ள்.) 6-ம் இடத்துக்குடையவர் 8-ல் நிற்கவும், 8-க் குடையவரும், 7-க்குடையவரும் கூடி கேந்திர மேறவும், சனிக்கு 7-ம் இடத்தில் செவ்வாய் நிற்கவும், அந்தச் செவ்வாயை சுபக்கிரகங்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் 6-ம் இடத் துக்குரியவர் திசையில் 7-ம் இடத்துக்குரியவர் புசிப்பில் மத்திம வயதில் மாரகமாவனும்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | சந் |
| சனி | இராசிச் சக்கரம் | | |
| | | | செ |
| | குரு | சு | சூ-பு |

(உ-ம்.) இது மீன லக்கினம்; இதில் சத்துரு ஸ்தானமாகிய 6-ம் இடத்துக் குரிய சூரியன் 8-ம் இடத்தில் நிற்பதையும், 8-ம் இடத்துக்குடையவராகிய சுக்கிரனும், 7-ம் இடத்துக்குரிய புதனும் ஆகிய இருவரும் 7-ம் இடத்திற் கேந்திரித்து நிற்பதையும், சனிக்கு 7-ம் இடத்தில் செவ்வாய் நிற்பதையும், அச் செவ்வாயைச் சுபக்கிரகங்களாகிய குரு, சுக்கிரன், புதன், சந்திரன் இவர்கள் நோக்காதிருப்பதையும் காண்க.

இதில் 6-க்குரிய சூரியன் திசையில் 7-க்குரிய புத்தியில் புதன் மாரகமெனக் காண்க.

## 66

(இ–ள்.) 8–ம் இடத்தில் சனி நிற்கவும், சனிக்கு 8-ஆமிடத்தில் குரு நிற்கவும், 8-க்குடையவருக்கு 7-ஆமிடத்தில் ராகு நிற்கவும், அவரைப் பாபக்கிரகங்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் அந்தகனென்கிற சனி மகாதிசையில் 8-க்குடையவர் புத்தியில் மத்திம வயதில் மாரகமாவனும்.

(உ–ம்.) இதில் கன்னியா லக்கினம்; இதில் 8-மிடமாகிய மேஷத்தில் சனி நிற்பதையும், அந்தச் சனிக்கு 8-ஆமிடம் விருச்சிகம், அதில் குரு நிற்பதையும், 8-ஆமிடத்துக்குரிய செவ்வாய்க்கு 7-ஆமிடமான மிதுனத்தில் ராகு விருப்பதையும், அந்த ராகுவைப் பாபர்களாகிய சனி, சூரியன், செவ்வாய், கேது பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | ரா |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சூசெ கே | குரு | | ல |

இதில் சனி திசையில் 7-க்குரிய குரு புத்தியில் மாரகமெனக் காண்க.

## 67

(இ-ள்.) தானத்திறையாகிய லக்கினாதிபதி பலஹீனப்பட்டு நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும், அட்டமானத்திறையாகிய 8-ஆமிடத்துக்குடையவர் பலமடைந்து நிற்கவும், அவரை சுபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன், மேருவிறையாகிய லக்கினாதிபதி யுடனே சேர்ந்தவர் திசையில் அல்லது குரு திசையில் 8-க்குடையவர் புத்தியில் மத்திம வயதில் மாரக மாவனும்.

(உ-ம்.) இது கன்னியா லக்கினம், இதில் லக்கினாதிபதியாகிய புதன், 12-ஆமிடமாகிய சிங்கத்தில் நின்று பலஹீனப்பட்டும், செவ்வாய், சனி, ராகு அவர்களால் பார்க்கப்பட்டும் நிற்பதையும், 8-ஆமிடத்துக்குரிய செவ்வாய் மகரத்தில் உச்சம் பெற்று பலமடைந்து நிற்பதையும், அச் செவ்வாயை சுபக்கிரகங்கள் பார்க்காதிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | கே | | சனி |
| | இராசிச் சக்கரம் | | |
| செ | | | பு–சூ |
| | | ராகு | ல |

இதில் லக்கினுதிபதியுடன் சேர்ந்து நிற்கின்ற சுக்கிரன் திசையில் அல்லது குரு திசையில் செவ்வாய் புத்தியில் மாரக மெனக் காண்க.

68

(இ-ள்.) சோமனுகிய சந்திரனுக்கு 4-ஆமிடத்தில் செவ்வாய் நிற்கவும், 7-ஆமிடத்தில் சுடர்மகனுகிய சனி நிற்கவும், அவ்வேழுக்குடையவரை செவ்வாய் பார்க்கவும், 8-ஆமிடத்துக்குடையவர் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகன், சனியிருந்த ராசிக்குடையவர் திசையிலும் சந்திரனுக்கு 8-க்குடையவர் புத்தியில் மத்திம வயதில் மாரக மாவனும்.

(உ-ம்.) இது கும்ப லக்கினம்; லக்கினத்திற்கு 3-ஆமிடமாகிய மேஷத்திற் சந்திரன், அச் சந்திரனுக்கு 4-ம் இடமான கடகத்திற் செவ்வாய் நிற்பதையும், லக்கினத்திற்கு 7-ஆமிடமான சிங்கத்திற் சனி நிற்பதையும், அச்சிங்க ராசிக்குடைய சூரியனை செவ்வாய் நான்காம் பார்வையாய்ப் பார்ப்பதையும், 8-ஆமிடம் ஆகிய கன்னிக்குரிய புதன், 10-ஆமிடமான கேந்திரத்தில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சந் | | |
| ல | இராசிச் சக்கரம் | | செ |
| | | | சனி |
| | புத | சூ | |

இதில் சனி நிற்கின்ற ராசியாகிய சிங்கத்திற்குரிய சூரியன் திசையில், செவ்வாய் புத்தியில் மாரகமெனக் காண்க.

69

(இ-ள்.) லக்கினுதிபதிக்கு 8-க்குடையவர் 6-மிடத்தில் நிற்கவும், அந்த 6-மிடம் உபயராசியாக நிற்கவும், கன்மாதிபதியாகிய 10 க்குடையவரும், சனியும் ஆகிய விருவருங்கூடி மேற்கூறிய ராசியைப் பார்க்கப் பெற்ற ஜாதகன், 8-ஆமிடத்துக்குரியவர் திசையில், லக்கினுதிபதியின் புத்தியில் மத்திம வயதில் மாரகமாவனும்.

(உ-ம்.) இது கடக லக்கினம்; இதில் லக்கினுதிபதி சந்திரன். அச் சந்திரனுக்கு 8-ஆமிடம் இடபம்; அதற்குடைய சுக்கிரன் உபய ராசியாகிய 6-ஆமிடமான தனுசில் நிற்பதையும், அவரை 10-ஆமிடத்திற்குரிய செவ்வாயும், சனியும் கூடி 12 ஆமிடத்தி லிருந்து பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | செ சனி |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| சுக் | | சந் | |

இதில் 8–க்குரிய சனி திசையில், லக்கினுதிபதியாகிய சந்திரன் புத்தியில் மாரகமெனக் காண்க.

## 70

(இ - ள்.) கிரியாகிய லக்கினத்திற் செவ்வாயும், விதியாகிய 8-ம் இடத்திற் சந்திரனும் பலஹீனப்பட்டு நிற்கவும், அவர்களை கரியனுகிய சனி பார்க்கவும் விதி யென்கின்ற 8-ம் இடத்துக்குடையவர் பலமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகன், சனி திசையில் அல்லது சனியிருந்த ராசியாதிபதி திசையில் சந்திரனுக்கு 8-ம் இடத்துக்குரியவர் இருந்த ராசியாதிபதி புத்தியில் மத்திய வயதில் மாரகமாவனும்.

(உ-ம்) இது மீன லக்கினம்; லக்கினத்திற் செவ்வாயும், 8-ம் இடமாகிய துலாத்தில் சந்திரனும், இவர்களிருவரும் பலஹீனமடைந்து நிற்பதையும், இவர்களை சனி பார்ப்பதையும், 8-ம் இடத்துக்குரிய சுக்கிரன் 9-ம் இடத்தில் பலமடைந்திருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல செ | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| சனி | | | |
| | சுக் | சந் | |

இதில் சனி திசையில், செவ்வாய் புத்தியில் மாரகமாம்.

## 71

(இ – ள்.) விதியென்னும் 8-ம் இடத்துக்குடையவரும், செவ்வாயுமாகிய இருவருங் கூடி 6-8-12-ல் ஒன்றில் நிற்கவும், அவர்களை ரோகாதிபதியாகிய 6-க்குடையவர் பார்க்கவும், மேருவென்னும் லக்கினுதிபதி பலஹீன மடைந்திருக்கவும் பெற்ற ஜாதகன், 6-க்குடையவர் திசையில், செவ்வாய் புசிப்பில் துட்டர்களுடைய கையாயுதத்தினுல் மத்திம வயதில் மாரகமாவனும்

(உ-ம்.) இது கடக லக்கினம்; லக்கினத்திற்கு 8-ம் இடம் கும்பம் அதற்குடைய சனியும், செவ்வாயும் கூடி 12 ம் இடமாகிய மிதுனத்தில் நிற்பதையும், அவர்களை 6–ஆமிடமாகிய தனுசுக்குரிய குரு பார்ப்பதையும், லக்கினுதிபதியாகிய சந்திரன் நீச்சமடைந்து பலஹீனப் பட்டிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி செ |
| குரு | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| | சந் | | |

## 72

(இ-ள்.) 8-ஆமிடத்துக் குடையவரும், ராகுவுங் கூடி 6-ம் இடத்தில் நிற்கவும், அந்த 6-க்குடையவர் ஆட்சி அல்லது உச்சம் பெற்று நிற்கவும்பெற்ற ஜாதகன், லக்கினுதிபதியாகிய சனிக்குப் பகையுடையவராகிய செவ்வாய், சந்திரன் இவர்கள் திசையில் 8-க்குடையவர் புசிப்பில் திருடர் கையினாலாகிலும், அரவங் கடித்தாகிலும், வாலைப்பருவமாகிய மத்திம வயதில் மாரகமாவனும்.

(உ-ம்.) இது மகர லக்கினம்; இதில் 8-ஆமிடம் சிங்கம் அதற்குரிய சூரியனும், ராகுவுங் கூடி 6-ஆமிடமாகிய மிதுனத்தில் நிற்பதையும், அம் மிதுனத்துக்குரிய புதன் மிதுனத்தில் ஆட்சி பெற்று நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | சூ-பு ராகு |
| | இராசிச் சக்கரம் | | |
| ல | | | |
| | | | |

## 73

(இ - ள்.) சுகாதிபதி யென்னும் 4-க்குடையவரும், விதி யென்னும் 8-க்குடையவருங் கூடி 6-8 12-ல் ஒன்றில் நிற்கவும், சுக்கிரன் பகை நீசமடைந்து நிற்கவும், 6-ம் இடத்துக் குரியவரும், சந்திரனுக்கு 4-க்குடையவருமாகிய விருவர்களுங் கூடி செவ்வாய்க்கு 6-ஆமிடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகன், 4-ஆமிடத்துக்குரிய குரு திசையில் 8-ஆமிடத்துக்குரிய சந்திரன் புசிப்பில் குதிரை, யானை, வாகனங்களினுல் மத்திமவயதில் மாரகமாவனும்.

(உ-ம்.) இது தனுர் லக்கினம்; இதில் 4-ஆமிடம் மீனம், அதற்குடையகுருவும், 8-ஆமிடம் கடகம், அதற்குடைய சந்திரனும் ஆகிய இருவருங் கூடி 12-ஆமிடமான விருச்சிகத்தில் நிற்பதையும், 6-ஆமிடம் இடபம் அதற்குரிய சுக்கிரனும், சந்திரனுக்கு 4-ஆமிடம் கும்பம், அதற்குடையசனியுங்கூடிசெவ்வாய்க்கு 6-ஆமிடமான கன்னியில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | செ | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல | குரு சந் | | சுக் சனி |

## 74

(இ-ள்.) சந்திரனுக்கு இரண்டு பக்கத்திலும் ராகுவும், மங்களனுகிய செவ்வாயுங் கூடி நிற்கவுர், கேதுவோடு சனி கூடி மேருவென்னும் லக்கினத்தில் நிற்கவும், 8-மிடத்திற்குரியவர் சந்திரனுக்குக் கண்டமென்னும் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகன், லக்கினுதிபதியாகிய சுக்கிரனுக்கு 8 க்குடைய சனி திசையில், சந்திரனுக்கு 4-க்குரிய புதன் புசிப்பில் மத்திம வயதில் மாரக மாவனும்.

(உ-ம்.) இது துலா லக்கினம்; இதில் லக்கினத்திற்கு 6-ஆமிடமாகிய மீனத்தில் சந்திரன், அச்சந்திரனை யிரண்டு பக்கமும் ராகுவும் செவ்வாயுங் கட்டி நிற்பதையும், கேதுவும் சனியுங் கூடி லக்கினத்தில் நிற்பதையும், 8-ஆமிடத்துக் குரிய சுக்கிரன் சந்திரனுக்கு 4-ஆமிடமாகிய மிதுனத்தில் கேந்திரமடைந்து நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சந் | ராகு | | சுக் |
| செ | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | லகே சனி | |

## 75

(இ-ள்.) 9க்குடையவரும் பிறையென்னுஞ் சந்திரன் ஆகிய விருவர்களுங் கூடி சுபஸ்தானமாகிய 4-ஆமிடத்தில் நிற்கவும், விதி யென்னும் 8-க்குரியவர் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும்; பாபர்கள் 8-ஆமிடத்தில் நிற்கவும், மேரு என்னும் லக்கினுதிபதி பலவீனமடைந்து நிற்கவும், ரோகாதிபதியாகிய 6-க்குடையவர் 8-க்குடையவருக்கு 4-ஆமிடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் 6-க்குடையவர் திசையில் 8-க்குடையவர் புசிப்பில் மத்திம வயதில் மாரகமாவனும்.

(உ-ம்.) இது கன்னியா லக்கினம், இதில் பாக்கியஸ்தானம் 9-ஆமிடமாகிய இடபம்; அதற்குடைய சுக்கிரனும் சந்திரனுங்கூடி 4-ஆமிடமாகிய தனுசில் நிற்பதையும், 8-ம் இடம் மேடம், அதற்குடைய செவ்வாய் 10-ஆமிடத்தில் நிற்பதையும், பாபராகிய ராகு 8-ஆமிடமாகிய மேடத்தில் நிற்பதையும், லக்கினுதிபதியாகிய புதன் 6-ஆமிடமாகிய கும்பத்தில் பலங்குறைந்து நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | செ |
| புத | நவாம்ஸ சக்கரம் | | |
| சூரி | | | |
| சு-சந் | | கே | ல சனி |

## 76

(இ-ள்.) 2-ஆமிடத்தில் அல்லது 12-ம் இடத்தில் சந்திரனுஞ் செவ்வாயும் நிற்கவும், 7-ஆமிடத்தில் ராகு நிற்கவும், 8-ஆமிடத்தில் குரு நிற்கவும், பாபர்கள் 8-ஆமிடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் 7-ஆமிடத்திலிருந்தவர் திசையில் 8 க்குடையவர் புசிப்பில் மத்திம வயதில் மாரகமாவனும்

(உ-ம்.) இது கும்ப லக்கினம்; இதில் 12-ம் இடம் மகரம்; அதில் சந்திரனும் செவ்வாயும் கூடி நிற்பதையும், 7-ஆமிடமாகிய சிங்கத்தில் ராகு நிற்பதையும், 8-ம் இடமாகிய கன்னியில் குரு நிற்பதையும், அதில் பாபராகிய சூரியன் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல கே | இராசிச் | | |
| சந் செ | சக்கரம் | | ரா |
| | | | குரு சூரி |

## 77

(இ-ள்.) இரண்டு குரு வென்னும் சுக்கிரனும் குருவும் ஆகிய இருவரும் கண்டம் என்னும் 1 4-7-10-ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும், மேருவாகிய லக்கினுதிபதி பாபர்களுடன் கூடி 9-12-3-6 ஆகிய ஆபோகிலிய ராசியில் ஒன்றில் பலங் குறைந்து நிற்கவும், சனிக்கு 8-க்குடையவர் செவ்வாய்க்கு 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகன், சனிக்கு 8-க்குடையவர் திசையில் இரண்டு மாரகம் பெற்றவர் புத்தியில் மாரகமாவனும்.

(உ-ம்.) இது கன்னியா லக்கினம்; இதில் குருவும், சுக்கிரனும் ஆகிய இருவரும் 10-ஆமிடமாகிய மிதுனத்தில் கேந்திரம் பெற்று நிற்பதையும், லக்கினுதிபதியாகிய புதன், பாபரோடு கூடி 12-ஆமிடமாகிய சிங்கத்தில் பலங் குறைந்து நிற்பதையும், சனிக்கு 8-ஆமிடம் கடகம்; அதற்குடைய சந்திரன் செவ்வாய்க்கு 7-ஆமிடத்தில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | செ | குரு சுக் |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | சூ-பு |
| சனி | ச | | ல |

இதற்கு சனிக்கு 8-ம் இடத்துக்குரிய சந்திர திசையில் 3-ம் இடம் 8-ம் இடம் ஆகிய இரண்டு மாரகத்துக்குரிய செவ்வாய் புத்தியில் மேற்கூறிய மாரகமாம்.

## 78

முன்னுரைத்த மாரகபாக மெல்லாம் அந்தந்த வீட்டுக் குடைய தானுதிபதியைக் கொண்டு சொன்னேம். அதுவன்றி அந்தந்த வீட்டிலிருந்தவர்களும், அவர்களோடு சேர்ந்தவர்களும், அவர்களைப் பார்த்தவர்களும், அவர்கள் பார்வைபெற்றவர்களும் ஆகிய 4-பாக பலங்களின் தராதரமுங்கண்டு மாரகங் கூறுக.

## பூரணாயுசு

## 81

(இ-ள்.) 1-5-9-1-4-7-10 ஆகிய திரிகோண கேந்திரங் களி லொன்றில் சுபக்கிரகங்கள் நிற்கவும், மேருவென்னும் லக்கி னுதிபதியும், குருவுங் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும், விதியென் னும் 8-க்குடையவர் ஆட்சி உச்சம் பெற்று நிற்கவும், சனி நட்பு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகர் பூரண வாயுளுடையவராம்.

## 82-83

(உ-ம்.) இது விருச்சிக லக்கினம்; இதில் லக்கினத்திற்கு 10-ம் இடம் சிங் கம், அதில் சுபர்களாகிய சுக்கிரன், சந் திரன், ஆகிய இருவரும் கேந்திர மடைந்து நிற்பதையும், லக்கினுதிபதி யாகிய செவ்வாயும் குருவுங் கூடி 4-ம் இடமாகிய கும்பத்தில் நிற்பதையும், 8-ம் இடம் மிதுனம், அதற்குரிய புதன் ஆட்சி யுச்சம் பெற்று 11-ம் இடமாகிய கன்னி யில் நிற்பதையும், சனி யிடப ராசியில் நட்படைந்திருப்பதை யுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| குரு செ | இராசிச் | | |
| | சக்கரம் | | சந் சுக் |
| | ல | | புத |

இதற்கு ஜென்மாதிபதியாகிய செவ்வாயிருந்த ராசிக்கு 8-ம் இடம் கன்னி, அதற்குடைய புதன் திசையிலும், சந்திரனுக்கு

8-ம் இடம் மீனம்; அதற்குடைய குரு புத்தியில் நன்மையான மாரகங் கிடைக்குமென்றுங் காண்க. அல்லது 8-க்குடைய புதன் திசையில் மேற்கூறிய புத்தியில் மாரகமுண்டாம். அவை விடில் 6-க்குடைய செவ்வாய் திசையில் சனிக்கு 8-ம் இடத்துக்குரிய குரு புத்தியில் உறுதியாக மாரகமெனக் காண்க.

## 84

4 ம் இடத்திலாகிலும் 8-ம் இடத்திலாகிலும் ராகுவிருக்கவும், அந்த ராசியாதிபதி பகை நீசமடையவும் பெற்ற ஜாதகர் ராகு திசையில், ராகுவிருந்த ராசியாதிபதி புத்தியில், பூரண வாயுளில் மாரகமாவராம்.

(உ-ம்.) இது கும்ப லக்கினம்; இதில் 4-ம் இடமாகிய இடபத்தில் ராகுவிருப்பதையும், அந்த ராசிக்குரிய சுக்கிரன் நீசமடைந்திருப்பதையுங் காண்க. ராகு திசையில் ராகுவிருந்த ராசிநாதனாகிய சுக்கிரன் புத்தியில் ஜாதகன் மாரகமெனக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | ரா | |
| ல | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | கே | | சுக் |

## 85

(இ-ள்.) தரும மென்னும் 9-க்குடையவர் களத்திரஸ்தானமாகிய 7-ல் நிற்கவும்; அவரை 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கருமாதிபதியாகிய 10-க்குரியவர் திசையில் அவர் புத்தியில் மாரகமாவராம்.

(உ-ம்.) இது மேஷ லக்கினம்; இதில் 9-ஆமிடம் தனுசு; அதற்குரிய குரு 7-ம் இடமாகிய துலாத்தில் நிற்பதையும், அந்தக் குருவை 8-ம் இடத்துக்குரிய செவ்வாய் பார்ப்பதையுங் காண்க. இதற்கு 10-ம் இடம் மகரம்; அதற்குடைய சனி திசையில் சனி புத்தியில் மாரகமெனக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| செ | ல சனி | | புத |
| | இராசிச் | | சுக் |
| | சக்கரம் | | |
| | | குரு | |

## 86

(இ-ள்.) பாக்கியனென்னும் 9 க்குரியவர் 5-ம் இடத்தில் நிற்கவும், 5-க்குரியவர் அட்டமமென்னும் 8-ம்இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர், 5-க்குரியவர் திசையில் சந்திரனுக்கு 8-க்குரியவர் புத்தியில் மாரகமாவராம்.

(உ-ம்.) இது விருச்சிக லக்கினம்; இதில் 9-ம்இடம் கடகம் அதற்குரிய சந்திரன் 5-ம் இடமான மீனத்தில் நிற்பதையும், அம் மீனத்துக்குரிய குரு 8-ம் இடமாகிய மிதுனத்தில் நிற்பதையுங் காண்க இதற்கு 5-க்குரிய குரு திசையில் சந்திரனுக்கு 8-க்குரிய சுக்கிரன் புத்தியில் மாரகமெனக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சந் | சு-பு | சூ | குரு |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | ல | | |

## 87

(இ-ள்.) 4-க்குரியவர் சந்திரனுக்கு 7-ம் இடத்தில் நிற்கவும்; 7-க்குரியவர் 6-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர், 4-க்குரியவர் திசையில் அனலென்னும் சூரியனுக்கு 8-க்குரியவர் புத்தியில் மாரக மாவர்.

(உ-ம்.) இது மிதுன லக்கினம்; இதில் 4-ம் இடம் கன்னி; அதற்குரிய புதன் சந்திரனுக்கு 7-ம் இடமாகிய மீனத்தில் நிற்பதையும், அம் மீனத்துக்குரிய குரு நோய் என்னும் 6-ம் இடமாகிய விருச்சிகத்தில் நிற்பதையுங் காண்க. இதற்கு 4-க்குரிய புதன் திசையில் சூரியனுக்கு 8-ம் இடத்துக்குரிய செவ்வாய் புத்தியில் மாரகமெனக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| புத | சூரி | | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | செ |
| | குரு | | சந் |

## 88-89

(இ-ள்.) திரியென்னும் 3-க்குரியவர் சந்திரனுக்கு 5-ல் நிற்கவும், சந்திரன் 6-ஆமிடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர், 3-க்குடையவர் திசையில் 3-க்குரியவரிருந்த ராசிக்கு 6-க்குடையவர் புத்தியில் பூரண வயதிருந்து மாரகமாவராம்.

(உ-ம்.) இது விருச்சிக லக்கினம்; இதில் 3-ஆமிடம் மகரம்; அதற்குரிய சனியானவர் சந்திரனின்ற ராசிக்கு 5-ஆமிடமாகிய சிங்கத்தில் நிற்பதையும், சந்திரன் 6-ஆமிடமாகிய மேஷத்தில் நிற்பதையுங் காண்க. இதற்கு 3-ஆமிடத்துக்குரிய சனி திசையில், அந்தச் சனியிருந்த ராசிக்கு 6-ஆமிடத்துக்குரிய சனி புத்தியில் மாரகம்.

| | | | |
|---|---|---|---|
| | சந் | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | சனி |
| | | ல | |

அல்லது 2-ம்ஆமிடத்துக்குரிய குருதிசையில், 6-ல் இருந்த சந்திரன் புத்தியில் அநேககாலம் வாழ்ந்து பின் பூரண வயதில் மாரகம்.

இதைக் கணிதபேத மில்லாவண்ணம் பதருது கூறவேண்டும்.

## 90

(இ-ள்.) குடும்பாதிபதி யென்னும் 2-க்குடையவர் 4-ஆமிடத்தில் நிற்கவும், 4-க்குடையவர் அத் தானத்திற்கு 7-ஆமிடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர், பகை யடைந்து 2-ல் நின்றவர் திசையில் சனிக்கு 12-ஆமிடத்துக்குரியவர் புத்தியில் பூர்ண வயதிருந்து மாரகமாவராம்.

(உ-ம்.) இது மகர லக்கினம்; இதில் 2-ஆமிடம் கும்பம்; அதற்குரிய சனி 4-ஆமிடமாகிய மேஷத்தில் நிற்பதையும், அந்த மேஷத்துக்குரிய செவ்வாய் அந்த ராசிக்கு 7-ஆமிடமாகிய துலாத்தில் நிற்பதையுங் காண்க. இதற்கு 2-ஆமிடமாகிய கும்பத்தில் பகையடைந்து நிற்கின்ற சூரியதிசையில், சனி நின்ற ராசிக்கு 12-ஆமிடமாகிய மீனத்துக்குரிய குருபுத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| சூரி | இராசிச் சக்கரம் | | |
| ல | | | |
| ச | | செ | |

## 91-92

(இ-ள்.) பாக்கியனென்னும் 9-க்குடையவரும் விரையாதி யென்னும் 12-க்குரியவருமாகிய இருவரும் ரோகபத்தியமென்னும் 6-ஆமிடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகர், சனிக்கு 6-ல் இருந்தவர்

திசையில் தாரை யென்னும் சந்திரனுக்கு 7-க்குடையவர் புத்தியில் மாரகமாவராம்.

(உ-ம்.) இது தனுசு லக்கினம் இதில் 9-ம் இடம் சிங்கம்; அதற்குரிய சூரியனும் 12-ஆமிடம் விருச்சிகம்; அதற்குரிய செவ்வாயும் ஆகிய இருவரும் 6-ஆமிடமாகிய இடபத்தில் நிற்பதையுங்காண்க. இதற்கு சனிக்கு 6-ஆமிடத்தில் நின்ற சுக்கிரன் திசையில் சந்திரனுக்கு 7-ஆமிடத்திற்குரிய குரு புத்தியில் மாரகம்.

| | | | |
|---|---|---|---|
| | | சூரி | சுக் |
| | இராசிச் | | |
| சனி | சக்கரம் | | |
| ல | குரு | | சந் |

அல்லது 10-ம் இடத்திற்குரிய புதன் திசையில் சுக்கிரனுக்கு 8-க்குரிய சனி புத்தியில் தீர்க்கமாய் மாரகம்ாம்.

93

(இ-ள்.) அல்லது 11-ஆமிடத்திற்குரிய சுக்கிரன் திசையில் 11-ஆமிடத்திற்கு 8-க்குரிய சுக்கிரன் புத்தியில் மாரகமாம்.

பாவியாகிய வியத்தோனென்னும் 12-க்குரியவர் 6-ம் இடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகர் 6-க்குடையவர் திசையில் விரையாதிபதியாகிய 12-க்குரியவர் புத்தியில் மாரகமாவராம்.

(உ-ம்.) இது தனுசு லக்கினம்; இதில் 12-ஆமிடம் விருச்சிகம்; அதற்குரிய செவ்வாய் 6-ம் இடமாகிய இடபத்தில் நிற்பதையுங் காண்க. இதற்கு 6-க்குரிய சுக்கிர திசையில் 12-க்குரிய செவ்வாய் புத்தியில் மாரகம்.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசிச் | | |
| சுக் | சக்கரம் | | |
| ல | | | |

94

(இ-ள்.) 2-ம் இடத்தில் அல்லது 7-ம் இடத்தில் ராகு நிற்கவும், அவ் விராசிக்குரியவர் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகர், ராகு திசையில் ராகுவிருந்த ராசியாதிபதி புத்தியில் மாரகமாவராம்.

(உ-ம்.) இது கும்ப லக்கினம் ; இதில் 7-ஆமிடஞ் சிங்கம் ; அதில் ராகு நிற்ப தையும், அச்சிங்கத்திற்குரிய சூரியன் 4-ம் இடமாகிய இடபத்தில் கேந்திரம் பெற்று நிற்பதையுங் காண்க. இதற்கு ராகு திசையில் அந்த ராகு விருந்த ராசி யாதிபதியாகிய சூரிய புத்தியில் மாரகம்.

| | | | |
|---|---|---|---|
| | | சூரி | |
| ல | இராசிச் சக்கரம் | | சந் |
| | | | |

## 95

(இ-ள்.) 4-ஆமிடத்தில் அல்லது 8-ஆமிடத்தில் ராகு நிற்கவும், ராகு விருந்த ராசியாதிபதி பகை நீசமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர், நீலப்பணியாகிய ராகு திசையில், அந்த ராகு விருந்த ராசியாதிபதி புத்தியில் மாரகமாவராம்.

(உ-ம்.) இது மகர லக்கினம் ; இதில் 4-ஆமிடம் மேஷம்; அதில் ராகு நிற்பதை யும், அம் மேடத்துக்குரிய செவ்வாய் 2-ம் இடமாகிய கும்பத்தில் பகை பெற்று நிற்பதையுங் காண்க. இதற்கு ராகு திசை யில், ராகு விருந்த ராசியாதிபதியாகிய செவ்வாய் புத்தியில் மாரகம்.

| | | | |
|---|---|---|---|
| | ராகு | | |
| செ | இராசிச் சக்கரம் | | |
| ல | | | |
| | | | |

## 96-97

(இ-ள்.) அல்லது 7-க்குரியவர் திசையில் 7-க்குரிய லக்கினாதிபதி புத்தியில், அல்லது 8-ஆமிடத்தில் நின்றவர் திசையில், மந்தனென்னுஞ் சனிக்கு 8-ல் இருந்தவர் புத்தியில் மாரகமெனக் காண்க.

அல்லது 2-ஆமிடத்திலிருந்தவர் திசையில் சந்திரனுக்கு 7-ல் இருந்தவர் புத்தியில் மாரகம்.

## 98

(இ-ள்.) சனிக்கு 8-க்குடையவரும், 6-க்குடையவருமாகிய இருவரும் கூடி கண்டமாகிய கேந்திரத்திற் நிற்கவும், அவர்களை

விதியென்கின்ற 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் சனிக்கு 6-க்குடையவர் திசையில் சனிக்கு 8-க்குடையவர் புத்தியில் மாரக மாவாராம்.

(உ-ம்.) இது கன்னியா லக்கினம்; இதில் 9-ஆமிடம் இடபம், அதில் சனி அச் சனிக்கு 8-ஆமிடம் தனுசு; அதற்குரிய குருவும், சனிக்கு 6-ஆமிடம் துலாம்; அதற்குரிய சுக்கிரனுமாகிய இருவருங் கூடி 4-ஆமிடத்தில் கேந்திரித்திருப்பதையும், அவர்களை லக்கினத்திற்கு 8-ஆமிடத்துக்குரிய செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகர், சனிக்கு 6-ஆமிடத்துக்குரிய சுக்கிர திசையில் சனிக்கு 8-ஆமிடத்துக்குரிய குரு புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | செ |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| குரு சந் | | | ல |

## 99

(இ-ள்.) பாலாரிஷ்டமும், மத்திம வயதும் பூரண வயதுமாகிய 3-விதமுங் கூறினேம். இவற்றை பக்குவமாக கணிதவிதிப்படி சாஸ்திர நுட்பங்களை நன்கு ஆராய்ந்து மாரகஞ் சொல்லுக.

## 100

(இ-ள்.) விளங்காநின்ற பூரணம் மத்திமம் வாலிப மென்னும் ஆயுட்பாகத்தை தாழ்ச்சியடையாத நவக்கிரகாதிகள் ஸ்தானங்களில் நிற்கும் பலத்தையும் பலஹீனத்தையுந் தெரிந்து பூரண மத்திமம் பாலர் என்கின்ற 3-ஆயுள் நிலையறிந்து மாரகங் கூற வேண்டுமாம்.

## 101

(இ-ள்.) பூரண வயதுடைய ஜாதகர்களுக்கு 50-வயதுக்குள் மாரக திசை புத்தி வந்தபோதிலும் மாரகங் கூறுமல் நீக்க வேண்டுமாம். மத்திம வயதுடையவர்களுக்கு 50-வயதுக்குள் நேருந் திசாபுத்தி யறிந்து மாரகங் கூறல் வேண்டுமாம்.

## 102-103

(இ-ள்.) இந்தப் பிரகாரம் அறிந்து கூறுவாயாகில், இப் பூமியின் கண் உண்மையாய் விளங்குமாம் அதில் உன் சொந்த

மாகிய அறிவையுந் துணிவையுங் கூட்டி சோதனை செய்து கிரக பார்வையின் பலமுங் கண்டு உன் மெய் மறதியையுந் துர்க்குணங் களையும் நீக்கி கணிதப்படி கூறுவாயாக.

104

(இ-ள்) 5-9க்குடையவர்களும் சனியுமாகிய மூவருங் கூடி 5-ல் நிற்கவும், அவர்களை சுபக் கிரகங்களாகிய சுக்கிரன் புதன் குரு இவர்கள் பார்க்கவும், அதில் குரு ஆட்சியிலேனும் 11-ஆமிடத்திலேனும் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதிர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) மீன லக்கினம்; இதில் 5-ஆமிடம் கடகம். அதற்குடைய சந்திரனும், 9-ஆமிடம் விருச்சிகம்; அதற்குடைய செவ்வாயும், அந்தகனென்னும் சனியாகிய மூவரும் 5-ஆமிடத்தில் நிற்கவும், அவர்களை குரு சுக்கிரன் புதன் பார்க்கவும், இதில் குரு லக்கினமாகிய மீனத்தில் ஆட்சி யடைந்து நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல குரு | | | |
| | இராசிச் | சக்கரம் | ச செ சந் |
| பு-சு | | | |
| | | | |

(இ-ள்.) கொடியனாகிய சூரியன் நட்பு அல்லது ஆட்சிபெற்று நிற்கவும், சந்திரனுக்கும் லக்கினத்திற்கும் 1-5-9 ஆகிய திரிகோண ராசிக்குடையவர்கள் நட்பு பெற்று நிற்கவும், சந்திரன் 1-5-9 ஆகிய திரிகோணங்களில் ஒன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதிர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) கன்னியா லக்கினம்; இதில் சூரியன் சிங்கராசியில் ஆட்சியடைந்து நிற்பதையும், சந்திரனுக்கும் லக்கினத்துக்கும் 1-5-9க்குடைய சனி சுக்கிரன் புதன் ஆகிய மூவரும் நட்பு ராசியில் நிற்பதையும், சந்திரன் திரிகோணமாகிய 5-ஆமிடத்தில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | சு |
| | இராசிச் | சக்கரம் | பு |
| சந் | | | சூ |
| | | | ல |

(இ-ள்.) தினகரனாகிய சூரியனுக்கு இரண்டு பக்கத்திலும் குருவும் சுக்கிரனும் நிற்கவும், செவ்வாய் விருச்சிகத்தில் ஆட்சி பெற்று நிற்கவும், 3 க்குடையவர் குருவுக்கு 7-ஆமிடத்தில் நட்படைந்து நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) தனுசு லக்கினம்; இதில் சூரியனை இரண்டு பக்கத்திலும் குருவும் சுக்கிரனும் கட்டி நிற்பதையும், செவ்வாய் விருச்சிக ராசியில் ஆட்சியடைந்து நிற்பதையும், 3-ம் இடத்துக்குரிய சனி குருவுக்கு 7-ல் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| குரு | சூ | சுக் | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| ல | செ | | சனி |

## 105

(இ-ள்.) 9-க்குடையவரும் 5-க்குடையவரும் நட்பு ஆட்சி யுச்சம் ஆகிய விராசிகளில் நிற்கவும், அவர்களைக் கொடூரனாகிய சூரியன் நட்படைந்து பார்க்கவும், இரு குரு வென்னும் சுக்கிர னுங் குருவும் ஆகிய இருவரும் 1 4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும், சனி கேந்திரமடையாது நிற்கவும் பெற்ற ஜாதகருடைய பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) இது மீனலக்கினம்; இதற்கு 5-ஆமிடம் கடகம்; அதற்குடைய சந்திர னும் 9-ஆமிடம் விருச்சிகம் அதற்குடைய செவ்வாயும் ஆகிய இருவருங் கூடி நட்பு ஸ்தானமாகிய கன்னியில் நிற்பதையும், அவர்களை சூரியன் நட்பு ராசியில் நின்று பார்ப்பதையும், குருவுஞ் சுக்கிரனும் 10-ஆமிடமாகிய தனுசில் கேந்திரம் பெற்று நிற்பதையும், சனி கேந்திர ராசியி லில்லாதிருப்பதை யுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சூ ல | புத | சனி | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| சு குரு | | | செ சுக் |

(இ·ள்.) பதுமமலர் நண்பனாகிய சூரியன் பகையில்லாது நிற்கவும், வாகன ஸ்தானமாகிய 4-க்குடையவர் ஆட்சியுச்சம் பெற்று நிற்கவும், கதியிறைவனாகிய 12-க்குடையவர் 9-ஆமிடத் தைப் பார்க்கவும், 11-க்குடையவர் அவருக்கு நட்பாயிருக்கவும் பெற்ற ஜாதகருடைய பிதுர் பூரண வயதும் பொருளும் கீர்த்தி யும் உடையவராம்.

(உ-ம்) இது கும்பலக்கினம்; இதில் சூரியன் மீனராசியில் நட்பபடைந்து நிற்பதையும், 4-ஆமிடமாகிய இடபத்தில் சுக்கிரன் ஆட்சிபெற்று நிற்பதையும், 12-ஆமிடம் மகரம் அதற்குடைய சனி 9-ஆமிடமாகிய துலாத்தைப் பார்ப்பதையும்; 11 க்குடைய குரு அச் சனிக்கு நட்பாயிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சூ | | சுக் | |
| ல | இராசிச் சக்கரம் | | |
| ச | | | |
| | | குரு | |

கணக்கனென்னும் புதனும், திவாகரன் என்னும் சூரியனும், சசியென்னும் சந்திரனுமாகிய மூவருங் கூடி நிற்கவும், இலக்கினுதிபதியும், சனியும் 9-ஆமிடத்தில் நிற்கவும், குரு 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றில் நிற்கவும், கண்டமென்னும் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களில் பாபக்கிரகங்கள் நிற்கவும் பெற்ற ஜாதகருடைய பிதுர் பூரண வயதும், பொருளும், யூக்கமுமுடையவராம்.

(உ-ம்.) இது லக்கினம் துலாம்; இதில் புதன் சூரியன் சந்திரன் ஆகிய மூவருங்கூடி இடப ராசியும் நிற்பதையும், இலக்கினுதிபதியாகிய சுக்கிரனும், சனியுங் கூடி 9 மிடமாகிய மிதுனத்தில் நிற்பதையும், குரு 5-மிடமாகிய கும்பத்தில் திரிகோணம் பெற்று நிற்பதையும், 7-ஆமிடமாகிய மேடத்தில் கேந்திரமடைந்து செவ்வாய், ராகு நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | ரா செ | புத சந் | சு சனி |
| குரு | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | ல சே | |

## 106

(இ-ள்.) சந்திரனும் பாக்கியனென்னும் 9 க்குடையவரும் குருவும் ஆகிய மூவருங் கூடி பிதுர் ஸ்தானமென்னும் 9-ஆமிடத்தில் நிற்கவும், அவர்களுக்கு 7-ஆமிடத்தில் சூரியன் நிற்கவும், அந்தச் சூரியனை 2-பக்கமும் புதனும் பிரசுரனென்னும் சுக்கிரனும் கட்டி நிற்கவும், அச் சூரியனை சுபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருடைய பிதுருக்கு நூறு வயதுண்டாம்.

(உ-ம்.) இது சிங்க லக்கினம்; இதில் 9-ஆமிடமான மேஷத்தில் சந்திரனும், 9-ஆமிடம் மேடம், அதற்குரிய செவ்வாயும் குருவும் ஆகிய மூவருங் கூடி 9-ஆமிடமான மேஷத்தில் நிற்பதையும், அவருக்கு 7-ஆமிடம் துலாம்; அதில் சூரியன் நிற்பதையும், அந்தச் சூரியனை முன்னும் பின்னும் புதனும் சுக்கிரனுங் கட்டி நிற்பதையும், அச் சூரியனை சுபர்களாகிய குரு, சந்திரன் பார்த்திருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | செ ச குரு | | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | ல |
| | சு | சூ | புத |

## 107

(இ-ள்.) இரு குருவாகிய சுக்கிரனும், குருவும் 9-ஆமிடம் அல்லது அதற்கு 1-5 9 ஆகிய திரிகோணங்கள் வொன்றில் நிற்கவும், அவர்களிருந்த ராசிக்குரியவர் அவர்களுடன் கூடி நிற்கவும், பூரண பலத்துடன் ரவியென்னும் சூரியன் ஆயமென்ற 11-ஆமிடத்தில் நிற்கவும், சந்திரன் உதயமாகிய லக்கினத்தில் நிற்கவும், பாபக்கிரகங்கள் 1-5-9 ஆகிய திரிகோணங்களில் இல்லாதிருக்கவும் பெற்ற ஜாதகருடைய பிதிர் பூரண வயதுடன் பங்கமில்லாது நெடுநாள் வாழ்பவராம்.

(உ-ம்.) இது மிதுன லக்கினம்; இதில் 9-ஆமிடமான கும்பத்தில் சுக்கிரனும், குருவும், கும்பராசிக்குரிய சனி ஆகிய மூவரும் நிற்பதையும், சூரியன் 11-ஆமிடமாகிய மேடத்தில் நிற்பதையும், சந்திரன் லக்கினத்தில் நிற்பதையும், பாபர்களாகிய சூரியன், செவ்வாய், ராகு, கேது ஆகிய நால்வரும் திரிகோணங்களில் இல்லாதிருப்பதையுங்காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சூ | செ | ல சந் |
| சனி சு.கு | இராசிச் | | கே |
| ரா | சக்கரம் | | |
| | | | |

## 108

(இ-ள்.) 9-ஆமிடத்தில் சுபக்கிரகங்கள் நிற்கவும், அந்த 9-க்குரியவர் நட்பு ராசியில் சூரியனுடன் கூடி 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றில் நிற்கவும், அவர்களைச் சனியும், ரத்தன் என்னும் செவ்வாயும் பார்க்காதிருக்கவும், பாபக் கிரகங்கள்

9-ஆமிடத்தைப் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருடைய பிதா நூறு வயது சென்று சிவலோக மடைவராம்.

(உ-ம்.) இது மேஷ லக்கினம்; இதில் 9-ஆமிடம் தனுசு; அதில் சந்திரன் நட்படைந்திருப்பதையும், அந்த ராசிக்குரிய குரு 5-ஆமிடமாகிய சிங்கத்தில் நட்படைந்து சூரியனேடு கூடி நிற்பதையும், அவர்களைச் சனியும், செவ்வாயும், பார்க்காதிருப்பதையும், செவ்வாய், சனி, ராகு கேது ஆகிய பாபர்கள் 9-ஆமிடத்தைப் பார்க்காதிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| கே | ல | சனி | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | குரு சூ |
| சந் | | செ | ராகு |

## 109

(இ - ள்.) லக்கினுதிபதியோடு 9-க்குடையவரும், 3-க்குடையவரும் ஆகிய மூவரும் சுபக்கிரகமாகி சரராசியில் நிற்கவும், 4-க்குடையவர் உபய ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகருடைய பிதிர் மிகுந்த பொருளும் சிவனருளும் பூரண வயதும் பெறுவராம்.

(உ-ம்.) கடக லக்கினம்; லக்கினுதிபதி சந்திரனும், 9-ஆமிடம் மீனம்; அதற்குரிய குருவும், 3-ஆமிடம் கன்னி, அதற்குரிய புதனும் ஆகிய மூவரும் கூடி சர ராசியாகிய கடகத்தில் நிற்பதையும், 4-ஆமிடம் துலாம், அதற்குரிய சுக்கிரன் மிதுனராசியாகிய உதயத்தில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | சு |
| | இரா சிச் | | ல-பு ச-கு |
| | சக்கரம் | | |
| | | | |

## 110

(இ-ள்.) குரு 9-ஆமிடத்தில் நிற்கவும், அவரை சுபக்கிரகங்கள் பார்க்கவும், 9-க்குடையவர் சூரியனை பார்க்கவும் பெற்ற ஜாதகருடைய பிதிர் குலங்கள் தழைத்து நூறு வயதிருப்பராம்.

(உ-ம்.) விருச்சிக லக்கினம்; இதில் 9-ஆமிடம் கடகம்; அதில் குருவும் அந்தக் குருவை சுபக் கிரகங்களாகிய புதனும் சுக்கிரனும் பார்த்து நிற்பதையும் 9-க்குடையவராகிய சந்திரன், சூரியனைப் பார்த்து நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ | இராசிச் | | குரு |
| புத சுக் | சக்கரம் | | சந் |
| | ல | | |

## 111

(இ-ள்.) விரையமென்னும் 12-ம் இடத்தில் சுபர்கள் நிற்கவும்; அந்த 12-க்குரியவர் அன்னை யென்னும் 4-க்குரியவரும் லாபமென்னும் 11-க்குரியவரும் ஆகிய நால்வருங் கூடி 1-5-9 ஆகிய திரிகோணங்களி லொன்றில் நிற்கவும் பெற்ற ஜாதகருடைய பிதிருக்கு பூரண வயதுண்டாம்.

(உ-ம்.) இடப லக்கினம்; இதில் 12-ம் இடம் மேஷம் அதில் சுபக்கிரக மென்னும் சுக்கிரன், சந்திரன், புதன் ஆகிய மூவரும் நிற்பதையும், அம்மேடத்துக்குரிய செவ்வாயும் 4-ம் இடம் சிங்கம், அதற்குரிய சூரியனும் 11-ம் இடம் மீனம், அதற்குரிய குருவும் ராகுவும் ஆகிய நால்வரும் லக்கினத்தில் திரிகோணம் பெற்று நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சுக் பு-ச | ரா-ல செ | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | | |

## 112

(இ-ள்.) தரும ராசியாகிய 9-ம் இடத்தில் குரு நிற்கவும், 9-க்குரியவர் அன்பு வென்னும் 5-ஆமிடத்தில் நிற்கவும், அவரை அன்னையாகிய 4-க்குரியவர் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதிர் சற்கீர்த்தி பெற்று பூரண வயதும் பெறுவராம்.

(உ-ம்.) விருச்சிக லக்கினம்; இதில் 9-ஆமிடம் கடகம். அதில் குரு நிற்பதையும், 8 க்குரியவராகிய சந்திரன் 5-ம் இடமாகிய மீனத்தில் நிற்பதையும், அவரை 4 ம் இடமாகிய கும்பத்துக்குரிய சனி 11-ம் இடமாகிய கன்னியில் நின்று பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சந் | | | |
| | இராசிச் சக்கரம் | | குரு |
| | | | |
| | ல | | சனி |

## 113

(இ - ள்.) குடும்ப ஸ்தான மென்னும் 2-ஆமிடத்தில் பாக்கியனென்னும் 6-க்குரியவர் நிற்கவும், அவரை லாபாதியென்னும் 11-க்குரியவர் உச்சமடைந்து பார்க்கவும், சூரியன் கண்டமென்னும் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களி லொன்றில் நிற்கவும். 5-ம் இடத்தில் குரு நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) மீன லக்கினம்; இதில் 2-ம் இடம் மேடம் அதில் 9-க்குரிய செவ்வாய் நிற்பதையும், அவரை 11-ம் இடமாகிய மகரத்திற்குரிய சனி பார்ப்பதையும், சூரியன் 7-ஆமிடமாகிய கன்னியில் கேந்திரித்து நிற்பதையும், 5-ம் இடமாகிய கடகத்தில் குரு உச்சமடைந்து நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல | செ | | |
| | இராசிச் சக்கரம் | | குரு |
| | | | |
| | | சனி | சூரி |

114

(இ-ள்.) தனமென்னும் 2 ம் இடத்துக்குரியவரும் கிரியென்னும் இலக்கினதிபதியும் ஆகிய இருவரும் நவமென்னும் 9-ம் ஆமிடத்தில் நிற்கவும், சனியும் 9-க்குரியவரும் கூடி ஆகாயமென்னும் 11-ம் இடத்தில் நிற்கவும், கண்டமென்னும் 1 4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் சூரியன் நிற்கவும், 5-க்குடையவர் உச்சமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) விருச்சிக லக்கினம்; இதில் 2-ம் இடம் தனுசு, அதற்குரிய குருவும் லக்கினதிபதியாகிய செவ்வாய் ஆகிய இருவருங் கூடி 9-ம் இடமாகிய கடகத்தில் நிற்பதையும், சனியும் 9-ம் இடத்துக்குரிய சந்திரனுமாகிய இருவரும் கூடி 11-ம் இடமாகிய கன்னியில் நிற்பதையும், 4-ம் இடமாகிய கும்பத்தில் சூரியன் கேந்திரமடைந்து நிற்பதையும், 5-ம் இடமாகிய மீனத்துக்குரிய குரு கடகத்தில் உச்சமடைந்து நிற்பதையும் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ | நவாம்ஸ சக்கரம் | | செ குரு |
| | | | |
| | ல | | சனி சந் |

115

(இ-ள்.) 9 க்குடையவர் 1-4-7-10 ஆகிய கேந்திரங்களிலொன்றில் நிற்கவும், அவரைப் பொன்னவனாகிய குரு பார்க்கவும், 5-குடையவர் பாக்கியமென்னும் 9-இடத்தில் நிற்கவும், நட்பு ராசியில் சூரியன் நிற்கவும், அச் சூரியனை செவ்வாய் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதும் லீலா விநோதனுமாயிருந்து மரணகாலத்தில் பொருளிழந்து புத்திரனால் சொற்ப சுகம் பெறுவராம்.

(உ-ம்) துலா லக்கினம்; இதில் 9-ஆமிடம் மிதுனம்; அதற்குரிய புதன் 4-ஆமிடமாகிய மகரத்தில் நிற்பதையும், அவரை குரு கடகத்தினின்று பார்ப்பதையும், 5 ஆமிடம் கும்பம் அதற்குரிய சனி 9-ஆமிடமாகிய மிதுனத்தில் நிற்பதையும், சூரியனுக்கு நட்புராசியாகிய தனுசில் நிற்பதையும் அவரைச் செவ்வாய் பார்க்காதிருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| | இராசிச் | | குரு |
| பு | சக்கரம் | | கே |
| சூரி | | ல | |

## 115

(இ-ள்.) சந்திரனுக்கு 9-க்குடையவர் 5-ஆமிடத்தில் நிற்கவும், சந்திரனுக்கு 11-ஆமிடத்தில் லக்கினத்திற்கு 9-க்குடையவர் நிற்கவும், லக்கினுதிபதி ஆட்சி உச்சத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) சிங்க லக்கினம்; இதில் கடகத்திற் சந்திரன் அச் சந்திரனுக்கு 9-ஆமிடம் மீனம் அதற்குடைய குரு லக்கினத்திற்கு 5-ஆமிடமாகிய தனுசில் நிற்பதையும், சந்திரனுக்கு 11-ஆமிடம் இடபம் அதில் லக்கினத்திற்கு 9-ஆமிடமாகிய மேஷத்திற்குரிய செவ்வாய் நிற்பதையும், லக்கினுதிபதி ஆகிய சூரியன் லக்கினத்தில் ஆட்சி யடைந்து நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசிச் | | சந் |
| | சக்கரம் | | ல குரு |
| வி | | | |

(இ-ள்.) புதிய மதி யென்னும் பூர்வபக்ஷ சந்திரனும் பஞ்சமன் ஆகிய 5-க்குடையவரும் மேருவென்னும் லக்கினுதிபதியும் சுக்கிரன் ஆகிய நால்வரும் ஆட்சி அல்லது லாபமென்னும் 11-ஆமிடம் அல்லது நட்பு ராசிகளில் ஒன்றில் நிற்கவும் சூரியன் ஆட்சியில் நிற்கவும் பெற்று ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) விருச்சிக லக்கினம்; இதில் 11-ஆமிடமாகிய கன்னியில் சந்திரனும் 5-ஆமிடம் மீனம் அதற்குடைய குருவும் லக்கினுதிபதியாகிய செவ்வாய் ஆகிய மூவரும் நட்பு பெற்று நிற்பதையும், சுக்கிரன் ஆட்சி பெற்று 12-ஆமிடமாகிய துலாத்தில் நிற்பதையும், 10-ஆமிடமான சிம்மத்தில் சூரியன் ஆட்சி பெற்று நிற்பதையுங் காண்கவும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | சூரி |
| | ல் | சுக் | குரு செ-ச |

## 116

(இ-ள்.) மதியென்னும் சந்திரனும் 5-க்குடையவருங் கூடி 11-ஆமிடத்தில் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும் அல்லது கிரி யென்கின்ற லக்கினத்திலேனும் நிற்கவும், 9-க்குடையவரிருந்த ராசிக்கு 9-ஆமிடத்தில் சாமியென்னும் லக்கினுதிபதி நிற்கவும், அவரை 5-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) மீன லக்கினம்; இதில் சந்திரனும் 5-ஆமிடம் கடகம் அதற்குரியவரும் சந்திரனுகை இருந்து 11-ஆமிடமாகிய மகரத்தில் நிற்பதையும்; இவரை குரு பார்ப்பதையும்; நவனென்னும் 9-ஆமிடமாகிய விருச்சிகத்துக்குரிய செவ்வாய்க்கு பாக்கிய மென்னும் 9-ஆமிடமாகிய கடகத்தில் லக்கினுதிபதியாகிய குரு நிற்பதையும், அவரை 5-க்குரிய சந்திரன் பார்த்திருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | இராசிச் சக்கரம் | | குரு |
| சந் | | | |
| | செ | | |

## 117

(இ-ள்.) பகலோனென்னும் சூரியனின்ற ராசியாதிபதி பாக்கியமென்னும் 9-ஆமிடத்தில் நிற்கவும், அவரை சுகனுரென்னும் 4-க்குடையவர் பார்க்கவும், 5-க்குடையவரும் பொன்னென்னும் குருவும் ஆகிய இருவருங் கூடி நின்ற ராசியில் ஒருவர் ஆட்சி நட்படைந்து நிற்கப் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) கடக லக்கினம்; அதிற் சூரியன் சூரியனின்ற ராசிக்குடைய சந்திரன் 9-ஆமிடமாகிய மீனத்தில் நிற்பதையும், அவரை 4-ஆமிடமாகிய துலாத்திற்குரிய சுக்கிரன் பார்ப்பதையும், 5-ஆமிடம் விருச்சிகம் அதற்குரிய செவ்வாயும் குருவுங் கூடி 5-ல் நிற்பதையும் அதில் செவ்வாய் ஆட்சி பெற்று நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சந் | | | |
| | இராசிச் சக்கரம் | | ல-கு |
| | | | |
| | செ குரு | | சுக் |

## 118

(இ ள்.) ஆட்சி பெற்ற சுக்கிரனேடு குரு கூடி நட்பு ஸ்தானமேறி 1-4-7-10, 1-5-9 ஆகிய கேந்திர திரிகோணங்களில்

வலுப்பெற்று நிற்கவும், 5-க்குரியவர் கன்னியில் நட்பு பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) துலா லக்கினம்; லக்கினத்தில் சுக்கிரன் ஆட்சி பெற்ற குருவோடு கூடி லக்கின கேந்திரத்தில் நிற்பதையும், சனி கன்னியில் நட்படைந்திருப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | ல-சு குரு | சனி |

119

(இ-ள்). 5-க்குரியவர் 1-4 7-10 ஆகிய கேந்திரங்களில் ஒன்றில் நிற்கவும், 5-ம் இடத்தில் குரு இருந்து லக்கினத்தைப் பார்க்கவும், 5-ஆமிடத்தை சந்திரன் ஆட்சி பெற்று பார்க்கவும், பகலோன் ஆகிய சூரியன் உச்சமடைந்து 5-ஆமிடத்திற்கு கேந்திரத்தில் ஆட்சி யடைந்தவரோடும் சுக்கிரனோடுங் கூடி நிற்கவும், பெற்ற ஜாதகரின் பிதுர் சுகமும் பூரண வயதுமுடையவராம்.

(உ-ம்.) கன்னியா லக்கினம்; இதில் 5-ஆமிடமாகிய மகரத்திற்குரிய சனி 4-ம் இடமாகிய தனுசில் கேந்திரித்து நிற்பதையும், 5-ஆமிடத்தில் குரு விருந்து லக்கினத்தைப் பார்ப்பதையும், பஞ்சம ஸ்தானத்திற்கு 4-ஆமிடத்தில் ஆட்சி பெற்ற செவ்வாயோடுஞ் சுக்கிரனோடுங் கூடி நிற்பதையும் அவர்களோடு பகலோனாகிய சூரியன் உச்சம் பெற்று நிற்பதையும், சந்திரன் ஆட்சி பெற்று 5-ஆமிடத்திலிருக்கும் குருவைப் பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | செ சு-கு | | |
| | இராசிச் சக்கரம் | | சந் |
| குரு | | | |
| சனி | | | ல |

120

(இ-ள்.) விரையாதி என்னும் 12-க்குரியவரும் பஞ்சமனென்னும் 5 க்குரியவருங் கூடி 9-ஆமிடத்தில் நிற்கவும், அவரைக் குரு பார்க்கவும், ரதனுதனென்னும் சூரியனும் 4-க்குடையவரும் குருவும் ஆகிய மூவருங் கூடியொரு ராசியில் நிற்கவும், 2-ல் 3-க்குரியவர் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுருக்குப் பூரண வயதுண்டாம்.

(உ-ம். மீன லக்கினம்; இதில் 12-ம் இடமாகிய கும்பத்துக்குரிய சனியும் 5-ம் இடமாகிய கடகத்திற்குரிய சந்திரனுங் கூடி மாதவமென்னும் 9-ஆமிடமாகிய விருச்சிகத்தில் நிற்பதையம், சூரியனும் 4-ஆமிடமாகிய மிதுனத்துக்குரிய புதனும் உம்பரென்னும் குருவும் ஆகிய மூவருங் கூடி நிற்பதையும், 2-ஆமிடமாகிய மேஷத்தில் வீரர் என்னும் 3-ஆமிடத்துக்குரிய சுக்கிரன் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல | சுக் | சூ-பு . குரு | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | சனி சந் | | |

மேற்கூறிய கிரகங்கள் திரிகோணங்களில் நன்கடைந்தும், 11-ஆமிடத்தில் 4-க்குரியவரிருந்தாலும் குரு பார்த்தாலும், மேற்கூறிய பலனும்.

## 121

(இ-ள்.) அருணனுகிய புதனும் சூரியனுங் கூடி 5-ஆமிடத்தில் நிற்கவும், அவர்களை குருவும் 9-க்குரியவருங் கூடி நோக்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் சுகவாழ்வுடையவராம்.

(உ-ம்.) தனுசு லக்கினம்; இதில் 5-ம் இடமாகிய மேஷத்தில் புதனும் சூரியனும் நிற்பதையும், அவர்களை குருவும் 9க்கு 9-ஆமிடமாகிய மேடத்துக்குரிய செவ்வாயுங் கூடி பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சூ-பு | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல | | குரு செ | |

குருவும் திருவென்னும் 9-க்குரியவருங் கூடி 10-ஆமிடத்தில் நிற்கவும், பூரணசந்திரன் கேந்திரத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பூரண வயதுடையவராம்.

(உ-ம்.) துலா லக்கினம்; இதில் கேந்திரமென்னும் 10-ஆமிடமாகிய கடகத்தில் குருவும் 9-ம் இடமாகிய மிதுனத்துக்குரிய புதனுங் கூடி நிற்பதையும், சந்திரன் லக்கின கேந்திரத்தில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | குரு பு |
| | | | சூ |
| | | ல சந் | |

## 122

### அவபிதுர்ப் பாவகம்

(இ ள்.) 8-ம் இடத்தில் ராகு நிற்கவும், அவரை 9-க்குரியவரேனும் சூரியனேனும் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் ராகு அல்லது கேது திசையில் 3-க்குரியவர் புத்தியில் மாரகமாம்.

(உ-ம்.) கடக லக்கினம்; இதில் 8-ம் இடம் கும்பம், அதில் ராகு நிற்பதையும், அவரை 9 ம் இடம் ஆகிய மீனத்துக்குரிய குருவும், சூரியனும் பார்த்து நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | குரு |
| ரா | இராசிச் சக்கரம் | | ல |
| | | | கேது |
| | | | |

## 123

(இ-ள்.) பாக்கியமாகிய 9-ம் இடத்தில் கிரிநாதனுகிய லக்கினதிபதி நிற்கவும், அவரைக் கருமாதிபதியாகிய 10-க் குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதிர் 9-க்குடையவன் திசையில் 8-ம் இடத்தி லிருந்தவர் புசிப்பிலாகினும் 10-க்குடையவர் புசிப்பிலாகினும் மாரகமாம்.

(உ-ம்.) துலா லக்கினம், இதில் 9-ம் இடமாகிய மிதுனத்தில் லக்கினதிபதியாகிய சுக்கிரன் நிற்பதையும், அவரை 10-ம் இடத்திற்குரிய சந்திரன் பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | புத | சுக் |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சந் | | ல | |

## 124

(இ-ள்.) தனத்தோனென்னும் 2-ம் இடத்துக்குரியவர் 4-ம் இடத்தில் நிற்கவும், அவரை பஞ்சமனென்னும் 5-ம் இடத்துக் குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் 2-க்குடையவர் திசையில் 7-க்குடையவர் இருந்த ராசியாதிபதி புத்தியில் மாரகமாம்.

(உ-ம்.) கடக லக்கினம்; லக்கினத்திற்கு 4-ம் இடமாகிய துலாத்தில் 2-ம் இடம் சிங்கம் அதற்குரிய சூரியனிற்பதையும் அவரை 5-ம் இடமாகிய விருச்சிகத்திற்குரிய செவ்வாய் பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | இராசிச் | | ல செ |
| | சக்கரம் | | |
| | | சூரி | |

## 125

(இ - ள்.) திரியோனுகிய 3-க்குடையவர் கருமனென்னும் 10-ம் இடத்தில் நிற்கவும், அவரைக் கதிரவனென்னும் சூரியன் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் 3-க்குடையவர் திசையில் 6-க்குடையவர் புத்தியில் மாரகமாம்.

(உ-ம்.) கன்னியா லக்கினம்; இதில் 3-ம் இடம் விருச்சிகம் அதற்குரிய செவ்வாய் 10-ம் இடமாகிய மிதுனத்தில் நிற்பதையும், அவரைச் சூரியன் பார்ப்பதையுங் காண்க. இதற்கு 3-ம் இடத்திற்குரிய செவ்வாய் திசையில் 9-ம் இடத்திற்குரிய சனி புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | செ |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| சூரி | சனி | | ல |

## 126

(இ-ள்.) ஆயமென்கிற 11-ம் இடத்தில் சுகனுகிய 4-க்குடையவர் நிற்கவும், அவரைக் கர்மனுகிய 10-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் 4-க்குடையவர் திசையில் 10-க்குடையவர் புசிப்பில் மாரகமாம்.

(உ-ம்.) சிங்க லக்கினம்; இதில் 11-ம் இடமான மிதுனத்தில் 4-ம் இடமான விருச்சிகத்திற்குரிய செவ்வாய் நிற்பதையுல், அவரை 10-ம் இடமாகிய இடபத்துக்குரிய சுக்கிரன் பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | செ |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | ல |
| சுக் | | | |

## 127

(இ-ள்.) 5-க்குடையவரையும், 2-ஆமிடத்தினின்றவரையும், அட்டமனென்னும் 8-க்குடையவர் பார்க்கப் பெற்ற ஜாதகரின் பிதிர் 5-க்குடையவர் திசையில் நிதியோனுகிய லக்கினுதிபதி புத்தியில் மாரகமாம்.

(உ-ம்.) கன்னியா லக்கினம்; 5-ஆமிடம் மகரம் அதற்குரிய சனியையும், 2-ஆமிடம் துலாம் அதிலிருந்த சூரியனையும், 8-ஆமிடமாகிய மேஷத்திற்குரிய செவ்வாய் பார்ப்பதையும் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சனி | இராசிச் சக்கரம் | | செ |
| | | | |
| | புத | சூரி | ல |

5-ம் இடத்துக்குரிய சனி திசையில் லக்கினுதிபதியாகிய புதன் புத்தியில் மாரகமாம்.

## 128

(இ-ள். சத்துரு வென்கின்ற 6-க்குடையவர் பாக்கியமென்னும் 9-ம் இடத்தில் நிற்கப் பெற்ற ஜாதகரின் பிதுர் 6-க்குடையவர் திசையில் துணையோனுகிய செவ்வாய் புசிப்பில் மாரகமாம்

(உ-ம்.) சிங்க லக்கினம்; இதில் 6-ம் இடம் மகரம், அதற்குரிய சனி 9-ம் இடமாகிய மேஷத்தில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | இராசிச் சக்கரம் | | செ |
| சுக் | | | ல |
| | | | |

## 129

(இ-ள்.) கருமனுகிய 10-க்குடையவரும், சூரியனுங் கூடி 2-ம் இடத்தில் நிற்கவும், 10-ம் இடத்தில் 2-க்குரியவர் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதிர் சனி திசை சுய புத்தியில் மாரகமாம்.

(உ-ம்.) மீனலக்கினம்; இதில் 2-ம் இடமாகிய மேஷத்தில் குருவும், இரவியாகிய சூரியனுங் கூடி நிற்பதையும் 2-ம் இடமாகிய மேஷத்திற்குரிய செவ்வாய் 10-ம் இடமான தனுசில் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல | சூரி குரு | | |
| | இராசிச் சக்கரம் | | சனி |
| | | | |
| செ | | | |

## 130

(இ-ள்.) 6-ம் இடத்துக்குடையவர் 10 ம் இடத்தில் நிற்கவும், கர்மனென்னும் 10-க்குடையவரும், அருக்கனுகிய சூரியனுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் 6-க்குடையவர் திசையில் அவரோடு சேர்ந்தவர் புசிப்பில் மாரகமாம்.

(உ-ம்.) கன்னியா லக்கினம்; இதில் 6-ம் இடமான கும்பத்திற்குடைய சனி 10-ம் இடமான மிதுனத்தில் நிற்பதையும், 10-ம் இடமான மிதுனத்திற்குடைய புதனும், சூரியனுங் கூடி நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | | செ சனி |
| சூ-பு | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | | ல |

இதற்கு 6-க்குரிய சனி திசையில் அவரேரடு சேர்ந்த செவ்வாய் புத்தியில் மாரகமாம்.

## 131

(இ-ள்.) கண்ட மென்கிற கேந்திரத்தில் கருமமென்னும் 10-க்குடையவர் நிற்கவும், அவரை நிதிக்கெட்டோனுகிய 9-க்கு 8-க்குடையவர் பாரக்கவும் பெற்ற ஜாதகரின் பிதிர் 7-க்குடையவர் திசையில் கருமமென்னும் 10-க்குடையவர் புசிப்பில் மாரகமாம்.

(உ-ம்.) கன்னியா லக்கினம்; இதில் 7-ம் இடம் மீனம் அதில் 10-ம் இடமான மிதுனத்திற்குரிய புதனிற்பதையும், அந்தப் புதனை 9-க்கு 8-ம் இடமான தனுசுக்குரிய குரு பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| புத | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | குரு | | ல |

இதற்கு 7-க்குடைய குரு திசையில் 10-க்குடைய புதன் புசிப்பில் மாரகமாம்.

### 132

(இ-ள்.) விதியென்னும் 8-ம் இடத்துக்குடைய சனி நிதியென்னும் 9-ம் இடத்தில் நிற்கவும், அவரைக் கர்மனென்னும் 10-ம் இடத்துக்குரியவர் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் 8-க்குடையவர் திசையில் சந்திரனுக்கு 8-க்குடையவர் புத்தியில் மாரகமாம்.

(உ-ம்.) கடக லக்கினம் இதில் 8-ம் இடமாகிய கும்பத்துக்குரிய சனி 9-ம் இடமாகிய மீனத்தில் நிற்பதையும், அவரை 10-ம் இடமாகிய மேஷத்துக்குரிய செவ்வாய் பார்ப்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| சனி | | புத | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | செ |
| | சந் | | |

இதற்கு 8-க்குடைய சனி திசையில், சந்திரனுக்கு 8-ம் இடமாகிய மிதுனத்துக்குரிய புதன் புத்தியில் மாரகமாம்.

### 133

(இ-ள்.) நிதியென்கின்ற 9-ம் இடமாகிய பாக்கிய ஸ்தானத்தில் அதற்குடைய செவ்வாய் நிற்கப்பெற்ற ஜாதகரின் பிதுர் அச் செவ்வாய் திசையிலும் விதியென்கிற 8 ம் இடத்துக்குடைய சுக்கிர திசையிலும், நீலனென்னும் சனி புத்தியிலும், 8-ம் இடத்திலிருந்தவர் புத்தியிலும் மாரகமாம்.

(உ-ம்.) மீன லக்கினம்; இதில் 9-ம் இடமாகியவிருச்சிகத்திற்குரிய செவ்வாய் 9 ல் நிற்பதால், இதற்கு அச் செவ்வாய் திசையில் 8-க்குரிய சுக்கிர திசையிலும், 4-ல் இருந்த சனி புத்தியிலும், மூன்றிலிருந்த ராகு புத்தியிலும், மாரகமெனக் காண்க.

| | | | |
|---|---|---|---|
| ல | | ராகு | சனி |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சுக் | செ கே | கு-பு | |

## 134

(இ-ள்.) பாக்கியாதி என்னும் 9-க்குடையவர் 4-ம் இடத்தில் நிற்கவும், 4-ம் இடத்துக்குரியவர் 9-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் நிதியென்னும் 9-க்குடையவர் திசையில், 10-க்குடையவர் புசிப்பில் குற்றப்பட்டு மாரகமாவனும்.

(உ-ம்.) இடப லக்கினம்; இதில் 4-ம் இடம் சிங்கம். இதில் 9-ம் இடமாகிய மகரத்துக்குரிய சனி நிற்பதையும் 9-ம் இடம் மகரம், அதில் 4-க்குடையவர் நிற்பதையுங் காண்க.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | இராசிச் சக்கரம் | | |
| சூ | | | சனி |
| | | | |

## 135

(இ - ள்.) சான்றோனாகிய சூரியனும் கருமனென்கின்ற 10-ம் இடத்துக்குடையவருங்கூடி நிற்கப்பெற்ற ஜாதகரின் பிதுர் 10-க்குடையவர் திசையில் தபனென்னுஞ் சூரிய புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | ல | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | சூ சனி | | |

## 136-137

(இ-ள்.) கர்மனென்கின்ற 10 ம் இடத்துக்குடைய செவ்வாயும், இரவியாகிய சூரியனும், ஒருவர் வீட்டிலொருவர் மாறியிருக்க, அவர்களை நிதி யென்கின்ற 9-க்குடைய குரு பார்க்கப்பெற்ற ஜாதகரின் பிதுர் கர்மன் திசையாகிய 10-ம் இடத்துக்குடைய செவ்வாய் திசையில், லாபாதி என்னும் 11-ம் இடத்துக்குடைய சுக்கிரனிருந்த ராசியாதிப்தி சனி புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | சூ | | சனி |
| சுக் | இராசிச் சக்கரம் | | ல |
| | | | செ |
| குரு | | | |

இன்னமும் 11-ம் இடத்துக்குடையவர் திசையில் 9-ம் இடத்துக்கு 9-ம் இடத்துக்குடையவர் புசிப்பில் மாரகமெனவுங் கூறுவர்.

## 138

(உ-ம்.) விரையாதிபதியாகிய 12-க் குடையவர் கருமனென்னும் 10-ம் இடத்தில் நிற்கவும், அவரை சூரியன் பார்க்கின்றதால் விரையாதிபதியாகிய 1-க் குடையவர் திசையில், கரியென்னும் சனிக்கு அப்பனென்கின்ற சூரிய புத்தியில் பிதுர் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| சூ பு | | சனி | சந் |
| சு கே | இராசிச் சக்கரம் | | |
| | | | ராகு |
| ல | | | செ |

## 139

### பொது

சந்திரனுக்கு 9-க்குடையவர் திசையிலும், அந்த திசாநாதனிருந்த ராசிக்கு 5-க்குடையவர் புசிப்பில் பிதிர் மாரகமாம்.

## 140

இன்னமும் நீலனென்னும் சனி திசையிலும், தனத்தோனுகிய 2-க்குடையவர் திசையிலும், சாவகனென்னும் சனி யிருந்த ராசிக்கு 6-க்குடையவர் புசிப்பில் பிதிர் மாரகமெனவுங் காண்க.

## 141

இன்னமும் சூரியனுக்கு 6-ல் நின்றவர் திசையில் 9-ம் இடத்திற்கு 7-ல் இருந்தவர் புசிப்பில் பிதுர் மாாகமெனக் காண்க.

## 142

மேற் கூறியவண்ண மிருக்கினும் கிரகங்கள் பிதுர் ஸ்தானத்தில் பகைபெற்ருலும், பிதுர் ஸ்தானதிபதியோடு சேர்ந்தவர்களும், நேரிலிருந்தவர்களும், பார்த்தவர்களும், சுபக்கோளின் பகைபெற்ருலும் பிதுர் மாரகமெனவுங் கொள்க,

## 143

இவ்வாருக மாரகங் கூறி யிருந்தபோதினும் அந்த ஸ்தானத்திற்கும், ஸ்தானுதிபதிக்கும் காரகனுக்கும் எந்தக் கிரகங்கள்

வலுப்பெறுமோ அதில் பிதுருக்கு காலன் பயமில்லை யென்றும் தெரிந்து அதன் விதமறிந்து பலன் கூறல் வேண்டுமாம்.

## 144

### அவபிதுர்மாரகம்

(இ-ள்.) அட்டம தான மென்னும் 8-க்குடையவர் நிதி யென்கின்ற 9-ம் இடத்தில் நிற்கவும், அவரை அன்னை யென்கின்ற சந்திரன் பார்க்கின்றமை யால், அதற்கு 5-க்குடையவருக்கு சத்துரு திசையிலும் அல்லது விதியென்னும் 8-க்குடையவர் திசையிலும், சுகாதிபதி யாகிய 4 க்குடையவர் புசிப்பிலும் பிதுர் மாரகமாம்

| | | | |
|---|---|---|---|
| சனி | | சூரி புத | சுக் |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| செ | | | சந் |

## 145

(இ-ள்.) சந்திரனுக்கு 9-ம் இடத்தில் மந்த னென்னும் சனி நிற்கவும், 5-க் குடையவரை சந்திரன் பார்க்கவும், அன்பனென்னும் 5-க்குடையவர் 8-ம் இடத்தில் நிற்கவும், அவரோடு சேர்ந்த வர் திசையில், சந்திரனுக்கு 9-க்குடைய வர் புசிப்பில் பிதுர் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | ல |
| | இராசிச் சக்கரம் | | சந் |
| சுக் குரு | | | |
| | | | |

## 146

(இ-ள்.) ஆயனென்னும் 11-ம் இடத் துக்குடையவர் 9-ம் இடத்திற்கு 8-ம் இடத்தில் நிற்கவும், அவ் வெட்டுக்குடை யவர் பாக்கிய ஸ்தானமென்னும் 9-ம் இடத்தில் நிற்கவும், மேரு வென்னும் லக்கினாதிபதி 3-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுரோடு மாதாவும் லாபாதிபதியாகிய 11-க் குடையவர் திசையில் லக்கினாதிபதி புத்தியில் மாரகமாவார்களாம்.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சந் | பு | சூ | ல சு |

## 147

(இ-ள்.) பாக்கிய னென்னும் 9-க்குடையவரும், 4-க்குடையவருங் கூடி 8-ம் இடத்தில் நிற்கவும், 8-க்குடையவர் 8-ம் இடத்திற்கு 8-ம் இடமாகிய 3-ம் இடத்தில் நிற்கவும், சூரியன் நீச்சம் பெற்று கேந்திரமேறவும், அவரைச் சுபர் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் பாக்கியனென்னும் 9-க்குடையவர் திசையில், மேற்படி புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | ல | | செ |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | குரு சந் | சூரி | புத |

## 148

(இ-ள்.) தருமனுகிய 9-க்குடையவர் 9-ல் நிற்கவும் அவரைச் சந்திரனுக்கு 5-க்குடையவர் பார்க்கவும், 2-ம்இடத்தில் 12-க்குடையவர் நிற்கவும், 2-க்குடைய வரும் கர்மனுகிய 10-க்குடையவரும் கூடி 9-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் 12-க்குடையவர் திசையில், 2-க்குடையவர் நின்ற ராசியாதிபதி புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | செ | | |
| | இராசிச் சக்கரம் | | ச-சு குரு |
| | | | |
| | சுக் | ல | |

## 149

(இ-ள்.) அட்டமமாகிய 8-ம் இடத்தில் ராகு நிற்கவும், பாக்கியனுகிய 9-க்குடையவர் சிரமென்னும் லக்கினத்தில் நிற்கவும், பஞ்சமனுகிய 5-க்குடையவருடன் சூரியன் கூடி நிதி யென்னும் 9 ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் ராகுதிசையில், பஞ்சமனென்னும் 5-க்குடையவர் புத்தியில் புத்திரனேடு பரதேசியாகி மாரக மாவனும். பிதுர், சகோதரத்தால் இவர்களுக்குக் கருமம் நடக்குமாம்.

| | | | |
|---|---|---|---|
| ராகு | குரு சூ | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | ல செ |
| | | | கே |

## 150

(இ ள்.) சூரியன் நீசம் பெற்று 9-ம் இடத்தில் நிற்கவும், 9-க்குடையவரும் சனியுமாகிய இருவரும் சுபருடன் கூடி நிற்கவும், சூரியனுக்கு 7-ல் செவ்வாய் 2-க்குடையவரோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர் அற்பாயுளுடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | செ குரு | | |
| ல | இராசிச் | சக்கரம் | |
| | | | |
| | | சூ | சு-பு சனி |

மேற்கூறிய கிரகங்கள் வலுப்பெற்றிருக்கில் மாரகஞ் செய்யாராம்.

## 151

(இ-ள்.) குரு அட்டமமாகிய 8-ல் நிற்கவும், சனியும் 9-க்குடையவருஞ் செவ்வாய் ஆகிய மூவர்களும் கூடி 12-ம் இடத்தில் நிற்கவும், ராகு 9-ம் இடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகரின் பிதுர் ராகு விருந்த ராசியாதிபதி திசையிலாகினும் செவ்வாய் திசையிலாகினும் ராகு புசிப்பில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | செ சனி | ல | |
| | இராசிச் | சக்கரம் | கே |
| ராகு | | | |
| குரு | | | |

## 152

(இ ள்.) சுக்கிரனும், குருவும் பாபரோடு கூடி மூன்றிலும் பத்திலும் அஸ்தங்க மடைந்து நிற்கவும், 9 க்குடையவர் நீசமடையவும், அவருக்கு 7-ல் செவ்வாய் நிற்கவும் ராகுவோடு சூரியன் கூடி 9-ல் நிற்கப்பெற்ற ஜாதகரின் பிதுர் 9-க்குடையவர், திசையில் ராகு புசிப்பில் சர்ப்பந்தீண்டி மாரகமாவனும். ஜாதகனும் ரொணமுடையவனுவனும்

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசிச் | சக்கரம் | ராகு |
| குரு கே | | | சூரி சுக் சனி |
| | ல சந் | | |

## 153

(இ-ள்.) குருவுக்கு 7-ஆமிடத்தில் செவ்வாய் நிற்கவும், நிதி பூபனுகிய 9-க்குடையவர் வியமென்னும் 12-ம் இடத்தில் நிற்கவும், அவரை அந்தகனுகிய சனி பார்க்கவும், பஞ்சமாதி யென்னும் 5-க்குடையவர் நீச அஸ்தங்க மடைந்து நிற்கப்பெற்ற ஜாதகர் கர்ப்பத்தி லிருக்குங் காலேயில், பிதுர் இழிவான மாரக மடைவனும்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | |
| குரு | இராசிச் | சக்கரம் | |
| ல | | | செ |
| பு | | | சுக் |

## 154

(இ-ள்.) சூரியனுக்கு முன் சனியும் பின் செவ்வாயுமாக நிற்கவும், சூரியனுக்கு 8-ல் சுக்கிரனிற்கவும், சுக்கிரனோடு கேது நிற்கவும், அதற்கு 7-ல் சனி பகைபெற்று நிற்கவும் பெற்ற ஜாதகர், கர்ப்பத்திலிருக்கும்போதே பிதுர் மாரகமாவனும்.

| | | | |
|---|---|---|---|
| சனி ரா | | | |
| சூ | இராசிச் சக்கரம் | | |
| செ | | | |
| | | | சு கே |

## 155

(இ-ள்.) சனி செவ்வாய் ஆகிய இருவருங் கூடி 9-ம் இடத்தில் நிற்கவும், 5-க்குடையவர் நீசமடையவம், அவரைப் பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகன் பிறந்த 10-ம் நாள் பிதுா மாரகமாகி, இச் சாதகன் பந்து ஜனங்களால் இரட்சிக்கப்படுவனும்.

| | | | |
|---|---|---|---|
| | ல ரா | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| செ சனி | | சூரி கே | |

## 156

(இ-ள்.) பாபர்கள் நால்வர் கூடி 9-ம் இடத்தில் நிற்கவும், அவர்களை 8-க்குடையவர் பார்க்கவும், சூரியன் பகை பெற்று நிற்கவும், அவரை 12-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கர்ப்பத்திலிருக்கும்போதே பிதுர் மாரகமாம். பின்பு ஜாதகன் மாமன் வர்க்கமடைந்து தந்தைக்கு மேலான யோகமுடையனுவனும்.

| | | | |
|---|---|---|---|
| | சு-செ ச-ரா | | |
| சூரி | இராசிச் சக்கரம் | | |
| | | | ல சந் |
| குரு | | கே | |

## 157

(இ-ள்.) 4-க்குடையவர் 9-ம் இடத்தில் நிற்கவும், 9-க்குடையவர் 4-ல் நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும், சந்திரன் நீசமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகன், கர்ப்பத்தி லிருக்கும்போதே பிதுர் மாரகமாம்; பிறகு இவன் மாதா அன்னிய புருஷனையடைந்து, அவனோடு பரதேசியாய்ப் போவாளாம்.

| | | | |
|---|---|---|---|
| | புத | | |
| | இராசிச் சக்கரம் | | |
| ல | | | |
| | சந் | சனி | செ |

## 158

(இ-ள்.) சனியும், சூரியனும், 9-க்குடையவரும் ஆகிய மூவருங் கூடி 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதா சுக்கிரன், சனி, சூரியன் ஆகிய மூவர்கள் திசை புத்தியில் பிதுர் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | சந் |
| | இராசிச் | | சனி சு—சூ |
| | சக்கரம் | | |
| | | ல | |

பிறகு மாதுரும் நெறி தவறி கர்மச் செயலுக் குரியவளா வாளாம்.

## 159

(இ-ள்.) 9-ம் இடத்தைச் சனியும் ராகுவும் பார்க்கவும், சூரியன் 8-ம் இடத்தில் நிற்கவும், 9-க்குடையவர் 6-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர், சந்திர திசை சுயபுத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி ரா | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | செ |
| ச | | சூரி | |

## 160

(இ-ள்.) 9-க்குடையவர் 6-ல் நிற்கவும், 6-க்குடையவர் 5-ல் நிற்கவும், அவரை பாபர்கள் நோக்கவும், பாவக் கிரகங்கள் தந்தையாகிய சூரியனோடு கூடி 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகரின் பிதுர், 6 க்குடையவர் திசையில் சந்திரனுக்கு 8-க்குடையவர் புத்தியில் மாரகமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | கே சந் |
| ல | இராசிச் | | சுக் |
| | சக்கரம் | | |
| செ ரா | | சூ சனி | |

## 161-162

(இ-ள்.) 4-க்குடையவரும், 6-க்குடையவருங் கூடி 9-ம் இடத்தில் நிற்கவும், 9-க் குடையவர் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகரின் மாதா் மிகுந்த பதிவிரதை யெனவும் கூறுவர்.

| | | | |
|---|---|---|---|
| | | | சந் |
| | இராசிச் | | சனி செ |
| | சக்கரம் | | |
| | ல | | |

J.P. Muthu Krishnan.



[2] சுக்கிரன் பலஹீனப்பட்டுச் சனியும், சந்திரனும் வலுப் பெற்று நிற்கில், பல பெண்களை மோகிப்பனும். சனி கேந்திர மடையவும், குரு 5-ல் நிற்கவும், சந்திரன் 11-ம் இடத்தில் நிற்க வும், புதன் கேந்திர மடையப் பெற்ற ஜாதகருக்கு ஏகதார மென் றும், அப் பெண்ணை மணஞ் செய்வதற்கு முந்தி மோகித் திருப்பானென்றும் கூறுக.

## 340

(இ-ள்.) சர ராசியில் 7-க்குடையவரிருந்தால் 2-தார மென வும், திர ராசியிலிருந்தால் ஏகதார மெனவும், உபய ராசியி லிருந் தால் தாரமிருக்கத் தாரம் நடத்துவரென்றும் கூறப்பட்டது. 7-ம் இடத்தைப் பார்த்தவர் தீயராகில் தாரமிறந்து தாரம் வருமென் றும், மேற்கூறிய ஸ்தானத்தை நல்லோர் பார்க்கின் தார மிருக் கத் தாரம் வருமெனவுங் கொள்க.

[2] 7-க்குடையவர், 2-க்குடையவர், சுக்கிரன் ஆகிய மூவர் கள் கூடிப் பாபர் சேர்க்கைப்பட்டு 6-8-12-ல் நிற்கவுர், அவர் களோடு சேர்ந்திருப்பவர்கள் தொகை யெத்தனையோ அத்தனை களத்திரஞ் செய்வா ரென்றும், மேற்கூறிய கிரகத்தில் நல்லவர் களாரோ அவர்கள் இனிய களத்திரமென்றும் பாபர்கள் எல்லாம் அன்னிய ஸ்திரீ சேர்க்கையென்றுங் கூறியது.

## 341

SP14

(இ-ள்.) 7-2-க்குடையவர்கள் சுக் கிரன் ஆகிய மூவரும் பாபருடன் கூடி 6-8-12-ல் நிற்கவும், குரு 7-ம் இடத்தைப் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் ஒரு பெண்ணையு மணஞ் செய்யாமல், கனவி லும் நினைக்காதவனாய்த் தனிய னுவனும்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | கே |
| | இராசிச் சக்கரம் | | வ |
| | | | |
| செ-ச சூ சந் சு-ரா | புத | | |

[2] 7-ம் இடத்திலும், சந்திரனுக்கு 7-ம் இடத்திலும் சுபர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகர்களுக்குச் சுப களத்திரம் உண்டாகுமே தவிர, மற்றவர்களுக்கு மாறி நடக்குமாம்

| | | | |
|---|---|---|---|
| குரு | | | பு |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சந் | | | ல |

## 342

(இ-ள்.) 7-க்குடையவர் 9-ல் நிற்கவும், அவரைக் குருவுக்குங் கேந்திரமாகிய நட்பு ராசியில் நிற்கவும், சனி 4-ம் இடத்தில் ஆட்சிபெற்று நிற்கவும், சுக்கிரன் 10-ம் இடத்தில் நிற்கவும், குருவும் சந்திரனும் 6-ல் நிற்கவும், சூரியனும் 9-க்குடையவரும் கூடி ராகு சம்பந்தப்பட்டு நிற்கவும் பெற்ற ஜாதகர் உத்தமப் பெண்ணை லக்கினதிபதி திசையில் 4-க்குடையவர் புசிப்பில் மங்களஞ் செய்து உண்மை மைந்தரைப் பெற்று 17 வூ சுகித்துச் சந்திர திசை, புதன் புத்தியில் களத்திரமிழந்து, சுக்கிரன் புசிப்பில் மறு களத்திரம் செய்து அதனுல் சுகம் பெறுவராம்.

| | | | |
|---|---|---|---|
| குரு சந் | சூ-பு ராகு | | செ |
| | இராசிச் சக்கரம் | | சுக் |
| சனி | | | |
| | கே | ல | |

## 343

(இ-ள்.) தாரகாரகனுகிய குருவும், தாரகனுகிய சந்திரனும் தனித்தனியாக 6-8-12-ல் நீசமடைந்து நிற்கப்பெற்ற ஜாதகருக்குக் களத்திரமில்லை யென்றுங் கூறியது.

[2] சூரியனும் குருவும் கூடி 7-ம் இடத்தையாகினும், லக்கினத்தையாகினும் பார்க்கப் பெற்ற ஜாதகருக்குக் களத்திரம் வந்தவுடன் மாரக மாவளாம்.

[3] சுக்கிரனிருந்த ராசியாதிபதி 8-6-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய விதிப்படி களத்திரம் அரிஷ்டப் படுவதுமன்றிச் சோர நாயகியும் அரிஷ்டப் படுவளாம்.

[4] சுக்கிரன், செவ்வாய், குரு, சந்திரன், சூரியன் ஆகிய ஐவருங் கூடி ஒரு வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகர் கால முள்ளளவும் மன்மதன் கணையால் வருந்தி, புத்தியீனர்களும் இவனை மதிக்காமல் காமநோயால் வருந்துவனும்.

இராசிச சக்கரச்
ல
சூ செ
கு சுச

344

(இ-ள்.) சந்திரன், சூரியன், புதன், சனி, சுக்கிரன் ஆகிய ஐவருங்கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மரணமுள்ளளவும் விவாகமில்லை யென்று கூறவும்.

இராசிச் சக்கரம்
ச-சூ
புச சு
ல

[2] மேற்கூறிய ஜாதகருக்குக் குரு ஏழிலிருந்தாலும் பார்த்தாலும் அவ்விதப்பலனும். இன்னும் 7-க்குடையவர் நட்போடு கூடி லக்கினத்தை நோக்கினுலும், மேற்கூறிய வண்ணமாக விருந்தும் தூர தேசத்தில் வாழ்வாராம்.

[3] 6-2-7-க்குடையவர்களாகிய மூவரும் பாபர்களோடு கூடி லக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு களத்திரம் உண்மை யில்லாது அன்னிய புருஷனிடத்தில் திருட்டு நாய்போல் சுகிப்பாளாம்.

கே
இராசிச் சக்கரம்
ல-செ-ச
[illegible]

## 345

(இ-ள்-) சுக்கிரனும் 7-6—க்குடைய வராகிய மூவர்களுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகனை நம்பி ஒரு பெண்ணை விவாகஞ் செய்வது பாவமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ல | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | | சு-சந் கு |

[2] 2-3-க்குடையவர்களாகிய இருவரும் 8-ல் நிற்கவும், 6-க்குடையவர் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் கட்டுக் கடங்காத மேல்பட்ட ரோகத்தால் தன் மனைவியைப் பார்த்துத் துயரப்படுவானும்.

| | | | |
|---|---|---|---|
| | | செ | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| கு சந் | | | |
| | | | |

[2] லக்கினம் தனுசு மீனமா யிருக்கப் புதனும் அவரோடு சில பாபர்களுங் கூடிச் சந்திரர் அஸ்தமன மடையவும், சுப ஸ்தானங்களில் பகைவர்கள் கூடி அங்கிச மடையவும், நீசர்கள் 7-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குச் சத்தியமில்லாத கபடியாயும் அல்லது குலத்துக்கு நிந்தையுடைய களத்திரமாயும் வாய்ப்பாளாம்.

## 346

(இ-ள்.) குரு 7-க்குடையவராகிச் சூரியனோடு கூடி நீச ராசிக்குள் பாபர்களால் நோக்கமடைந்து செவ்வாய் சனியினுடைய அங்கிஷமேறி நிற்கப் பெற்ற ஜாதகருடைய மனைவி பார்ப்பவர்களுக்குச் சற்குண முடையவள்போ லிருந்து மெள்ள அன்னிய புருஷனைச் சேருஞ் சமர்த்தியாம்.

[2] சுக்கிரன் 7-க்குடையவராகிப் பாபர்களோடு கூடிப் பாபர்களேக்கமடைந்து நவாங்கிசமேறி நிற்கப் பெற்ற ஜாதகருக்கு வந்த மனைவி இவன் மனந் துடிக்கும்படி அன்னிய புருஷனைப் புணர்ந்து விடியுமுன் தன் மனையில்வந் துறங்குவளாம்.

347

(இ—ள்.) 7-க்குடையவர் பாபருடன் கூடி 2-ம் இடத்தில் நிற்கவும், அவரைச் செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருடைய மனைவி அன்னிய புருஷனைச் சேர்ந்து புத்திரனைப் பெறுவாளாம்.

சந் சூ
சனி
ல
இராசிச்
சக்கரம்
செ

[2] 7-க்குடையவர் லக்கினுதிபதியோடு கூடி 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு விவாகமே இல்லையென்றிருக்கினும் குரு திசை வரில் விவாக முண்டாம்.

சுக்
செ
இராசிச்
சக்கரம்
ல

[3] 7-ம் இடத்தில் செவ்வாய் சுக்கிரன் கூடி நிற்கப் பெற்ற ஜாதகன் அமங்கலையைப் புணர்வானும்.

ல
இராசிச்
சக்கரம்
செ
சுக்

[4] 12-ம் இடத்தில் 8 க்குடையவரும், சந்திரனும், செவ்வாய் ஆகிய மூவரும் நிற்கப் பெற்ற ஜாதகன் தமையன் மனைவியை இச்சிப்பானும்.

செ சு
சந்
லக்
இராசிச்
சக்கரம்

[5] 7-ம் இடத்தி லிருந்தவர்களும் அதற்குடையவரும் பாபர்களா யிருக்கில், இச் சாதகருடைய மனைவி ரோகமுடையவளாம். மேற்கூறிய பாபர்கள் 3-ம் இடத்திற் கூடி நிற்க அக் கூட்டத்தில் ஒரு சுபக்கிரகமேனு மில்லாவிடில் ஜாதகன் குடும்பமு மில்லையாம்.

## அவ களத்திரம்

### 348

(இ-ள்.) 8-ம் இடத்தில் 12-க்குடையவர் நிற்கவும் அவரைப் பாபர்கள் பார்க்கவும், 7-ம் இடத்தில் 6-க்குடையவர் நிற்கவும், அவரையும் பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மடையனுகி தன் குல முறைமையைவிட்டு மேலான குலத்து மங்கையரைப் புணர அச்சமில்லாதவனுவான்.

| | | | |
|---|---|---|---|
| | | ராகு | சுக் |
| | இராசிச் சக்கரம் | | செ |
| | | | |
| ல | கே | | சனி |

[2] 2-க்குடையவர் பலங் குறைந்து 7-க் குடையவரோடு கூடி 8-ல் நிற்கவும், 8-க்குடையவர் 7-ல் நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மேற்கூறிய வண்ண முடையவனேயாம்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | புத | சுக் குரு |
| செ | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | ல | | |

### 349

(இ-ள்.) 7-ம் இடத்தில் 2-7-க் குடையவர்கள் நிற்கவும், சுக்கிரனும், 5-க்குடையவரும் 12-ல் நிற்கப் பெற்ற ஜாதகன் கழுதைக்கொப்பாய் முறை தவறி அத்தைமகள் பெற்றமகளைவிகர்ப்பமில்லாது புணர்வானும்.

| | | | |
|---|---|---|---|
| | | சுக் | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| குரு சந் | | | |

[2] குருவும், 7-க்குடையவரும் பகையோடு 5-ம் இடத்தில் நிற்கவும், 5-க் குடையவர் ராகுவோடு கூடி 8-ம் இடத்தில் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மேற்கூறிய வண்ணமுடையவனே யாம்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி ராகு | |
| குரு செ | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | சூரி கே | ல | |

## 350

(இ-ள்.) 7-க்குடையவர் பாபரோடு கூடி நிற்கவும், ராகு 7-ம் இடத்தில்வலுப் பெற்று நிற்கவும், ராகுவைக் கேந்திரத்தி னின்று பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாத கன் களத்திரத்தை மனம் நோகச்செய்து தெருவில் அலேயவிட்டு இவன் பள்ளர், பறையர், விருத்தை, நொண்டி குருடு இவர்களேப் புணர்ந்து வருந்தும் பதடி யாய் நிற்பானும்.

| | | | |
|---|---|---|---|
| | | | ராகு |
| | இராசிச் சக்கரம் | | புத சனி |
| | | | |
| லசெ கே | | | |

## 351

(இ-ள்.) சனி 7-க்குடையவராயிருந்து 6-8-12-ல் நிற்கப் பெற்ற ஜாதகன் வேசை மனேயில் சார்வனும்.

[2] 2-க்குடையவர் சனி, இராகு ஆகிய மூவரும் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் முன் கூறியவண்ண முடையவனே யாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | ச-ரா பு |
| | | | லக் |
| | | | |

[3] ராகு, சுக்கிரன் 7-க்குடையவர் ஆகிய மூவரும் 7-ல் நிற்கவும், அவர் களேப் பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாத கன் ஆவி நொந்து தகப்பன் தேடிய பொருளே யெல்லாம் வேசைக்குக் கொடுத்துவிட்டு இவன் பதடியாய் நிற் பானும்.

| | | | |
|---|---|---|---|
| சனி | | | ல செ |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சு-கு ராகு | | | |

## 352

(இ-ள்.) லக்கினம் குரு வீடாயிருக்க, அக் குரு சில பாபிகளுடன் கூடி நீசபங்கம் பகையடைய அல்லது சந்திராம்சத்தில் நிற்கவும், 7-க்குடையவர் சனி வீட்டில் நிற்கவும், அவரைச் சனிபார்க்கவும், 7-க்கு 9-க்குடையவர் ஏழிலேனும் சனியிடத்திலேனும் நிற்கப்பெற்ற ஜாதகன் மனையாளைக் கொடுத்து ஜீவனஞ் செய்யுந் தரித்திரனும்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| 4 | இராசிச் சக்கரம் | | |
| கு-சு செ | | | |
| சனி சுக் | | | |

## 353

(இ-ள்.) லக்கினத்தில் நீசர்கள் நிற்கவும், 7-ல் குருவும், ராகுவும் நிற்கவும், அல்லது 7-ம் இடத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகரின் மனைவியை ஆசைப்பட்டு வருந் துர்ச்சனர்களுக்கு நன்கு முறை பாராட்டிக் கொடுத்து இவனும் வேசி மனைகள் தோறுந் திரிந்து அலைவானும்.

| | | | |
|---|---|---|---|
| | | குரு ராகு | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | ல-கு கே | |

## 354

(இ-ள்.) சந்திரன் 12-ல் ஆகினும், ஏழிலாகினும் பாபர் அம்சத்திலாகிலும் நிற்கவும், சுக்கிரன் கொடிய பாபிகளோடு கூடி 8-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரின் மனைவி தன் கணவனுடைய பகைவரோடு கூடி புணர்வதுமன்றி பகைவன் சொற்கேட்டு புருடனுடைய உயிரைத் துர்மரணப்படுத்தி விட்டு நரக மடைவளாம்.

| | | | |
|---|---|---|---|
| | செ ச சனி | | |
| | இராசிச் சக்கரம் | | சந் |
| | | | |
| | | | |

## 355

(இ-ள்.) சந்திரன், சுக்கிரன், குரு, புதன் ஆகிய நால்வரும் 7-ம் இடத்திற்குத் திரிகோண மடையவும், அவர்களை 8-க்குடையவர் பார்க்கவும், அல்லது சேர்ந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மனைவி பலவிதமாகச் சேருவளாம்.

| | | | |
|---|---|---|---|
| | சந்-பு சு-கு | | ல |
| | இராசிச் சக்கரம் | | சனி |
| | | | |
| | | | |

[2] 8-ம் இடத்திற் சுக்கிரனிற்கவும், 7-க்குடையவர் 4-ல் நிற்கவும், பாபர்கள் 9-ல் நிற்கவும், பெற்ற ஜாதகன் வேசியர் கள் சுகத்தில் மயங்கி யிருப்பானும்.

| | | | |
|---|---|---|---|
| செ ராகு | | | |
| சுக் | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| | | சனி | கே |

[3] 2-ம் இடத்திலும் 7-ம் இடத்தி லும் பாபர்கள் நிற்கவும், புதனும் செவ்வா யும் வலி குறைந்து நிற்கவும், 8-க்குடைய வரோடு சனி கூடி 5-ம் இடத்தைப் பார்க் கவும் பெற்ற ஜாதகனுக்கு வேசியைப் போல் மனைவி வருவாளாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி குரு |
| ராகு | இராசிச் சக்கரம் | | செ புத |
| | | | கே ல |
| | | | சூ |

[4] சந்திரன், சுக்கிரன், சனி, செவ் வாய் ஆகிய நால்வர்களும் 7-ல் நிற்கவும், இவர்களைப் பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு விவாக மில்லையாம். அப்படி விவாகம் நடக்கில் புத்திர ரில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல |
| ராகு | இராசிச் சக்கரம் | | |
| | | | கே |
| சந்-ச செ சு | | | |

356

(இ-ள்.) சனிக்கு 7-ல் சுக்கிரன் நீச மடையவும், செவ்வாயும் 4-க்குடைய வரும் கூடி புதனுக்கு 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் மூன்று பெண் களை மணஞ் செய்தும் அந்தியத்தில் ஒரு மனைவியும் இல்லாது மரண மாவர்களாம்.

| | | | |
|---|---|---|---|
| சனி | லக் | | |
| செ சந் | இராசிச் சக்கரம் | | |
| | | | பு |
| | | | சுக் |

| | | | |
|---|---|---|---|
| கே | | | ல சனி |
| | இராசிச் | சக்கரம் | |
| குரு | | | சந் |
| சு | பு | | செ ராகு |

[2] 7-க்குடையவர் 6-8-12-ல் நிற்கவும், 7-ம் இடத்திற் பாபர் நிற்கவும், சனி 2-க் குடையவரைப் பார்க்கவும், பாபர்கள் சுகஸ்தானங்களில் நிற்கவும் பெற்ற ஜாதகன் மதுபான முதலிய கொடியவைகளைப் புசித்து காட்டினிடத்திலும் ஆறுகளிலும் பர ஸ்திரீகளை மருவி தன் குடும்பமழிந்து உழல்கின்ற மடையரிற் கடையனுவானும்.

## 357

| | | | |
|---|---|---|---|
| ல | | செ ரா-பு | சனி சுக் |
| | இராசிச் | சக்கரம் | |
| குரு | | | |
| | | | |

(இ-ள்.) குரு நீச மூட மடையவும், 3-ம் இடத்தில் ராகு, செவ்வாய் 7-க் குடையவராகிய மூவரும் நிற்கவும், 4-ம் இடத்தில் சனி சுக்கிர னிற்கப் பெற்ற ஜாதகருக்கு இரண்டு தார மிருந்தும் அந்தியத்தில் மனைவி இல்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | ல | குரு கே |
| | இராசிச் | சக்கரம் | சுக் செ |
| | | | |
| சந் ராகு | | | |

[2] லக்கினுதிபதியும் 7-க்குடையவருங் கூடி சனிக்கு 4-ம் இடத்தில் நிற்கவும், சந்திரனுக்கு 7-ல் குரு நிற்கவும், அக் குருவை பாபர்கள் பார்க்கவும் அல்லது கூடி நிற்கவும் பெற்ற ஜாதகனுக்கு இரண்டு தாரமிருந்தும் சிலநாள் சுகமனுபவித்து துன்ப சமயத்தில் சுகந் தராமல் தொலைந்து போவார்களாம்.

## 358

| | | | |
|---|---|---|---|
| புத | | சு-செ ராகு | |
| | இராசிச் | சக்கரம் | |
| | | | |
| | | ல | |

(இ-ள்.) 9-க்குடையவர் நீசமும் பகையும் பெற்று, 6-8-12-ல் நிற்கவும், சுக்கிரன், செவ்வாய், ராகு ஆகிய மூவரும் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் 9-பெண்களை மணந்தாலும் அந்தியத்தில் மனைவி யில்லையாம்.

[2] 2-க்குடையவர் பகை ராசியில் நிற்கவும், 7-க்குடையவர் வலி குறைந்து சனி சுக்கிரனிருந்த மனையில் நிற்கவும், 2-ம் இடத்தில் சூரியன், இராகு நிற்கவும் பெற்ற ஜாதகன் ஒன்றின்பின் ஒன்ருய் ஐந்து பெண்களை விவாகஞ் செய்திருந்தும் அந்தியகாலத்தில் அருகிருந்து உதவி செய்யார்களாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | சூரி ராகு |
| | இராசிச் சக்கரச் | | சு செ சனி |
| | | | புத |
| கே | | | |

## 359

(இ-ள்.) சனியும், செவ்வாயுங் கூடி 7-ல் நிற்கவும், சூரியனும் சுக்கிரனுங் கூடி நிற்கவும், 7-க்குடையவர் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் விவாக விருப்பமில்லாதவனும், சற்சனர்களுடைய வெறுப்புள்ளவனுய் இருந்து விதவை ஸ்திரீ மாய்கைக்குள் அகப்படுவானும்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| பு | இராசிச் சக்கரம் | | |
| சூ சுக் | | | |
| | | | செ சனி |

[2] குருவும், சந்திரனும் 7-ல் நிற்கவும், அவர்களைத் தீயர்கள் பார்க்கவும், சனி 2-ம் இடத்தை பலமாகப் பார்க்கப் பெற்ற ஜாதகன் பெண் பலிகொள்ளும் பூதமாயிருந்து 7-மனைவியை விவாகஞ் செய்தும் அந்தியுத்தில் மனைவி யில்லாது புத்திரனுற் கருமங் கொள்பவனும்.

| | | | |
|---|---|---|---|
| குரு சந் | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| சனி | | | |
| செ | | | ல சூ |

## 360

(இ-ள்.) சுக்கிரன் பலஹீனமடையவும், குரு இலக்கினத்தில் நிற்கவும் 9-ம் இடத்தில் சனி நிற்கவும், அவரோடு இராகு கூடவும், சுக ஸ்தானங்களில் சுபர்கள் நிற்கவும், சூரியனுக்கு 7-ல் செவ்வாய் நிற்கவும் பெற்ற ஜாதகர் நூறு பெண்களை விவாகஞ் செய்தும் அந்தியத்தில் ஒரு மனைவியுமில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| ல குரு | | கே | பு சந் |
| | இராசிச் சக்கரம் | | சூ |
| செ | | | |
| | | சனி | சுக் |

## 361

(இ-ள்.) சுக்கிரன் வலுப்பெற்று நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும், 7-க்குடையவரும், சூரியனும், குருவுங் கூடி நின்ற இராசிக்கு 7-க்குடையவர் 12-ம் இடத்தில் நிற்கவும், அவரைப் பாபர்கள் நட்போடு பார்க்கவும் பெற்ற ஜாதகர் பல பெண்களை விவாகஞ் செய்தும், அந்தியத்தில் தாலியறுக்க ஒருவருமில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| சுக் | | சந் | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| சூ குரு | | | |
| செ | சனி | | |

[2] இராகு, சுக்கிரன் 4-க்குடையவர் ஆகிய மூவருங் கூடி 3-ம் இடத்தில் நிற்கவும், அல்லது மேற்படி இராசியைப் பார்க்கவும், 2 க்குடையவர் 6-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் மனைவியைத் தனியாக விட்டு வருந்தும்படி செய்து அன்னிய ஸ்திரீ மாய்கையில் அகப்பட்டுச் சரீரத்தை படித்துக்கொள்ள எண்ணுவனும்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சு ரா புத | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | செ |
| | | | |

## 362

(இ-ள்.) குரு 7-ல் நிற்கவும், 7-க்குடையவர் 8-ல் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் பார்க்கவும், அல்லது கூடவும் சந்திரன், புதன், இலக்கினுதிபதி ஆகிய மூவர்களோடு சுபர்களுங்கூடி 12-ல் நிற்க நிற்கவும் பெற்ற ஜாதகன் கொடிய வஞ்சகனுகி மனையாளை மயங்கும்படி செய்துவிட்டுத் தான் வேசை மனைதோறுந் திரிந்து தன்னுயிர்க் கொப்பாகிய மனைவியையு மிழந்து நரகில் வாடுவனும்.

| | | | |
|---|---|---|---|
| | சந் பு | ல கு | |
| | இராசிச் சக்கரம் | | கே |
| ராகு | | | |
| செ சனி | குரு | | |

## 363

(இ-ள்.) சுக்கிரனும் 7-க்குடையவருங் கூடி செவ்வாய் வீட்டில் நிற்கவும், அச் செவ்வாய் 2-ம் இடத்தில் நிற்கவும், சனியும், சூரியனும் பலக் குறைவடைந்து ஒருவரை ஒருவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மன்மத மாய்கையில் அல்லும் பகலும் விகற்பமில்லாமல் வரம்பு கடந்தவனுயிருந்து மரணகாலத்தில் தாரமில்லாது அலேவானும்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | லக் |
| | இராசிச் சக்கரம் | | செ |
| | | | |
| | சுக் | சூரி | |

[2] 7-ல் இராகு நிற்கவும், 10-ல் புத னிற்கவும், அவரை 7-க்குடையவர் பார்க்கவும், அல்லது கூடி யிருக்கவும் பெற்ற ஜாதகர் விதவையைக் கோயிலில் புணர்பவரென்றும், பூமிக்குப் பாரமாய்ப் பிறந்ததுமன்றிப் பிரயோஜனமற்ற பத ராகுவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | புத | |
| ராகு | இராசிச் சக்கரம் | | |
| | | | ல கே |
| | சனி | | |

## 364

(இ-ள்.) சந்திரன் 6-ல் நிற்கவும், சுககாரகனாகிய 7-க்குடையவர் பேடாகிய அலிக்கிரகத்தில் ஒன்றுயிருக்கவும், சுக்கிரனிருந்த ராசியாதிபதியையும், பத்துக்குடையவரையும் சூரியன் ஆண் ராசியில் இருந்து பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு ஆண் ரூபமுள்ள மனைவியாய்க் கிடைப்பாளாம்.

| | | | |
|---|---|---|---|
| கே | சுக் சூ | | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| சந் | | செ | ரா |

[2] சந்திரன் 7-ல் நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும், 7-க்குடையவர் நீசமடையவும், 2-க்குடையவரும், ராகுவுங் கூடி நிற்கவும், அல்லது ராகு பார்க்கவும் பெற்ற ஜாதகன் மனைவி விபசாரியாம்.

| | | | |
|---|---|---|---|
| பு-ல சனி | | | செ கே |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ரா | | | சந் |

[3] சுதன் வீடாகிய 5-ம் இடத்தை 2-க்குடையுவர் பார்க்கவும், வெண்டாதுவென்னும் சுக்கிரன் 7-ம் இடத்தில் நிற்கவும், 7-க்குடையவர் சனி, ராகுவோடு கூடி பலமாக நிற்கவும்பெற்ற ஜாதகருக்கு மனைவிமுன் விதிப்படி யுடையவளேயாம்.

| | | | |
|---|---|---|---|
| | சந் கே | | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சுக் | | சனி ரா | |

[4] 8-க்குடையவரும் 5-க்குடைய வருங்கூடி 7-ல் நிற்கவும், அவர்களோடு ராகு, சனி நிற்கவும் பெற்ற ஜாதகன் மனைவி மிகுந்த காமியா யிருந்தும் மாத விடாய் இல்லாதவளாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | சனி செ ரா-கு | |

## 365

(இ-ள்.) 10-க்குடையவரும் ராகு வும், 7-க்குடையவருங் கூடி 6-ல் நிற்க வும், செவ்வாய் சனியோடு கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகன் இறந்த பிறகும் இவன் மனையாள் விப சாரியாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| புத கு-ரா | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | சனி செ | ல |

[2] சுக்கிரன் எந்த ராசியில் நிற்கின் றாரோ அந்த ராசியாதிபதியும் 2-க் குடையவரும் கூடி நிற்கவும் அவர்களைச் சனி பார்க்கவும், 7-க்குடையவருஞ் செவ் வாயுங் கூடி பலமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகனுடைய மனையாள் மேற் கூறியவண்ண முடையவளாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல சுக் |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | சந் புத |
| | சனி | | குரு செ |

[3] 4-ம் இடத்திற் சனி நிற்கவும், 7-க்குடையவர் ஆட்சி பெற்று நிற்கவும், குரு நட்படைந்து நிற்கவும், அவரை 8-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாத கருடைய மனையாள் சண்டாளியாய்ச் சதா காலமுங் காமமொழியாதவளாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| குரு | இராசிச் சக்கரம் | | சனி |
| | | | செ |
| | | சுக் | |

ஆனல் இதுவரையில் அவகளத்திர சங்கையை யொருவாறு மொழிந்தனம். இதில் 7-க்குடையவர் இருந்த செயலறிந்து வ்லி மறிந்தோதல் தவறுபடாதென்றுங் கூறியது.

## களத்திர மாரகம்

### 366

இதுவரையில் களத்திரத்தின் குணங்களை யுரைத்தனம். இனி களத்திர மாரகங்களை ஒருவாறு கூறுவோமாக. 7-க்கு அட்டமாதிபதியும், அதிலிருந்தவர்களும், 7-க்கு 6-ல் இருந்தவர்களும், உடையவரும், 7-ல் இருந்தவர்களும், ஏழைப்பார்த்தவர்களும், 7-க்குடையவரோடு சேர்ந்தவர்களும், ஸ்தானாதிபதிகள் திசை புத்திகளிலும், 7-க்குடையவர் திசையில் இரண்டு மாரகர் புசிப்பிலும், களத்திர மாரகமென்றும், 12-க்குடையவர் திசையில் 5-ல் இருந்தவர் புசிப்பிற் களத்திர மாரகமாம். இன்னும் சிலவற்றைக் கூறுவோமாக.

### 367

(இ-ள்.) சுக்கிரனுக்கு 5-ல் இருந்தவர் திசையில் சுக்கிரனுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும் சந்திரனுக்கு 7-க்குடையவர் 7-ல் இருந்தவர் திசையிலும், சுக்கிரனுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும், 2-க்குடையவர் திசையிலும், லக்கினாதிபதி புசிப்பிலும், 12-க்குடையவர் திசையிலும், சுக்கிரனுக்கு 8-ல் இருந்தவர் புசிப்பிலும், 5-க்குடையவர் திசையிலும், சுக்கிரனுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும், 8-க்குடையவர் திசையிலும், குருவுக்கு 8-க்குடையவர் புசிப்பிலும், ஜாதகர்களுடைய களத்திர மாரகதிசை புத்தியென்றும் மூதோர் கூறுவர். ஆனால் உத்தம களத்திரமென்றும், மத்திம களத்திர மென்றும் அறிந்தெடுப்பதே நூல் முறையாம்.

### 368

(இ-ள்.) 7-க்குடையவர் சூரியனோடு கூடி 3-ம் இடத்தில் நிற்கவும், 2-க்குடையவர் சந்திரனோடு கூடி 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் 10-ல் நிற்கவும்சுக்கிரன் ராகுவோடு கூடி 4-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 3-மனைவியர்களுண்டு. அதில் மூத்தாள் லாபமில்லாதவளென்றும், இடையில் வந்தவள் சிலநாள்

| | | | |
|---|---|---|---|
| சுக் ராகு | | | |
| சூ புத | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல | சனி சந் | | செ கே |

இருந்து ஜேஷ்ட புத்திரனையும் கனிஷ்ட புத்திரனையும் பெறுவ னென்றும், உறுதியுள்ள இளைய களத்திரம் நிலைப்பாயிருக்குமென் றுங் கூறப்படும். இதில் புதன் திசை செவ்வாய் புசிப்பிலும் சுக் கிர திசை செவ்வாய் புசிப்பிலும் முன் களத்திர மிரண்டும் மாரக மாகுமாம்.

விசேட புத்திரர் பலிதம்

370

(இ-ள்.) 9-11-க்குடையவர்கள் ராகுவு மாகிய மூவரும்கூடி 5-ல் நிற்கவும், 5-க் குடையவர் 4-க்குடையவரோடு கூடிச் சந்திரன் வீட்டில் நிற்கவும், சந்திரன் சூரியனோடு கூடி லக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் அழகிய புத்திரரைப் பெற்றுச் சுகமுமடைந்து புத்திரர்கள் வளர வளரப் பொருளும் வளருமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல-சந் சூரி |
| | இராசிச் சக்கரம் | | புத சுக் |
| | | | |
| | | சசெ ராகு | |

371

(இ-ள்.) 5-க்குடையவரை லக்கி னுதிபதி கூடி 9-ல் நிற்கவும், அல்லது மாறி நிற்கவும் அவர்களை சுபர்கள் பார்க் கவும் பெற்ற ஜாதகர் வஞ்சக மில்லாத மனத்தராயும் புத்திரப் பெருக்குள்ளவ ராயும் வாழ்வாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல |
| சுக் புத | இராசிச் சக்கரம் | | |
| சனி | | | சந் |
| | குரு | | |

372

(இ-ள்.) 7-ம் இடத்தில் லக்கினுதி பதி நிற்கவும், 2-7-க்குடையவர்கள் கூடி 4-ம் இடத்தில் நிற்கவும், குரு திரி கோணமடையவும் பெற்ற ஜாதகர் மிகுதி புத்திரரைக் கிடைத்துப் புத்திரராலே புண்ணியம் பெறுவாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல குரு | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | செ புத |
| | சுக் | | |

[2] 5-க்குடையவரோடு 11-க்குடையவர் நட்பாகக் கூடி உச்ச ராசியில் நிற்கப் பெற்ற ஜாதகன் 10-பங்கு தந்தையினும் யோக முள்ளவனும்.

## 373

| | | | |
|---|---|---|---|
| சுக் | | | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | | | சூ குரு |

(இ-ள்.) 10-5-க்குடையவர்கள் நட்பாகக் கூடிச் சுபர்களுடைய வீட்டில் நிற்கவும், அவர்களை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகன் பல புத்திரர்களைப் பெற்று வாழ்பவனும்.

| | | | |
|---|---|---|---|
| | | குரு சந் | |
| | இராசிச் | | |
| செ | சக்கரம் | | |
| | சு-பு ல | சூ | சனி |

[2] 5-9-க்குடையவர்கள் கூடிச் சுபர்கள் வீட்டில் நட்பா யிருக்கவும், அவர்களைச் சுபர்கள் பார்க்கவும், அல்லது கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வ புத்திரர்களைக் கிடைத்து வாழ்வு பெறுவராம்.

## 374

| | | | |
|---|---|---|---|
| கே | | சனி | ல |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | குரு சுக் |
| | செ | சந் பு | சூ ராகு |

(இ-ள்.) 5-ம் இடத்தில் சுபர்கள் நிற்கவும், 5-க்குடையவர் சுபரோடு கூடி நிற்கவும், அவர்களைப் பாபர் பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகர் புத்திரரையும் பௌத்திரரையும் பொருந்தி வாழ்பவராம்.

[2] 4-ம் இடத்தில் சுபர்கள் நிற்கவும், குரு 6-ம் இடத்தில் உச்ச மடையவும், 6-க்குடையவரும் 7-க்குடையவரும் 11-ம் இடத்தில் நிற்கவும், 12-ம் இடத்தில் பாபர்கள் நிற்கவும் பெற்ற நான்கு தாமுள்ள ஜாதகருக்கும் சுகமாகிய புத்திர ருண்டாம்.

## 375

(இ-ள்) லக்கினாதிபதி 11-ல் நிற்கவும், 5-க்குடையவர் கேதுவோடு கூடி லக்கினாதிபதிக்கு 12 ல் நிற்கவும், குரு மனையில் சுக்கிரன் அவரோடு கூடி உச்சம் பெற்று நிற்கவும், சூரியன் புதனோடு கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு நிலைத்த செல்வம், கல்வி, குணமுள்ள புத்திரர்கள் உண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| சு ராகு | | | |
| சூ புத | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல | | குரு | செ கே |

## 376

(இ-ள்.) 5-க்குடையவர் 2-ல் நிற்கவும், 9-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், 2-க்குடையவர் சந்திரனோடு கூடி 5-ம் இடத்திற்கு 11-ல் நிற்கவும், குரு லக்கினத்தில் நிற்கவும், லக்கினாதிபதி சூரியனோடு கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திரர்கள் மிகுதியாயும் வாழ்வும் பெறுவாராம்.

| | | | |
|---|---|---|---|
| | ல குரு | சூரி செ | சுக் சனி |
| | இராசிச். சக்கரம் | | |
| | | | |
| | | | |

## 377

(இ-ள்.) 5-க்குடையவர் 4-ம் இடத்தில் நிற்கவும் 5-ம் இடத்தில் குரு நிற்கவும், 10-க்குடையவர் கேந்திர மடையவும், 9-க்குடையவர் குருவுக்கு கேந்திரம் பெறவும், 11-ம் இடத்திற் சந்திரன் ஆட்சியடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு இளமையில் தீர்க்க புத்திரனுண்டாகி கண்ணியம் பெறுவாராம்.

| | | | |
|---|---|---|---|
| பு | சு | | |
| | இராசிச சக்கரம் | | சந் |
| குரு | | | |
| சனி | | | ல |

## 378

(இ-ள்.) 4-ம் இடத்தில் 9-க்குடையவர் நிற்கவும், குரு 6-ம் இடத்தில் வலுப்பெற்று நிற்கவும், அவரை 5-க்குடையவர் பார்க்கவும், 7-க்குடையவர் 11-ல் நிற்கவும், 12-ம் இடத்தில் பாபர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு இளமையில் உலகர் புகழும்படியான தேவ சுகமுள்ள புத்திர ருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| குரு கே | | | சனி |
| | இராசிச் சக்கரம் | | |
| பு | | | செ |
| | | ல | ராகு |

26.9.1990 VMK

## 379

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| ல | | | சனி செசு |
| | | | குரு |

(இ-ள்.) குரு திரிகோணமாகிய 1-5-9-ல் வலுத்து நிற்கவும், செவ்வாய், சனி 5-க்குடையவர் ஆகிய மூவரும் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பல புத்திரரைப் பெறுவராம்.

| | | | |
|---|---|---|---|
| ச-பு சூசெ | | | |
| | இராசிச் சக்கரம் | | குரு |
| | | | |
| | ல | | |

[2] குரு 5-க்குடையவரா யிருந்து வலுத்து நிற்கவும், சூரியன், செவ்வாய், புதன், சனி ஆகிய நால்வரும் கேந்திரம் அல்லது திரிகோணங்களில் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரருண்டாம்.

## 380

| | | | |
|---|---|---|---|
| | | கே | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | சூ ரா செ | லசு ச குரு | சனி |

(இ-ள்.) லக்கினாதிபதியும் 10-க்குடையவரும் குருவும் ஆகிய மூவரும் கூடி நிற்கவும், செவ்வாயோடு 11-க்குடையவரும் ராகுவுங் கூடி 2-ம் இடத்தில் நிற்கவும், 4-5-க்குடையவர்கள் 12-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரருண்டாம்.

## 381

| | | | |
|---|---|---|---|
| 4 | சூ-சு செ | | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு ராகு | | | |
| சனி | | | லக் |

(இ-ள்.) 7-க்குடையவர் 4-ஆமிடத்தில் நிற்கவும், 4-க்குடையவர் 5-ல் நிற்கவும், அவரோடு ராகு கூடவும், 7-க்குடையவர் ஆட்சியிற் கேந்திரமடையவும், 9-8-க்குடையவர்கள் கூடி ஒரு ராசியில் நிற்கவும், அவரோடு செவ்வாய் சூரியன் ஆட்சி யுச்சமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு குணமாகிய கீர்த்தியுள்ள புத்திர ருண்டாம்.

## 382

(இ-ள்.) சங்கநிதியாகிய சுக்கிரனும், பதுமநிதி யென்னும் குருவும் 9-க்குடையவரும் ஆகிய மூவரும் சுபர் வீட்டில் நிற்கவும், அவர்களைச் சந்திரன் பார்க்கவும், தீயர் நோக்காதிருக்கப் பெற்ற ஜாதகர் பாக்கிய புத்திரனைப் பெறுவராம்.

| | | | |
|---|---|---|---|
| சந் | | | |
| | இராசிச் | | |
| ல | சக்கரம் | | |
| | சூரி | | குரு சு-பு |

[2] 10–5-க்குடையவர்கள் ஒருவர் மனையில் ஒருவர் மாறி நிற்கவும், 4-க்குடையவர் 11-ல் வலுப்பெற்று நிற்கவும் பெற்ற ஜாதகருக்குக் கீர்த்தியோடு அழகிய புத்திரருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| | இராசிச் | | குரு |
| புத | சக்கரம் | | |
| | | | ல |

## 383

(இ-ள்.) புத்திர ஸ்தானத்திற்கு 5–க்குடையவரும் குருவுஞ் சேராமலும், பார்க்காமலும் நிற்கவும், அவர்களைச் சனியும், 5-க்குடையவரும் பார்க்காதிருக்கப்பெற்ற ஜாதகருக்கு 10-புத்திரர் பிறந்து அதிற் சிலரிறந்தும் 5-புத்திரர்க்குக் குறையாமல் பிதிர் வாக்கியமும் சத்தியமுந் தவறு திருப்பார்களாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் | | |
| ல சனி | சக்கரம் | | |
| | குரு | சுக் | புத |

## 384

(இ-ள்.) குரு லக்கினத்தில் நிற்கவும், 5–க்குடையவர் 7-ல் நிற்கவும், அசுர குருவாகிய சுக்கிரன் 6-ல் நிற்கவும், 5–ம் இடத்திற் சந்திரனுங் கேதுவும் கூட செவ்வாயின் ராசியை சூரியனுக்குக் கொடுத்து தான் 7-ல் சனியோடுகூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு முன் களத்திரத்திற்கு 4-பெண்களுண்டாகி மறு களத்திரத்திற்கு நிறைந்த புத்திரருண்டாகுமாம்.

| | | | |
|---|---|---|---|
| சனி செ | ஞ | | |
| சுக் | இராசிச் | | ராகு |
| சந் கே | சக்கரம் | | |
| | | | ல குரு |

## 385

(இ-ள்.) 5-க்குடையவர் வக்கிரனுகி 4-ல் நிற்கவும், 5-ம் இடத்திற் சூரியனோடு புதன் கூடி நிற்கவும், 7க்-குடையவர் 7 ல் நிற்கவும், 12-ல் 9-க்குடையவரும், ராகுவும் கூடி நிற்கவும், சந்திரன் வளர்பிறையாகி செவ்வாயோடு கூடி 6-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சில புத்திரர் தோஷமுண்டாகி மேகத்தைக் கண்ட பயிர் போன்ற புத்திரனைக் கிடைத்துச் சிறப்புபெறுவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி ராகு | ல |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| குரு | செ ச கே | சூ பு | சுக் |

## 386

(இ-ள்.) 5-க்குடையவர் 4-க்குடையவரோடு கூடி 2-ல் நிற்கவும், 7-க்குடையவர் சனியோடு கூடி சுக்கிரனுக்கு 12-ல் ஆட்சி பெற்று நிற்கவும். 9 ம் இடத்தில் கேது நிற்கவும், 4-ம் இடத்திற் சந்திரன் நிற்கவும், குரு 5-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் நாவலர்களுக்குத் தலைமையுடையவராய் 3-புத்திரியைப் பெறுவாரென்று நூற் சம்மதமாம்.

| | | | |
|---|---|---|---|
| | சனி செ | ல சுக் | சூ பு |
| | இராசிச் சக்கரம் | | ராகு |
| கே | | | சந் |
| | | | குரு |

## 387

(இ-ள்.) 5-க்குடையவர் 8-ல் நிற்கவும், 7-க்குடையவர் சூரியனோடு கூடி ஆட்சியடையவும், அல்லது 2-க்குடையவர் 11-க்குடையவரோடு கூடி 2-ல் நிற்கவும், அல்லது சந்திரனோடு 7-க்குடையவர் கூடிச் சனிக்கு 7-ல் நிற்கவும், குரு கேந்திர மடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்குக் குறைவில்லாத செல்வத்தோடு புத்திரருண்டாகி உலகத்தில் ஜெயம் பெற்று வாழ்வராம்,

| | | | |
|---|---|---|---|
| | ராகு | சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| சந் செ | சூ சுக் | ல பு கே | |

## 388

(இ-ள்) 5-ம் இடத்திற்கு 2-பக்கமும் பாபர்கள் நிற்கவும், 5-ம் இடத்தைச் சனி பார்க்காதிருக்கவும், குரு கேந்திரத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு வீடெல்லாம் புத்திரனுக விளங்குவார்களாம்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | இராசிச் சக்கரம் | | ல சனி |
| | | | |
| செ | | ஞு | |

[2] 5-ம் இடம் மேஷமா யிருக்கவும் அதிற் செவ்வாய் நிற்கவும் மீன ராசியில் குரு நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்குப் பீமசேனனைப்போல் புத்திரருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| குரு | செ | | கே |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | சனி |
| ல ராகு | | | |

## 389

(இ·ள்.) சந்திரனுக்கு 5-ம் இடத்தில் லக்கினத்திற்கு 5-க்குடையவர் நிற்கவும், அல்லது 9 க்குடையவருக்கு 11-ல் நிற்கவும், சந்திரனுக்கு 9-க்குடையவரும், குருவும் கூடி 5-ம் இடத்தில் நிற்கவும், சூரியன் லக்கினத்தில் நிற்கவும், சந்திரன் கேந்திரமடையவும், சந்திரனுக்கு 9-ம் இடத்தில் சுக்கிரன் நிற்கவும் பெற்ற ஜாதக்ருக்கு அழகிய செல்வமுடைய புத்திரருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | சந் | | |
| குரு செ | இராசிச் சக்கரம் | | |
| | | | சனி |
| சுக் | | ல-பு ஞு | |

## 390

(இ-ள்.) விருச்சிகம் 5-ம் இடமாகவும் அதில் சூரியன் நிற்கவும், தனுசில் லக்கினுதிபதி நிற்கவும், அல்லது சனிக்குத் திரிகோணத்தில் நிற்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு விருத்த வயதில் புத்திர ருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சனி | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| சந் | ஞு | | |

[2] பெண் கிரகங்கள் 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் 4-ல் நிற்கவும், இலக்கினுதிபதி ஆண் கிரகமாகி 5-க்குடையவர் பெண் கிரகமாகி நிற்கவும் பெற்ற ஜாதகர் புத்திரரால் பாக்கிய செல்வம் பெறுவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | சந் |
| | இராசிச் | | ராகு சுக் |
| | சக்கரம் | | |
| குரு | | | |

## 391

( இ-ள்.) 5-ம் இடம் குரு வீடாகி அதிற் சுக்கிரனிற்கவும், குரு சந்திரன் வீட்டிலமரவும், பாபர் குரு வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் பெண்ணுகவே பிறக்கு மென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| சுக் | | | |
| | இராசிச் | | குரு |
| | சக்கரம் | | |
| | ல | | |

[3] 5-ம் இடம் சுக்கிரன் வீடாகி அதிற் சந்திரனிற்கவும், 5-க்குடையவர் சூரியனேடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு பிரமன் கிருபை யிருந்தபோதிலும், அழகிய பெண் புத்திரிமட்டும் கிடைப்பாளாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | | சந் சுக் | |

## 392

(இ-ள்.) சனியின் வீடே 5-ம் இடமாகி அதிற் குரு நிற்கவும் சனி 4-ம் இடத்தில் நிற்கவும், சுக்கிரன் சூரியனுகிய இருவரும் ஆட்சி பெற்று செவ்வாயோடு கூடி நிற்கவும், 11-ஆமிடத்திற் சந்திர னிற்கவும் பெற்ற ஜாதருக்கு பரிசுத்தமுள்ள ஏக புத்திரனும் 2-பெண்களுமுண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | செ சூ—சு | | |
| | இராசிச் | | சந் |
| குரு | சக்கரம் | | |
| சனி | | | ல |

**393**

| | | | |
|---|---|---|---|
| | | சனி கே | குரு |
| ல | இராசிச் சக்கரம் | | |
| | | | சந் |
| சுக் | சூ புத | ராகு | |

(இ-ள்.) 5-ம் இடத்திற் குருவிருந்து இலக்கினத்தைப் பார்க்கவும், சந்திரன் கேந்திரமேறி இலக்கினத்தைப் பார்க்கவும், 5-க்குடையவர் சந்திர கேந்திரத்தில் நிற்கவும், 9-க்குடையவர் 11-ல் நிற்கவும், சந்திரனுக்கு 9-ம் இடத்தில் இலக்கினாதிபதியோடு கேது கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்குச் சுப்பிரமணியருடைய கிருபையுண்டாகி புத்திர பவுத்ரசுகங்களோடு வாழ்வாராம்.

**394**

| | | | |
|---|---|---|---|
| சுக் ராகு | | | |
| சூரி புத | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல | | குரு | செ கே |

(இ-ள்.) இலக்கினாதிபதி 11-ல் நிற்கவும், 5-க்குடையவர் கேதுவோடு கூடி இலக்கினாதிபதிக்கு 12-ல் நிற்கவும், குரு வீட்டில் சுக்கிரனும், இராகுவுங் கூடி உச்சமடைந்து நிற்கவும், சூரியன், புதன் இவர்கள் கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வமுடைய புத்திரரைப் பெற்றுக் கல்வியிலுஞ் சிறந்தவரென்று கூறவும்.

**395**

| | | | |
|---|---|---|---|
| | | | ல கு-ச |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சனி புத | | | |

(இ-ள்.) இலக்கினாதிபதியும், 9-க்குடையவருங் கூடி 7-ல் நிற்கவும், இலக்கினத்திற் சந்திரனும், குருவுங் கூடி நிற்கவும், அவரை இலக்கினாதிபதியும், 2-க்குடையவரும் சேர்ந்தாலும், அல்லது பார்த்தாலும் கேந்திர கோணங்களில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு வீடு நிரம்பப் புத்திரர்கள் உண்டாம்.

**396**

| | | | |
|---|---|---|---|
| | | புசசெ சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | | |

(இ-ள்.) புதன், சந்திரன் சனி செவ்வாய் ஆகிய நால்வரும், 9-ஆமிடத்தில் நிற்கப்பெற்ற ஜாதகரும் மேற்கூறிய வண்ணமுடையவரேயாம்.

[2] செவ்வாய், சந்திரன், சூரியன் ஆகிய மூவர்கள் கூடி 9–ம் இடத்தில் நிற்கப் பெற்றாலும் மேற்கூறிய வண்ண மேயாம்.

| | | | |
|---|---|---|---|
| | ச செ சூரி | | |
| | இராசிச் | | |
| | சக்கரச் | | ல |
| | | | |

[3] குரு, சனி, சந்திரன், ராகு ஆகிய நால்வருங் கூடி 5–லாகினும், 11–லாகினும் நிற்கவும், அவர்களைப் பார்க்க ணேக்காதிருக்கப் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய வண்ணமேயாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | இராசிச் | | கு-ச சனி-ர |
| கே | சக்கரம் | | |
| | | | |

## 397

(இ–ள்) செவ்வாய், குரு புதன், சந்திரன், சுக்கிரன் ஆகிய ஐவரும் 4–ம் இடத்திலாகினும் லக்கினத்திலாகினும் நிற்கப் பெற்ற ஜாதகருக்குப் பல புத்திரர்கள் உண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| செகு பு சுச | | | ல |

[2] சனி, புதன், சூரியன் ஆகிய மூவரும் நல்ல ஸ்தானத்தில் நின்றாலும், 11–ல் இருந்தாலும் மேற்கூறிய வண்ணமே புத்திர ருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி பு-சூ | |
| | இராசிச் | | ல |
| | சக்கரம் | | |
| | | | |

[3] குருவுஞ் சந்திரனும் கூடிச் சுக ஸ்தானத்தில் நின்றாலும், அல்லது லக்னம் 9-ம் இடம் 5-ம் இடம் இந்த ராசிகளில் நிற்கப் பெற்றாலும் மேற்கூறிய வண்ணமே புத்திர ருண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல் | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | குரு சந் |
| | | | |

## 398

(இ-ள்.) 4-5-க்குடையவர்கள் ஆட்சி பெற்றுக் கேந்திர மடையவும், குரு சந்திரனின்ற ராசிக்கு 11-ம் இடத்திற்கு 5-ம் இடத்திலும், 9-க்குடையவருக்குத் திரிகோணத்திலும் நிற்கவும், 10-க்குடையவர் 11-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மிகுதியாகிய புத்திரரும் செல்வமும் உண்மையும் அந்தியம் வரையில் உண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| குரு | செ | | |
| | இராசிச் சக்கரம் | | |
| சந் | | | |
| ல | சூ | பு | |

## 399

(இ-ள்.) தனுசு லக்கினத்திற்கு 5-12-க்குடையவர் சந்திரனேடு கூடி குருவுக்கு 11-ம் இடத்திலிருந்து ஆட்சி பெற்று நிற்கவும், அவர்களை 2-க்குடையவர் பார்க்கவும், 9-க்குடையவர் 11-ல் நிற்கவும், 4-க்குடையவர் 7-ல் நிற்கவும், ராகு 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு ராகு திசையில் 7-க்குடையவர் புசிப்பில் ஏக புத்திரனேடு 2-பெண் மக்களும் கிடைப்பார்களாம்.

| | | | |
|---|---|---|---|
| | செ சந் | | குரு |
| சனி கே | இராசிச் சக்கரம் | | |
| | | | ராகு |
| ல | | சு சூ | |

## 400

(இ-ள்.) 5-10-க்குடையவர் 9-ம் இடத்தில் நின்று லக்கினதிபதி பார்வையைப் பெற்றும், 4-9-11-க்குடையவர்களைத் தனக்கு 11-ல் வைத்தும் அவர்கள் லக்கின கேந்திர மடையவும் பெற்ற ஜாதகருக்குக் குரு திசையில் 10-லிருந்தவர் புத்தி முதல் புத்திர ஆரம்பத்திற்கு ஏதுவாகுமாம்.

| | | | |
|---|---|---|---|
| செ | சூரி பு | | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| சுக் குரு | | | |
| | | | சந் |

## 401

(இ-ள்.) குரு, லக்கின கேந்திர மடைந்து 5-க்குடையவரையும், 5-ம் இடத்தையும் பார்த்து நிற்கவும், சந்திரன் 11-க்குடையவரா யிருந்து குருவுக்கு திரிகோண மடைந்து குரு பார்வையைப் பெற்று நிற்கவும் 10-க்குடையவர் சந்திரனுக்குத் திரிகோண மடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு கொத்து மலர்போல்

| | | | |
|---|---|---|---|
| சனி | | பு | |
| | இராசிச் சக்கரம் | | |
| சந் | | | |
| | | | ல குரு |

முன் பெண்கள் பிறந்து பிறகு குரு திசையில் சந்திர புத்தியில் ஆண் புத்திரன் தீர்க்கமுண்டாம்.

## 402

(இ-ள்.) 5-ஆமிடத்திற் குரு நிற்கவும், அவரை 5-க்குடையவர் பார்க்கவும், பெற்ற ஜாதகருக்குத் திரண்ட புத்திரருண்டாம்.

[2] 5-க்குடையவரும் குருவுங்கூடி வைசேடிகா அம்சம் பெற்று நின்றாலும், மேற்கூறிய பலனேயாம். 7-ஆமிடத்திற் சந்திரனின்று 5-க்குடையவரைப் பார்த்தாலும் மேற்கூறிய பலனேயாம்.

## 403

(இ-ள்.) லக்கினாதிபதியும் 5-க்குடையவருங் கூடி நிற்கவும் அவர்களுக்கு குரு வீட்சண்யங் கிடைத்தாலும், மேற்கூறியவர்கள் ஒருவரை யொருவர் நோக்கினாலும், 5-ம் இடத்திற் கூடிக் குரு பார்வை பெற்றாலும், 1-5-8-க்குடையவர் கேந்திரம் ஆட்சி நட்பு அடைந்தாலும் இவைகளில் வளர்பிறையாகில் இச்சாதகருக்கு புத்திரரிருக்க இரண்டு வீடு வேணுமென்று கூறப்பட்டது.

## 404

(இ-ள்.) 7-க்குடையவர் லக்கினாதிபதி 5-க்குடையவர் குரு ஆகிய நால்வரும் சுபர் அம்சங்களில் நிற்கவும், அவர்களுக்குச் சந்திரன் பார்வை யுண்டாகில், இச்சாதகர் அழகுள்ள புத்திரனைப் பெற்றுச் சுகத்திற் சேர்வாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி செ |
| | இராசிச் சக்கரம் | | கு-ச |
| | | | |
| சந் | | ல | |

[2] லக்கினத்திலாகினும், 5-லாகினும் குரு நிற்கவும், மற்றவர்கள் உபஜயத்தில் நிற்கப்பெற்ற ஜாதகர் பல புத்திரர் கிடைத்து பௌத்திரருடனும் வாழ்வாராம்.

## மத்திம புத்திரர் பலிதம்

### 405

| | | | |
|---|---|---|---|
| | செ சனி | | ரா |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல கே | | கு | |

(இ-ள்.) 5-க்குடையவரும் 2-க்குடையவரும் ஈனப்பட்டு 5-ஆமிடத்தில் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு இளமைப்பொழுதே புத்திர ருண்டாகுமாம்.

[2] 5-க்குடையவர் ஆட்சி யடைந்து சுபர்கள் பார்வைபெற்ருலும், மேற்கூறிய புத்திர காலத்தில் நற்பயன் கொடுக்குமாம்.

[3] 5-ஆமிடத்தில் 9-க்குடையவர் நிற்கவும், அவரைச் செவ்வாய் பார்க்கவும், அறிவில்லாத ஒரு புத்திரனுலும் கருமத்துக் குண்டென்றுங் கூறியது.

### 406

| | | | |
|---|---|---|---|
| | | சுக் | ல் |
| சனி | இராசிச் சக்கரம் | | குகே புத |
| ராகு | | | |
| | | குரு | செ |

(இ-ள்.) 5-ஆமிடத்தில் குரு நிற்கவும் அல்லது பார்க்கவும், 5-க்குடையவர் ஆட்சி நட்படையவும், அவரைப் பாபக் கிரகங்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகராகிய வீரனுக்கு விழல்போல் அனேக புத்திர ருதிப்பாராம்.

[2] குரு 3-ல் நிற்கவும், அவ்வீட்டுக்குடையவர் 4-க்குடையவரோடு கூடி 5-ல் அல்லது 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் 5-6-7-பெண்கள் பெற்ற பிற்கு நவரத்தினம்போல் ஏக புத்திரன் பிறப்பானும்.

### 407

| | | | |
|---|---|---|---|
| ல | | | செ |
| | இராசிச் சக்கரம் | | சந் |
| சனி | | | |
| குரு | | | |

(இ-ள்.) 5-க்குடையவர் திரிகோணங்களில் நிற்கவும், குரு கேந்திரமடையவும், அவரைப் பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு அறிவில்லாத மூடனுய் ஒரு புத்திரன் பிறந்து கருமஞ் செய்வானும்.

[2] சுபாங்கிஷத்தில் 5-க்குடையவர் நிற்கவும், அவரை மூன்றிலிருந்து பாபர்கள் பார்க்காதிருக்கப் பெற்ற ஜாதகருக்கு மைந்தர்கள் பிறந்து பிறந்து மரண மடைந்து அந்தியத்திற் கருமக்கிரியை செய்ய மைந்த னுண்டாம். ஆனுல் குரு பார்வை வேண்டுமாம்.

## 408

(இ-ள்.) சர ராசியிற் குரு நிற்கவும், அது 5-ம் இடமாகவும், 5-க்குடையவர் ஸ்திர ராசியில் நிற்கவும், அவரைச் சுபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரனில்லை யென்பது திண்ணம் ஆனுல் கண்ணுவருடைய கரும காண்ட விதிப்படி யாகாதி கிர்த்தியம் செய்தால் ஒருவாறு புத்திர ருண்டாகுமாம்.

| | | | |
|---|---|---|---|
| லக் | | | |
| சு பு | இராசிச் சக்கரம் | | குரு |
| | | | சந் |
| | | | |

[2] லக்கினத்தில் குரு நிற்கவும், 5-ம் இடம் சூன்யமாயும், 11-ம் இடத்தில் சனி நிற்கவும், செவ்வாய் 4-ம் இடத்தில் சிறப்படைந்து நிற்கவும், 7-ம் இடத்தில் சந்திரன் புதனேடு கூடி நிற்கவும், 6-ம் இடத்தில் சூரியன், சுக்கிர னிற்கவும் பெற்ற ஜாதகருக்கு அருமையான புத்திரன் கிடைப்பானென்றும் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | சூ சுக் | சந் பு | |
| செ | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | ல குரு | | சனி |

## சுவீகார புத்திர பலம்

## 409

(இ-ள்.) லக்கினுதிபதியும், 5-க்குடையவரும் மாறி நிற்கவும், சனி சத்துருவாகி 5-ல் நிற்கவும், குரு பலங்கெட்டுநிற்கவும், பெற்ற ஜாதகருக்கு புத்திரரில்லை யென்றும், சுவீகார புத்திரனுல் கிரியை முடியுமென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | ல செ |
| | | | |
| | சனி சந் | | குரு |

[2] 5-க்குடையவர் சூரியனோடு கூடி 2-ம் இடத்தில் ஆட்சிபெற்று நிற்கவும், 12-க்குடையவர் அனுஷ்தானமென்னுஞ் சகோதர ஸ்தானத்தில் நிற்கவும், 8-க் குடையவர் 5-ல் நிற்கவும், ராகு 3-ம் இடத்தில் சத்துருவாய் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரனில்லாது தன் மகள் புருஷனால் கிரியை நடக்குமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | சூ 4 |
| | இராசிச் | சக்கரம் | சுக் ராகு |
| கே | | | |
| | | | குரு |

## 410

(இ-ள்) 6-8-12-ல் 5-க்குடையவரும் புதனுங் கூடி நிற்கவும், அவர்களைப் புண்ணியர்களென்னுஞ் சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்குச் சுய புத்திரனுக்கு மேற் சிறந்தவனாகத் தத்து புத்திரனுண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி 4 | |
| | இராசிச் | சக்கரம் | |
| | | | |
| | சந் | ல | குரு |

[2] 5-க்குடையவர் செவ்வாயோடு கூடி நட்படைந்து நிற்கவும், அவர்களைச் சனி பார்க்கவும் பெற்ற ஜாதகனுக்கு தன் வம்சத்திலும் புத்திரனில்லாது தன் பந்துக்களிலிருந்து வரும் தத்து மைந்தனால் சுகப்படுவானும்.

| | | | |
|---|---|---|---|
| | | | செ 4 |
| ல | இராசிச் | சக்கரம் | |
| | | | |
| சனி | | | |

## 411

(இ-ள்.) சனியும் 5-க்குடையவரும், சந்திரனோடு கூடி 1-5-9-ல் இருக்கவும், அல்லது சனி செவ்வாயோடு கூடி 7-ம் இடத்தில் நிற்கவும், அவர்களைப் புண்ணியர்கள் நோக்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கும்,

[2] 5-க்குடையவர் லக்கினாதிபதி ஆகிய இருவரும் மாறி நிற்கவும், இவர்களைச் சுக்கிரன் குரு பார்வை யில்லாது ராகு பார்க்கப் பெற்றாலும்,

[3] லக்கினுதிபதியும் 5-க்குடையவரும், பாபவர்க்க முற்றும் குரு பார்வை பெற்றிருந்தபோதினும் இந் நான்கு தரமுள்ள ஜாதகர்களுக்கும் சுவீகார புத்திர ருண்டாகுமாம்.

412

(இ-ள்.) 5-க்குடையவர் சனிக்கு , நட்பாய்ப் பொருந்தி நவாங்கிச மேறினுலும், 12-க்குடையவரேனும், 5-க்குடையவரேனும், சூரியனுகி முள் கூறியவர்களோடு அஞ்கிசஞ் சேர்ந்த ஓரை ராசி இரட்டையா யிருக்கினும், 2-ல் 5-ல் குரு நிற்கவும், மற்றவர்கள் சுபவர்க்கமாய் நெருங்கினுலும், மிதுனங் கன்னி ஓரைநாயகர் 5-ஆமிடத்தில் நிற்கவும், சனி, செவ்வாய், குளிகனுங் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர்களும் சுவீகாரபுத்தி ரனுற் சுகம் பெறுவாராம்.

413

(இ-ள்.) லக்கினுதிபதி 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் 9-ல் நிற்கவும், பாபர்கள் சந்திரனேடு கூடிநிற்கவும், 6-5-ல் சுபர்கள் நிற்கவும், அதற்குடையவர்கள் அவரோடு கூடாமலும் நோக்காமலும் நிற்கவும், சுக்கிரன் குரு தங்கள் வர்க்கத்தில் நிற்கவும், அல்லது சனியின் வர்க்கமேறி யிருக்கினும், 7-ல் செவ்வாய், சனி நிற்கவும் 12-ம் இடத்தில் சந்திரனிற்கவும் பெற்ற ஜாதகர்களுக்கும் சுவீகார புத்திரனுண்டாம்.

நபுத்ர சாதக வியல்

414

(இ-ள்.) 12-ல் 5-3-க்குடையவர்கள் சூரியன் ஆகிய மூவரும் நிற்கவும், அவர்களைச் சுக்கிரன், குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரனில்லையாம்.

[2] 8-க்குடையவர் 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் 12-ல் நிற்கவும், குரு கேந்திரமடையவும் பெற்ற ஜாதகர்களுக்குக் கருமஞ் செய்யப் புத்திரனில்லையாம்.

[3] 5-ம் இடத்திற் சனி நிற்கவும், 4-லிலும் 12-லும் ராகுவோடு பாபக்கிரகங்கள் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரனில்லையாம்.

## 415

| | | | |
|---|---|---|---|
| சனி | | | செ |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | சந் |
| | | | சுக் குரு |

(இ-ள்.) சந்திரனுக்கு 5-க்குடையவரும் சுக்கிரனுங் கூடிக் கன்னியில் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு ஆண் புத்திரனில்லை.

| | | | |
|---|---|---|---|
| கே | | ல | |
| | இராசிச் சக்கரம் | | குரு |
| | | | |
| சனி | | | செ சூ·ரா |

[2] 7-க்குடையவர் 5-ல் நிற்கவும், அவரோடு பாபர்கள் கூடவும் அல்லது பார்க்கவும், குரு சிறப்படைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரனில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | கே |
| ராகு குரு | | | ல |
| | | | |

[3] 5-க்குடையவர் ராகுவோடு கூடி 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திர னில்லையாம்.

### துவேஷ புத்திரர்

## 416

| | | | |
|---|---|---|---|
| | | | சூ |
| ல | இராசிச் சக்கரம் | | புத |
| | | | |
| செ | | சனி | |

(இ-ள்.) 5-ம் இடத்திற் சூரியன் நிற்கவும், 5-க்குடையவர் துர்ப்பலமடைந்து சனி செவ்வாய் நோக்கமடையப் பெற்ற ஜாதகன் பிதாவை வருத்துப் படுத்துவானும்.

[2] செவ்வாய், சுக்கிரன், குரு, சூரியன், சந்திரன் ஆகிய ஐவரும் கூடி ஒரு ராசியில் நிற்கவும், 9-ம் இடத்தில் சனி, ராகு நிற்கவும் பெற்ற ஜாதகன் நாசகாலனென்றும், பிதாவின் துவேஷி யென்னவுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| ல | | கே | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | சந்-கு சூ செ சு |
| | சனி | | |

## 417

(இ—ள். பிதிர் லக்கினம் எதுவோ அதற்கு 6—ம் இடம் 8-ம் இடம் புத்திரனுக்கு லக்கினமாய் நிற்கப்பெற்ற ஜாதகன் பிதிர்த் துவேஷியா யிருப்பானும்.

[2] லக்கினுதிபதியும், 5-க்குடையவரும் பகையாயிருக்கப் பெற்ற ஜாதகர் வெந்து சீறும் பிதுர்த் துவேஷியாகிய ஜாதகனைப் பிள்ளையாகப் பெற்ற தவம் மேன்மைத் தவமேயாம்.

[3] 9-ம் இடத்திற் செவ்வாய், சூரியன், சனி ஆகிய மூவரும் நிற்கில், முன் கூறிய பலனேயாம்.

## 418

(இ—ள்) 8-6-12-க் குடையவர்கள் பலம் பெற்று நிற்கவும், 4-9-7—க்குடையவர்கள் பலஹீன மடைந்து நிற்கப் பெற்ற ஜாதகன் பிதாவின் சுகத்தைக் கெடுக்க வந்தவனும்.

| | | | |
|---|---|---|---|
| | செ | சந் | |
| | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | |
| ல | சூ பு | சுக் | |

[2] சந்திரன், சூரியன், செவ்வாய், குரு, சுக்கிரன் ஆகிய ஐவரும் ஒரு ராசியில் நிற்கப்பெற்ற ஜாதகன் துஷ்டனுய்ப் பிறப்பானும். அன்றியும் தன் தாயைச் சுடாதுபோற் சுட்டுத் துரத்திவிடும்படியான துரோகியாம்.

## 419

(இ-ள்.) 9-ம் இடத்திற் சுக்கிரன், சந்திரன், செவ்வாய் ஆகிய மூவரும் நிற்கப் பெற்ற ஜாதகன் தாயைப் பழிப்பவனும்.

[2] 5-ம் இடத்திற் சனி நிற்கவும், அச்சனிக்கு 5-ல் 9-க்குடையவர் நிற்கவும், 9-க்குடையவருக்கு 5-ல் செவ்வாய், குளிகன், ராகு அல்லது கேது நிற்கவும் பெற்ற ஜாதகன் வாய், கண், காதுமில்லாத ஒரு புத்திரனைப் பெற்றுத் துயரப் படுவானும்.

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| | இராசிச் சக்கரம் | | |
| செ-கு கே-ரா | | | |
| | | | புத |

### புத்திர மாரகம்

## 420

(இ-ள்.) இதுவரையிற் புத்திரபாவங்களைத் தெரிவித்தனம். இனிப் புத்திர மாரகப் பொருத்தங்களும், திசை புத்திகளும் தெரிவிக்கின்றனம்; புத்திர ஸ்தானத்தில் நின்றவர்களும், புத்திர ஸ்தானத்தில் அட்டமாதிபதி யிருக்கும் நேர்மைகளும், புத்திர ஸ்தானத்திற்கு 8-ம் இடத்தைப் பார்த்தவர்களும், இருந்தவர்களும், திசை புத்தியாளரெனப் பொருந்துவார்கள். அதில் எவர் திசை, எவர் புசிப்பு வெனத் தெரிந்துகொள்ளுமாறு அவரவர்கள் கிரக ஸ்புட பாகை, கலை விதிகளின் கணிதத்தாற் றெறிந்து கொள்ளவும்.

## 421

(இ-ள்.) புத்திர மாரகதிசை புத்தியின் விபரத்தை விளக்கமாகக் கூறுவோம். புத்திர ஸ்தானத்திற்கு 8-க்குடையவரும், அதிலிருந்தவர்களும், கூடினவர்களும், புத்திர ஸ்தானத்திற்கு 6-ம் இடத்திற் குரியவரும், 10-க்குரியவரும், இவர்களில் வலுப் பெற்றோரை யறிந்து அவர்கள் ஸ்புட கணிதத்தைச் சோதித்து ஏற்றம் பார்க்குமிடத்திற் புத்திரர்களுக்கு ஆயுள் வலுத்திருந்தால் கணிதம் சென்றவரையில் ராசி மண்டல நக்ஷத்திர மண்டலத்திற் றள்ளி கடைசியில் சம்பவித்த சேடத்தைக் கண்டுகொள்ளவும், அப்படிக் கண்டுகொள்வதே புத்திர மாரக நிச்சயமாம்.

## 422

(இ-ள்.) சந்திரனுக்கு 5-ல் சனியோடு குருவும், 9க்குடையவரும் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு வந்த 3-தாரத்திற்கும் மலடி யென்ற பேருண்டாகும்.

| | | | |
|---|---|---|---|
| சந் | | | |
| | இராசிச் சக்கரம் | | சனி குரு-பு |
| | | | |
| செ | | ல | ரா |

[2] 5-ம் இடத்தில் 6-8-க்குடையவர்கள் நிற்கவும், 5-க்குடையவர் குருவுக்கு 3-க்குடையவராகி 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகரை புத்திரனில்லாத மலடனென்றுங் கூறப்படும்.

| | | | |
|---|---|---|---|
| ல | | குரு | |
| | இராசிச் சக்கரம் | | சுக் சூ |
| | | | |
| | | சந் | |

[3] 9-க்குடையவர் 6-ம் இடத்தில் நீச்சரோடு கூடி நிற்கவும், 5-க்குடையவரும் லக்னதிபதியுஞ் சந்திரனுக்கு 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய வண்ணமேயாம்

| | | | |
|---|---|---|---|
| | | | சனி புத |
| ல | இராசிச் சக்கரம் | | சுக் செ |
| | | | |
| சந் | | | |

## 423

(இ-ள்.) 5-க்குடையவரும், சனியும் மாறி நிற்கவும், குரு பாபரோடு கூடி 5-க்குடையவருக்கு 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் ஆவி சிந்தி மாய்வராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | சனி |
| ல புத | இராசிச் சக்கரம் | | |
| குரு செ | | | |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| குரு | | ராகு | சனி |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| செ | கே | | |

[2] 5-க்குடையவர் 6-ல் நிற்கவும், 6-க்குடையவர் 9-ல் நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் நூறுவேள்வி செய்தபோதிலும் புத்திர னில்லையாம்.

## 424

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| | குரு | செ சந் | |

(இ-ள்.) சந்திரன் செவ்வாயோடு கூடி 4-ல் நிற்கவும், 5-ம் இடத்தில் குரு சிறந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் புத்திரன் விழலுக்கிறைத்த ஜலம்போலாகுமே தவிர புத்திர னில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| | சந் சனி | | |
| | இராசிச் சக்கரம் | | செ ரா-ல |
| கே | | | |
| | | | |

[2] சந்திரன் பாபர்களைத் துணையாகக் கொண்டு 10-ம் இடத்தில் நிற்கவும், இலக்கினத்திற் பாபர்கள் நிற்கவும்பெற்ற ஜாதகருக்குப் புத்திரரில்லையாம். மேற் கூறிய முறைகளெல்லாம் 5-க்குடையவருக்குரிய நன்மை தீமையைக் கண்டு கூறவும்.

# யோக பாவகம்

## 425

குரு வணக்கம்

அஷ்ட லட்சுமிகளுந் தெய்வ விந்திராணியும் போற்றும்படியான சிவபெருமானுக்கு வேதங்களை யுபதேசித்த தலமாகிய திருவேரகப் பதியிலுறையும் சுப்ரமண்யருடைய அனுக்கிரகம் பெற்று எனக்கு உபதேசித்த இராச குருவாகிய சோதிட வீரப்ப பிள்ளையின்து அடியை வணங்கி யோக பாவம் கூறுகின்றனம்.

## 426

(இ-ள்.) குருவும், இலக்கினாதிபதியுங்கூடி 9-ல் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு நாவலர்கள் பாமழை பொழியவும், சத்திர சாமரை பொன்னாசனம் பொருந்திய சக்கரேஸ்வர யோக மடைவாராம்.

[2] சந்திரன் 4-க்குடையவரோடு சேர்ந்து 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

[3] சுக்கிரனும், ராகுவுங் கூடி 7-ல் இருந்து வர்க்கோத்திரம் பெறினும் மேற்கூறிய பலனேயாம்.

[4] 2-க்குடையவரும், குருவுங் கூடி புண்ணிய ஸ்தான முடைந்தாலும் மேற்கூறிய பலனேயாம்.

[5] சந்திரனுங் குருவுங் கூடி வர்க்க மடைந்து நல்ல ஸ்தான மடைந்தாலும் மேற்கூறிய பலனேயாம்

[6] சூரியன் புதனோடு கூடி லக்கினத்தில் வர்க்க பல மடைந்தாலும் மேற்கூறிய பலனேயாம்.

427

(இ-ள்.) சர ராசிக்கு 10-பாகைக் குள்ளும், உபய ராசிக்கு 20-பாகைக்கு மேல் 30-பாகைக்குள்ளும், ஸ்திர ராசிக்கு 10-பாகைக்குமேல் 20-பாகைக்குள் சந்திரனிற்கவும், அவரை புதன் முதலாகிய சுபக்கிரகங்களும், 4-க்குடையவரும் பார்க்கப் பெற்றுலும்.

| | | | |
|---|---|---|---|
| | | | சந் |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | ல |
| 4 சுக் | செ | குரு | |

[2] மேற்கூறிய ராசிகளே லக்கின மாகவும், அதில் சந்திரனிற்கவும், அச் சந்திரனைச் சுபர்கள் பார்க்கவும், லக்கினுதிபதி நட்பாட்சி உச்சத்திலாகிலும், ஸ்திரராசி திரிகோண கேந்திராதிபரோடுங்கூடி சிறந்து நிற்கவும், லக்கினுதிபனைக் குரு பார்க்கவும், பாபர் நோக்க மில்லா திருக்கவும், பெற்ற 2-தரமுள்ள ஜாதகர் திரைகடலுடுத்திய புவியெல்லாஞ் செங்கோல் செலுத்துவனென்றும், இவன் அரண்மனையில் திருமகள் நடன மாடுவாளென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| குரு | | | |
| | இராசிச் சக்கரம் | | ல சுக் |
| | | | |
| | | | |

## 428

| | | | |
|---|---|---|---|
| | கே | லசெ குரு | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | சூ பு |
| | | ராகு | சுக் |

(இ-ள்.) சூரியனும், புதனும் 4 ம் இடத்தில் நிற்கவும், சந்திரனுஞ் சனியுங் கூடி 10-ல் நிற்கவும், லக்கினத்திற் செவ்வாய் நிற்கவும் குருவுக்கு 1-5-9-ல் சுக்கிரன் நிற்கவும், சந்திரன் பூரண மடையவும், பாபர்கள் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் உலகோர் முடிவணங்கும் அரசனாய் ஆயுளோடு தர்மஞ் செய்து மகத்துவம் பொருந்தி சிங்காசனத்திலிருந்து நாமகள் பூமகள் விலாசனாய் வாழ்பவராம்.

## 429

| | | | |
|---|---|---|---|
| ச-கு சுக் | | | சனி |
| சூ | இராசிச் | | செ ல |
| புத | சக்கரம் | | |
| | | | |

(இ-ள்.) லக்கினாதிபதியும், 4-9-க் குடையவர்களுமாகிய மூவரும் 9-ம் இடத்தில் நிற்கவும், 10-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், சுபர்கள் லக்கினத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பூமிக்கு அரசனே யாவராம்.

| | | | |
|---|---|---|---|
| பு செ சனி | | | ல குரு |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| சந் | | | |

[2] லக்கினாதிபதியும், 11-9-க் குடையவர்களும் ஆகிய மூவரும், 10-ம் இடத்தில் நிற்கவும், 10-க்குடையவர் லக்கினத்தில் நிற்கவும், அவரைப் பாபர் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் பிரகாசம் பொருந்திய நவரத்தினம் பதித்த சிங்காசனத்திலமர்ந்து ரத-கஜ-துரக முடைய ராஜராம்.

## 430

| | | | |
|---|---|---|---|
| குரு | | சுக் | புத |
| சனி | இராசிச் | | சந் |
| | சக்கரச் | | |
| | ல | | |

(இ-ள்.) குருவுஞ் சுக்கிரனும் 9-க் குடையவருமாகிய மூவரும் அவரவர்கள் தனித்தனியாய்க் கேந்திர கோணங்களில் ஆட்சி யுச்சமடைந்து நிற்கவும், இவர்களை பாபர்கள் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர் ரத்தின மகுடஞ் சூடி சிங்காசனமேறி செங்கோல் செலுத்துவராம்.

3-2-லிருந்தவர்கள் உயிர்த் திசையாக வரினும், அவர்களே உடல் உயிர் ஸ்தானத்தின் வலி பெற்றால் மாரகமாவனும். (5) சிம்ம லக்கினத்தில் பிறந்தவர்களுக்கு குரு, சுக்கிரன், சனி உடற்றிசையாயும், குரு புதன் உயிர்த்திசையாய் வரினும், 4-10-லிருந்தோர் உடற்றிசையாயும். 2-3-7-லிருந்தவர் உயிர்த்திசையாய் வலி பெறினும் ஜாதகர் மாரகமாம்.

## 690

(இ-ள்.) (6) கன்னியா லக்கினத்திற் பிறந்தவர்களுக்கு, குரு, செவ்வாய், சந்திரன் உடற் றிசையாகவும், சனி, புதன், சுக்கிரன் உயிற் றிசையாய் வரினும் 6-4-2-லிருந்தோர் உடற்றிசையாகவும், 10-4-3 லிருந்தவர் உயிர்த் திசையாகவும் பகை வலியடைந்தாலும் ஜாதகர் மாரகமாம். (7) துலா லக்கினத்திற் பிறந்தவர்களுக்கு சூரியன், குரு செவ்வாய், சந்திரன் உடற்றிசையாகவும் சுக்கிரன், புதன் தேய்பிறைச் சந்திரன் உடற்றிசையாக வரினும், 6-3-8-லிருந்தவர் உடற்றிசையாகவும், 7-12-10-லிருந்தவர் உயிர்த் திசையாகிப் பகைவர் பலம் பெறில் ஜாதகர் மாரகமாம்.

## 691

(இ-ள்.) (8) விருச்சிக லக்கினத்தில் பிறந்தவர்களுக்குப் புதன், சுக்கிரன், சனி உடற் றிசையாகி குரு, செவ்வாய், சூரியன் உயிர்த் திசையாகி 8-7-2-1-லிருந்தவர் உடற்றிசையாகவும், 10-8-6-ல் நின்றோர் உயிர்த்திசையாகவும் பகைவர் வலிபெறில் ஜாதகன் மாரகமாம். (9) தனுசிற் பிறந்தவர்களுக்கு சனி, புதன், சுக்கிரன், உடற் றிசையாகி குரு, சூரியன், செவ்வாய் உயிர்த்திசையாகவும், பகையுடன்வரில் 2-3-7-6-ல் நின்றோர் உடற் றிசையாகவும் 3-2-10-இதிலிருந்தவர் உயிர்த் திசையாம்.

## 692

(இ-ள்.) இந்த ராசியில் சத்துரு வலிபெற்று நின்றால் ஜாதகர் மாரகமாம். (10) மகர லக்கினத்தில் பிறந்தவர்களுக்குப் புதன், சந்திரன் உடற் திசையாகி சுக்கிரன், சூரியன், செவ்வாய் உயிர்த் திசையாகவந்தாலும், 2 3-8-7-ல் நின்றோர் 11-1-6-12-ல் நின்றோர் உயிர்த் திசையாக வரினும் இப் பாபர்கள் வலுமை

பெறில் ஜாதகன் சீக்கிரம் மாரகமாம். (11) கும்ப லக்கினத்தில் பிறந்தவர்களுக்கு சூரியன், சனி, செவ்வாய், சந்திரன் உடற்றிசையாகி குரு, புதன் உயிர்த்திசையாகவும் பகைவர்கள்.

இதுவுமது

693

(இ-ள்.) 2-3-7-8-லிருந்தவர்கள் உடற்றிசையாகி 11-6-1-12-லிருந்தவர்கள் உயிர்த்திசையாக வரின் இவர்களே முழுப் பகையாவார்களாம் இதிற் கூறிய கிரகங்கள் இந்த ராசியில் வலிமைபெறில் ஜாதகன் மாரக மடைவானும். (12) மீன லக்கினத்தில் பிறந்தவர்களுக்கு புதன், சுக்கிரன், சூரியன், சனி உடற்றிசையாகி செவ்வாய், சனி, புதன், குரு உயிர்த் திசையாக வரில் 1-8 6-லிருந்தவர் உடற்றிசையாகி 11-7-10-லிருந்தவர் உயிர்த் திசையாகவரில் ஜாதகன் மாரகமாம். மேற்கூறிய ராசிக்குடையவரே இவ்வலி யடைந்தாலும் மாரகஞ் செய்து விடுவராம்.

காலச் சக்கர திசை

694

(இ-ள்.) ஆதி விநாயகரை என் னெஞ்சத்து ளமைத்து காலச் சக்கரத் திசையை நொண்டிச் சிந்தாகக் கூறியிருக்கின்றனம் கேட்பாயாகவும்.

696

(இ-ள்.) செவ்வாய்க்கு வரு-7, சுக்கிரனுக்கு வரு-16, குருவுக்கு வரு-10, சந்திரனுக்கு வரு-21.

695

(இ-ள்.) புதனுக்கு வரு-9, சூரியனுக்கு வரு-5, சனிக்கு வரு-4.

697

(இ-ள்.) பொன்போன்ற புத்திரா! இனி காலச்சக்கரத் திசையை நடத்தும்விதங் கூறுகின்றனம். வலவோட்டென்றும், இடவோட்டென்றும் கூறியதை மனமொன்றிக் கேட்பாயாகவும்.

698

(இ-ள்.) அசுபதி முதல் 3-நக்ஷத்திரம் வலவோட்டென்றும், ரோகணி முதல் 3-நட்சத்திரம் இடவோட்டென்றும் இவ்வித மிறையாகவே 27-நட்சத்திரங்களும் வருமெனக் கொள்க. இதில் வலவோட்டு திசை 15-ம், இடவோட்டு திசை 12-மாக நடந்து வருவதைக் காண்க.

699

(இ-ள்.) அசுபதி, பரணி, கார்த்திகை, புனர்பூசம், பூசம், ஆயிலியம், அஸ்தம், சித்திரை, சுவாதி, மூலம், பூராடம், உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி இந்த 15-நட்சத்திரங்களும் வலவோட்டுத் திசையாம்.

700

(இ-ள்.) மற்ற 12-நட்சத்திரங்களும் இடவோட்டுத் திசையாம் இதில் புத்தியோட்டும் வகையை அடியிற் கண்டுகொள்கவும்.

701

(இ-ள்.) அசுபதி, கார்த்திகை, புனர்பூசம், ஆயிலியம், அஸ்தம், சுவாதி, மூலம், உத்திராடம், பூரட்டாதி, ரேவதி இந்த 10-நட்சத்திரங்களும்.

702

(இ-ள்.) முதற்கால் மேஷ முதலாய் வலமாக தனுசு வரையில் 9-ராசிகளும் 100-வருடத் திசையாகுமாம். 2-ம் பாதத்திற்கு மகரம், கும்பம், மீனம், விருச்சிகம், துலாம், கன்னி, கடகம்.

703

(இ-ள்.) சிம்மம், மிதுனம் இந்த 9-ராசிகளுக்கும் 85-வருடத் திசையாம். 3-ம் பாதத்திற்கு ரிஷபம், மேஷம், மீனம், கும்பம், மகரம், தனுசு, மேஷம், ரிஷபம் மிதுனம் இந்த 9-ராசிக்கும் 83-வருடத்திசையாம்.

704

(இ-ள்.) 4-ம் பாதத்திற்குக் கடகமுதல் வலமாக மீனம்வரையில் 9-ராசிக்கும் 86-வருடமாம். மற்ற பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி இந்த 5-நட்சத்திரங்களில்.

705

(இ-ள்.) முதற் பாதத்திற்கு விருச்சிகம், துலாம் கன்னி கடகம், சிம்மம், மிதுனம். ரிஷபம், மேஷம், மீனம் இந்த 9 இராசிக்கும் 100-வருட மென்பதாம்.

706

(இ-ள்.) 2-ம் பாதத்திற்கு கும்பம், மகரம், தனுசு, மேஷம், ரிஷபம் மிதுனம், கடகம், சிம்மம், கன்னி இந்த 9-ராசிகளுக்கும் 85-வருட மென்பதாம்.

707

(இ-ள்.) 3-ம் பாதத்திற்கு துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம், விருச்சிகம், துலாம், கன்னி இந்த 9-ராசிகளுக்கும் 83-வருட மென்பதாம்.

708

(இ-ள்.) 4-ம் பாதத்திற்கு கடகம், சிம்மம், மிதுனம், ரிஷபம், மேஷம், மீனம், கும்பம், மகரம், தனுசு, இந்த 9-ராசிகளுக்கும் 86-வருடமாம்.

709

(இ-ள்.) மேற்கூறிய வலவோட்டுத் திசைக்கு புத்தியெடுக்கும் வகையைக் கூறினேன். இனி இடவோட்டு நட்சத்திரங்களுக்குப் புத்தியெடுக்கும் விதம் அடியில் வருமாறு காண்க.

710

(இ-ள்.) மகம், விசாகம், உரோகணி, திருவோணம் இந்த 4-நட்சத்திரங்களுக்கு முதற் காலுக்கு புத்தி வருமாறு காண்க.

711

(இ-ள்.) தனுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், ரிஷபம், மிதுனம், சிம்மம், கடகம், இந்த 9-க்கும் 86 வருஷம் புத்தியாக நடப்பதைக் காண்க.

712

(இ-ள்.) இரண்டாம் பாதத்திற்கு கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம் இந்த 9-க்கும் 83-வருட மென்பதாம்.

713

(இ-ள்.) 3-ம் பாதத்திற்கு கன்னி, சிம்மம், கடகம். மிதுனம், ரிஷபம், மேஷம், தனுசு, மகரம், கும்பம் இந்த 9-க்கும் 85-வருஷமாகப் புத்தியை யோட்டுவதாம்.

714

(இ-ள்.) 3-ம் பாதத்திற்கு மீனம், மேஷம், ரிஷபம், மீதுனம், சிம்மம், கடகம், கன்னி, துலாம், விருச்சிகம் இந்த 9-க்கு 100-வருஷமாகப் புத்தியை யோட்டுவதாம்.

715

(இ-ள்.) மிருகசீரம், திருவாதிரை, பூரம், உத்திரம், அனுஷம், கேட்டை, அவிட்டம், சதயம் இந்த 8-நட்சத்திரங்களுக்கும் புத்தி வருமாறு காண்க.

716

(இ-ள்.) முதல் பாதத்திற்கு மீன முதல் அபசௌவியமாம், கடகம் வரையில் 9-இராசிகளுக்கும் 86-வருஷ மெனக் கண்டு கொள்க.

717

(இ-ள்.) 2-ம் பாதத்திற்கு மிதுனம், ரிஷபம், மேஷம், தனுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், ரிஷபம் இந்த 9-இராசிகளுக்கும் 83-வருடமெனக் காண்க.

718

(இ-ள்.) 3-ம் பாதத்திற்கு மிதுனம், சிம்மம், கடகம், கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம் இந்த 9-இராசிகளுக்கும் 85-வருட மெனக் காண்க.

719

(இ-ள்.) 4-ம் பாதத்திற்கு தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிம்மம், கடகம், மிதுனம், ரிஷபம், மேஷம் இந்த 9-இராசிகளுக்கும் 100-வருடமெனக் காண்க.

720

(இ-ள்.) காலச்சக்கர புத்தி பிரிக்கும் வகையை அடியில் வருமாறு: நின் புத்தியை நிறுத்திக் கேட்பாயாக. புத்தி யோட்டுங் கிரகங்கள் திசை வருடத்திற்கு

721

(இ-ள்.) திசையின் கிரக வருடத்தைக் கொடுக்க வந்த ஈவை வைத்துத் திசை வருடத்தால் பெருக்கியதே புத்தியாம்.

722

(இ-ள்.) மீனத்திலிருந்து கிரகங்கள் விருச்சிகத்திற் பாயும் காலத்தில் உடற்றிசையு மிருக்குமானல், அதற்குப் பின்னல் பலன் கூறுவதைக் காண்க.

723

(இ-ள்.) இராஜாங்க பயம், சிநேக விரோதம், சிறை காவல், அக்கினி பயம் நீசர்களால் அவமானம், சோர பயம், சரீர பீடை வலுக்கு மென்பதாம்.

724

(இ-ள்.) உடற்றிசை சுபர் திசையா யிருக்கில் வெற்றிபெறுவ ரென்று கூறுக. மேஷத்திலிருந்து தனுசுக்குத் தாண்டினல் அதற்குப் பலன் கேட்பாயாக.

725

(இ-ள்.) துரகாபிலோபன கெதியென்றும், இதற்குப் பிதிர் புத்திரர்கள், களத்திரம், இவர்களுக்கு ரணமும், பயங்கரமும் உண்டாம். இதற்குத் திசாபுத்தியினுலும் பாகித்துக் கொள்ளவும்.

726

(இ-ள்.) கன்னியிலிருந்து கடகத்துக்குத் தாண்டுமாகில் மண்டூக கெதியாம். அதற்குப் பலன் களத்திரத்திற்கும், ஜாதகருக்கும் மாரகம் நேரிடுவதை திசா புத்தியினு லறிந்துக் கொள்ளவும்.

727

(இ-ள்.) சிம்மத்திலிருந்து மிதுனத்திற்கு தாண்டுமாகில் சர்ப்ப கெதியாம். இதற்குப் பலன் மாதுர் பிதுர் மாரக முண்டாகுமென்பதை மகா திசை புத்தியினுலும் அறிந்து கூறல் வேண்டுமாம்.

728

(இ-ள்.) மிதுனத்திலிருந்து சிம்மத்திற்கு தாண்டுமாகில் மர்க்கடகக் கெதியாம். அதற்குப் பலன் ஜாதகருக்கு அரைக்குமேல் ரண முதலிய கொப்பளாதிக்கம் காணுமென்பதையும், மகாதிசை புத்தியாலு மறிக.

729

(இ-ள்.) பாவியின்றிசை யுடலாகவும், காலச்சக்கரத் திசை பாவி திசையாக ஏற்படுமாகில், இவ்விரண்டு திசைபுத்திகளை யூகித்துக் கூறல் வேண்டுமாம்.

730

(இ-ள்.) மேற் கூறியபடி யூகத்துடனே கூறில் தவருமல் நடக்கு மென்பதாம். இனிப்பின்னுல் வரும் அட்டவர்க்க பலனைக் கேட்பாயாக.

732

## அட்டவர்க்கம்

(இ-ள்.) குருவின் பாதம் பணிந்து அட்டவர்க்கத்தை அன்பாக இனிக் கூறுகின்றனம். கேட்பாயாக: சூரியனுக்கு 4-8-பரலென்று முன்னேர் கூறினர்கள்.

## 733

(இ-ள்.) சந்திரனுக்கு-49, செவ்வாய்க்கு-39, புதனுக்கு-54 பரலென்றும் கூறினர்களாம்.

## 734

(இ-ள்.) குருவுக்கு-56, சுக்கிரனுக்கு-52, சனிக்கு-39 பரலென்றும் கூறினர்களாம்.

## இரவி அட்டவர்க்கம்

## 735

(இ-ள்.) ஒவ்வொரு கிரகங்களுக்குத் தனித்தனியாக சமுதாயப் பரலைக் கூறுகின்றனம்; சூரியனுடைய சமுதாயப் பரல் விபரத்தை நன்மை பொருந்தி உண்மையாகக் கேட்பாயாக.

## 736-737

(இ—ள்.) சூரியனுக்கு 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆக 8.
,, சந்திரனுக்கு 3, 6, 10, 11 ஆக 4.
,, குஜனுக்கு 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆக 8.
,, புதனுக்கு 3, 5, 6, 9, 10, 11, 12 ஆக 7.
,, குருவுக்கு 5, 6, 9, 10 ஆக 4.
,, சுக்கிரனுக்கு 6, 7, 12 ஆக 3.
,, சனிக்கு 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆக 8.
,, இலக்கினத்திற்கு 3, 4, 6, 10, 11, 12 ஆக 6.
ஆக பரல் 48.

## சந்திரன் அட்டவர்க்கம்

## 738-758

(இ—ள்.) சூரியனுக்கு 3, 6, 7, 8, 10, 11 ஆக 6.
,, சந்திரனுக்கு 1, 3, 6, 7, 10, 11 ஆக 6.
,, செவ்வாய்க்கு 2, 3, 5, 6, 9, 10, 11 ஆக 7.

(இ-ள்.) புதனுக்கு 1, 3, 4, 5, 7, 8, 10, 11 ஆக 8.
,, குருவுக்கு 1, 2, 4, 7, 8, 10, 11 ஆக 7.
,, சுக்கிரனுக்கு 3, 4, 5, 7, 9, 10, 11 ஆக 7.
,, சனிக்கு 3, 5, 6, 11 ஆக 4.
,, லக்கினத்திற்கு 3, 6, 10, 11, ஆக 4

ஆக பரல் 49.

## செவ்வாய் அட்டவர்க்கம்

(இ-ள்.) சூரியனுக்கு 3, 5, 6, 10, 11 ஆக 5.
,, சந்திரனுக்கு 3, 6, 11 ஆக 3.
,, செவ்வாய்க்கு 1, 2, 4, 7, 8, 10, 11 ஆக 7.
,, புதனுக்கு 3, 5, 6, 11 ஆக 4.
,, குருவுக்கு 6, 10, 11, 12 ஆக 4.
,, சுக்கிரனுக்கு 6, 8, 11, 12 ஆக 4.
,, சனிக்கு 1, 4, 7, 8, 9, 10, 11 ஆக 8.
,, லக்கினத்திற்கு 1, 3, 6, 10, 11 ஆக 5.

ஆக பரல் 39.

## புதன் அட்டவர்க்கம்

(இ-ள்.) சூரியனுக்கு 6, 6, 9, 11, 12 ஆக 5.
,, சந்திரனுக்கு 2, 4, 6, 8, 10, 11 ஆக 6.
,, செவ்வாய்க்கு 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆக 8.
,, புதனுக்கு 1, 3, 5, 6, 9, 10, 11, 12 ஆக 8.
,, குருவுக்கு 6, 8, 11, 12 ஆக 4.
,, சுக்கிரனுக்கு 1, 2, 3, 4, 5, 8, 9, 11 ஆக 8.
,, சனிக்கு 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆக 8.
,, லக்கினத்திற்கு 1, 2, 4, 6, 8, 10, 11 ஆக 7.

ஆக பரல் 54.

## குரு அட்டவர்க்கம்

(இ-ள்.) சூரியனுக்கு 1, 2, 3, 4, 7, 8, 9, 10, 11 ஆக 9.
,, சந்திரனுக்கு 2, 5, 7, 9, 11 ஆக 5.
,, செவ்வாய்க்கு 1, 2, 4, 7, 8, 10, 11 ஆக 7.

(இ-ள்.) புதனுக்கு 1, 2, 4, 5, 6 9, 10 11 ஆக 8.
" குருவுக்கு 1, 2, 3, 4, 7, 8, 10, 11 ஆக 8.
" சுக்கிரனுக்கு 2, 5, 6, 9, 10, 11 ஆக 6.
" சனிக்கு 3, 5, 6, 12 ஆக 4.
" லக்கினத்திற்கு 1, 2, 4, 5, 6, 7, 9, 10, 11 ஆக 9.

ஆக பரல் 56.

## சுக்கிர அட்டவர்க்கம்

(இ-ள்.) சூரியனுக்கு 8, 11, 12 ஆக 3.
" சந்திரனுக்கு 1, 2, 3, 4, 5, 8, 9, 11, 12 ஆக 9.
" செவ்வாய்க்கு 3, 4, 6, 9, 11, 12 ஆக 6.
" புதனுக்கு 3, 5, 6, 9, 11 ஆக 5.
" குருவுக்கு 5, 8, 9, 10, 11 ஆக 5.
" சுக்கிரனுக்கு 1, 2, 3, 4, 5, 8, 9, 10, 11 ஆக 9.
" சனிக்கு 3, 4, 5, 8, 9, 10, 11 ஆக 7.
" லக்கினத்திற்கு 1, 2, 3, 4, 5, 8, 9, 11 ஆக 8.

ஆக பரல் 52.

## சனி அட்டவர்க்கம்

(இ-ள்.) சூரியனுக்கு 1, 2, 4, 7, 8, 10, 11 ஆக 7.
" சந்திரனுக்கு 3, 6, 11 ஆக 3.
" செவ்வாய்க்கு 3, 5, 6, 10, 11, 12 ஆக 6.
" புதனுக்கு 6, 8, 9, 10, 11, 12 ஆக 6.
" குருவுக்கு 5, 6, 11, 12 ஆக 4.
" சுக்கிரனுக்கு 6, 11, 12 ஆக 3.
" சனிக்கு 3, 5, 6, 11 ஆக 4.
" லக்கினத்திற்கு 1, 3, 4, 6, 10, 11 ஆக 6.

ஆக பரல் 39.

இக்கணிதப் பிரகாரம் அட்டவர்க்கங்களை எடுத்துக்கொண்டு சர்வாட்டக வர்க்கங்களைச் செய்துகொள்ளவும், பிறகு ஆசிரியரது திருவடி பணிந்து மேற்கூறிய பரலின் திரிகோண சோதனையை விதி முறையுடன் கேட்பாயாக,

# திரிகோண சோதனே

## 759-780

(இ-ள்.) மேஷம் சிம்மம் தனுசு, இடப கன்னியாமகரம், மிதுன துலா கும்பம், கர்க்கடகம் விரிச்சிகம் மீனம், இவ்வாறு மும்மூன்று ராசியாக எடுப்பது திரிகோணமாம். இத் திரிகோணங்களில் 3-ராசிப் பரலும் சரியா யிருந்தால், 3-ராசிப் பரலே யெடுத்துப் போடவும். ஒரு ராசியில் பரல் இல்லாதிருந்தால் 3-ராசிக்கும் சோதனே யில்லேயாம். ஒரு ராசியில் பரல் குறைந்தால் குறைந்த படி மற்ற ராசிகளேயும் சரிபண்ணவும். பிறகு ஏகாதிபத்தியச் சோதனேயைக் கூறுகிறேன் கேட்பாயாக. மேடம் விருச்சிகத்திற்கும், இடபம் துலாத்திற்கும், மிதுனம் கன்னிக்கும், தனுசு மீனத்திற்கும், மகரம் கும்பத்திற்கும், சோதனே செய்வதுண்டாம் கடகம் சிம்மத்திற்குச் சோதனே யில்லேயாம். பிறகு, கிரக மிருந்த ராசிப் பரல் ஏறி நின்ருல் குறைந்ததுபோல் சரிபண்ணவும் இவ்விரண்டு ராசியில் பரல் சமமா யிருந்தால் கிரகமில்லாத ராசிப் பரலே யெடுத்துப் போடவும். 2-ராசியிலும் கிரக மில்லாதிருக்க பரல் ஏற்றக் குறைச்சலா யிருந்தால் குறைந்படி சரிசெய்யவும், 2-ராசியிலும் கிரக மில்லாதிருக்க பரல் சமமா யிருந்தால் 2-ராசிப் பரலேயும் எடுத்துப்போடவும், இவ் வண்ணங் குரு மூன்னிலேயில் தெரிந்துகொண்ட பிறகு 2-ராசியிலும் கிரகம் நிற்கப் பரல் ஏற்றக் குறைச்சலா யிருந்தாலும், சமமா யிருந்தாலும் ஒரு ராசியில் பரலில்லா திருந்தாலும், 2-ராசியிலும் கிரகமில்லாமல் ஒரு ராசியில் பரலில்லாமலிருந்தாலும், இவைகளுக் கெல்லாம் சோதனே இல்லேயென்றும், ஒரு ராசியில் கிரக மிருக்க அதில் பரல் இல்லாதிருக்கில் மற்றைய கிரக மில்லா ராசிப் பரலே நீக்கிப்போடவும், இந்தப் பிரகாரம ஏகாதிபத்தியஞ் செய்வாயாகவும். இந்தச் சோதனேகளெல்லாம் செய்த பிறகு ராசியிலிருக்கும் பரல்களுக்கு விதி கேட்பாயாக. ராசி குணகாரஞ் செய்யும் விவரணம் : மேஷம் துலாத்திலிருக்கும் பரலேச் சேர்த்து 7-ல் பெருக்கவும், இடபம் சிங்கத்திலிருக்கும் பரலேச் சேர்த்து 10-ல் பெருக்கவும், மிதுனம் விருச்சிகத்தி லிருக்கும் பரலேச்சேர்த்து 8-ல் பெருக்கவும், கடகத்திலிருக்கும் பரலே 4-ல் பெருக்கவும், கன்னி மகரத்திலுள்ள பரலேச் சேர்த்து 5-ல் பெருக்கவும், தனுசி லிருக்கும் பரலே 9-ல் பெருக்க

வும், கும்பத்திலிருக்கும் பரலே 11-ல் பெருக்கவும், மீனத்திலிருக்கும் பரலே 12-ல் பெருக்கவும் இப்படிப் பெருக்கின பரலெல்லாம் ஒன்ருகக் கூட்டி வைப்பதே இராசி குணகாரமாம். பிறகு கிரக குணகார விபரத்தைத் தெளிவாகக் கேட்பாயாக. சூரியன், சந்திரன், சனி புதன், ஆகிய நால்வர்களுடைய பரலே 5-ல் பெருக்கவும், செவ்வாய் நின்ற இராசிப் பரலே 8-ல் பெருக்கவும், சுக்கிரன் நின்ற இராசிப் பரலே 7-ல் பெருக்கவும், குருவிருந்த இராசிப் பரலே 10-ல் பெருக்கவும் இவ்வாறு பெருக்கிய தொகைகளே ஒன்ருய்க் கூட்டியதைக் கிரக குணகாரமெனக்கொள்க. மேலெழுதிய இராசி குணகார லக்கமும், கிரக குணகார லக்கமும் ஒன்ருய்க் கூட்டியதைக் குணசமுகத் தொகையெனக் கொள்க.

## மாரகபல னறியும்படி

இந்திந்த விதமாக 7-கிரகத்திற்கு மிவ்வாறு கணிதஞ் செய்து சூரியனுக்கு வந்த அட்டவர்க்க குணசமுகங் கண்டு மாரகங் கூறும் வகை கேட்பாயாக.

## 781-788

(இ-ள்.) சூரியன் நின்ற இராசிக்கு 9-வது ராசிப் பரலே குணசமுகத்தால் பெருக்கிக்கொண்டுவந்த தொகையை 27-ல் வகுத்து பூர்வபக்ஷமாகில் மீதி நின்ற தொகையை அசுபதி முதற்கொண்டு எண்ணி வந்த நக்ஷத்திரத்திலும், அமரபக்ஷமாகில் சித்திரை முதல் எண்ணி வந்த நக்ஷத்திரத்தில் சனி வரும்போது பிதிர் மாரகமென்றுங் கூறுவதாம். இன்னமொருவிதம் சூரியனுடைய குண சமுகத்தை 7-ல் பெருக்கி 27-ல் கருத்துவந்த நக்ஷத்திரமும் ஷெ தொகையை 12-ல் கழிக்கவந்த ஈவு எந்த ராசியோ அதிற் சனி வரும்போது பிதிர் மாரகமெனவும், இன்னமொருவிதம் சூரியனுடைய சோத்திய பிந்தைக் கூட்டி சூரியனுக்கு 9-ல் ராசி பிந்தால் பெருக்கி 27-க்கு ஈந்து மீந்த நக்ஷத்திரத்திலும், மேற்படி தொகை 12-ல் கழித்து மீந்த ராசி யெதுவோ அதிற் சனி வரும்

போது பிதுர் மாரகமென்பதாம். இந்தப்படியே முன் கூறிய 3-வித மாரகங்களில் இரண்டு விதம் கூடினாலும் பிதுர் மாரக முண்டாம். அதுவல்லாமல் உன்னுடைய வினையமுஞ் சேர்த்து பார்ப்பாயாக.

## 789

(இ-ள்.) குரு நின்ற இராசிப் பரலை சூரியனிருந்த இராசிக்கு 2-ம் ராசிப் பரலும், அல்லது குணசமுகப் பரலாலும் பெருக்கி 2-ல் கழித்த மீதி நல்ல நட்சத்திரம் ஏற்பட்டதோ அதன் திரிகோண ராசியில் குரு வரும்போது பிதிர் மாரகமென்பதாம்.

## 790-791

(இ-ள்.) சூரியன் நின்ற ராசிப் பரலை சூரியனுடைய குண சமுகத்தாற் பெருக்கி 27-க்கு ஈந்த மீதி நட்சத்திரத் திரி கோணங்களிற் சனி வரும்போது பிதுர் மாரகமாம். சூரியனுடைய குணசமுகத்தை 8-ல் பெருக்கி 12-க்கு ஈந்த மீதி ராசி திரிகோணங்களிற் சூரியன் வரும்போது பிதுர் மாரகமென்பதாம்.

## 792

(இ-ள்.) சந்திரன் நின்ற ராசிப் பரலை சூரியனுடைய குண சமுகப்பரலால் பெருக்கி 27-க்கு ஈந்த மீதி நட்சத்திர மெதுவோ அந்த நட்சத்திர திரிகோணங்களில் சந்திரன் வரும்போது பிதுர் மாரகமென்பதாம்.

## 793-794

(இ-ள்.) 9-க்குடையவர் இருந்த இராசியின் பரலை சூரிய னுடைய குணசமுகப் பரலால் பெருக்கி 12-ல் கழித்து மீந்த இராசி திரிகோண இலக்கினத்திற் பிதுர் மாரக மென்பதாம். இவ்விதமாக மேற்கூறிய ஐவர்களும் சேருங் காலத்தில் பிதுர் மாரகமென்பதாம். இதுவல்லாமல் திசாபுத்தியும், காலச்சக்கர திசையும் சேர்த்து பார்க்கில் பிதுர் மாரக நிச்சயமாம். இவ்வித மாக மற்ற 7-கிரகத்திற்கும் கணிதஞ் செய்து கொள்ளவும்.

## தாய் முதலியோர் மாரக விதி

### 797-799

(இ-ள்.) சந்திரன் அட்டவர்க்கத்தின் குண சமுகப் பரலைச் சந்திரனுக்கு 4-ம் இடத்தில் நின்ற பரலைக் கொண்டு பெருக்கி மாதுர் மாரகங் கூறுவாயாகவும். செவ்வாய் அட்டவர்க்க குண சமுகத்தை செவ்வாய்க்கு 3-லிருந்த பரலைக் கொண்டு பெருக்கி முன்போல் ஒவ்வொரு கணிதமுஞ் செய்து சகோதர பலாபலன் அனைத்துங் கூறுவாயாக. புதன் குண சமுகப் பரலை புதனுக்கு 2-லிருந்த பரலையும் புதனிருந்த பரலையுங்கொண்டு பெருக்கி முன் போல் கணிதம் பண்ணி மாமன்-வித்தை பலன் அனைத்தும் கூறுவாயாக.

### 800

(இ ள்.) குருவின் குண சமுகப் பரலால் குருவிருந்த ராசிக்கு 5-ம் ராசிப்பரலைக்கொண்டு பெருக்கி முன்போல் கணிதம்பண்ணி புத்திரர்கள் அரிஷ்டங் கூறுவாயாக,

### 801

(இ-ள்.) சுக்கிரன் குண சமுகப் பரலை சுக்கிரனுக்கு 7-ம் ராசிப் பரலைக் கொண்டு பெருக்கி முன்போல் செய்து களத்திர மாரகங் கூறுவாயாக.

### 802

(இ-ள்.) சனி குண சமுகப் பரலை சனி 8-ம் ராசிப் பரலைக் கொண்டு பெருக்கி முன்போலச்செய்து ஜாதக மாரகங் கூறுவாயாக.

### 803

(இ-ள்.) சூரியன் முதலான நவக்கிரகாதிபர் நின்ற நிலையெல்லாம் சோதித்து ஜாதகருக்கு 7-க்குடையவர் சொந்தமாய்க் கொடுத்த வலியும் பார்த்து ஆயுளைக் கூறல் வேண்டுமாம்.

### 804-809

(இ-ள்.) குண சமுகப் பரலை 7-ல் பெருக்கி 27-ல் வகுக்க வந்தது வருஷமாம். அதில் வந்த மீதியை 12-ல்பெருக்கி 27-ல்

வகுக்க வந்த ஈவே மாதமாம். அதில் வரும் மீதியை 30-ல் பெருக்கி 27-ல் வகுக்க வந்த ஈவு நாளாகவும், அதில் மீந்த சேடத்தை 60-ல் பெருக்கி வகுக்க வந்த ஈவு நாழிகை யெனக் கொள்க.

## 807-808

(இ–ள்.) இதில் மீதியான சேடத்தை விஞடியாய் வகுத்துக் கொள்ளவும். முதன்மையில் வகுத்து வைத்த வருஷம் உயர்ந்திருந்தால் 27-ல் கழித்துவைப்பதே நிச்சய வருஷமென்றுங் குறிப்பிட்டுக் கொள்க. அவ்வாறே மாதம், நாள், நாழிகை, விஞடி குறித்து வைக்கவும்.

## அரண விரணம்

## 809

(இ·ள்.) இந்தவிதமாக ஆயுள் எடுத்துக்கொண்டு அரண விரணம் செய்யும் வகையைக் கூறுகின்றனம் கேட்பாயாக.

## 810

(இ-ள்.) 12-ம் இடத்தில் பாபரிருந்தால் அப் பாபர்களால் தந்த ஆயுளைத் தள்ளிப் போடவும், அவர்கள் உச்சமாகில் அவர் கொடுத்த ஆயுளில் பாதி தள்ளவும்.

## 811

(இ-ள்.) புண்ணிய கிரகங்கள் 12–ல் நின்ருல் அவர்களால் கொடுத்த ஆயுளில் பாதி நீக்கிப் போடவும். அவ் விராசி நட்பாயிருந்தால் அதிற் கண்ட ஆயுளில் மூன்றிலொன்று தள்ளவும்.

## 812

(இ-ள்.) லக்கிஞதிபதி ஆட்சி பெற்ருல் அவர் கொடுத்த ஆயுளில் 4–ல் ஒன்று தள்ளவும், 9–க்குடையவர் உச்ச மடைந்தால் 5-ல் ஒன்று தள்ளவும்.

## 813

(இ-ள்.) அந்த 9–க்குடையவர் பகைபெற்ருல் அவர் கொடுத்த ஆயுளில் மூன்றிலொன்று தள்ளவும், 11–ம் இடத்தில் பாபரிருந்தால் அவர் கொடுத்த ஆயுளில் பாதி தள்ளவும்.

### 814

(இ-ள்.) 10-ம் இடத்தில் பாபர் நிற்கில் அவர் கொடுத்த ஆயுளில் மூன்றிலொன்று தள்ளவும்; அதில் சுபர்கள் நின்ருல் அவர் கொடுத்த ஆயுளில் 6-ல் ஒன்று தள்ளவும்.

### 815

(இ-ள்.) 9-ஆமிடத்தில் பாபரிருந்தால் அவர்கள் கொடுத்த ஆயுளில் 4-ல் ஒன்று தள்ளவும்; 9-ல் சுபர் நிற்கில் அவர் கொடுத்த ஆயுளில் 8-ல் ஒன்று தள்ளவும்.

### 816

(இ-ள்.) 8-ஆமிடத்தில் பாபரிருந்தால் அவர்கள் கொடுத்த ஆயுளில் 5-ல் ஒன்று தள்ளவும்; சுபரிருந்தால் அவர்கள் கொடுத்த ஆயுளில் 10-ல் ஒன்று தள்ளவும்.

### 817

(இ-ள்.) 7-ம் இடத்தில் பாபியிருந்தால் அவர் கொடுத்த ஆயுளில் 6-ல் ஒன்று தள்ளவும்; சுபரிருந்தால் அவர் கொடுத்த ஆயுளில் 12-ல் ஒன்று தள்ளவும்.

### 818

(இ-ள்.) அஸ்தமனமடைந்த கிரகத்திற்கு அவர் கொடுத்த ஆயுளை தள்ளிப் போடவும்; சத்துரு ஸ்தானங்களில் நின்ற கிரகங்களுக்கு 3-ல் ஒன்று தள்ளவும்.

### 819

(இ-ள்.) துட்டக் கிரகங்கள் சத்துரு கிரகத்துக் குட்பட்டால் அவர்கள் கொடுத்த ஆயுளில் பாதி தள்ளவும். செவ்வாய்க்கு சத்துரு பார்வையாகிலும், சத்துரு ராசியில் நின்ருலும் அரண மில்லையாம்.

### 820

(இ-ள்.) சந்திரனேடு 2-கிரகங் கூடினுல் அந்தச் சந்திரனுல் 2-கிரகங்களுக்கும் புத்தகங்களுண்டு. அவ்விருவருக்கும் வந்த ஆயுள் தொகையில் பாதி தள்ளவும்.

821

(இ-ள்.) ஒரு ராசியில் 3-4-கிரகங்கள் கூடி நின்ருல் அதில் உயர்ந்தவர் ஆயுளைத் தள்ளவும், மேற்கூறியவர்களோடு சந்திரன் கூடினுலும் பார்த்தாலும் அவர்கள் கொடுத்த ஆயுளில் பாதி தள்ளவும்.

822-826

(இ-ள்.) இவ்விதமாக நான் கூறியவண்ணம் நீக்கில் அதிலுண்டாகிய வருடத்தை செய்யும் மார்க்கம் கூறுவதைக் கேட்பாயாக. முன்கூறிய வருடத்தை 324-ல் பெருக்கி 365-ஆல் வகுத்து வரும் ஈவை 27-ஆல் வகுக்க வரும் தொகை வருடமாகவும், பாக்கியை 12-ல் பெருக்கி 27-ஆல் வகுக்க வருந் தொகை மாதமாகவும், இவ்விதமாக வருடம், மாதம், நாள், நாழிகையாக கணித்துக் கொண்டு முன்கூறிய ஐந்து பாகங்களை கருத்துள் மதித்துக் கொண்டு ஆயுளைக் கூறல் வேண்டுமாம். இந்தப் பிரகாரம் சோலை நெருங்கிய திருவேரகப்பதியில் வளரும் மன்னனுகிய அரங்கைய பூபனீன்றெடுத்த என் குருவாகிய வீரப்பபிள்ளை அன்பு மிகுந்து எனக் குபதேசஞ் செய்தார். நிலைபெற்ற சங்கராச்சாரியார் வாக்கியங்களும் இவ்வாறு கூறுகின்றனதென அறிவாயாக.

இலக்கின ஸ்புட விவரணம்

827

(இ-ள்.) சுத்தமாகிய வாக்கிய பஞ்சாங்கத்தைக் கொண்டு கிரக நாயகர் அருளைப் பெற்று ஒவ்வொரு கிரகங்களுக்குள்ள ஆதியந்தத் தொகையை ஆய்ந்தெடுத்து வாக்கினுல் ஸ்புட கணிதங் கூற என் குரு பாதம் வாழி பெறக்கடவது.

828

(இ-ள்.) இமைக்கும் காலம் ஒரு மாத்திரை யென்றும், இப்படி 30-மாத்திரை கொண்டது தூர்ப்பரை யென்றும், தூர்ப்பரை 60-க்கு விகலை ஒன்ருகவும், விகலை 60-கொண்டது கலை யென்றும், கலை 60-கொண்டது ஒரு பாகை யென்றும், பாகை 30-கொண்டது ஒரு ராசி யென்றுங் கொள்ளவும்.

829

(இ-ள்.) இச் சாதகன் ஜெனனமான நாழிகையும், முன் நட்சத்திரத்தில் சென்ற நாழிகையும் அறிந்துகொண்டு பிறகு ஒரு ராசியை 9-கூறுசெய்து அதில் ஒரு கூறு வழுவில்லாமற் செய்தும், அவ் விராசிக்குள்ள பாகையை 9-பங்காய்ப் பகுக்கவும்.

830

(இ-ள்) முன் பகுத்ததற்கு ஈந்துவரும் ஈவை நடத்துகின்ற பாதத்திற் சென்ற நாழிகை யறிந்து மேற்கூறிய ஈவுக்கு பெருக்க வரும் தொகை ஸ்புடமாம். பிறகு அதிற் சென்ற நாழிகையும் கூறுவோமாக.

831

(இ-ள்.) விஞடி நாலரையும், கலை ஒன்றுகவும் மதித்து இவ் வாறு எந்த பாதத்தில் எவ்வளவு கலை செல்லுமோ அக் கலைக் கும், 4½-விஞடிக்கும் பெருக்கி அதில் வந்த நாழிகையை விஞடி செய்யவும்.

832

(இ-ள்.) இதுவே இலக்கின ஸ்புடமென் றறிந்து கொள்ள வும். இனி நவக்கிரக ஸ்புடம் செய்யும் விதம் காண்க ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒவ்வொரு பாதத்திலுள்ள ஆதியந்த நாழிகை யைக் கண்டெடுத்து.

833

(இ-ள்.) பிறகு அப் பாதத்திற்குள்ள கலைதனை பாகம் செய்து முன் எடுத்த ஆதியந்த நாழிகைக்குக் கொடுத்து வந்த ஈவை வைத்துக்கொண்டு கிரகம் அப் பாதம் ஆதிமுதல் ஜாதகன் ஜெனித்த நாழிகை வரையில் எடுத்து முன் வந்த ஈவினுல் பெருக்க வந்தது கலையாம்.

834

(இ-ள்.) பிறகு அவ் விராசியிற் சென்ற பாதத்தின் ஸ்புடத் தைக் கூட்டி பாகை, கலை, விகலை, தற்பரை, விதற்பரை யென் றெடுத்து கொள்ளவும். அப் பாதத்திற் சென்ற நாழிகை இவ்வள

வென்று கூறுவோமாக, முன் அப் பாதத்தில் பெருக்கி வந்த கலையை 4½-யால் பெருக்கி 60-ல் வகுக்க நாழிகையா மெனக் கொள்க.

## 835

(இ-ள்.) இந்தப் பிரகாரம் நவக்கிரக ஸ்புடம் செய்யவேண்டு மாம் ; இதில் ராகு, கேது வக்ரக்கோட்கள் ஆகிய இவர்கள் தலை கீழாக வருபவர்கள் ஆனதால் புத்தி கூர்மையினுற் கண்டு கூறல் வேண்டுமாம்.

## 836

(இ-ள்.) இனி எழுவகைத் தோற்றம், 84-லட்சம் பிறப்பை விரிவாக என் குருவாகிய வீரப்பபிள்ளை யென்னும் கல்வி மேகம் திருவாய் மலர்ந்தருளிய வண்ணம் கூறுகின்றனம் கவனம் வைத்துக் கேட்பாயாக.

### எழுவகைத் தோற்ற மறிய

## 837

(இ-ள்.) எழுவகைத் தோற்ற மறியும்படி பூமியின்கண் தேவர், மானிடர், விலங்கு பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரமென்னும் எழுவகைத்தோற்றமாம். அதை உண்மையான வேதங்களாற் கண்டு கூறுவேன் கேட்பாய் மைந்தனே ! ஒரு இலக்கினந் தன்னை 9-பங்கு செய்து ஒரு பங்கொன்றுக்கு 200-கலை யென்று முன் கூறியபடி கண்டு கொள்வாய் எழுவகைத் தோற் றம், 200-கலையையும் விசாரித்து வரும் அது விபரங்கேள் : தேவர், மக்கள், விலங்கினம் இவைகளை 28-பாகமாகச் சொல்ல வும். பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவர, பேத ஜீவர் 38-பாகமாகவுங் கூறல் வேண்டுமாம்.

## 838

(இ-ள்.) 200-கலையும், எழுவகைத் தோற்றமும் உள்ளதைச் சரிபண்ணி இதில் ஒரு கலையில் எழுவகைத்தோற்றம் உதிக் கின்ற உண்மையின் விபரமுங் கேட்பாயாக. தேவர், மக்கள் விலங்கினம், ஊர்வன, தாவரம், பறவை, நீர்வாழ்வன முதலிய 7-ம் ஜாதிகளும்; இனி 49-ம் பாகத்துளவில் விலங்கு, பறவை,

ஊர்வன, தாவரம், புள், விலங்கு, மக்கள், தேவர் ஒன்ருகுமாம்; தேவர், நீர் வாழ்வன, மானிடர், தாவரம், விலங்கு, ஊர்வன, பறவை, தேவர் ஆக 28-வகையும் தேவ அம்சமாம், அவருடன் 29-அம்சமாம்.

839

(இ-ள்.) ஆக 29-அம்சமும், தேவருக்கு ஆதியாக எண்ண வும் மக்கட்கு 8-முதல் 28-வரை எண்ணவும். விலங்கிற்கு 10-அம்ச முதல் 28 வரையில் பறவை யெனில் 15-முதலாகவும், ஊர்வனத்திற்கு 17-முதலாகவும், தாவரமெனிற் 20-முதலாக வும், நீர் வாழ்வுக்கு 28 முதலாகவும் நடக்குமாம். இவைகளை விபரமாய்த் தெரிந்து எண்ணி அம்சத்தை ஒன்றிட்டு அறிந்த பிறகு ஓசை ராசியாகில் ராசியில் முற்பதந் தேவாங்கிசமாம். 2-மக்கள் அம்சமாம் 3-விலங்கு அம்சமெனவும், 4-பறவை, 5-ஊர்வன 6-தாவரம், 7-நீர்வாழ்வன என்றறியவும்.

840

(இ-ள்.) 8-முதல் தேவராதியாக முன் கூறிய விதிப்படி 1-முதல் 7-வரையிற் கண்டு கொண்ட பிறகு உக்கும விராசி யாகில் 7-முதலாக 1-வரையில் தலைகீழாக மாறி 7-வகைத்தோற் றமுங் கண்டுகொள்வாயாக. தேவரம்சத்தில் மக்கள் தோன்று வாராகில் அவரில் மக்களென்றும், அவரில் 7-வகைத் தோற்ற முண்டென அறியவும். பிற்பட்ட மற்றைய வங்கிசங்களு மிவ் வாறே பகுத்தறிந்து ஒரு அம்சத்தில் பலர் வரினும் அம்சத்தின் குணகுணம் பெறுவார்களென மூன்றும் பிறையை முடியிலணிந்த சிவபெருமானுக்கு குருவாய் விளங்கும் சுப்ரமண்யக் கடவுள் வள ருந் திருவேரகப்பதியிலிருந்த தெய்வீக சித்தனென்னும் என் குருவாகிய வீரப்ப பிள்ளை கார்கால மேகம்போல் கூறலுற்ருர்.

841

(இ-ள்.) அருமையான வேதங்களுக்கு மூர்த்திகரமான என் குருவே! நீவிர் கூறிய விரிவாகிய பாகங்கள் யாவும் பிரகாசமாய்த் தெரிந்தேன். இன்னும் ஒரு லக்கினத்தில் இரண்டு பிள்ளைகள்

பிறக்க அவர்களுக்கு யோகங்கள் வெவ்வேருகின்றமையால் அதன் விவரம் விளங்கச் செய்வீராக

842

(இ-ள்.) ஒரு லக்கினத்தில் இரண்டு பிள்ளைகள் பிறக்க அக் காலையில் வலிமையான யோகக் கிரகங்களும் நீச கிரகங்களுந் தோன்றுமாகில், அவ்விரண்டு சாதகருக்கும் யோகங்கள் வேறு படுமென்பதாம். அப்படி வேறுபடும் விதங்களை வெளிப்படை யாகத் தெரிவிக்கின்றனர்.

843-844

(இ-ள்.) ஒரு லக்கினத்திற்கு கலை-1800 அக் கலையை 12-ல் கழிக்க மீதியான தொகையை ஓசை ராசி யென்பதும், உக்கும ராசி யென்பதும், ஆண் ராசி பெண் ராசியானதால் அதை மேஷ ராசி தொட்டு ஒன்றை விட்டு ஒன்று வருமாம். அதாவது மேடம், மிதுனம், சிம்மம், துலாம், தனுசு, கும்பம் இந்த 6-ராசியும், ஓசை ராசி யென்றும் இடபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் இந்த 6-ம் உக்கும ராசி யெனக் கொள்க.

845

(இ-ள்.) முன் கலையை 12-ல் கழித்து மீதியான தொகையை மேஷ முதலா யெண்ணும்போது ஓசை ராசியாகில் அதுவே ஜாதக ஜென்ம லக்கின மென்றும் உக்கும ராசியாய் வரில் தலை கீழாக வெண்ணி யோட்டுவதே சுத்த லக்கின மென்றும் கூறப் படும். இதுவே ஜெனன காலத்தின் ராசி லக்கின நிச்சயமெனக் கொள்க.

846

(இ-ள்.) இந்தப் பிரகாரமே நவக்கிரகங்களும், கலை ஒன் றுக்கு ஒரு ராசியாகவும் ஓடும். அதை ஓசை யென்றும் உக்கும மென்றுங் கண்டு பலன் கூறல் வேண்டுமாம்.

847

(இ-ள்.) மேற்கூறிய பலன்களைக் காண்பதற்கு மார்க்கம் கேட்பாயாக. ராசி சக்கரத்துடன் ஒரு கலை ஒன்றுக்கு சதமஷ்ட சக்கர கருமத்தையும் விசாலமாகத் தெரிந்து பலன் கூறல் வேண்டுமாம்.

## 848

(இ-ள்.) ராசியின் பலன்களும்; சதமட்டமத்தின் பலன்களும் ஆகிய இரண்டும் பூர்த்தியாய்த் தெரிந்து கொண்ட பின்னர்ச் சகலமும் தெரியும்படி கூறுவாயாகவும்.

## 849

(இ-ள்) அதுவன்றியும் தசவர்க்க சக்கரங்களும் கண்டு துவாதசாம்ச சக்கர நிலையுங்கண்டு பலனை நிச்சயஞ் செய்ய வேண்டுமாம்.

## 850

(இ-ள்.) உண்மையுடைய அழகிய என தாசிரியரே! நீர் கூறியவண்ணந் தெரிந்து கொண்டேன். பிறகு தசவர்க்கத்தின் விபரந் தெரியப்படுத்துவீராகவும்.

### தச வர்க்கம்

## 851

(இ-ள்.) புத்திரனே! தசவர்க்கம் அடைப்பதற்கு ஒரு மனதாய் நிற்பாயாக. ஜாதகன் உதித்த நாழிகையைத் தெரிந்து லக்கினத்தை அடைத்து நவக்கிரகத்தின் ஒவ்வொரு பதங்களைக் கண்டு தெரிந்து கொள்வது ராசிச் சக்கரம்.

## 852

(இ-ள்.) இரண்டாவது ஓரை சக்கரமாகும். ஒ-ராசியை இரண்டாகப் பிரித்து முதற்பாகம் சூரியவோரை யென்றும், பிற்பாகம் சந்திரவோரை யென்றும், ஓசை ராசிக்குச் சரியாகவும் உக்குமமானல் தலைகீழாகப் போட வேண்டுமாம்.

## 853

(இ-ள்.) ஓரை ராசியில் நின்றவர்கள் முதலிற் சூரியவோரை பெறுவாராகில், அதுவே ராசியில் அடைக்கவேண்டுமாம். பிற்பாகம் சந்திர வோரை பெறுவாராகில், அது முதல் இரண்டாவது ராசியில் அடைக்கவும். இனி உக்கும ராசியின் விபரங் கூறுவோம்.

## 854

(இ-ள்.) உக்கும ராசியில் முதற் பாகம் 15-பாகைக்குள் சந்திர வோரை பெற்றால், அதுமுதல் 7-வது ராசியில் அடைக்க வேண்டுமாம். அதில் பிற்பாகம் 15-பாகைக்குள் சூரிய வோரை பெற்றால், அதுமுதல் 6-ம் இடத்தி லடைக்கவும், இப் பிரகாரம் சுக்கிர நாடியிற் கூறியவண்ணம் நீ காண்கவும், இது ஓரைச் சக்கரமாம்.

## 855

(இ-ள்.) இனி திரேக்காணச் சக்கரத்தை கூறுவோம். நீ நினைவாகக் கேட்பாயாக. ஒரு ராசியை 3-பாகஞ் செய்து அந்த திரிகோணத்தினுள் சக்கர மாதியாக.

## 856

(இ-ள்.) சரம், ஸ்திரம், உபயம் என்னும் 3-இராசியை வரிசை யாகக் கொண்டு சரராசியானால் 1-2-9, ஸ்திர ராசியானால் 9-1-5, உபயராசியானால் 5-9-1 எனவும் எண்ணி கிரகமடைக்கவேண்டு மாம். இனி திரிமிசாம்ச மடைக்கும் வகை கூறுவோமாக.

## 857

(இ-ள்.) ஒரு இராசி 30-பாகையில் ஓசை இராசிக்கு செவ் வாய்க்கு 5-பாகை, சனிக்கு 5 பாகை, குருவுக்கு 8-பாகை, புத னுக்கு 7-பாகை, சுக்கிரனுக்கு 5-பாகைக்குள்ளாகவும் அடைக்க வேண்டுமாம். உக்கும ராசியாகில் 5-பாகைக்குள் சுக்கிரனாகவும் 7-பாகைக்குள் புதனாகவும், 8-பாகைக்குள் குருவாகவும், 5-பாகைக்குள் சனியாகவும், 5-பாகைக்குள் செவ்வாயாகவும் இடமாக அடைக்கவும்.

## 858

(இ-ள்.) மேற்கூறிய வண்ணம் ஓசை ராசியாகில் 5-பாகைக் குள் நின்றோர்கள் மங்களனென்னும் செவ்வாய் பாகம் பெற்றால் மேஷ்ராசியிலடைக்கவும். உக்கும ராசியா யிருந்து மேற்கூறிய செவ்வாயின் பாகம் பெற்றால் பெண்ராசியாகிய விருச்சிகத்தி

லடைக்கவும்; அதுபோலவே சனிக்கு கும்பம் மகரமாகவும், குரு வுக்கு தனுசு மீனமாகவும், புதனுக்கு மிதுனம் கன்னியாகவும், சுக்கிரனுக்கு துலாம் இடபமாகவும் இவ்வாறு அடைத்துக்கொள்ளவும். இனி சத்தாங்கிசத்தைக் கூறுவோம்; ஓர் மனதாய் நின்று கேட்பாயாகவும்.

## 859

(இ-ள்.) மேற்கூறிய சத்தாங்கிசத்தின் விவரம் ஒரு ராசியை 7-கூறுகச் செய்து ஆண் ராசியாகில் வரிசையா யடைக்கவும். பெண் ராசியாகில் அதற்கு 7-ம் இராசி முதல் வரிசைக் கிரமமாய் யடைத்துக்கொள்ளவும் இனி நவாங்கிசத்தி னியல்பைக் 'கேட்பாயாக.

## 860

(இ-ள்,) ஒரு ராசியை 9-கூறு செய்து அந்த ராசி திரிகோணத்துள் சரராசி முதல் அடைத்துக் கொள்ளவும். இனி தசாங்கிசத்தினியல்பைக் கேட்பாயாக.

## 861

(இ-ள்.) ஒரு ராசியை 10-பாகம் செய்து ஓசை ராசியாகில் அந்த ராசி முதலாகவே அடைக்கவும், உக்கும ராசியாகில் 9-ம் இராசி முதல் நேராக அடைக்கவும் இவை தசாங்கிசமென்று அறிவுள்ள நூலோர் கூறிய முறையாம்.

## 862

(இ-ள்.) இனி துவாதசாம்சம் கேட்பாயாக: ஒரு ராசியை 12 – பாகம்செய்து ஆண் ராசிக்கும், பெண் இராசிக்கும் அந்தந்த இராசி முதலாகவே அடைக்கவும்.

## 863

(இ-ள்.) கலாங்கிசத்தி னியல்பைக் கேட்பாயாக: ஒரு ராசியை 16-பாகஞ் செய்து ஆண் ராசிக்கு மேஷ முதலாக மீனம் வரையில் வந்தும் இராசி மண்டலத்துக்குள் பிரமன், மால், அரன், ரவி ஆகிய இராசியும் நேராயடைக்கவும், பெண் ராசிக்கு ரவி, அரன், மால், பிரமன், மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம், மிதுனம், இடபம், மேஷம் என்று அவசௌவ்வியமாய் அடைத்துக்கொள்வது காலாங்கிசச் சக்கரமாம்,

## சஷ்டி யாங்கிசம்

### 864

(இ-ள்.) ஒரு ராசியை 60-பாகம் செய்து 12-ல் கழித்து வருந் தொகையை மேஷ முதல் மீனம் வரையில் அடைக்கவும். பிறகு வரும் தேவாங்கிசத்தை ஆண் ராசிக்கு நேராகவும் பெண் ராசிக்கு கடைசி முதல் நேராகவுங் கொள்ளவும்.

### 865

(இ-ள்.) மேற்கூறிய சஷ்டியாங்கிசம் 60-க்கு அம்சத்தி னியல்பைக் கூறுகின்றனம். நவக்கிரகத்தின் அம்சந் தெரிந்து கூறுவோமாகில் பலன்கள் யாவும் தவருமல் நடக்குமாகையால் அந்த 60-அம்சத்தின் பெயரைத் தனித் தனியாகக் கூறுவோ மாக.

## தேவாங்கிச மறியும்படி

### 866

(இ-ள்.) கோராம்சம், இராட்சாம்சம், தேவாங்கிசம், குபே ராங்கிசம், ரக்ஷக்ஷோகணம், கின்னரம், அருட்டம், குதக்கினம், அம கிரளகோளம், அக்கினி, மாயம், பிரேதபுரி, பதியாம்சம், அம ராம்சம், கரலப், ராகியா், அமுதம், சந்திரன், மதிமயக்கம், மிருத்து, கோமளம், வனவாசம், லட்சுமி, வாகீசம், திகம்பரம், தொடர்ச்சி, மித்திரம், கலிஞசம், பாசம், பூமிசுரம், கமலாகாரம், குளிகாங்கிசம், அவமிருத்து காலம், தவாக்கினி, அகோரம், யம கண்டம், சுதாங்கிசம், அமிர்தம் பூரணமதி, விடபரிதி, குலநா சனம்.

### 867

(இ-ள்.) முக்கியம், சேதம், உற்பாதம் காலருபம், சௌம சுபாக்கியம் பிரதக் சந்திரமுகம், யம், கொடிமிருத்து, சீதளம், அசுபம், அதிசீதம், பயோததி, கண்ணம், தண்டம், நிர்மலம், சுபம், இத் தேவாம்சமாம் இத் பிராணுயும், இந்து அம்சம் ஆகிய 60-ம் தேவாம்சமாம் இத் முதல் நேராகவும் உக் தேவாம்சங்களை ஓசை ராசிக்கு

கும ராசிக்கு இந்து அம்ச முதல் இடமாகக் கொள்ளவும். முன் கூறிய தசவர்க்கத்தின் வழிகளைக் கண்டு அதை சஷ்டியாம்சத்தி லேற்றிப் பக்குவமாக மேற்கூறிய வண்ணம் கிரகாதிபதிகளது கதியையோர்ந்து கூறுவாயாகில் பலன் தவருது நடக்குமாம்.

868

இ-ள்.) தச வர்க்கங்களி லிருக்கும் கிரகங்களை அந்தந்த ஸ்தானப் பிரகாரம் அடைத்துப் பார்க்குங் காலையில் ஒரு கிரகம் ஆட்சி.உச்சம் நட்பு ஆகிய சுபவர்க்க மேறினுல் பாரிசாதாம்ச மென்றும் அதற்குப் பலன் சந்ததமும் சுகியா யிருப்பனும் 3-சுப வர்க்க மேறினுல். உத்தமாங்கிச மென்றும், அதற்குப் பலன் வாகன முடையவராயும் அற்ப ரோகமுடையவராயுங் கூறப் படும். 4-சுப வர்க்க மேறினுல் கோபுராங்கிச மென்றும், அதற்குப் பலன் வாகனம், தனம் உண்டாம். 5-சுப வர்க்கமேறினுல் சிங்கா சனுங்கிஷம் அதற்குப் பலன் செல்வ முடையவராம்.

868

[2] 6-சுப வர்க்க மேறினுல் பார்க்கவதம்ச மென்றும், அதற்குப் பலன் வித்தையும், புத்தியும் உடையவராம். 7-சுப வர்க்கமேறினுல் கனக யோக முடையவராம். 8-சுப வர்க்க மேறினுல் வைசேடிகாம்ச மென்றும், அதற்குப் பலன் ராஜாதிபதி யாம். 9-சுப வர்க்க மேறினுல் ஐராவதாங்கிச மென்றும், அதற் குப் பலன் அஷ்ட ஐஸ்வரியமுடையவ னென்றும், 10-சுப வர்க்க மேறினுல் தேவேந்திராம்சமாம். அதற்குப் பலன் இந்திரயோகி யென்றும், சார்வபௌமனென்றுங் கூறப்பட்டது.

869

(இ-ள்.) நிலைமை பெற்ற கோட்களின் அவஸ்தையை நிர் ணயமாக ராசியை 5-கூறு செய்து முதல் வாலிபம், யௌவனம், கௌமாரம், விருத்தம், மரணம் என 5-ம் இதில் ராகு, கேதுக ளுக்கு மட்டும் தலைகீழாய் வருமாம். இதில் ராகு, கேது, சனி இவர் களுக்கு விருத்தர் அவஸ்தையும், சுக்கிரனுக்கு வாலிப மரணமும் நீங்கலாக மற்ற அவஸ்தைகள் சுக மென்றும் ; செவ்வாய்க்கு

விருத்த அவஸ்தை மரணவஸ்தையும் தவிர மற்றவை சுகமென்றும், புதனுக்கு மரண அவஸ்தை நீங்கலாக மற்றவை சுபமென்றும், சூரியனுக்கும் குருவுக்கும் மரண அவஸ்தையொழிய மற்றவை சுகமென்றும் சந்திரனுக்கு யௌவன அவஸ்தை சுகமென்றும் கூறியது.

துவாதசாம்சச் சக்கரம்

1 - வது ராசிச் சக்கரம்

870

(இ-ள்.) துவாதசாம்சச் சக்கர சூட்சுமத்தை கேட்பாயாக. முதற் சக்கரத்திற் கூறிய தன்மையே ராசிச் சக்கரமாம்.

2 - வது ஓரைச் சக்கரம்

871

(இ-ள்.) இரண்டாவது சக்கரம் எப்படியெனில் முன் தசவர்க்கத்திற் சொல்லிய ஓரைச் சக்கர முறையெனக் கொள்கவும்.

3 - வது கடிகை சக்கரம்

872

(இ-ள்.) ஒரு ராசியை 60-கூறு செய்து கூறொன்றுக்கு ராசியை வகுத்த பின்னர் ஆண் ராசியாகில் நேராகவும்; பெண் ராசியாகில் இடமாகவுங் கொள்கவும்.

4 - வது ஆரூட லக்கின மறியும்படி

873

(இ-ள்.) லக்கினம் ஆதியாக ராசிநாதனை ஸ்புடரீதியாய்த் தெரிந்து அவரிருந்த ராசி முதற்கொண்டு லக்கின மடைக்க வேண்டுமாம்.

5 - வது நட்சத்திர லக்கின மறியும்படி

874

(இ-ள்.) நட்சத்திரத்திற் சென்ற நாழிகையை ஸ்புடரீதியாய்க் கண்டு 5-க்கு ஒரு ராசியாகவும் வகுத்துக்கொண்டு அசுவினிக்கு இடமாக அடைக்க வேண்டுமாம்.

ப-தி-மகா-முஸ்ம் இவ்வக்கு

## 6 - வது காரகலக்கின மறியும்படி

### 875

(இ-ள்.) ஒரு ராசியை 60-பங்கு செய்து ராசி ஒன்றுக்கு 5-கூருகப் பாகித்து யேறியதை அக் கிரக முதலாக அடைக்க வேண்டுமாம்.

## 7 - வது ஆதரிச் சக்கரம்

### 876

(இ-ள்.) லக்கினம் நட்சத்திரம் பாதம் ஆகிய மூன்றையும் ஸ்புடரீதியாய்க் கண்டு அதுமுதல் பாதம் 55-போடவும், அவ ரவர்களிருந்த பாதந்தான் முதலாக 55-பாதம் வரையில் அடைத் துப் பலன் கூறல் வேண்டுமாம்.

## 8 - வது ஆயுர்ப்பாகச் சக்கரம்

### 877

(இ-ள்.) ஒரு ராசியை 12-பங்கு செய்து சந்திரனிருந்த நவாங்கிச முதல் அடைப்பது ஆயுர்ச்சக்கரமாம்.

## 9 - வது திரேக்காணச் சக்கரம்

### 877

(இ-ள்.) ஒரு ராசியை 3-கூறு செய்து அதிற் பொருந்திய திரிகோணத்தில் சரராசி முறையாகக் கண்டு அடைத்து பலன் கூறல் வேண்டுமாம்.

## 10 - வது அங்கிசச் சக்கர விதி

### 878

(இ-ள்.) ஒரு ரா்சியை 10-பங்கு செய்து சந்திரன் நின்ற இராசியாதிபதி நின்ற ராசியைத் தொட்டு அடைக்கவும். பெண் ராசியிலிருந்தவர்களுக்குச் சந்திரன் நின்றராசிக்கு 9-ம் ராசியைத் தொட்டு அடைக்கவும். இந்தப் பிரகாரம் எனது சற்குருவாகிய வீரப்ப பிள்ளை கூறிய வண்ணம் இதுவே யாம்.

## 11-வது நவாங்கிச சக்கரமும் 12-வது பாவகச் சக்கர விதிகளும் காண்கவும்

### 879

(இ-ள்.) என்னுசிரியர் அருளிச்செய்த விதம் காண்க. ஒரு ராசியை 9-கூறு செய்து திரிகோணங்களில் சரராசியைக் கண்டு அடைத்துக் கொள்ளவும். இனி பாவகச் சக்கரத்தைச் சொல்வேன் கேட்பாயாக: ஒரு நக்ஷத்திரத்தை 12-கூறு செய்து மேஷ முதல் வலமா யடைக்கவும் உக்கும ராசியாகில் மீனம் முதல் இடமாக அடைக்க வேண்டுமாம்.

## துவாதசாம்ச சக்கர பலனறியும்படி

### 880

(இ-ள்) முன் கூறிய ராசிகளில் பலன் கூறும் விதம் தெரிந்து கொள்வாயாக: 1-வது ராசியின் சக்கரத்திற்கு இலக்கினுதிபதியைக் கொண்டும், ஓரைச் சக்கரத்திற்கு 2-க்குடையவரைக் கொண்டும், கடிகைச் சக்கரத்திற்கு 3-க்குடையவரைக் கொண்டும், ஆரூடச் சக்கரத்திற்கு 4-க்குடையவரைக் கொண்டும், நக்ஷத்திர பலத்திற்கு 5-க்குடையவரைக் கொண்டும், காரகச் சக்கரத்திற்கு 6-க்குடையவரைக் கொண்டும், ஆதரிச்சக்கரத்திற்கு 7-க்குடையவரைக் கொண்டும், ஆயுட் சக்கரத்திற்கு 8-க்குடையவரைக் கொண்டும், திரேக்காண சக்கரத்திற்கு 9-க்குடையவரைக் கொண்டும், அங்கிசச்சக்கரத்திற்கு 10-க்குடையவரைக் கொண்டும், நவாங்கிச சக்கரத்திற்கு 11-க்குடையவரைக் கொண்டும் துவாதசாம்சச் சக்கரத்திற்கு 12-க்குடையவரைக் கொண்டும் பலன் கூறல் வேண்டுமாம்.

## மங்களப் பொருத்தங்கள்

### 881 VMK

(இ-ள்.) தற்பராநந்த சொரூபராயுஞ் சற்குருவாயும் விளங்காநின்ற விற்பன்ன! பெண்ணுக்கும் ஆணுக்கும் பொருத்தங்கள் சொல்வதற்கு சுப விதிகள் எப்படி? ஏழையாகிய யானறிய பரத்துவநாயகா தயவு செய்து நவில்வீராகவும்.

882

(இ-ள்.) தினம், மகேந்திரம், யோனி, இராசி, இராசிக் கதிபதி கணம், இரச்சு, ஸ்திரீ தீர்க்கம், பக்ஷி, ஆயுள் சோதனை, வேதம், வசியம், மரம் இப்படி உலகத்தாரின் மன மயக்கருக்குப் 13-பொருத்தம் வகுத்திருக்கின்றனர்.

(1)

## தினப் பொருத்தம்

883

(இ-ள்.) பெண் நாள் முதல் புருஷன் நாள்வரை எண்ணினால், 2-4-6-8-9-10-12-14-16-19-22 இவைகள் பொருத்த நக்ஷத்திர மென்றும், மற்றவைகள் பொருந்தா வென்றுங் கூறியது.

(2)

## கணப் பொருத்தம்

884

(இ-ள்.) அசுபதி, மிருகசீரிடம், புனர்பூசம், பூசம், அஸ்தம், சுவாதி, அனுஷம், திருவோணம், இரேவதி ஆக 9-நக்ஷத்திரமும் தேவக மென்றும் கூறியது. இனி மனுஷ கணம் கூறுகின்றனம்.

885-886

(இ-ள்.) பரணி, உரோகணி, பூரம், பூராடம், பூரட்டாதி, உத்திரம், உத்திரட்டாதி ஆகிய 9-நக்ஷத்திரமும் மனுஷ கணமென்று கூறியது. மற்றை 9-நக்ஷத்திரமும் மனுஷ கணமென்றறியவும். இதில் பெண் நக்ஷத்திரமும், புருட நக்ஷத்திரமும் ஒரே கணமாகவரில் பொருத்த முண்டாம். தேவ கணமும், இராக்ஷத கணமும் வரில் பகையாம். மனுஷ கணமும், இராக்ஷத கணமும் வரில் உயிர் மரணமாம். மனுஷ கணமும், தேவ கணமுமாகவரில் மத்திமமாகப் பொருந்துமாம்.

(3)

## 3-வது கேந்திரப் பொருத்தம்

887

(இ-ள்.) பெண் நாள் முதல் புருடன் நாள்வரையில் எண்ணி வந்த தொகை 1-4-7-10-13-16-19-22-25 ஆனால் உத்தமப் பொருத்த மென்றுங் கூறியது.

4

## 4-வது ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம்

888

(இ-ள்.) பெண்ணுள் முதல் புருடனுள் வரையில் எண்ணும் போது 13-க்கு மேலானால் உத்தமப் பொருத்த மென்றும் கூறியது. இனி யோனிப் பொருத்தத்தின் விபரங் கேட்பாயாக.

5

## 5-வது யோனிப் பொருத்தம்

889

(இ-ள்.) இருவர் யோனியும் ஒன்று யிருந்தாலும், அல்லது பெண் யோனியானாலும் நன்மையாம். இரண்டும் ஆண் யோனி யானாலும். அல்லது மாறி நின்றாலும், பகை யோனியானாலும் பொருந்தாதென்றுங் கூறியது.

6

## 6-வது இராசிப் பொருத்தம்

890

(இ-ள்.) பெண் ராசி முதல் புருடன் ராசிவரையில் எண்ணும் போது 6-ராசிக்கு மேலானால் உத்தம மென்றும், செல்வம் கீர்த்தி, ஆயுள் ஓங்குமாம். இனி இராசி நாயகர் பொருத்தம் உணர்வாயாக.

7

## 7-வது இராசிநாயகர் பொருத்தம்

891

(இ-ள்.) பெண் இராசியாதிபதியும், புருடன் இராசியாதிபதியும் நட்பு பெற்றால் சுக பொருத்த மென்றும், பகை பெற்றால் பொருத்த மில்லையென்றும் கூறியது.

8

## 8-வது வசியப் பொருத்தம்

892-893-894

(இ-ள்.) மேஷ ராசிக்கு சிங்கமும், விருச்சிகமும் வசியமென் றும்; இடப ராசிக்கு கடகம், துலாம் வசியமென்றும் ; மிதுனராசி யாகில் கன்னி வசிய மென்றும், கடக ராசிக்கு விருச்சிகம், தனுசு

வசியமென்றும் சிங்க ராசியாகில் மகரம் வசியமென்றும்; கன்னியா ராசியாகில் இடபம், மீனம் வசியமென்றும் துலா ராசியாகில் மகரம் வசிய மென்றும்; விருச்சிக ராசியாகில் கடகம், கன்னி வசியமென்றும்; தனுசுக்கு மீனமும், மீனத்திற்கு கும்பமும், கும்பத்திற்கு மீனமும், மீனத்திற்கு மகரமும் இப்படியாக இராசிகள் ஒற்றிருந்தால் வசியப் பொருத்த முண்டென்றும்; சிறக்க வாழ்வு பெறுவா ரென்றுங் கூறியது.

## ரச்சுப் பொருத்தம்

(9)

### 895-896

(இ-ள்.) நேரில் மூன்று முக்கோணங் கீறி குறுக்காக நான்கு வரை கீறினல் 27-பொருத்தமாம், அதை முதல் கீழ் வரியில் அசுபதியை வைத்து மேல் கீழாக 27-நட்சத்திரமும் அடைத்துக் கொள்ளவும். பிறகு கீழிருக்கும் வரைக்கு காலென்றும், அதின் மேல் வரைக்கு தொடை யென்றும், அதற்கு மேல்வரைக்கு வயிறென்றும், அதன் மேல்வரைக்கு கழுத்தென்றும், அதன்மேல் தலையென்றுங் கூறவும்.

(10)

### 897-898

(இ-ள்.) இதன் காலின் வரைப்பொருத்தமாகில் பொருள் விரையமென்றும், தொடைப் பொருத்தமாகில் மல்டாவாளென்றும்; வயிருகில் புத்திர சேதமென்றும், கழுத்தாகில் அவமங்கலே யென்றும், சிரசாகில் சீக்கிரம் பெண் தீங்குபெறுவாளென்றும், இதில் தொடையும் காலுமாகில் மத்திமமென்றும், கழுத்துஞ் சிரசாகில் பொல்லாங்கென்றும், மற்றவை உத்தம மென்றுங் கூறப்பட்டது.

## வேதப் பொருத்தம்

(11)

### 899-900

(இ-ள்.) நேரே முக்கோணங் கீறி ஒரு கோணத்திற்கு நான்கு வரை கீறி அதில் முதல் கீழ்வரியில் அசுபதி முதலாக 27-நட்சத்திரமும் அடைத்துக்கொண்டு பெண் நட்சத்திரமும், புருட நட்சத்திரமும் குறுக்காகவிருக்கும் நேர்வரை தனில் வருமாகில் பொருத்தமில்லே யென்றும், மாறி நிற்குமாகில் உத்தமமென்றுங் கூறப்பட்டது.

## மரப் பொருத்தம்

### 901-902

(இ-ள்.) புருஷன் வைர மரமும், பெண் பால் மரமுமானல் புத்திரருண்டென்றும்; புருஷன் பால் மரமும், பெண் வைர மரமுமானல் மலடாவா ளென்றும்; இருவரும் வைர மரமாகில் புத்திர சேதமுண்டாகு மென்றும், இருவரும் பால் மரமானல் புத்திரானந்த செல்வ பாக்கியம் ஓங்குமென்றுங் கூறியது.

## புட் பொருத்தம்

### 903

(இ-ள்.) இருவர் பட்சியும் உறவாகில் வாழ்வு பெருகு மென்றும், பகைபெற்ருல் அற்ப வாழ்வென்றுங் கூறப்படும்.

## ஆயுட் பொருத்தம்

### 904-905-906

(இ-ள்.) பெண்ணுள் முதல் புருடனுள் வரையில் எண்ணிக் கூட்டி 7-ல் பெருக்கி 27-ல் கழித்து மீந்ததை வைத்துக்கொள்ளவும், புருடனுள் முதல் பெண்ணுள் வரையில் எண்ணி சேர்த்து முன்போல 7-ல் பெருக்கி 27-ல் கழித்து மீந்த தொகையை வைத்துக்கொண்டு இந்த 2-தொகையில் தாழ்ந்த தொகை யெதுவோ அவர்கள் முன் பதவி அடைவார்க ளென்றுங் கூறியது. ஆக 13-பொருத்தமும் முன்னேர்கள் கூறியவண்ணங் கூறியது.

### 907

(இ-ள்.) ஒப்பு உவமையில்லாத உத்தம சித்தமுடைய எனதாசிரியரே! இப் புவியின்கண் மங்கைக்கும், மணவாளனுக்கும் 13-பொருத்தமுங் கூடியிருப்பது அரிதாகையால், விசேடமாய் எவ்விதப் பொருத்த மிருக்கவேண்டும், அதை யருளிச் செய்வீராகவும்.

### 908

(இ-ள்.) கிருபை செய்யவேண்டு மென்ற புத்திரா! நக்ஷத்திரப் பொருத்தமும், கணப் பொருத்தமும், [illegible] பொருத்தமும்,

வேதப் பொருத்தமுமாகிய நான்கு பொருத்தமும் விவாகம் செய்யலாமென்றுங் கூறுக.

909

(இ-ள்.) அசுபதி நக்ஷத்திரத்தில் பிறந்த புருடன் மகர நட்சத்திரத்தில் பிறந்த பெண்ணை விவாகஞ் செய்வாராகில் புத்திரனில்லாமல் மன வெறுப்போடு கலகப்படுவார்க ளென்றும் ஒரு விதி. பிறகு அசுபதி ஒரே தாரமென்றும் பெருகிய பொருளோடு மைந்தர்களும் உண்டாகு மென்றும் ஒரு விதி. இப்படி ஒரு பாகத்திற்கு 2-வித பலன் கூறியிருப்பதால் அதன் ஞாயத்தை நுட்பமாக ஆராய்ந்து எடுத்துரைப்பீராகவும்.

910

(இ-ள்.) இன்னமும் புவியின்கண் உடலின் பொருத்தமும் உயிரின் பொருத்தமுமென்று இரண்டுண்டு கேட்பாயாக.

911

(இ-ள்.) முன் கூறிய உடற் பொருத்தம் 13-ம் சரியாகவரில் உயிர்ப் பொருத்தம் இதற்கு விரோதமாய் வரில் சங்கடப்படுவார்களென்றும் கூறப்பட்டது.

912

(இ-ள்.) எனதையனே ! உடற் பொருத்தங்கள் முன்னரே கூறினீர் ; அதைத் தெரிந்தேன். இனி உயிர்ப்பொருத்தங்கள் விபரமாய் மொழிந்தருள வேண்டும் கிருபாநிதியே.

913-914-915

(இ-ள்.) இலக்கினாதிபதி சுக்கிரன், சந்திரன் இவர்கள் நின்ற ராசிக்கு 1-2-7-8-ல் பாபக் கிரகங்கள் நிற்குமாகில் முழுப் பாப மென்றும், 12-ல் செவ்வாய் நிற்கில் கால்பாப மென்றும், மற்ற தீக்கோள்கள் ஆட்சி பெற்றிருந்தால் அரைபாப மென்றும், அத்தானாதிபதிகள் உச்சமாகில் முக்கால் பாபமென்றும், நட்படைந்தால் கால்பாப மென்றும், பகை பெற்றிருந்தால் முழுப் பாபமென்றும், நீசம் பெற்றால் ஒன்றேகால் பாபமென்றும் இந்தப் பிரகாரம் பாபத் தன்மையை யெடுத்துக் கொள்வாயாகவும்.

916

(இ-ள்.) இவ்விதமாக பெண்ணுக்கும், புருஷனுக்கும் பங்கமாகிய பாபத்தைக் கண்டு பிறகு பெண்ணுக்கு எவ்வளவு பாபம் அமைந்ததோ அதைவிட புருஷனுக்கு இரண்டு பங்கு பாபம் வேண்டுமென்றுங் கூறப்பட்டது.

917

(இ-ள்.) இப்படி புருஷனுக்கு இரண்டு பங்கு பாபங்கள் பெருமேயாகில், திரண்டபுத்திரரும், யோகமுஞ் செழிக்குமாம். அல்லது ஒன்றுக்கு ஒன்றைப் பாபமானாலும், பார்த்தாலும் முன்போல நற்பலனென்றுங் கூறுவார்கள்.

918

(இ-ள்.) பெண்ணின் பாபத்திற்குமேற் புருஷன் பாபம் கால் கூடியிருந்தால் விவாகம் செய்யலாம். பெண் பாவம் கால் கூடியிருந்தால் புருஷனைக் கொல்லுமென்றும் மதித்துக் கொள்க.

919

(இ-ள்.) பூமியின்கண் உடற் பொருத்தங்களும், உயிர்ப் பொருத்தங்களும் இருந்தால் விவாகஞ் செய்யலாமென்றும், புத்திரர் பெருகுமென்றுங் கூறியது. இதில் உயிர்ப் பொருத்த மில்லாவிடிற் பாழாய்ப் போகுமாம். ஆனதால் உடற் பொருத்தத்திற்கு உயிர்ப் பொருத்தம் மேலென்றுங் கூறியது.

920

(இ-ள்.) எனதாசிரியரே ! இதுவரையில் நான் கேட்டபடி உரை செய்து என் சந்தேகத்தை நிவர்த்தி செய்தீர்; இனி 12-பாவகமும் அருளிச்செய்து பூமியிலுள்ளோர் என்னை மதிக்கும்படி விதி முறைப்படி கூற வேண்டுமாம்.

கிரக வலிமை

921

(இ-ள்.) அசைவில்லாது நிலைபெற்ற குரு ரூபமாய்த் திருவேரக மலையினிடத்துச் சிவனுக்கு வேதங்களை உபதேசித்தவராகிய சுப்ரமண்யருடைய அருளைப்பெற்று நிறைந்த கணிதமென்

னுங் கடலை முற்று முணர்ந்து பெரிய சித்தி பெற்று வசையில் லாது பேரடைந்த வீரப்ப பிள்ளை யென்னு நாமத்தை யடைந்த எமது வள்ளலுடைய திருவடித் தாமரை மலரைத் துணையாய் வணந்து பூசித்து நின்று நவ நாயகர்க்கு அமைந்து நின்ற திசை புத்தி விபரம் இஃது ஒருவாறு தேர்ந்த மட்டுங் கூறுவேனுகவும். ஜென்ம லக்கினம் புருஷ ராசியாகில் வலமாகவும், பெண் ராசியா கில் இடமாகவும், லக்கின முதல் 12-ராசி வரையில் இவ்வாறு கண்டு கொள்ளவும். வலமாகில் முன் பார்வை யென்றும், இட மாகில் பின் பார்வை யென்றும் ராசியின் தானமும் அதுவே யென்றுங் கூறப்பட்டது

## 922

(இ–ள்.) கூறிய விதிப்படி அவரவர் ராசிபலன் கண்டு கிர கத்தின் வலி குறைவு தெரிந்து ஜென்மமானது பாபமென்றும் புண்ணியமென்றுந் தெரிந்து தந்தையின் யோகம் அவயோக மும் கண்டு முன் கூறிய விதிப்படி அமைந்த இலக்கத்தில் பொருந்திய 10–4-க்குடையர் வலியும் கோசர விதிகளும் ஆகிய பலன்களை யெல்லாம் ஆசிரியரால் சொல்லத் தெரிந்து பிறகு திசைபுத்தி அந்தரம் அந்தரா அந்தர முதலியவற்றின் உண்மை யைத் தெரிந்த பிறகு பலன் கூறல் வேண்டுமாம். அப்படியில் லாது துடிதுடித்துக்கொண்டு பதட்ட ஆராய்ச்சி செய்து சொல்ப வர்களுக்கும் நூல் கூறிய ஜோதிடர்களுக்கும் பழுது வருமென்றும் பழமையாகிய வேதங்கள் கூறுமென்பதாம்.

## 923

(இ-ள்.) 1-2-4-5-10-11-7 இவ்விராசிக்குடையவர்கள் சுக பலனைக் கொடுப்பா ரென்றும் இவர்களில் சிரேஷ்ட ஸ்தானாதிபதி 4–10-க்குடையவரென்றுங் கூறியது. 6-8-3-7-12-க்குடையவர் கள் சொற்ப பலன் கொடுத்தபோதிலும் பாபபலனே கொடுப்ப ரென்றுங் கூறியது. இன்னும் நல்லோர்கள் திசையில் செம்பாதி நற்பலன் கொடுப்பா ரென்றும் தீயோராகில் தமது திசையில் நற்பலன் தருவது வழக்கமா யிருக்கினும், எந்நாளும் நிலைபெற்ற தல்ல வென்றும், 3–க்குடையவர் உச்ச மடைந்தால் நற்பலன்

கூறப்படாதென்றும், 12-ம் இடத்தில் சுபர்கள் கூடி நிற்க 12-க்குடையவர் திசையில் அதிலிருந்த சுபர்கள் புத்தியில் சுகமாகிய வாழ்வைத் தருபவரென்றுங் கூற வேண்டுமாம்.

## 924

(இ-ள்.) ஒரு ராசியில் 2-3-கிரகங்கள் ஏறி யிருந்தால் அவர்களில் எவர் வலியரோ அவர் மற்றவர்கள் வலியைத் தான் அடைந்து தன் திசையில் மேன்மையான பலனைக் கொடுப்பாரென்றுங் கூறப்பட்டது. பிறகு இவர் பலத்தை அவர்களுக்குக் கொடுப்பரென்றும், 6-க்குடையவருக்கு 8-க்குடையவர் சுபராயிருக்கில் முன் கூறிய 6-க்குடையவர் திசையில் நற்பலன் கொடுப்பாரென்றும், மேற்கூறிய 8-க்குடையவர் பாபரா யிருக்கில், 6-க்குடையவர் பாபபலனைக் கொடுப்பாரென்றும், அல்லது அவர்களிருந்த நக்ஷத்திரத்திற்குரிய திசாநாதன் அவர் பலனை யடைந்து தன் திசை காலத்தில் தன் பலனைக் கொடுப்பரென்றும் மேலோர்கள் கூறுவார்கள். இனி சரம், ஸ்திரம், உபயம் இவ்விராசிகளில் பிறந்தவர்களுக்கு பலன்கள் அறியுமாறு விதி முறைப்படி கூறுவோமாகவும்.

## 925

(இ-ள்.) சரத்திற் பிறந்தவர்களுக்கு உபயராசியும், சர ராசிக்குடையவரும் நற்பலன் கொடுப்பாரென்றும், ஸ்திர ராசியிற் பிறந்தவர்களுக்கு உபய சர ராசியோர் தீம்பலன் கொடுப்பாரென்றும், இத் தன்மைபோல் ஸ்திர ராசியிற் பிறந்தவர்களுக்கு உபய ஸ்திர ராசிக்குடையோர் பலன் கொடுப்பாரென்றும், சரராசிக்குடையவர் தீம்பலன் கொடுப்பாரென்றுங் கூறியது. உபய ராசியில் ஜனித்தவர்களுக்கு உபய ஸ்திரராசிக்குடையவர்கள் பலன் கொடுப்பாரென்றும், சர ராசிக்குடையவர் தீம்பலன் கொடுப்பாரென்றும், 7-க்கு 10-லிருந்தவர்களும், மேற்கூறிய மூவர்களும் ஆகிய நால்வர்களையும் 8-க்குடையவர் நோக்கில், அவர் பலனை ஒன்றாக முறைப்படி கொடுப்பாரென்றும், 9-க்குடையவரை 12-க்குடையவர் நோக்கில், தன் பலனை அவருக்களித்து 8-க்குடையவர் பலனைத் தானடைந்து பலன் கொடுப்பார்களாம்.

## 926

(இ-ள்.) 2-3-க்குடையவர்களை 6-க்குடையவர் சேர்ந்தாலும், பார்த்தாலும், நற்பலன் துர்பலமாகவும், துர்பலன் நற்பலமாகவும் செய்பவரென்றுங் கூறியது. இன்னமும் ஒரு சூட்சுமமுளது. ஒரு கிரகத்திற்கு இரண்டு ஆதிபத்தியமும், ராசியாதிபத்தியமும் பெற்று 8-க்குடையவர் நோக்கப்பட்டாலும், சரராசியிலிருந்தாலும், மூவர்கள் கூடி ஒருவாறு தீங்கு பெற்றும் ஒருவாறு நன்கு பெற்றிருந்தாலும், இவையெல்லாங் கத்தி முனையில் நிற்பவர்கள் மனம்போல் கூர்மையாக நோக்கி அவர்கள் திசா புத்தி வலுவு மிடருந் தெரிந்துவருந் தீங்கெல்லாம் அற்ப மென்றும், நற்பலன் ஒன்றிற்கிரண்டு செய்வாரென்றுங் கூறியது.

## 927

(இ-ள்,) திசாநாதன் பாவியாயிருந்தாலும், முன்கூறிய செயலெல்லாம் பொருந்தி யிருந்தாலும், தீம்பலனெல்லாஞ் சொற்ப நற்பலனாகவும், நற்பலனெல்லாம் அதிக தீம்பலனாகச் செய்வரென்றுங் கூறியது. இன்னும் ஒருவன் திசையில் நிற்கின்றவர் வலியடைந்தாலும் கேந்திராதிபதியும் அவரோடு கூடினாலும், அவரைப் பார்த்தவர்களும் திரிகோண ராசியில் நின்றவர்களும் அத் திசையின் பதியின் பலனை யடைந்து தங்களில் வலுத்த பேர்கள் எவரோ அவர்கள் முற்பலனாகக் கொடுப்பரென்றும் 3-2-11 இதற்குடையவர்கள் திசை பொருந்தி பலமுள்ளவர்கள் பார்த்தவர்கள் அத் திசையோர் பலத்தை வாங்கி மேன்மையான பலனைக் கொடுப்பரென்றுங் கூறியது. பிறகு திசாநாதனுடைய பலனென்று கண்டு தெரிந்துள்ளோர் கூறுவார்களாம்.

## 928

(இ-ள்.) 8-12-க்குடையவர்கள் ஒருவர்க்கொருவர் மாறி நின்றால் அவர்கள் நடத்தும் பலனைக் கூறுகின்றனம். மேற் கூறியவரோடு இருந்தோர்கள் பார்த்தோர்கள் இவர்களுடைய பலனும், சேர்ந்தோர் பலனும் கொடுப்பாரென்றும் கூறப்பட்டது. இன்னமும், இதில் ஓர் வினயங் கூறுவோமாகவும், மாரகாதிபத்தியம் எவருக்கு உரித்ததெனில் மாரகாதிபரோடு சேர்ந்தவர்கள் அவரை நோக்கினவர்கள் இவர்களை நன்குக வரிந்து நிலைபெற்ற

மேலான அதிகாரி திசை இன்னுரெனக் கண்டு அக் காலையில் இவ்வித வலியுடையவ ரெவரோ அவர் புத்தியில் மாரகம் வரு மென்றறிந்து கொள்கவும்.

## முதற் பாவகம்

### 929

(இ-ள்.) இலக்கினத்தைக்கொண்டு கீர்த்தி, குணம் யோகம் அழகு, ஆயுள், சுதேச வாசம், விர்த்தி கல்வி, அறிவு, பரிசுத்தம் ஆகிய பலன்களைக் கூறும் வண்ணம் ஞானரூப தயாநிதியைத் துதி செய்வோமாகவும்.

## யோக்கியதாமிசை

### 930

(இ-ள்.) 9-ஆமிடத்தில் 2-3 க்குடையவர்கள் கூடி நிற்கவும், 5-க்குடையவர் 2-ல் அமரவும், சுபக்கிரகங்கள் லக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் யோக முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| பு | | | |
| ல<br>சு-சந் | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | | செ<br>குரு | |

[2] 9-க்குடையவரும், லக்கினுதிபதியுங் கூடி 4-ஆமிடத்தில் நிற்கவம், 2-ம் இடத்தில் குருவோடு சுபர்கள் கூடி யமரவும் பெற்ற ஜாதகர் கல்வி புகழ் தனம் செல்வ முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செ<br>சந் | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சு-பு<br>குரு | லக் | | |

## வாய்மை

### 931

(இ-ள்.) 5-க்குடையவர் உச்சமடைய அவரை 2-க்குடையவர் பார்க்கவும், லக்கினத்தில் சுபக்கிரகங்கள் கூடியும், நிற்கவும் பெற்ற ஜாதகன் உவமையில்லாத கொடையாள ஞவனும்

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | சனி |
| செ | | | |
| கு-ச<br>லசு பு | | | |

[2] 3-க்குடையவர் பகை வீட்டில் மாறி நிற்கவும், அவரைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகன் சத்திய முடையவனும் மேற் கூறிய கிரகங்கள் தேவ வர்க்கத்தில் பலம் பெற்ருல் தசரதன்போலும் அதிகக் கொடையாள னுவனும்.

சனி
குரு
செ
இராசிச் சக்கரம்

## சற்குணம்

## 932

(இ-ள்.) 5-10-க்குடையவர்கள் கூடி சனிக்கு 3-ஆமிடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகரை வஞ்சமில்லாத கொடையாளி என்றும் தனவானென்றுங் கூறப்படும்.

இராசிச் சக்கரம்
செ
பு
ல
சனி

[2] சந்திரனுக்கு 2-க்குடையவரும், குருவுங் கூடி சந்திரனுக்கு கேந்திரமடையவும் பெற்ற ஜாதகர் குணமும் சுகமுமுடையவராம். அன்றியும் இவனைக் கண்டவர்கள் மேகத்தைக் கண்ட மயிலைப்போலச் சந்தோஷப் படுவர்களாம்.

## உதார குணம்

## 933

(இ-ள்.) 5-க்குடையவர் 10-ல் நிற்கவும், சனிக்கு 5-ஆமிடத்தில் 11-க்குடையவர் உச்சமடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் கொடையாளியாயும், கல்வி கேள்வியில் வல்லவ னுவனும்.

சு
இராசிச் சக்கரம்
ல
சனி
செ

[2] 5-ம் இடம் சனி வீடாகவும், அதிற் சந்திரன் அமரவும், சூரியன் உச்சமடையவும் பெற்ற ஜாதகர் கொஞ்சமேனும் கபட மில்லாதவராயும், கபடமுள்ளவர்களைத் தெரிந்து கொள்ளுஞ் சக்தி யுள்ளவராயும், நன்னடக்கை யுடையவராயும், கொடை யாளியுமாவராம்.

## 934

| | | | |
|---|---|---|---|
| | புசெ கு-சு | | |
| | இராசிச் | சக்கரம் | |
| | | | ல |
| | | | |

(இ-ள்.) புதனும் 9-5-3 க்குடைய வர்களும் ஆகிய நால்வருங் கூடிக் கேந்திர மடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகரை விஷ்ணு அம்சமென்று உலகங் கூறுமாம்.

| | | | |
|---|---|---|---|
| | ல | | குரு சனி |
| சந் | இராசிச் | சக்கரம் | |
| செ | | | |
| | | | |

[2] சந்திரனுக்கு 3-க்குடைய வர் உச்ச மடையவும், 10-9-க்குடைய வர்கள் கூடி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் கொடையிற் பெருமையுந் தனமு முடையவராம்.

## தருமமும் அழகும்

## 935

| | | | |
|---|---|---|---|
| | | | குரு பு |
| | இராசிச் | சக்கரம் | |
| | | | |
| சந் | | | ல |

(இ-ள்.) லக்கினாதிபதியும் 4-க் குடையவருங் கூடி கேந்திர மடைய வும், சந்திரன் நட்பு பெற்று மேற் கூறியவர்களை பார்க்கவும் பெற்ற ஜாதகர் இராஜசுக முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | |
| | இராசிச் | சக்கரம் | ல |
| பு சந் | | | |
| | | | |

[2] லக்கினாதிபதியும், 3-க்குடை யவருங் கூடிக் கேந்திர மடையவும், அவர்களை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகன் அழகனாய்த் தர்ம குணமுள்ள வனாம்.

## கண் மயக்கும் வித்தியா வளம்

### 1069

(இ-ள்.) 2-4-க்குடையவர்கள் புதன் ஆகிய மூவருங் கூடி 9-ல் நிற்கவும், 8-க் குடையவரும், இலக்கினாதிபதியும், உச்ச மும், ஆட்சி யடையவும் பெற்ற ஜாதகர் கண்கட்டி மாருட்ட வித்தைகளைத் தெரிந் தும் மனம் திருப்தியடையா தலைவராம்.

| | | | |
|---|---|---|---|
| பு சூ-சு | | | |
| | இராசிச் சக்கரம் | | ல சந் |
| | | | |
| | | சனி | |

[2] 3-ம் இடத்தில் 8-6-4-3-க்குடை யவர்கள் நிற்கவும், இவர்களை 9-ல் இருந்து செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

| | | | |
|---|---|---|---|
| ல | | சு·பு சூ | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | செ | | |

## சம்ப்ரதாய வித்தியா வளம்

### 1070

(இ-ள்.) 10-ம் இடத்தில் 2-க்குடையவரும், சனியும், செவ் வாயும் நிற்கவும், இவர்களை குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாத கரும்,

[2] சந்திரனுக்கு 2-க்குடையவரும், குடும்பாதிபதியுங் கூடி 7-ல் நிற்கவும், இவர்களை குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாத கரும்,

[3] 2-க்குடையவரும், இலக்கினாதிபதியுங் கூடி 7-ல் நிற்க வும், இவர்களை குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகர்களும் சம்ப்ரதாயமாக உபாய வித்தை யாளர்களாம்.

## வாக்கூனம்

### 1071

(இ-ள்.) 2-க்குடையவரும், சுக்கிர னும், புதனும் கூடி 6-ல் இருக்கவும், 6-8-12-ல் நிற்க்வும் பெற்ற ஜாதகர் வாக்கறி யாத ஊமையராம்,

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | |
| சுக் சூ-பு | | | குரு |

[2] 6-க்குடையவருஞ் சுக்கிரனுந் தூம கிரகமுமாகிய மூவரும் 6-8-ல் நிற்கவும், 8-2-க்குடையவர்கள் பலங் குறைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் வாக்கறியாத ஊமையனும். குரு பார்த்தாலும் அவ்வித பலனேயாம்.

1072

(இ-ள்) 2-க்குடையவரும் குளிகனுங் கூடி 12-ல் நிற்கவும், லக்கினத்தில் யமகண்ட னமரவும், தூமன் 2-ஆமிடத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மருண்ட ஊமையராம்.

[2] 2-ல் குரு விருந்தாலும் வாய் குளறுமென்றுங் கூறியது.

[3] 2-க்குடையவர் தூமன் யமகண்டன் ஆகிய மூவருங் கூடி 8-ல் நிற்கவும், இவர்களை குரு பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகன் ஊமையனும். குரு 2-ல் நின்ருலும் சில நேரங்களில் வாய்குளறுமாம். 2-ல் சந்திரன் நிற்கில் வாக்கு பங்கமில்லையாம்.

ஊன் நிவர்த்தி

1073

(இ-ள்.) சனி 4-ல் நிற்கவும், லக்கினுதிபதி நீசமடையவும், சந்திரனுக்கு 10-ல் 8-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகர் மிகுந்த ஊமையா யிருப்பாராம். ஆனுல், இச் சக்கரத்தில் 5-ல் குரு நிற்கவும், 11-ஆமிடத்தில் சந்திரனும் நிற்பாராகில் மேற்கூறிய ஜாதகரே காவியங்களெல்லாங் கூறுவாராம்.

| | | | |
|---|---|---|---|
| புத | செ | | |
| | இராசிச் | | சந் |
| குரு | சக்கரம் | | |
| சனி | | | ல |

1074

(இ-ள்.) 6-ல் சுக்கிரனும் கேதுவும் கூடி நிற்கவும், சனி 11-ல் அமரவும், 9-ம் இடம் சூன்யமா யிருக்கப்பெற்ற ஜாதகனை ஊமையனென்றுங் கூறியது. ஆனுல், மேற்கூறிய சக்கரத்தில் இலக்கினத்தில் குருவும், 7-ல் சந்திரனும் புதனும் நிற்கவும் பெற்ருல் கணிதாதி இலக்கண நூலாசிரிய கவிஞரு மாவராம்.

| | | | |
|---|---|---|---|
| | சுக் கே | சந் பு | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | ல குரு | ரா | சனி |

## 1075

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | குரு | ல சுக் | சனி பு-சூ |

(இ-ள்.) புதன், சனி, சூரியன் ஆகிய மூவருங்கூடி 12-ல் நிற்கவும், செவ்வாய் 8-ல் அமரவும் பெற்ற ஜாதகர் ஊமைய னென்றுங் கூறியது. அச்சக்கரத்திற் றுனே லக்கினத்தில் சுக்கிரனும், 2-ல் குருவு மிருந்தால் தமிழ்ப் புலவ னென் றுங் கூறப்பட்டது.

[2] சனி சந்திரனேடு கூடி 12-ல் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு வாய் குளறுமென்றும், அதில் 11-ல் குரு விருந்தால் அவை நீங்கி காவிய நூல் அறியுங் கவிஞ ராவராம்.

### புறனடை யங்கம்

## 1076

(இ-ள்.) நீச னின்ற ராசிநாதன் ஆட்சி உச்ச மடைந்தால் நீச பங்க ராஜயோக மென்று கூறியதுபோல், முன் கூறிவந்த ஊமையர்கள் பிறகு உரைத்த விதியினுல் வித்துவானுன தன்மை யைப் பிரித்து உணர்ந்து கொள்ளவும். இன்னும் குற்றமற்ற வாக்குஸ்தான வலியும், 4-5-9-11-இத் தானங்களையும், குரு-சுக்கிரன்-புதன்-சந்திரன்-செவ்வாய் இவர்களுடைய தன்மை யையும், ஆய்ந்தறியவும், இதில் புதன், குரு இவ்விருவர் வலிமை யுந் தீர்க்கமாய்க் கண்டு பலன் கூறவேண்டுமாம்.

## 1077

(இ-ள்.) இந்த விதமாக மேலும் கீழும் எடுத்துரைத்த ஜாத கர்களை யல்லது மற்றவர்கள் எத் தரத்தா ரென்ருல், மந்தமாகிய கல்வியும், எழுதி யனுப்பிய ஓலைகளை வாசிக்க வல்லவரென் றறிய வும், ஆருல் இவர்கள் முன்னுரைத்த புலவர்கள்போலு மல்லர், பின்னுரைத்த முழுப்புலவரு மல்லர், ஊமையரு மல்லர். தந் தமக்கு யெழுதப்படிக்க சாமர்த்திய முள்ளவர்க ளாவாராம்.

### துர் வசனம்

## 1078

| | | | |
|---|---|---|---|
| பு | சுக் | | |
| | இராசிச் சக்கரம் | | செ |
| குரு | | | |
| | | | ல |

(இ-ள்.) 2-3-4-1-க் குடையவர் களாகிய நால்வரும் துர்ப்பல மடைந்து நிற்கப் பெற்ற ஜாதகருடைய வாக்கில் நின்று வருவதெல்லாம் பொய் யுரையால் புனைந்த வஞ்சக வசனமே யன்றி மற்ற நல்வசன மில்லையாம்.

[2] 4–5–8-க்குடையவர்கள் 12-ல் நிற்கவும், அல்லது நீசம் பெற்று நின்ருலும்,

[3] 2–4-க்குடையவர்கள் நீசமடையவும், அவர்களை 8-க் குடையவர்கள் பார்க்கப் பெற்ற இவ்விரண்டு தரமுள்ள ஜாதகர் களும் மேற்கூறிய விதி யுடையவரேயாம்.

1079

(இ-ள்] சனி 2–ல் நிற்கவும், 5–ல் ராகு அமரவும், 8-க்குடை யவர் 4–ல் நிற்கவும், இலக்கினத்தில் சூரியன் அமரவும், 8-ல் புதனுஞ் சுக்கிரனும் நிற்கவும், 11-ல் ராகு அமரவும் பெற்ற ஜாத கர் வஞ்சகம், பொய், சத்தியம், வீண் வார்த்தை யுடையவராம்.

## புறநடை யங்கம்

1080

(இ-ள்.) மேற்கூறிய பலன்களில் புதன் வலியும் 4-ம் இடத்தின் வலியும், சுக்கிரன் வலியும், சந்திரன் வலியும், 5-ம் இடத்தின் வலியும், 2–9–11-இத் தானங்களின் வலியுங் கண்டு அறிந்தது பெரிதல்லவாம். ஆனுல், குரு நிற்கும் வலிமையை நன்கறிந்து அதன் தேவரும் தானமும் நன்மையாகில் ஜாதக னும் நன்மை பெறுவனும்.

## நேத்திர ஊனம்

1081

(இ-ள்.) 2-ம் இடத்தில் 8-க்குடைய வர் நிற்கவும், 4-ம் இடத்தில் பாபர்கள் நிற்கவும், இவர்களைக் குரு பார்க்கா திருக் கவும் பெற்ற ஜாதகருக்கு 2-கண்ணு மில்லை யென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| பு | சுக் | சனி-கு ரா-செ | |
| ல | இராசிச் சக்கரம் | | சந் |
| | | | |
| குரு | கே | | |

[2] 12-க்குடையவர் 2-ல் நிற்கவும், 4-ம் இடத்தில் ராகு அமரவும் பெற்ற ஜாதகருக்குப் புண் போல் 2 கண்களும் புகைந்து போகுமாம்.

## 1082

(இ-ள்.) 3—க்குடையவர் 6—ல் நிற்கவும், 2—ம் இடத்தைச் சூரியன் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 2—கண்ணும் ஊனமாம்.

[2] சுக்கிரன் ஆட்சி உச்சமடையவும், புதன் திரிகோண கேந்திரத்தில் நிற்கவும், சந்திரன் 5—ல் நிற்கவும், குரு லக்கினத்தில் அமரவும் பெற்ற ஜாதகருக்கு ஒரு கண்ணுமாத்திரம் தெரியுமாம்.

| | | | |
|---|---|---|---|
| | சந் | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| ல குரு | | சு | பு |

## 1083

(இ-ள்.) 2—க்குடையவர் நீசமடையவும், அவரை இலக்கினுதிபதியும் 12—க்குடையவருங் கூடி கட்டி நிற்கவும், 8—க்குடைடவர் 6—ல் அமரவும், இவரைச் சனி பார்க்கவும் பெற் ஜாதகன் பிறவிக் குருடனும் கடவுள் கிருபையும் அவ்விதமேயாம்.

| | | | |
|---|---|---|---|
| பு-கு சந் | | | |
| | இராசிச் சக்கரம் | | சனி |
| குரு | | | ல |
| | | | |

## 1084

(இ-ள்.) 2—க்குடையவருஞ் சூரியனுங் கூடி 6—ல் நிற்கவும், அவர்களையும் 2—ம் இடத்தையும், சுக்கிரனையும், சனி பார்க்கவும் பெற்ற ஜாதருக்கு குரு, சுக்கிரன் பார்வையில்லா திருக்கில், பால் போலும் வெள்ளை நேத்திர முடையவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சு—கு | இராசிச் சக்கரம் | | |
| குரு | | | சனி |
| | | | ல |

## 1085

(இ-ள்.) கடக லக்கினத்தில் ஜெனிக்க 2-ல் சனி, செவ்வாய், 2—க்குடையவர் ஆகிய மூவரும் நிற்கவும், அவர்களைச் சுக்கிரன் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு நேத்திர ஊனமென்றுங் கூறியது.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | ல பு |
| | | | சனி குசெ |
| | | | சுக் |

[2] குரு, சுக்கிரன், 10-6-க்குடைய வர்கள் ஆகிய நால்வரும் 6-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு கடவுள் தண்டனை யில் மத்தியில் கண் ஊனப்படுமாம்

| | | | |
|---|---|---|---|
| | செகு<br>சூ—சு | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | ல | | |

## 1086

(இ-ள்.) 2-க்குடையவர் செவ்வாய் குளிகன் ஆகிய மூவரும் 2-ல் நிற்கவும் அவர்களை குரு பார்க்கா திருக்கவும் பெற்ற ஜாதகர் கண் கிடைத்தும் மத்தி யில் வலிநோயினுல் மாறி விடுமாம்.

| | | | |
|---|---|---|---|
| கு | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | ல |
| | | | பு செ<br>சனி |

[2] 2-க்குடையவர், சுக்கிரன், சந்திரன், ஆகிய மூவரும் பகை பெற்று ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குக் கண் ணழியாது மத்தியில் மாலைக் கண்ணுண்டாகுமாம்

## 1087

(இ-ள்.) லக்கினுதிபதியும், 2 7-க் குடையவர் சந்திரன் ஆகிய நால்வர் களும் 6-ல் நிற்கவும், இவர்களை சுக்கிரன் பார்க்காதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு சூலைநோயினுல் கண் துயருற்று கலிக்க மிட்டாலும் கண்கரையாதென்றும் கூறி யது.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| சூ—பு<br>சந்—ச | | | ல |
| | | | |

## 1088

(இ-ள்) சுக்கிரனுஞ் சூரியனுங் கூடி 2-ல் நிற்கவும், இவர் களைக் குரு பாராதிருக்கவும் பெற்ற ஜாதகருக்கு மேகப் படலத் தினுல் கண் மங்கிப் போகுமாம்.

[2] சனி, சுக்கிரன், லக்கினதிபதி ஆகிய மூவர்களும் 2-ல் பகைபெற்று நிற்கவும், இவர்களை குரு பாராதிருக்கவும் பெற்ற ஜாதகர் கேந்திர ஊன முடையவராம்.

1089

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சுக் | இராசிச் | | |
| | சக்கரம் | | சந் |
| | ஞா | சனி | ல |

(இ-ள்.) 2-ல் சனி நிற்கவும், 3-ல் சூரியன் அமரவும், சந்திரன் 12-ல் நிற்கவும், சுக்கிரன் 6-ல் அமரவும் பெற்ற ஜாதகருக்கு நேத்திர நோய் 66-ம் உண்டாகுமாம்.

[2] சுக்கிரனும் 2-க்குடையவரும் கூடி 6-ல் நிற்கவும், 2-ம் இடம் சூன்யமாய் நிற்கப் பெற்ற ஜாதகருக்கு கடவுள் கிருபையால் ஒரு கண் தெரியுமாம்.

1090

(இ-ள்.) லக்கினதிபதி 6-க்குடையவர் சூரியன் ஆகிய மூவரும் லக்கினம் அல்லது 2-ம் இடத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் பூனைக் கண்ணுகுமாம்.

[2] 2-க்குடையவர் 8 ல் நிற்கவும், சந்திரன் சனியோடு கூடி 2-ம் இடத்தைப் பார்க்கவும், சூரியன் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் பூனைக் கண்ணுகுமாம்.

1091

(இ-ள்.) 2-க்குடையவர் 12-ல் நிற்கவும், 2-ம் இடத்தைச் சனி பார்க்கவும், 2-ம் இடம் சூன்யமாய் நிற்கப்பெற்ற ஜாதகருக்கு கண் ஊனத்திற்கு ஏதுவாகும்.

[2] சுக்கிரன் சந்திரனுக்கு திரிகோண மடையப் பெற்ற ஜாதகருக்குக் கண்ணில் ஊன மில்லையாம்.

உண்ணும் பாத்திரம்

1092

| | | | |
|---|---|---|---|
| ல | சுக் | | செ ச குரு |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | | | |

(இ-ள்.) 2-க்குடையவர், சந்திரன், குரு ஆகிய மூவர்களும் கேந்திர திரிகோண மடையவும், லக்கினதிபதியுஞ் சுக்கிரனுங் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் சுத்தமாகிய வெள்ளி பாத்திரத்தில் உண்பாராம்.

[2] 2-4-க் குடையவர்களும், சந்திரன், இராகு ஆகிய நால்வர்களுங் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் வெள்ளிப் பாத்திரத்தி லுண்பாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| கே | இராசிச் சக்கரம் | | ல |
| | | | கு-சு ராச்ந் |
| | | | |

[3] சுக்கிரன், சந்திரன், குரு ஆகிய மூவர்களுங் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் வெள்ளிப் பாத்திரத்தில் உண்பாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | ல |
| | இராசிச் சக்கரம் | | சு-கு சந் |
| | | | |
| | | | |

## 1093

(இ-ள்.) 2-1-12-க் குடையவர்கள் ஆகிய மூவரும் இலக்கினத்தில் நிற்கவும், 2-ம் இடத்தைக் குரு பார்க்கவும், சந்திரன் 9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் தங்கப் பாத்திரத்தி லுண்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | சந் |
| | இராசிச் சக்கரம் | | குரு |
| | | | |
| | | லசு பு செ | |

[2] இலக்கினாதிபதியும், குருவுங் கூடி 5-ல் நிற்கவும், அதில் ஒருவர் உச்சமடையவும், சுக்கிரன் தன பாக்கியாதி புதியா யிருந்து கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் தங்கப் பாத்திரத்தி லுண்பாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | குரு |
| பு | | | |
| சுக் | | | ல |

## 1094

(இ-ள்) 2-க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும், புதனும் சந்திரனுங் கூடிக் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் வெள்ளிப் பாத்திரத்தி லுண்பாராம்.

| | | | |
|---|---|---|---|
| | | சந் பு | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | ல குரு | | |

| | | | |
|---|---|---|---|
| | | | ல-சூ சந் |
| | இராசிச் சக்கரம் | | சுக் பு |
| | | | |
| | | | |

[2] இலக்கினத்தில் சந்திரனும், சூரியனுங் கூடி நிற்கவும், 2-ல் சுக்கிரனும், புதனும் அமரவும் பெற்ற ஜாதகர் வெள்ளிப் பாத்திரத்தி லுண்பாராம்.

[3] சுக்கிரன் 10-ல் நிற்கவும், குரு 11-ல் அமரவும் பெற்ற ஜாதகர் வெள்ளிப் பாத்திரத்தில் ஜல முண்பாராம்.

## 1095

(இ-ள்.) வெண்கலம் இலைக்கலம், மரக்கலம், ஈயக்கலம், மண்கலம் இவைகளில் உண்பவர்களுக்குக் கூறுங்கால், பெருகி வருமென்று நிறுத்தப்பட்டது. இதிற் கிரகாதிகள் நின்ற விதமும், பதமும் பார்த்து நெடுநாளாய் மண்ணிற் புதைத்திருந்த தனங்களின் விபரத்தைக் கூறுகின்றனம் கேட்பாயாக.

## 1096

| | | | |
|---|---|---|---|
| | | சந் குரு | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| | செ | | ல |

(இ-ள்.) 4-11-க்குடையவர்கள் கூடி 9-ல் நிற்கவும், அவர்களைச் செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்குப் புதையல் கிடைக்குமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | ச-சு செகு |
| | | | |

[2] சந்திரன், செவ்வாய், 2-4-க்குடையவர்கள் ஆகிய நால்வருங் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் புதையல் கிடைக்குமாம்.

## 1097

(இ-ள்.) 6-4-11-க் குடையவர்கள் ஆகிய மூவரும் 2-ல் நிற்கவும், அவர்களைச் சந்திரன் பார்க்கவும், லக்கினத்தில் குரு அமரவும் பெற்ற ஜாதகருக்குப் புதையல் கிடைக்குமாம்.

| | | | |
|---|---|---|---|
| | | செ | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | சந் |
| | பு-ச சு-சு | ல குரு | |

## 1098

(இ-ள்.) சந்திரனுக்கும், செவ்வாய்க்கும், 9-க்குடையவர்களும், 11-க்குடையவரும், குருவும் ஆகிய நால்வருந் திரிகோணத்திலிருக்கவும், அவர்கள் 3-4-க்குடையவர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பூமியில் தன மெடுப்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| பு-சு கு-சு | | | |
| | இராசிச் | | |
| சனி | சக்கரம் | | சந் |
| | ல | சனி | |

## 1099

(இ-ள்.) இலக்கினுதிபதி 2-லிருக்கவும், 2-க்குடையவர் 11-ல் நிற்கவும், 11-க்குடையவரும், 4-க்குடையவரும் மேற்கூறியவர்களை பார்க்கவும் பெற்ற ஜாதகர் புதையல் எடுப்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | குரு |
| | இராசிச் | | சுக் |
| சந் | சக்கரம் | | |
| | | பு | ல |

### புறநடை

## 1100

(இ-ள்.) இந்தப் பிரகாரம் மேற்கூறிய லட்சணங்களில் கிரகங்கள் தேவவர்க்க பலமடைந்து நிற்பாராகில், மிகுதியாய் புதையல் கிடைக்கும்; அவ் வர்க்கங்களில் குறைந்திருக்குமாகில் சொற்பமாய்ப் புதையல் கிடைக்கும்.

## மிடற்று மயிர்

### 1101

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச் | | ராகு சனி |
| சந் கே | சக்கரம் | | |
| ல செ | | | |

(இ-ள்.) இராகுவும், 2-க்குடையவருங் கூடி 6-8-ல் நிற்கவும், அவர்களை 3-க்குடையவருஞ் செவ்வாயும் பார்க்கப் பெற்ற ஜாதகருக்குத் தொண்டைக்குள் தூறுபோல் மயிர் நெருங்கி யிருக்குமாம்.

[2] சந்திரனுக்கு 2-3-க்குடையவருமாகிய மூவர்களுங் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய பலனேயாம்.

### 1102

| | | | |
|---|---|---|---|
| | சனி-சு செ | | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| சுக் | குரு | | ல |

(இ-ள்.) 11-க்குடையவருந் தனுதி பதிக்கு 2-க்குடையவரும், 4-க்குடையவருக்கு 6-க்குடையவரும் ஆகிய மூவரும் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

## பல்

### 1103

| | | | |
|---|---|---|---|
| | ல | ராகு சனி | |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | செவ்-சு கே-குரு | | |

(இ-ள்.) 2-ல் பாபர்கள் நிற்கவும், பார்க்கவும், 8-2-க்குடையவர்கள் கொடிய பாபர்களோடும் 9-க் குடையவரோடுங் கூடி 2-ம் இடத்தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு வாளாயுதம்போல் பல்லுகள் வாய்க்குமேல் வளர்ந்திருக்குமாம்.

### 1104

(இ-ள்.) 2-க்குடையவர் 6-ல் நிற்கவும், சூரியன் 8-ல் அமர்ந்து நின்றாலும்,

[2] இராகு 4-ஆமிடத்தில் சுபக்கிரகங்களோடு கூடி நின்றாலும் அடுக்குப் பல் வரிசை யுண்டாம்.

## 1105

(இ-ள்.) 4-ஆமிடத்தில் ராகுவோடு 4-க்குடையவர் சந்திர ேேனாடு கூடி 6-8-12-ல் நிற்கப் பெற்ருலும்,

[2] லக்கினத்தில் சூரிய னிற்கவும், 2-க்குடையவர் 6-8-12-ல் நிற்கவும் பெற்ற இரண்டு ஜாதகர்களுக்கும் வாய்க்குள் பல் பருத்து நிற்குமாம்.

## 1106

(இ-ள்) சூரியன், செவ்வாய், சுக்கிரன் ஆகிய மூவர்களும் 8-ல் நிற்கவும், புதனும், குருவும் நீச மடையவும் பெற்ற ஜாதகருக்குப் பல்லொளி திகழ்ந்திருக்கும்

4
சூசெ சு
இராசிச் சக்கரம்
குரு
ல

## 1107

(இ-ள்.) 2-6-க்குடையவர்கள் கேதுவோடு கூடி 6-ல் இருக்கவும், 4-ல் சுக்கிரன் நீசமடையவும் பெற்ற ஜாதகருக்குத் தந்தநோய் உண்டென்றுங் கூறுவோம்

ரா
ல
இராசிச் சக்கரம்
செ-சர் கே
சுக்

## 1108

(இ-ள்.) 2-ல் இராகு நிற்கவும், 8-ல் சுக்கிரனும், 2-க்குடைய வரும் அமரவும், 6-ல் குரு நிற்கவும் பெற்ற ஜாதகருக்குச் சில பல் உடைபடுமாம்.

## 1109

(இ-ள்.) 2-க்குடையவரோடு சூரியன், செவ்வாய் கூடி 8-ல் நிற்கவும், புதனும், குருவும் பலஹீனப்பட்டு நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு பற்க ளெல்லாம் மத்தியில் போய்விடு மென்றும், அதனுல் சொல் வளம், வாக்குவளம் தவருதெனவுங் கூறுவாம்.

புத
சூசெ சுக்
இராசிச் சக்கரம்
குரு
ல

## செவி நோய்

### 1110

| | | | |
|---|---|---|---|
| | சனி கே | குரு | லசெ சந் |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சூ | பு சுக் | ரா | |

(இ-ள்.) செவ்வாயோடு 2-க்குடையவர் கூடி லக்கினத்தில் நிற்கவும், அவர்களை பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்குச் செவி நாயுண்டாம்.

### 1111

| | | | |
|---|---|---|---|
| | | சனி | |
| ல சுக் | இராசிச் சக்கரம் | | செ |
| | | | |
| | | | |

(இ-ள்.) கும்பத்திற் சுக்கிர னிற்கவும், 6-ல் செவ்வாய் நீசமடையவும், இவர்களைச் சனி பார்க்கவும் பெற்ற ஜாதகருக்குச் செவிநோயுண்டாகுமாம்.

### 1112

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செ | இராசிச் சக்கரம் | | |
| ல | | | சனி புத |
| | | | |

(இ-ள்.) 6-2-க்குடையவர்கள் 8-ல் பகைபெற்று நிற்கவும், அவர்களை 4-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்குச் செவிநோயினால் செவிடுண்டாம்.

### 1113

(இ-ள்.) சந்திரனுக்கு 6-3-க்குடையவர்களும், 8-ஆமிடத்திற்கு 9-க்குடையவருமாகிய மூவரும் கும்பத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் காது செவிடுபடுமாம்.

## சுவை

### 1114

(இ-ள்.) 2-லேனும் 3-லேனும் சூரியன் நின்று 2-3-க்குடையவரைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் கார்ப்பு சுவையில் விருப்ப முள்ளவராம்.

### 1115

(இ-ள்) முன் கூறியபடி 3-ல் 2-ல் சந்திரனின்று 3-12-க்குடையவரை பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு குளிர்ந்த துவர்ப்புள்ள கந்த மூலக்கறியில் விருப்ப முண்டா யிருக்கும்.

### 1116

(இ-ள்.) 3-லும் 2-லும் செவ்வாய் நிற்கவும், அந்த ராசியாதிபதி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் சீதளமுள்ள பண்டங்களில் பிரிய முள்ளவராம்.

### 1117

(இ-ள்.) 3-2-க்குடையவர்கள் புதனின்ற ராசியாதிபதியோடு கூடி மேற்கூறிய ஸ்தானங்களைப் பார்க்கவும் பெற்ற ஜாதகன் நிறைந்த அறுசுவைப் பண்டங்களைப் புசிப்பவனும்.

### 1118

(இ-ள்.) 3-லும் 2-லும் குரு விருந்து அந்த 3-2-க்குடையவர்களைப் பார்க்கவும், அல்லது நட்படைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் தேனிரம்பிய தித்திப்பில் பிரிய முள்ளவராம்.

### 1119

(இ-ள்.) 3-லும் 2-லும் சுக்கிரன் நிற்கவும் அவ் விராசியாதிபதியை நட்படைந்து பார்க்கவும் பெற்ற ஜாதகர் புளிப்பில் பிரிய முள்ளவராம்.

### 1120

(இ-ள்.) 3-லும் 2-லும் சனி நின்று 3-2-க்குடையவர்களைப் பார்க்கவும் பெற்ற ஜாதகன் ஈனமான கைப்பில் பிரியமுள்ளவனும், ஊனமாகிய மதுக்களை முண்ணுபவனு யிருப்பன்.

1121

(இ-ள்.) இந்த லக்கினத்தில் செனித்தா ரென்றிருந்தும் அத் தானுதிபதி கிரகங்களையும் கண்டு இன்னுருக்கின்னது உரிய தென்று நிதானித்து முன் கூறிய வழிபோல் கூறுவாயாகில் எல்லாம் பலிக்குமாம்.

மாரக விதி

1122

(இ-ள்.) முன்கூறிய 2-ம் இடமும் ஒரு மாரக ஸ்தானமான தால், இதில் சில மாரக விதிகளைக் கூறுகின்றனம். சூரியனும் செவ்வாயும் கூடி 6-7-8-ல் நிற்கவும், அவர்களைச் சனி பார்க்க வும் பெற்ற ஜாதகர் வைசூரியினுல் மாரக மாவராம்.

[2] புதன் 2-ல் நீச மடையவும், அவரைச் சனி கேந்திர மடைந்து பார்க்கவும் பெற்ற ஜாதகர் ரணகளத்தில் மாரக மாவ ராம்.

1123

(இ-ள்.) 2-7-க்குடையவர்களிருந்த ராசியாதிபதியைச் சனி பார்க்கவும் பெற்ற பாவ ஜெனன ஜாதகர் மிகுந்த நோய் களினுல் மரண மாவராம்.

[2] 3-6-க்குடையவர்களும் 8-ம் இடத்திற்கு 6-க்குடைய வரும் 9-ம் இடத்திற்கு 7-6-க்குடையவர்களும் ஜாதகரைக் கொல்வரென்று மேற்கூறிய மாரக ஸ்தானங்களில் மாரக புல மடைந்த ராசி யறிந்து கூறல் வேண்டுமாம்.

மூன்றும் பாவகம்

1124

(இ-ள்.) 3-ம் இடத்தைப் பற்றி வீரியம், யோகம், துணை வர், ஆபரணம், ஆளடிமை இன்னும் இதற்குரிய விதங்களை முறைப்படி கூறுவோமாக.

## சுக சகோதரம்

### 1125

(இ-ள்.) திருவேரகத்தில் வாழ்வுபெருகும் என் குருவாகிய வீரப்பபிள்ளை யென்னுஞ் சாஸ்திர முகிலின் உள்ளத்தின்கண் வைத்த அழகிய கருணையினால் ஒப்பாக நான் மூன்றும் பாவகத்தை கூறுவதற்கு அவர் கிருபையே உண்மையாகக் கொடுக்கு மென்பதாம்.

### 1126

(இ-ள்.) பூமியின்கண் மூன்றும் பாவகத்தை ஒயிற் கும்மி யாக வாசனை பொருந்திய துளபமாலையை யணிந்த மகாவிஷ்ணு வின் உபய தாமரைப் பாதங்கள் என் முடிக்கே முடியாகக் கொண்டு கூறுவேனாகவும்.

### 1127

| | | | |
|---|---|---|---|
| | ல | | சு-சந் |
| | இராசிச் சக்கரம் | | பு |
| | | | குரு |
| | | | |

(இ-ள்.) 7-4-க்குடையவர்கள் கூடி 3-ல் நிற்கவும், 3-க்குடையவர் கேந்திர மடையவும், குரு 5-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குச் சுகமாகிய நிலைத்த சகோதர முண்டாகுமாம்.

### 1128

| | | | |
|---|---|---|---|
| | | | சு-பு சந் |
| | இராசிச் சக்கரம் | | ரு |
| | | | |
| குரு | செ | ல சனி | |

(இ-ள்.) செவ்வாய்க்கு 3-க்குடைய வர் உச்சமடையவும், அவ் வுச்சம் நின்ற ராசியாதிபதி திரிகோண மடையவும், 3-ல் குரு நிற்கவும், அவரை சுபர்கள் பார்க்கவும்பெற்ற ஜாதகருக்குச் செல்வ முடைய துணைவர்கள் பலர்களுண்டாம்.

### 1129

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | இராசிக் சக்கரம் | | |
| | | | |
| | செ குரு | | சந் |

(இ-ள்.) 3-க்குடையவர் திரிகோண மடையவும், செவ்வாயோடு குருவுங் கூடிக் கேந்திர மடையவும் பெற்ற ஜாதக ருக்கு மகாவிஷ்ணு அம்சமாய்ச் சகோத ரர்கள் நிலைப்பார்களாம்.

## 1130

(இ-ள்.) 4-9-க்குடையவர் 11-ல் நிற்கவும், 11-க்குடையவர் 3-ல் அமரவும், சந்திரன் செவ்வாய்க்கு கேந்திர மடையவும் அவரை 7-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்குப் பேதகமில்லாத துணைவர்க ளுண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | செ |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | ல |
| சனி | | பு | சந் |

## 1131

(இ-ள்.) சந்திரனுக்கும் இலக்கினத்திற்கும் 3-க்குடையவர்கள் கூடி திரிகோண மடையவும், அவரை குரு பார்க்கவுஞ் செவ்வாய் திரிகோண மடையவும் பெற்ற ஜாதகருக்கு புண்ணிய சகோதரர்கள் உண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| | குரு | | ல |
| செ | இரசிச் சக்கரம் | | சந் |
| | | | |
| | | சு பு | |

### நிர்ப்பலித சகோதரம்

## 1132

(இ-ள்.) 3-ம் இடத்தில் புதனிற்கவும், 12-ல் சனி அமரவும், 5-ம் இடம் சூன்யமாய் இருக்கவும் குரு சுபக்கிரகங்களோடு கூடினாலும் பார்க்கப்பெற்ற ஜாதகருக்கு 3-சகோதர மிருந்து அந்தியத்தில் சகோதர மில்லையாம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | இராசிச சக்கரம் | | |
| | | | |
| பு | | குரு லச-சு | சனி |

## 1133

(இ-ள்.) 3-க்குடையவருஞ் செவ்வாயுஞ் சனியுமாகிய மூவருங்கூடி 7-ல் நிற்கவும்பெற்ற ஜாதகருக்கு ஏக சகோதர மிருந்தும் பிரயோசன மில்லையாம்.

## 1134

(இ-ள்.) செவ்வாயும் 3-க்குடையவருங்கூடி 8-ல் நிற்கவும், இலக்கினாதிபதி நீசமடையவும், 3-ம் இடஞ்சூன்யமாய் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு சொப்பனத்திலுஞ் சகோதர மில்லையாம்.

1135

(இ-ள்.) 3-க்குடையவர் 6-ல் நிற்கவும், அவரோடு 10-க்குடையவர் கூடி நிற்கவும் 3-ஆமிடம் சூன்யமா யிருக்கவும், 11-க்குடையவர் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 3-சகோதரரும் அற்பாயுளில் மாரக மடைவார்களாம்.

1136

(இ-ள்.) 3-ல் ராகு நிற்கவும், 5-ஆமிடஞ் சூன்யமாகவும், செவ்வாயோடு 8-க்குடையவர் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு முன்னும் பின்னும் சகோதர மில்லையாம்.

1137

(இ-ள்.) 3-க்குடையவர் 11-ல் நிற்கவும், 10-க்குடையவர் திரிகோண மடையவும், 8-க்குடையவர் சந்திரனோடு கூடிநிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 3-சகோதரத்தில் ஒன்று நிலைக்குமாம்.

1138

(இ-ள்.) 3-க்குடையவர் செவ்வாயோடு கூடி 12-ல் நிற்கவும், அவர்களை சனி பார்க்கவும், 3-ல் 8-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குச் சகோதரர் மாரகமாம்; அல்லது இருந்தாலும் பயனில்லையாம்.

1139

(இ-ள்.) சனியுஞ் சூரியனுங்கூடி 11-ல் நிற்கவும், அவர்களை 8-க்குடையவர் நோக்கவும் பெற்ற ஜாதகருக்கு பல சகோதரர்கள் வருவார்கள்; அவர்களால் உயிர்ச் சேதமாகுமென்றும் காட்டுக் கெரித்த நிலவுபோலாகும்.

1140

(இ-ள்.) 3-க்குடையவருஞ் சனியும் கூடி 12-ல் நிற்கவும், 8-க்குடையவர் 3-ல் அமரவும் பெற்ற ஜாதகருடைய சகோதரங்களைப் பெற்ற தாய்க்கு வீண் வேதனையும், பாவமுமே சகோதரங்களாக வருவார்களாம்.

## 1141

(இ-ள்.) 10-3-க்குடையவர்கள் கூடி 8-ல் நிற்கவும், 8-க்குடையவருஞ் செவ்வாயும் கூடி நிற்கவும்பெற்ற ஜாதகர் சகோதரனை நம்பி யிருப்பது பனி ஜலத்தை மழை யென்று நம்பி உழவோர் உழுவது போலாகும்.

### ஆபரணம்

## 1142

(இ-ள்.] 3-ல் சுக்கிர னிற்கவும், 3-க்குடையவர் சுக்கிரன் வீட்டிலிருக்கவும் பெற்ற ஜாதகர் பிரகாசிக்கின்ற முத்து ரத்தின மாலை யணியும் பொன் பொன்ற தேகியாம்.

## 1143

(இ-ள்.) குரு 3-ல் நிற்கவும், புதனோடு 3-க்குடையவர் கூடி பகை யடையவும், அவர்களை செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ரத்தினமாலை யணிவா ரென்றும் வெள்ளியைச் சுள்ளி போல் மதிப்பவ ரென்றுங் கூறவும்.

## 1144

(இ-ள்.) இலக்கினாதிபதியோடு 2-க்குடையவரைக் கூடி கேந்திர மடையவும், இவர்களைப் புதன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ரத்தின மாலை யணிப்பவ ரெனவும், காந்தி யுடையவ ரெனவுங் கூறவும்.

## 1145

(இ-ள்.) சந்திரன் 3-ல் நிற்கவும், குரு 5-ல் அமரவும் பெற்ற ஜாதகர் ரத்தின மாலையை யணிபவராம்.

## 1146

(இ-ள்.) இராகுவோடு 3-க்குடையவர் கூடி 9-ல் நிற்கப் பெற்ற ஜாதகர் வைடூரிய ரத்தின மாலை யணிபவராம்.

## 1147

(இ-ள்.) 3-ல் கேது நிற்கவும், 3-2-க்குடையவர்கள் கூடி திரிகோண மடையவும் பெற்ற ஜாதகர் ரத்தினம், பொன், முத்து மாலைகளை யணிபவராம்.

1148

(இ-ள்.) குருவும் 3-க்குடையவருங் கூடி 7-ல் அமரவும், 7-க் குடையவர் 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் ரத்தினம், பொன் முத்து முதலாகிய மாலைகளை யணிபவராம்.

1149

(இ-ள்.) சந்திரன் நின்ற ராசிக்கு 2-க்குடையவர் 12-ல் நிற்கவும், அவரை செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்குப் பல வித ஆபரண மிருந்தும் தாமு மணியாது தன் வீட்டிலிருக்கும் நாய்க்கும் ஒரு பித்தளைச் சலங்கையுங் கட்டிப் பார்க்காராம்.

1150

(இ-ள்.) 3-க்குடையவர் 8-ல் நிற்கவும், 8-க்குடையவர் 3-ல் அமரவும் பெற்ற ஜாதகருக்கு ஆடையாபரண ரத்தினங்களில் மிகுந்த ஆசைமாத்திரமுண்டு அணிய விதியில்லாதவராம்.

1151

(இ-ள்.) சுக்கிரன் 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் 3-ல் அமரவும் பெற்ற ஜாதகர் மனந் துக்கமாய் ஓர் ஆபரணமும் அணிய மாட்டாதவராம்.

வீரியம்

1152

(இ-ள்.) 3-க்குடையவர் பாபரோடு கூடி 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் உச்சமடையவும் பெற்ற ஜாதகர் வீரர்கள் செய்யும் யுத்தங்களை ஒரு துரும்பாக மதிப்பவராம்.

1153

(இ-ள்.) செவ்வய் 3-க்குடையவராகிப் பலஹீனமடையவும், பாபர்கள் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் போர்க்குரிய பீமனையும் காமனையும் தனக்கிணை யல்லவென்று மதிக்கும் வீரியமும் புண்ணியமு முடையவராம்.

1154

(இ-ள்.) செவ்வாயோடு சந்திரன் கூடி 12-ல் நிற்கவும், அவர்களை 3-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் ராஜரீகத்திற் சென்று புஜபல வீரிய ஜெயம் பொருந்துவராம்.

## 1155

(இ-ள்,) 5-க்குடையவர், செவ்வாய், 2-க்குடையவர், குரு ஆகிய நால்வரும் 3-ல் நிற்கப் பெற்ற ஜாதகர் வீரமும் யூகமும் நிதியுமுடையவராம்.

## 1156

(இ-ள்.) செவ்வாய், சனி இவர்கள் கூடி 10-லேனும் 3-லேனும் நிற்கவும், நின்ற ராசியாதிபதி கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் தனக்கு மேலாகிய வீரர்களில்லையென, வஞ்சகருடைய நெஞ்சைக் கிளப்புவ ரென்றுங் கூறுக.

## 1157

(இ-ள்.) ராகுவோடு 3-க்குடையவர் கூடி திரிகோணமடையவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் திருடர்களுக்குப் புலிபோலும் அரசர்களுக்குப் பட்சமுள்ள துணைபோலு மாவராம்.

## 1158

(இ-ள்.) 3-ல் புதன் நிற்கவும், குரு கேந்திரமடையவும், 8-3-க் குடையவர்கள் 8-12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் வீரம், யூகம், கோப முடையவராம்.

### அவ வீரியம்

## 1159

(இ-ள்.) சுக்கிரனும் 2-3-க்குடையவர்களுமாகிய மூவரும் திரிகோண மடையவும், இவர்களை 5-க்குடையவர் நோக்கவும் பெற்ற ஜாதகர் சாஸ்திர வல்லபராயிருந்தும் நரி ஊளையிடில் அச்சப்படும் மெலிந்த மன முடையவராம்.

## 1160

(இ-ள்.) 6-3-5-க்குடையவர்கள் ஆகிய மூவரும் 12-ல் பலமடைந்து நிற்கப் பெற்ற ஜாதகர் ராஜ சபையிலும், பந்துக்கள் சபையிலும் பயமும் வெட்கமு முடையவராம்.

1161

(இ-ள்.) 4-8-க்குடையவர் கூடி நிற்கவும், அதிலொருவர் நீசமடையவும், அவர்களை 8-க்குடையவர் நோக்கவும் பெற்ற ஜாதகர் மிகுந்த ஏழையிலும், புத்தி கோழையிலும் முதன்மை யுடையவராம். ஆந்தை அலறினலும் அச்சப்படுவராம்.

## போகம்

1162

(இ-ள்.) 7-ல் இராகு நிற்கவும், 7-க்குடையவர் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் தன் மனையாளோடு மதனநூல் விதிப்படி லீலை செய்து எந்நாளும் சுகபோக முடையவராம்.

1163

(இ-ள்.) 2-3-க்குடையவர்கள் கூடி திரிகோண மடையவும், அவர்களை 8-க்குடையவர் 3-ல் இருந்து பார்க்கவும் பெற்ற ஜாதகர் அன்னிய மனைவியின் மனம் நோகாது புணரும் லீலா விநோதராம்.

1164

(இ-ள்.) சந்திரனுக்கு 3-ல் 7-க்குடையவர் நிற்கவும், அம் மூன்றுக்குடையவர் அவரைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் விலை மாதரின் மலையைப்போன்ற ஸ்தன்னியமே நிலைத்த சுகமென் றும் அடங்கி யிருப்பராம்.

1165

(இ-ள்.) சுக்கிரனும், 2-3-க்குடையவர்களாகிய மூவரும் திரி கோண மடையவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் பல ஸ்திரீகள் சுகமடைந்தும், மன்மதனுக்கு பட்சமுடைய ராவராம்.

## அடிமை

1166

(இ-ள்.) 5-3-க்குடையவர்கள் கூடவும், சனி 3-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் அடிமைகள், பல குடியோர்கள், கீர்த்திமான்கள் ஆகியவர்களுக்குத் துணையா யிருப்பவராம்.

### 1167

(இ-ள்). 7-2-க்குடையவர்கள் கூடி 3-ல் நிற்கவும், 3-க்குடையவர் உச்ச மடையவும் பெற்ற ஜாதகர் விலையாக பல சேவகர்களைக் கொள்ளும் வாழ்வும், அன்ன சத்திரம் போன்ற கிரகமு முடையவராம்.

### 1168

(இ-ள்.) 9–3–10-க்குடையவர்கள் கூடி நிற்கவும் அவர்களைப் புதன் நோக்கவும் பெற்ற ஜாதகர் தன்னிடத்தில் வரும் பரதேசிகளை ஆசையோடு உபசரித்துப் பஞ்சமாகிய வறுமையைக் கெஞ்சும்படி செய்வராம்

### 1169

(இ-ள்.) 4-3–க்குடையவர்களோடு புதன் கூடி கேந்திர மடையவும், அதிலொருவர் நீசமுற்றிருக்கவும் பெற்ற ஜாதகர் துஷ்டகுலத்தார்களை அடிமைபுரியச் செய்யும் சுந்தர வார்த்தையுள்ள சற்குணரா யிருப்பராம்.

## போகம்

### 1170

(இ-ள்.) 3-க்குடையவர் 7-ல் இருக்கவும், அவரை குரு பார்க்கவும், 7–க்குடையவர் இலக்கினத்தினின்று புதனையும், சுக்கிரனையும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் வயது மிகுந்தகாலத்தினும் உத்தம ஸ்திரீ போகமுடையவராம்.

### 1171

(இ-ள்.) 3–ம் இடத்தில் 7–9–க்குடையவர்கள் கூடி நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் அழகிய ஸ்திரீகளால் சுக போகாதிகளை சதா அனுபவிப்பவராம்.

### 1172

(இ-ள்.) 5–3–க்குடையவர்கள் கூடி 7–ல் நிற்கவும், இலக்கினாதிபதி 9-ல் அமரவும், 9–க்குடையவர் இலக்கினத்தில் நிற்கவும், 5-ல் சந்திரன் அமரவும் பெற்ற ஜாதகர் மிகுதியான அடிமையாட்களை யுடையவராம்.

## 1173

(இ-ள்.) 9–10-க்குடையவர் 3-ல் நிற்கவும், அ களை குரு பார்க்கவும், 11–க்குடையவர் இராகுவுடன் கூடி 3- நிற்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய அடிமை யுடையவரேயாம்.

## நான்காம் பாவகம்

## 1174

### குரு வணக்கம்

(இ-ள்.) பெருமையையுடைய பாகவதர்களுக்கு அன்பராகிய ஜோதிட சித்தாந்தி யென்னும் வீரப்பபிள்ளையினுடைய திருவடி களை எனது கருத்தி னிறுத்தி நான்காம் பாவகத்தைக் கூறு கின்றனன்.

## 1175

(இ-ள்.) நான்காம் பாவகத்தைப் பற்றி வாகனம், நற்பலன், வர்த்தகம், வித்தை, நிதி, கன்று காலி இன்னும் இதற்குரிய தேவ பக்தி முதலியவற்றைக் கூறுவோமாக.

## மாதுரு பாவகம்

## 1176

(இ-ள்.) 4-க்குடையவர் ஆட்சி பெற்று சந்திரனுக்கு திரி கோண மடைந்து நின்றாலும்,

[2] சந்திரன் 9–ல் நிற்கவும்; 9-க்குடையவர் 4-ல் நிற்கவும் பெற்றாலும்,

[3] இலக்கினாதிபதி 4–க்குடையவரோடு கூடி 9-ல் நிற்க வும், அவர்களை 7-க்-குடையவர் பார்க்கவும் பெற்றாலும் இவர்க ளுடைய மாதாவுக்குப் பூரண வயது கூறவும்.

## 1177

(இ-ள்.) 1-4-க் குடையவர்கள் கூடித் திரிகோண மடையவும், இலக்கினாதி பதிக்குத் திரிகோணத்தில் குரு நிற்கவும் பெற்ற ஜாதகர் மாதாவுக்குப் பூரண வயதாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | இராசிச் | | |
| சுக் சூ | சக்கரம் | | |
| | | | குரு |

[2] சந்திரனுக்கு 4-க்குடையவரும், லக்கினத்திற்கு 4-8-க்குடையவருமாகிய மூவருங் கூடி நிற்கவும், அவர்களை சனி சந்திரன் பார்க்கவும் பெற்ற ஜாதகர் மாதுரு மாரக மடைவளாம்.

| | | | |
|---|---|---|---|
| சனி சந் | ல | | |
| | இராசிச் சக்க்ரம் | | |
| | | | |
| | சனி | | குரு புசு |

## 1178

(இ-ள்.) 4-ல் சனி நீசமடையவும், அவரை 8-க்குடையவர் பார்க்கவும், 4 க்குடையவர் 10-ல்நிற்கவும் பெற்றஜாதகர் மாதா இவனை அலற விட்டு மரண மடைவளாம்.

| | | | |
|---|---|---|---|
| | சனி | | |
| | இராசிச் சக்கரம் | | |
| ல | | | |
| | | சுசெ | |

[2] சந்திரன் தேய்ந்து 6-8-12-ல் நிற்கவும், 8-ல் 4-க் குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகருடைய மாதுருக்கு மேற் கூறிய விதியேயாம்.

[3] 6-4-க்குடையவர் கூடி 9-ல் நிற் கவும், சந்திரன் 7-ல் அமரவும் பெற்ற ஜாதகரின் மாதுரு வேசைக்குண முடை யவளாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | இராசிச் சக்கரம் | | |
| சு ல | | | |
| | | சந் | |

## 1179

(இ-ள்.) 9-4-1-க்குடையவர்களாகிய மூவரும் 4-ல் நிற்கவும், குரு இலக்கினத் தைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பொருள் மிகுதியும், வாகனம், ஆடையா பரணத்தோடு அரசர் சுகமடைவராம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| | இராசிச் சக்கரம் | | சனி |
| குரு | | | |
| | | | சூ-சு |

[2] சந்திரன், 4-க்குடையவர் குரு, சுக்கிரன் ஆகிய நால்வருங் கூடி யிருந்த ராசியாதிப்தி நட்பு ஆட்சி உச்ச மடையப் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனும்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | இராசிச் சக்கரம் | | |
| செ | | | |
| | சந்-பு குசு | | |

1180

(இ-ள்.) சுக்கிரன் நின்ற ராசிக்கு 9-10-க் குடையவர்கள் லக்கினுதிபதியோடு கூடி 4-ல் நிற்கப் பெற்ற ஜாதகர். கணக்கில்லாத பொருள், பூமி, ஏவலாட்களோடு சுகித்திருப்பராம்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சூ-பு செ | இராசிச் சக்கரம் | | |
| | | | |
| சு | ல | | |

[2] குரு, 9-க்குடையவர், சுக்கிரன் ஆகிய மூவர்களும் கூடி சந்திர கேந்திர மடையவும், அவ் விராசியாதிபதி 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

| | | | |
|---|---|---|---|
| | | சந் | |
| | இராசிச் சக்கரம் | | |
| செ | | | |
| | சு-பு குரு | ல | |

1181

(இ-ள்.) 4-2-க்குடையவர்கள் கூடி 9-ல் நிற்கவும், குரு சந்திரனுக்கு 2-ல் அமரவும் பெற்ற ஜாதகர் வித்துவானுவராம்.

| | | | |
|---|---|---|---|
| சூ சுக்- | | | |
| | இராசிச் சக்கரம் | | ல |
| | | | சந் |
| | | | குரு |

[2] 2-க்குடையவர் 4-ல் நிற்கவும், 4-க்குடையவர் 2-ல் மாறி நிற்கவும், இவர்களைச் சுபர்கள் பார்த்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

| | | | |
|---|---|---|---|
| குரு | | சந் | |
| | இராசிச் சக்கரம் | | |
| | | | ல |
| | | பு | செ |

| | | | |
|---|---|---|---|
| | | சந் | |
| | இராசிச் | | குரு |
| | சக்கரம் | | |
| | சு-பு செ | | ல |

[3] 10-9-3-க் குடையவர்களாகிய மூவரும் 3-ல் நிற்கவும், அவர்களைச் சுபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகர் மேற்கூறிய பலனுடையவரேயாம்.

## 1182 - 1183

| | | | |
|---|---|---|---|
| செ | | | ல |
| | இராசிச் | | |
| | சக்கரம் | | |
| | | | சனி கு-பு |

(இ-ள்.) 4-ம் இடஞ் சுபர் வீடாகி அதற்குரியவர் குருவினேடும் 9-க்குடையவரோடுங் கூடி செவ்வாய் பார்வையடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் கருங்கல், செங்கல், சுண்ணும்பு சாந்துகளால் கட்டிய கெட்டி மாளிகையில் வாழ்பவராம்.

[2] 4-9-க்குடையவர்கள் கூடி 12-க்குடையவருக்கு 2-ல் நிற்கப் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

[3] சந்திரனுக்கு 12-க்குடையவர் உச்ச மடைந்து 4-3-க் குடையவரோடு கூடி 12-க்குடையவருக்கு 12-ல் நிற்கப் பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய பலனேயாம்.

[4] இன்னுமொரு விதி 12-க்குடையவரோடு எத்தனை கிரகங்கள் கூடியிருந்தனவோ அத்தனை கிரகங்களுண்டாம்.

[5] இன்னும் வலுமையாக கிரகம் நின்ற நிலை யறிந்து பலன் கூறல் வேண்டுமாம்.

## 1184

(இ-ள்.) 4-க்குடையவர் பகை யடையவும், அவரை 8-க் குடையவர் பார்க்கவும், 12-க்குடையவர் 4-ல் பலமடைந்து நிற்கப் பெற்ற ஜாதகருக்கும்,

[2] சந்திரனுக்கு 8-4-க்குடையவர்களும், சுக்கிரனுங் கூடி 4-ல் நிற்கப் பெற்ற ஜாதகருக்கும்,

[3] 4-ம் இடத்திற்கு 2-பக்கமும் பாபர்கள் நிற்கப் பெற்ற ஜாதகருக்கும்,

1185

(இ-ள்.) சந்திரனுக்கு 4-ல் 8-க்குடையவர் நின்று 12-க் குடையவர் பார்வை பெற்று நின்ற ஜாதகருக்கும் கூரை வீடு உண்டாம். இல்லாவிடில் சொந்தமனை யில்லாமல் அடுத்த வீட்டிலும், சத்திரம், மடாலயங்களிலும் இணங்கி வாழ்பவராம்.

1186

(இ-ள்.) ஆட்சி பெற்ற சந்திரனோடு 4-க்குடையவரும், சுக்கிரனுங் கூடி நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் சிவந்த பசுவின் பால் புசிப்பவராம்.

| | | | |
|---|---|---|---|
| ல | | | |
| | இராசிச் சக்கரம் | | சந் பு,சு |
| | | | |
| | குரு | | |

[2] 4-க்குடையவரும், சந்திரனுக்கு 4-க்குடையவருங் கூடி 5-ல் நிற்கவும், அவர்களை சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் வெள்ளை நிறமுள்ள பசுவின் பால் பெறுவராம். இன்னும் மலட்டுப் பசுவாயினும் பால் கொடுக்குமாம்.

1187

(இ-ள்.) 4-க்குடையவர் சுபராயிருந்து 5-ல் இருக்கவும், சுக்கிரனோடு 5-க்குடையவர் கூடி 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்குப் பலவித பசு விர்த்திகள் மிகுதியா யுண்டாகுமாம்.

[2] குருவும், 4-க்குடையவருங்கூடி சந்திரனுக்கு 4-ல் நிற்கவும், அவ்விராசியாதிபதி இலக்கினத்திற்கு 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு மேற்கூறிய பலனேயாம்.

1188

(இ-ள்.) சூரியனும், 4-க்குடையவருங்கூடி 10-ல் நிற்கவும், 4-ம் இடத்தில் 8-க்குடையவர் அமரவும், அவரைச் சனிபார்க்கப் பெற்றாலும்,

[2] சந்திரனும், 4-க்குடையவரும் 3-ல் நிற்கவும், அவரை 10-க்குடையவர் பார்க்கப் பெற்றாலும்,

[3] சந்திர லக்கினாதிபதியை 10-க்குடையவர் கூடி 9-ல் நிற்கவும், சந்திரனும், 8-க்குடையவருங் கூடி 4-ல் நிற்கவும் பெற்றாலும்;

1189

(இ-ள்.) 5-4-க்குடையவர்களும், குருவும் ஆகிய இவர்கள் நின்ற ராசியாதிபதிகள் பகை அஸ்தமனம், நீச முதலிய மெலிவடைந்து நிற்கப் பெற்றாலும், காமதேனுவிடத்தில் சென்றாலும் பால் கிடைப்பது அரிதாகும்.

1190

(இ-ள்.) சந்திரனும், 4-க்குடையவருங் கூடி வலுப்பெற்று 4-ல் நிற்கவும், அவர்களைக் குருவும், 11-க்குடையவரும் பார்க்கவும் பெற்றாலும்,

[2] 9-க்குடையவரும், குருவுங் கூடி 4-ல் நிற்கவும், 4-க்குடையவர் பலம் பெற்றுச் சுபர் நோக்கமடைந்தாலும்,

[3] 5-4-க்குடையவர்கள் மாறி நிற்கவும், 7-ல் குரு ஆட்சி பெற்று நின்றாலும்,

1191

(இ-ள்.) 9-ல் 4-க்குடையவர் சுக்கிரன் பார்வைபெற்று நிற்கவும் 9-க்குடையவர் 4-ம் இடத்தில் மாறி நின்று சுபர் நோக்கப் பெற்றாலும், இந்திர சுகமடைந்து பிறர் மனையில் சென்றும் இன்பம் அனுபவிப்பர்களாம்.

1192

(இ-ள்.) 12-ல் 4-க்குடையவர் நிற்கவும், சந்திரனுக்கு 4-க்குடையவர் பகை நீசமடைந்து நின்றாலும்,

[2] சந்திரனுக்கு 4-க்குடையவரும், லக்கினத்திற்கு 4-க் குடையவரும், பகை நீச மடையவும், 4-ல் 8-க்குடையவர் நிற்கப் பெற்றாலும்,

[3] சனி 4-ல் நிற்கவும், 4-க்குடையவர் சூரியனோடு கூடி 6-ல் அமரவும், அவரை 8-க்குடையவர் பார்க்கப் பெற்றாலும்,

1193

(இ-ள்.) சுகமிருந்த ஊரிலேனும் இருந்து அறியாதவர்க ளென்றும், பின்னும் பிறரால் நற்சுகங் கிடைத்தாலும் சுகித் திருக்கத் தெரியாதவர்க ளென்றும், அப்படி அனுபவித்தாலும் மனத் துயரத்தால் இறந்து போவார்களென்றும், சுகமுடையா ரைக் கண்டு பொருமைப் படுவார்க ளென்றுங் கூறலாம்.

## ஐந்தாம் பாவகம்

1194

### குரு வணக்கம்

(இ-ள்.] அருமையான வேதத்தின் மகா வாக்கியத்தை சொற் பொருளா யருளிச்செய்த குருவாயும், மறைவில்லாமல் அன்பர்களுக்கு வேதத்தினின்று வரங் கொடுக்கும் பெம்மானாகிய சுப்ரமண்யக் கடவுள் அழகிய வேதமே வடிவாகச் செழித்த திருவேரகத்தில் வளருஞ் செல்வன் இங்கு எனக்கு நன்னூலாகிய வேதத்தினது தேன்களை வடித்து அருளிச்செய்த வீரப்பபிள்ளை யவர்கள் மலர்த்தாள் வாழக்கடவது.

1195

(இ-ள்.) 5-ம் பாவகத்தைப் பற்றித் தாம் ஆதரிக்குந் தெய் வங்கள் பிதிர்பாகங்களைக் கருமம், யோகம், பரவிஷயம் இவை களை என் குருவின் பாதங்களைத் தஞ்சமென்றடைந்து கூறுவே னுகவும்.

### தெய்வ வழிபாடு

1196

(இ-ள்.) 5-ம் இடத்திற் புருஷ கிரகம் நிற்கவும், அவர்களைப் புருஷக்கிரகம் பார்க்கவும், 5-க்குடையவர் ஒற்றை ராசியில் நிற்க வும் பெற்ற ஜாதகர் ஆண் தெய்வத்தைக் கொண்டாடுவராம்.

[2] 5-ம் இடம் பெண் ராசியாகி அதில் பெண் கிரகம் நிற்கவும், பெண் கிரகங்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் பெண் தேவதையைக் கொண்டாடுவனும்.

[3] சூரியன் வீட்டில் 5க்குடையவர் நிற்கவும், அவரைச் சூரியன் பார்க்கவும் பெற்ற ஜாதகன் 5-எழுத்தென்னும் பஞ்சாக்ஷர ரூபியாகிய சிவபிரான் அடியை வணங்குவனும்.

1197

(இ-ள்.) 5-ல் சந்திரன் நிற்கவும், 5-க்குடையவர் செவ்வாயோடு கூடி அமரவும் பெற்ற ஜாதகர் மயிலேறுஞ் சுப்ரமண்யக் கடவுளைக் கொண்டாடுவராம்.

[2] 5க்குடையவரும், புதனும் மாறி நிற்கவும் அல்லது புதன் 5-க்குடையவரைப் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மகாவிஷ்ணுவை மனதிற் கொண்டாடுவனும்.

1198

(இ-ள்.) குரு 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் கன்னியாகிய புதன் வீட்டில் அமரவும் பெற்ற ஜாதகர் பலகோடி ஜனங்கள் பெற்ற கௌரி யம்மையைப் போற்றுவராம்.

[2] இலக்கினதிபதியும் 5-க்குடையவரும் பகை பெற்றுப் பகை ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதகனுக்கு ஒரு தெய்வமுமில்லையென்னும் இடும்பன் கசடனும்.

புத்திர லாபம்

1199

(இ-ள்.) சனியோடு 5-க்குடையவர் கூடி 3-ல் நிற்கவும், குருவுடன் 5-க்குடையவர் நட்பாய்க் கூடி 9-ல் அமரவும் பெற்ற ஜாதகருக்கு அந்திய காலத்திற் புத்திர ருண்டாம்.

[2] குருவும், 5-க்குடையவருங் கேந்திர மடையவும், பாபர்கள் 5-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு விருத்த பருவத்தில் புத்திரருண்டாம்.

## 1200

(இ-ள்.) சூரியனும், 5-க்குடையவருங் கூடி சனி வீட்டில் நிற்கவும், அவர்களை சனி பார்க்கவும் பெற்ற ஜாதகர் மனைவியை கோபிக்காது ரகசியமாய் இருப்பாராகில் புத்திரன் நிலைக்குமாம்.

[2] சந்திரனும், 8-5-க்குடையவர்களாகிய மூவர்களுங் கூடிச் செவ்வாய் வீட்டில் நிற்கவும், அவர்களை சனி செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கும் மேற்கூறிய பலனும்.

## 1201

(இ-ள்.) 4-5-க்குடையவர்கள் மாறி நிற்கவும், 8-க்குடைய வர் சுபரோடு கூடி ஆட்சியடையவும், லக்கினதிபதி கேந்திரத் திருக்கவும், அவரோடு பூர்வ சந்திரன் கூடவும், 12-9-க்குடைய வர்கள் கேந்திரமடையவும், 3 க்குடையவர் சந்திர கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் புத்திர பௌத்திரருடன் வாழ் பவராம்

## 1202

(இ-ள்.) குரு 3-ல் நிற்கவும், 3-க்குடையவர் 5-க்குடையவ ரைப் பார்க்கவும், சந்திரன் 2-ல் நிற்கவும், அவரைச் சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு மிகுதியாகிய புத்திர ருண்டாம்.

[2] லக்கின முதல் 9-ராசிக்குள் 5-க்குடையவர் நிற்கவும், அவர் நின்ற ராசியாதிபதி 5-ம் இடத்தில் நிற்கவும், 6-ல் சனி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 6-7-புத்திரர் நிலைப்பராம்.

## 1203

(இ-ள்.) சந்திரனுக்கு 5-க்குடையவரோடு 2-க்குடையவர் கூடி 5-ல் நிற்கவும், 5-க்குடையவர் உச்சம் பெற்று சுபர் பார்வையடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் நற்குண புத்திர ரைப் பெறுவராம்.

[2] 5-2-4-க்குடையவர்கள் ஆகிய மூவரும் 3-ல் நிற்க வும், அவர்களைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு புத்திர பௌத்திராதிகளுண்டாம்.

1204

(இ-ள்.) 5-4-க்குடையவர்களும், புதனும் ஆகிய மூவரும் ஆட்சி யுச்ச மடையவும், 7-க்குடையவர் சூரியனோடு கூடி ஆட்சி யில் நிற்கவும், 8-க்குடையவர் லக்கினத்தி னிற்கவும், சுக்கிரன், சந்திரன், குரு ஆகிய மூவரும் திரிகோண கேந்திரமடையவும், புதன் குரு வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு யௌவன காலத்தில் புத்திரருண்டாம்.

## புத்திர ஹீனம்

1205

(இ-ள்) 7-க்குடையவர் பாபரோடுகூடி 5-ல் நிற்கவும், அவரைச் செவ்வாய் சனி பார்க்கவும், 5-க்குடையவர் 12-ல் மேவ பாபர்கள் நோக்க, 5-ல் ராகு மேவ சந்திரன் குரு இவர் களுக்கு 5-க்குடையவர் நீச அஸ்தங்க மடையவும், 5-க்குடைய வர் நீசமுற்றிருக்கவும் பெற்ற ஜாதகர் பிள்ளை யில்லாத பதடி யாவராம்.

1206

(இ-ள்.) குருவும், 7-5-க்குடையவர்களும், லக்கினாதிபதி யாகிய நால்வர்களும் பலஹீன மடைந்து நின்றாலும்,

[2] 4-க்குடையவர் 5-ல் நிற்கவும், 8-க்குடையவர் 8-ல் அமரவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும் பெற்றாலும்;

[3] 2-4-8-க்குடையவர்கள் 12-ல் நிற்கவும், அவர்களைச் சுபகிரகங்கள் பார்க்கப் பெற்றாலும், இம் மூன்று தரமுள்ள ஜாத கர்களும் பிள்ளை பெருத மலடர்களாம்.

1207

(இ-ள்.) அப்படி இவர்களுக்குப் பிள்ளையுண்டானா போதி னும், குரங்கு போலும், பேய் போலும் இருக்குமாம்.

[2] கன்னியா லக்கினத்தில் ஜெனிக்க மீனத்திற் சூரியன் செவ்வாய் நிற்கவும், 5-ல் சனி நிற்கவும் பெற்றாலும்,

[3] 5–9-க்குடையவர்கள் 7-ல் நிற்கவும், அவரைச் சனியும் 8-க்குடையவரும் பார்க்கவும் பெற்ருலும்; இவ் விரண்டு ஜாதகர் களுக்கும் புத்திரன் பிறந்து அரிஷ்டப் படுவனும்.

## 1208

(இ-ள்.) சூரியனும், 9–க்குடையவரும் நட்பாகக் கூடி 5-ல் நிற்கவும், அவர்களைச் சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கும்,

[2] 5–க்குடையவர் சுபராகிச் சுபருடன் கூடி நிற்கவும், சூரியன் சுபரோடு கூடி நட்படையவும், சுபர்கள் 5-ல் பல மடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகருக்கும்,

## 1209

(இ-ள்.) சரராசியில் சூரியனேடு 9-க்குடையவருங் கூடி நிற்கவும், அச் சரராசியாதிபதி திரராசியில் திரிகோண மடை யவும், அவரைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கும்,

[2] சந்திரனுக்கு 9–க்குடையவர் உச்சமடையவும், இலக்கி னத்தில் 4-க்குடையவர் நிற்கவும், அல்லது நீசமடையவும் பெற்ற ஜாதகருக்கும் பிதிர் நெடுநா ளிருப்பராம்.

## 1210

(இ-ள்.) இலக்கினுதிபதியோடு 5-க்குடையவர் கூடிப் பகை செய்யவும், அவர்களைச் சனியும், 9–க்குடையவரும் பார்க் கவும் பெற்ற ஜாதகருடைய பிதிர் மாரகமாவராம்; ஆனுல் இவ னைப் பெற்ற தாய் பணிவிடை புரிந்து பிதா மாரகமே யாவராம்.

[2] 9-க்குடையவரும் சனியும் கூடி 2–ல் நிற்கவும் 5–க் குடையவரும் சூரியனுங் கூடி 12-ல் அமரவும் பெற்ற ஜாதக ருடைய பிதிர் மாரக மாவராம்.

## 1211

(இ-ள்.) சூரியனும், சந்திரனுங் கூடிச் சனி வீட்டில் நிற்க வும், அச் சனி இவர்களைப் பார்க்கவும், 4-9–க்குடையவர்கள் பகை வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகருடைய தாய் தந்தை யிருவர்களும் மாரக மடைவார்கள்.

[2] சந்திரன், சூரியன், 4-9-க்குடையவர்கள் ஆகிய நால்வரும் நீசம், அஸ்தமனம் பகை யடையவும் பெற்ற ஜாதகருடைய தாய் தந்தைக்கும் மேற்கூறிய பலனேயாம்.

## 1212

(இ-ள்.) 4-5-க்குடையவர்கள் 8-12-ல் நிற்கவும், அவ்விராசியாதிபதி 9-ல் அமரவும், 10-க்குடையவர்கள் 6-க்குடையவரோடு கூடி 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதக னிருந்தும் தந்தை கருமஞ் செய்யானும்.

[2] 5-க்குடையவர் பாவியாகி 4-ல் நீசமடையவும், அவ்விராசியாதிபதி 9-ல் நிற்கவும் இலக்கினுதிபதி இராகுவோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகன் பிதாவுக்குக் கர்மஞ் செய்யானும்.

[3] 5-க்குடையவர் 9-10-க்குடையவர்களுக்கு 12-ல் நிற்கவும் செவ்வாய், புதனுங் கூடி 10-ல் அமர்ந்து நின்றுலும்,

[4] 5-க்குடையவரும் சூரியனும் கூடி 8-ல் நிற்கவும், 8-க்குடையவர் 10-ல் அமரவும், குரு 12-ல் நிற்கவும் பெற்றுலும், பிதாவுக்குக் கருமஞ் செய்யார்களாம்.

## 1213

(இ-ள்.) குரு, புதன், சுக்கிரன் ஆகிய மூவர்களும் 5-ல் நிற்கவும், லக்கினுதிபதியும், 9-க்குடையவருங் கூடி 4-ல் அமரவும் அவ்விராசியாதிபதி குரு வீட்டில் நிற்கவும் பெற்ற ஜாதகர் சக்கராதிபதியாய் உலகினை யாண்டு தன் மகனுக்குச் செல்வ பாக்கியங்களைக் கொடுத்துவிட்டுப் பிறகு முக்தி யடைவராம்.

## 1214

(இ-ள்.) குருவும், 5-9-க்குடையவர்களுமாகிய மூவர்களும் 9-ல் நிற்கவும், இலக்கினுதிபதி லக்கினத்தி லமரவும் பெற்ற ஜாதகர் சக்கராதிபதியாய் வாழ்பவராம்.

### ஆரும் பாவகம்

## 1215

(இ-ள்.) ஆரும் பாவகத்தினுல் கடன், பகை, சத்துரு, பீடை, இகழ்ச்சி, தண்டனை, ரோகம், விரணம், காயம், வேதனை ஆகிய

பலன்களைக் கூறுவதற்கு எமது குருவாகிய வீரப்ப பிள்ளை பாதங்களை வணங்குவேனாகவும்.

## 1216-1217

(இ-ள்.) 12-க்குடையவர் 2-ல் நிற்கவும், 2-க்குடையவர் 6-ல் அமரவும், 9-க்குடையவர் பலஹீன மடையவும் பெற்ருலும்,

[2] 6-க்குடையவர் கேந்திரத்தில் உச்சமடையவும், 9-க் குடையவர் 12-ல் நிற்கவும் பெற்ருலும்,

[3] 12-க்குடையவர் குருவோடு கூடி 2-ல் நிற்கவும், சந்திர னுக்கு 2-க்குடையவர் நீச மடையவும் பெற்ருலும்,

[4] சந்திரனுக்கு 2-12-க்குடையவர்கள் லக்கினத்தில் நிற்கவும், உபய ராசியாதிபதி சந்திரனுக்கு 6-ல் நிற்கவும் பெற் ருலும்,

[5] 8-9-க்குடையவர்கள் 12-ல் நிற்கவும், அவர்களை 12-க்குடையவர் பார்க்கவும் பெற்ருலும்,

[6] இலக்கினுதிபதி 2-ல் நிற்கவும், 7-க்குடையவர் 12-ல் அமரவும், சந்திரனுக்கு 6-க்குடையவர் உச்ச மடைந்து நிற்கவும் பெற்ருலும்,

[7] 9-க்குடையவர் 6-க்குடையவரோடு கூடி உச்சமடைய வும், 12-க்குடையவர் 2-ல் நிற்கவும் பெற்ருலும்,

[8] குரு 8-ல் நிற்கவும், 7-க்குடையவர் 12-ல் அமரவும், சந் திரனுக்கு 6-க்குடையவர் உச்சமடைந்து நிற்கவும் பெற்ருலும்,

[9] 6-க்குடையவரோடு 2-க்குடையவர் கூடி 12-ல் உச்ச மடைந்து நிற்கவும் பெற்ருலும்,

[10] 6-க்குடையவரோடு 2-க்குடையவர் கூடி உச்சமடைய வும், 12 க்குடையவர் நாலில் நிற்கப்பெற்ருலும், [11] ஜாதகர் களும் மிகுந்த ரொணவாளராகி முன் பொருள்களைத் தொலைத்து விட்டுப் பாதகராகியே மாரகப்படுவார்க ளென்றும், பின்பு புத்தி ரர்களால் கடன் தீருமென்றுங் கூறுக. ஆனுல், இவர் மரண மடைந்த பிறகுதான் கடன் விட்டதென்று உலகோர் கூறுவார் களாம்.

## 1218

(இ-ள்.) புதனும், 6-க்குடையவரும், சந்திரனும் ஆகிய மூவர்களும் இலக்கினத்தில் நிற்கவும், இவர்களைச் சூரியன் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு ஆண் குறியாகிய ஸ்தானத்தில் புண்ணடைந்து மரண மடைவராம்.

[2] சந்திரனும், 6-7-க்குடையவர்களுமாகிய மூவர்களும் 8-ல் நிற்கவும், அவர்களைப் பாபர்கள் நோக்கவும் பெற்ற ஜாதகருக்குத் திரேகத்தில் புண்களாகி மனம் வாடுவராம்.

[3] 8-ல் 4-க்குடையவரும், சூரியனும், 3-க்குடையவரும் ஆகிய மூவர்கள் நிற்கவும், 4-க்குடையவர் நீச மடையவும் பெற்ற ஜாதகர் மார்பு நோயினுல் மெலிந்து மாரக மாவராம்.

[4] இலக்கினத்தில் 6-க்குடையவர் உச்ச மடையவும், இலக்கினுதிபதி 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் மேக ரணத்தால் மாரக மடைவராம்.

## 1219

(இ-ள்.) சூரியன், 6-க்குடையவர், லக்கினுதிபதி ஆகிய மூவரும் கூடித் திரிகோண மடையவும், அவ் விராசியாதிபதி நீசமடைந்து 8-ல் இருக்கவும், பெற்ற ஜாதகர் சுர ரோகத்தினுல் மரண மாவராம்.

[2] இலக்கினுதிபதி, 4-க்குடையவர், 8 க்குடையவர் ஆகிய மூவரும் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் கொடுமையான உஷ்ணநோயினுல் மாரக மாவராம்.

[3] குருவோடு 8-க்குடையவர் கூடி 6-ல் இருக்கவும், அவர்களைச் சனி பார்க்கவும் பெற்ற ஜாதகர் கபரோக முடையவராம்.

[4] சுக்கிரனும், லக்கினுதிபதியுங் கூடி 8-ல் இருக்கவும், 8-க்குடையவர் 7-ல் இருக்கவும் பெற்ற ஜாதகர் மேக நீரினுல் மாரக மாவராம்.

[5] 8-க்குடையவர் இராகுவோடு கூடி 9-ல் நிற்கவும், செவ்வாய் லக்கினத்தி னிற்கவும், அவரை நீசர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் அம்மை நோயினுல் மரண மாவராம்.

1220

(இ-ள்.) இலக்கினத்தில் சனியும் அமர, சந்திரனும் பாபரோடு கூடி நிற்கவும், 6-க்குடையவர் 9-ல் அமரவும் பெற்ற ஜாதகர் குன்ம நோயினுல் வருத்தப்படுவாராம்.

[2] சந்திரனுக்கு 6-க்குடையவர் 3-ல் இருக்கவும், அவரைச் சூரியன், செவ்வாய் பார்க்கவும் பெற்ருலும்,

[3] 12-ல் 6-க்குடையவர் நீச மடையவும், லக்கினுதிபதி 8-ல் நிற்கவும் பெற்ருலும்,

[4] 1-2-க்குடையவர்கள் 8-ல் நிற்கவும், அவர்களைச் சனி பார்க்கவும் பெற்ருலும்,

[5] 9-க்குடையவர் உச்ச மடையவும், லக்கினுதிபதி 6-ல் இருக்கவும் பெற்ருலும், நான்கு தரமுள்ள ஜாதகர்களும் திட சரீர முள்ளவர்களாய்க் கனவிலும் நோயில்லாதவர்களாய் வாழ்பவராம்.

1221

(இ-ள்.) இலக்கினுதிபதியுஞ் சூரியனும் பகைபெற்று நீச மடையவும், பாபர்கள் இலக்கினத்தில் நிற்கவும் பெற்ருலும்,

[2] 2-6-க்குடையவர்கள் கூடிச் சந்திர கேந்திர மடையவும், 3-க்குடையவர் 6-ல் இருக்கவும் பெற்ருலும்,

[3] செவ்வாயோடு 2-க்குடையவரும், சனியுங் கூடித் திரிகோண மடையவும் பெற்ருலும்,

[4] இலக்கினத்தில் 6-க்குடையவர் நிற்கவும், இலக்கினுதிபதி நீசமடைந்து நிற்கவும் பெற்ருலும், இந்த நான்கு தரமுள்ள ஜாதகர்களும், உடன் பிறந்தவர்கள் முதலிய நெருங்கிய லாபத்தையுடையவர்களால் தொந்தமாகிய பகையைக்கொண்டு நேர்வரினும் துணிந்து கூருர்களாம்.

[5] 4-8-க்குடையவர்கள் 6-ல் நிற்கவும், 6-க்குடையவர் இராகுவோடு கூடி 4-ல் மேவினுலும்,

[6] இலக்கினாதிபதி 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் 9-ல் அமரவும், 6-9-க்குடையவர்கள் உச்சமடைந்து நிற்கப் பெற்றாலும்,

1222

(இ-ள்.) இவ்விரண்டு ஜாதகர்களும் இராஜாங்கத்தில் ஜென்ம தண்டனை யடைவார்களாம். ஆனால் கிரகபல மறிந்து சிறை நீங்குங் காலம் கூறுக. இதுவரையில் ஆரும் பாவகத்தை யுரைத்தனம். இன்னும் இதில் தங்கள் தங்கள் புத்தியைக் கொண்டு மேன்மேலும் கூறுவதில் புகழுண்டாகுமெனக் கொள்க. இன்னுங் கடல் சூழ்ந்த பூமியின்கண் முறையோடு நிறைந்த உண்மையாகிய கணித நூல் வழிப்படி ஏழாம் பாவகங்களைக் கூறத் துணிவு கொண்டனம்.

## ஏழாம் பாவகம்

1223

(இ-ள்.) இந்த ஏழாம் பாவகத்தைப் பற்றி களத்திரம் லாபம், விவாகம் கூடுங்காலம், மரணம் இன்னும் முன்னூல் கூறியபடி என் குருவின் பாதங்களைத் துதிசெய்து கூறுகின்றனம்.

1224 - 1225

(இ-ள்.) 10-9-க்குடையவர்கள் கூடி 5-ல் நிற்கவும், 9-ம் இடத்தைப் பாபர்கள் பார்க்காதிருக்கவும், 7-க்குடையவர் சுப ராசியில் நிற்கப்பெற்றாலும்,

[2] 9-ல் சுக்கிரன் நிற்கவும், 2-க்குடையவர் சுபரா யிருந்து உச்சமடையவும், 7-க்குடையவர் 3-ல் நிற்கப் பெற்றாலும்,

[3] 7-ம் இடத்தில் பாபர் நிற்கவும், சுக்கிரனுக்கு 7-2-க் குடையவர்கள் 9-ல் நிற்கப்பெற்றாலும்,

[4] சந்திரன் லக்கினத்தில் நிற்கவும், சுக்கிரனுக்கு 7-க் குடையவர் திரிகோண மடையவும், 2-ம் இடத்தைச் சுபர்கள் பார்க்கப்பெற்றாலும்,

[5] 2-க்குடையவர் 3 லிருக்கவும், 3-க்குடையவர் 7-ல் அமரவும், 9-க்குடையவர் 4-க்குடையவரைப் பார்க்கப் பெற்ருலும்,

[6] 4-ல் 7-க்குடையவர் நிற்கவும், 4-க்குடையவர் சந்திரனுக்கு 12-க்குடையவரோடு கூடி 9-ல் நிற்கப் பெற்ருலும்,

[7] சந்திரனுக்கு 7-2-க்குடையவர்கள் கூடி பகையில்லாது திரிகோண மடைந்து குரு பார்வை பெற்று நின்ருலும்,

[8] 3-ல் 7-க்குடையவர் நிற்கவும், அவரைச் சந்திரனுக்கு 7-க்குடையவர் பார்க்கப் பெற்ருலும்,

இந்த 8-தரமுள்ள ஜாதகர்களும் ஆயுள்பரியந்தம் ஏகதாரமாகவே வாழ்பவர்களாம்.

இனி 2-3-4 தாரம் வரும் வகையைக் கேட்பாயாகவும். 11-க்குடையவர் கூட்டமாய் நிற்கவும், 7-க்குடையவர் 2-ல் அமரவும், 11-ம் இடத்தில் சுக்கிரன் பாபரோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 3-தார முண்டாகுமாம்.

1226

(இ-ள்.) சந்திரனுக்கு 7 ல் சனி நிற்கவும், பாபர்கள் 2-ல் அமரவும், 11-க்குடையவரும், சுக்கிரனுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும் பெற்ற ஜாதக்ருக்கு நாலுதார முண்டாகுமாம்.

[2] 7-ல் 7-க்குடையவர் நிற்கவும், சந்திரனும் 2-க்குடையவருங் கூடி 11-ல் அமரவும், சுக்கிரனோடு சேர்ந்தவர்கள் தொகையே தாரமென்று கூறவும், 11-ல் சனி, சுக்கிரன், 7-க்குடையவர்கள் ஆகிய மூவர்களும் நிற்கவும், 11-க் குடையவர் 2-ல் அமரவும், அவரைச் செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகருக்கு 5-களத்திர முண்டாம்.

[3] சந்திரனுக்கு 7-க்குடையவர் 2-11-க்குடையவர்களோடு, கூடி சுக்கிரனுக்கு 11-ல் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 4-களத்திர·முண்டாகுமாம்.

1227

(இ-ள்.) சுக்கிரனோடு சேர்ந்தவர்கள் பார்த்தவர்கள் தொகையைக் கண்டு இத்தனை களத்திரமென்று கூறவும், இனி யோகம், அவ யோகம், திசை புத்தி கிரகங்களின் நோக்கங்களையும், ஆய்ந்தறிந்து களத்திரத்தின் தொகையைக் கூற வேண்டுமாம். இனிப் பாதகமாகிய புணர்ச்சியின் வகையைக் கூறுவோமாக.

[2] பாபர்கள் 7-ல் நிற்கவும் 7-க்குடையவர் பாபியாயிருந்து பாபரோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகன் அன்னிய ஸ்திரியைப் புணர்வனும்.

[3] 7-ல் 11-க்குடையவருஞ் சுக்கிரனும் கூடி நிற்கவும், அதில் சுக்கிரன் பலஹீனப்படவும், 7-3-க்குடையவர்கள் 4-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் அன்னிய ஸ்திரீ யோகமுடையவனும்.

1228

(இ-ள்.) சுக்கிரனுக்கு 7-க்குடையவரும், லக்கினத்திற்கு 7-க்குடையவரும், செவ்வாயும் ஆகிய மூவரும் சந்திரனுக்கு 7-ல் நிற்கவும் பெற்றாலும்,

[2] செவ்வாய் 7-க்குடையவருக்கு 6-ல் நிற்கவும், அவரைச் சனி பார்க்கவும் பெற்றாலும்,

[3] செவ்வாய், சுக்கிரன் இவர்கள் 7-ல் நிற்கவும், 7-க்குடையவர் 6-ல் அமரவும் பெற்றாலும் இம் மூன்று தரமுள்ள ஜாதகர்களும் பரத்தையரையும், விதவை மாதரையும், நீச மங்கையரையும், தன் குலத்திற் பிறந்த கன்னியர்களையுந் தழுவிப் புணர்வர்களாம்.

[4] இனி ஜாதகர்களுக்கு விவாகஞ் செய்யுங்காலங் கூறுவோமாக. 7-2-க்குடையவர்கள் சுக்கிரனோடு கூடி சந்திரனுக்கு 2-7-10-ல் நிற்கவும், இவர்களை 2-7-10-க்குடையவர்கள் பார்க்கவும் அப்படிப் பார்த்தவர்களுடைய திசை புத்தி வருங்காலம் விவாகமாகுமாம்.

—

1229

(இ-ள்.) இனி வர்த்தகஞ் செய்யும் விபரம் கூறுவோமாக. 4-9-க்குடையவர்கள் இலக்கினத்தில் நிற்கவும், இலக்கினாதிபதி உச்ச மடையவும் பெற்ற ஜாதகர் கெம்பு, வச்சிர முதல் நவரத்தின வியாபாரஞ் செய்பவராம்.

[2] 7-க்குடையவரும், இலக்கினாதிபதியுங் கூடி 3-ல் நிற்கவும், அவர்களை 3-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் நவமணி முதலாகிய தங்கம், பொன்னுடை விற்பவராம்.

[3] 7 க்குடையவர் சந்திரன், சுக்கிரன் ஆகிய மூவருங்கூடி 1-5-9-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் யானை, குதிரை விற்பவராம்.

[4] செவ்வாய்க்கு 7-க்குடையவர் 4-ல் நிற்கவும், அவரை 11-12-க்குடையவர் நோக்கமடைந்து முற்பாகத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் நவதானியங்கள் விற்பவராம்.

[5] 4-க்குடையவர் 7-க்குடையவருக்கு 8-ல் நீசமடையவும். 4-7-க்குடையவர் 12-ல் நிற்கவும், 12-க்குடையவர் 2-ல் அமரவும் பெற்ற ஜாதகர் புலால் முதலியவும் விறகும் விற்பவராம்.

—

1230

(இ-ள்.) ஜாதகர்களுடைய மாரக காலதிசை புத்தி விபரங்களைக் கூறுவதற்கு பிரமனுக்கும் அரிதாகியதை சிறியோனாகிய

யான் எவ்வாறு கூறமாட்டுவேன். ஆனால் முன்னோர்கள் கூறிய சாஸ்திர முறையைக் கொண்டு சொல்லத் துணிவேனாக.

[2] 7-க்குடையவர் 3-லேனும், சந்திரனுக்கு 8-லேனும் நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 7-க்குடையவர் திசையில் மாரகமென்றுங் கூறவும்.

[3] 7-க்குடையவர் 2-க்குடையவருமாகி 6-ம் இடத்திலும் சனிக்கு 8-க்குடையவருமாகி நிற்கவும் பெற்ற ஜாதகருக்கு 7-க்குடையவர் திசையே மாரகமெனவுங் கூறியது.

[4] இவ்வண்ணமாக வினையங்களெல்லாஞ் சிறப்பாக வெடுத்து சக்கரத்தின் பலமும், அட்டமத்தின் பலமுங் கண்டு நெருப்பாற்றில் மயிர்ப்பாலஞ் சேர்ந்ததுபோல் ஆன்றோர்கள் கூறுவர்களாம்.

## எட்டாம் பாவகம்

### 1231

(இ-ள்) 8-ம் பாவகத்தினால் ஆயுள் அக்ரமச் செய்கை குணம், அறிவீனங்கள், அதர்மம், பிணி, இரண நோய், அரசர் தண்டனை முதலியவற்றைக் கூறுவதற்குச் சோலை சூழ்ந்த திருக்குடந்தையில் வாழ்பவராகிய என் மாமனும் குருவுமாகிய வீரப்ப பிள்ளை யென்னும் தம்முடைய சுந்தரம் போன்றவரது பாத தாமரையைத் துணையாகக் கொள்வேனாகவும்.

### 1232 - 1233

(இ-ள்.) குரு 8-ல் நிற்கவும், 9-க்குடையவர் சந்திர திரிகோணமடைந்து நீசம் பெற்றாலும், 8-க்குடையவர் பார்வை பெற்று நின்றாலும்,

[2] 4-க்குடையவர் 6-ல் நிற்கவும், 6-க்குடையவர் 10-ல் நிறகவும் பெற்றாலும்,

[3] 6-க்குடையவர் உச்ச மடைந்து 11-க்குடையவரோடும் சனியோடுங் கூடி 12-ல் நிற்கப் பெற்ருலும்,

[4] குரு 4-ல் நிற்கவும், 10-க்குடையவரோடு சந்திரனுக்கு 10-க்குடையவர் கூடி 12-ல் நிற்கப் பெற்ருலும்,

[5] சனியும், 8-6-க்குடையவர்கள் ஆகிய மூவரும் 6-ல் நிற்கவும் பெற்ருலும்,

[6] 9-8-க்குடையவர்கள் கூடி 8-ல் நிற்கவும், சந்திரனுக்கு 8-க்குடையவர் 9-ல் நிற்கவும் பெற்ருலும்,

[7] சந்திரனுக்கு 6-ல் 6-4-க்குடையவர்கள் நிற்கவும், அவர்களைச் சனி பார்க்கவும் பெற்ற 7-தரமுள்ள ஜாதகர்களும் திருடர் ஆவார்கள்.

## ஆயுள் விதி

### 1234-1235

(இ-ள்.) 8-க்குடையவர் 3-ம் இடத்தில் நிற்கவும், சந்திரனுக்கு 8 க்குடையவர் சுப ராசி 3-ல் அமரவும், இலக்கினுதிபதி திரிகோண மடையவும் பெற்ருலும்,

[2] 1-8-3-க்குடையவர்களாகிய மூவரும் 12-ல் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும், சந்திரனுக்கு 8-க்குடையவர் 3-ல் அமரவும், இலக்கினத்திற்கு 8-க்குடையவர் பலமடைந்து நிற்கவும் பெற்ருலும்,

[3] சந்திரனுக்கு 8-ல் சனி நிற்கவும், 6-ல் 8-க்குடையவர் அமரவும், லக்கினுதிபதி திரிகோணமேறி நட்புபெற்று நின்ருலும்,

[4] சந்திரனுக்கும், இலக்கினத்திற்கும், 8-க்குடையவர் களும் சனி யிருந்த இராசியாதிபதியும் ஆகிய மூவர்களும் அவர்கள் கேந்திர மடையப் பெற்ருலும்,

[5] சர ராசி லக்கினமாகி அதில் 8-க்குடையவர் நிற்கவும் பெற்ருலும், இந்த 5-தரமுள்ள ஜாதகர்களும் பூரண வயதைப் பெற்றுப் பிணியில்லா திருப்பார்களாம்.

## 1236

(இ-ள்.) 50-வயதுக்குள் மாரக மடையவும் அற்பாயுளர் விதியைக் கூறுகின்றனம்.

[2] சனிக்கு 8-க்குடைடவரோடு லக்கினுதிபதியும், 12-க் குடையவருங்|கூடி திரிகோண கேந்திரமடைந்து நிற்கப் பெற்ரு லும்,

[3] 8-3-க்குடையவர்களும், சந்திரனுக்கு 8-க்குடைய வருமாகிய மூவரும் 4-ல் நிற்கவும், 6-8-12-ல் லக்கினுதிபதி நிற்கவும் பெற்ருலும்,

## 1237

(இ-ள்.) பாபர்கள் சந்திரனுக்கு 8-ல் நிற்கவும், 8-2-க் குடையவர்களும் செவ்வாயும் ஆகிய மூவருங் கூடி 8-ல் பகை பெற்று நின்றுலும்,

[2] 8-க்குடையவரும், சந்திரனின்ற ராசியாதிபதியுங் கூடி சந்திரன், சனி பாபர்களுக்கு 12-ல் நிற்கப் பெற்ருலும், இதில் பிறந்த நால்வரும் வாழ்வுடையவர்களாயும், அற்பாயு ளுடைய வர்களென்றுங் கூறியது. இன்னும் அவர்கள் மரண மடையும் வகையை விரித்துக் கூறுவோமாக.

## 1238

(இ-ள்.) செவ்வாயும், 6-8-க்குடையவர்கள் ஆகிய மூவரும் சந்திரனுக்கு 6-8-ல் நிற்கவும், அவர்களையும் சந்திரனையும் 8-க் குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பகைவர் கையாயுதத் தால் மாரக மடைவராம்.

[2] 4-8-க்குடையவர்களும், சந்திரனுக்கு 4-க்குடைய வரும் ஆகிய மூவர்களும் நீசர்களோடு கூடி 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் மிருகங்களினுல் மாரக மடைவனும்.

## 1239

(இ-ள்.) 8-க்குடையவர் சூரியன், செய்வாய் ஆகிய மூவர் களும் 8-ல் நிற்கவும், அவர்களைச் சனி, இராகு பார்க்கவும் பெற்ற ஜாதகன் நெடிய மலை, கோபுரம், மரம் இவைகளின் மீதேறித் தன்னிலை தவறி வீழ்ந்து மாரகமாவனும்.

[2] 8-ல் செவ்வாய் சனியுங் கூடி நிற்கவும், சந்திரனுக்கு 8-ல் சூரியன் அமரவும் பெற்ற ஜாதகன் தண்ணீரி லிறந்து போவனும்.

[3] சனி அமர சந்திரன், சூரியன், செவ்வாய் ஆகிய நால் வரும் திரிகோண மேறி நிற்கவும், அவர்களைப் பாபர்கள் பார்க்க வும் பெற்ற ஜாதகன் அக்கினியால் மாரக மாவானும்.

## 1240

(இ-ள்.) 6-8-க்குடையவர்களோடு செவ்வாய் கூடி 6-8-
12-ல் நிற்கப்பெற்ற ஜாதகன் கையாயுதத்தால் மாரகமாவானும்.
செவ்வாயும் இலக்கினுதிபதியும் பகைபெற்று நின்ருல், வெட்டுப்
படுவனென்றும் சூரியன், சந்திரன், இராகு இலக்கினுதிபதி நீச
மடையவும் பெற்ற ஜாதகன் காயப்பட்டும் மாரக மாவானும்.

## 1241

(இ-ள்.) 1-8-க்குடையவர்களும் செவ்வாய் ஆகிய மூவரும் சந்திரனுக்கு 8-ல் நிற்கவும், அவர்களை இராகு சனி பார்க்கவும் பெற்ற ஜாதகன் இடிவிழுந்து மாரக மடைவனும்.

[2] 6-8-க்குடையவர்களாகிய மூவர்களும் திரிகோண கேந்திர மடையவும் பெற்ற ஜாதகன் அவர்கள் திசைபுத்தியில் பிளவை நோய் கண்டு மாரக மடைவனும்.

[3] சனியும் 8-க்குடையவரும் லக்கினுதிபதியோடு கூடி நிற்கில் அவர் திசை புத்தியில் கரிகி மாரக மடைவனும்,

## 1242

(இ-ள்.) செவ்வாய், சனி, குரு, சந்திரன் இராகு ஆகிய ஐவர்களும் 8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் அவர் திசை புத்தியில் பேய் புத்திகொண்டு மாரகமாவனும்.

[2] 7-க்கு 2-6-8-9-க்குடையவர்கள் திசை புசிப்பிலும் சந்திரனுக்கு 2-6-8-9-க்குடையவர்கள் திசை புசிப்பிலுஞ் சுர ரோக வாதனையால் மாரக மாவனும். இன்னும் ஒரு கிரகத்திற்கு 2-ஆதிபத்தியம் உண்டு; அந்த ராசிக்குரிய திசையில் பாவர்கள் புசிப்பில் பயத்தினுல் மாரக மாவனும்

## 1243

(இ-ள்.) குளிகனிருந்த இராசியாதிபதி நின்ற அம்ச திரிகோணத்தில் சூரியன் வருங்காலத்தில் பகல் பிறந்த ஜாதகருக்கு அவர் திசையில் மாரக மாவரென்றுங் கூறியது.

[2] 8-க்குடையவரிருந்த இராசியாதிபதியின் அம்ச திரிகோணத்தில் சூரியன் வருங்கால் ஜாதகன் மாரக மடைவனும். சூரியனுஞ் சந்திரனுங் கூடியிருந்த இராசியாதிபதிக்குரிய அம்ச திரிகோணத்தில் சந்திரன் வரில் ஜாதகன் மாரகமாம். இலக்கினுதிபதி இருந்த இராசி அம்ச திரிகோண இலக்கினத்தில் ஜாதகன் மாரகமாம்.

### ஜாதக மாரகம் வருமாறு

## 1244

(இ-ள்.) சத்துச் சித்தானந்தமாய்ச் சகலமுந் தானுய் இருவினையு மற்றுச் சர்வ சாட்சியாய் வித்தும் விளைவுமாகி விகற்பமற்ற பெரிய பிரகாசமாய் வானம் பூமி முதலிய எவ்வித்தாலும் அறியக்கூடாத அறிவாய் நிற்கின்ற ஏகாந்தமாகிய பிர்ம சைதன்னியத்தை என் இதயமென்னும் வீட்டில் வைத்து நிலையாயுள்ள கிரகாதிகளின் ஸ்புடத்தினுலே மாரக பாவங்களை அவரவர்களும் எளிதாக அறியும் வண்ணம் அணியணியாகக் கூறுகின்றனம்.

## 1245

(இ-ள்.) 8-க்குடையவர் ஸ்புடத்தைச் சனி ஸ்புடத்திஞல் பெருக்கி, அதனேடு காலனுடைய ஸ்புடமுங் கூட்டி 12-ல் வகுக்க மீதி வந்த தொகையை ஆண் ராசியாகில் வலமாக மேட முதல் எண்ணி வந்த நட்சத்திர பாகத்தில் சனி வருங் காலம் ஜாதக மாரகமாம். பெண் ராசியாகில் அந்த அம்ச திரிகோணத் தின் சனி வருங்காலம் ஜாதக மாரகமாம். இன்னும் கோள் நிலே யும் பார்த்து ஆயுள் நிலே தெரிந்து கூறல் வேண்டுமாம்.

## 1246

(இ-ள்.) சனி யிருந்த ராசியாதிபதி ஸ்புடத்தில் குருவின் ஸ்புடத்தை நீக்கி முன்போல பெருக்கி கழித்து மீதியான நட்சத் திர பாகத்தை குரு வருங் காலம் ஜாதக மாரகமாம்.

[2] சூரிய ஸ்புடமும், குளிகனுடைய ஸ்புடமுங் கூட்டி முன் போலச் செய்து வந்த நட்சத்திர பாகத்தில் சூரியன் வருங் காலம் ஜாதகர் மாரகமாம்.

## 1247

(இ-ள்.) சந்திரன் ஸ்புடத்தில், குளிகன் ஸ்புடத்தைக்கூட்டி 12-ல் வகுக்க நின்ற ராசி நட்சத்திரத்தில் சந்திரன் வருங்காலம் ஜாதகர் மாரகமாம்.

[2] சந்திரன், குளிகன், லக்கினம் ஆகிய 3-ஸ்புடத்தையும் கூட்டி முன்போல் வகுத்து வந்த ராசி லக்கினமே மாரகமெனக் கொள்க. இப்படிச் சூரியனுல் மாதமும், சந்திரனுல் நட்சத்திர முங் கொள்க.

### பிதிர் மாரகம்

## 1248

(இ-ள்.) 9-க்குடையவர் ஸ்புடமும், சூரியனுடைய ஸ்புட முங் கூட்டி 7-ல் பெருக்கி, அதனேடு குளிகன் ஸ்புடமுங் கூட்டி

முன் விதிபோல் 12-ல் வகுத்து வந்த நட்சத்திர பாதத்தில் சனி வரினும், ராகு ஸ்புடத்தையும், இயமகண்ட ஸ்புடத்தை யுங்கூட்டி சூரிய ஸ்புடத்தால் பெருக்கி முன்போல் வகுத்த நட்சத்திர பாதத்தில் சனி வரினும் ஜாதகனுடைய பிதிர் மாரகமாம்.

[2] ஆனல் உன்னுடைய மதியூகத்தையும் பொருத்தி எவர்க்குங் கூறுவாயாகில் சுப்ரமண்யக் கடவுளால் கூறிய வாக்கியம் வழுவு பெறுதாம்.

## மாதுர் மாரகம்

### 1249

(இ—ள்.). சூரியன் ஸ்புடத்தில் சந்திர ஸ்புடத்தைக் கழித்து முன்போல் வகுத்து நின்ற ராசியின் கலையில் குரு வருங்காலமும்,

[2] சந்திர ஸ்புடத்தில் சனி ஸ்புடத்தைக் கழித்து முன் போல் வகுத்து நின்ற ராசியின் கலையில் சனி வருங் காலமும்,

[3] சந்திர ஸ்புடத்தில் சூரிய ஸ்புடத்தை நீக்கி முன்போல் வகுத்த ராசியின் கலையில் சூரியன் வருங் காலமும், சந்திர ஸ்புடத்தில் சந்திரனுக்கு 4—க்குடையவர் ஸ்புடமுங் கூட்டி முன் போல் வகுத்த ராசி, பாகை, கலை, சந்திரன் வருங் காலம், ஜாதகருடைய் மாதுர் நிரியாணமாம்.

## சகோதர மாரகம்

### 1250

(இ—ள்.) லக்கின ஸ்புடத்தில் 3-க்குடையவர் ஸ்புடத்தை நீக்கி முன்போல வகுத்து நின்ற பாகையில் சனி வருங் காலமும்,

[2] ராகு ஸ்புடத்தில் செவ்வாய் ஸ்புடத்தை நீக்கி முன் போல் வகுத்து நின்ற பாகையில் குரு வருங் காலமும்,

[3] 3—க்குடையவர் ஸ்புடத்தைச் செவ்வாய் ஸ்புடத்தினுல் பெருக்கி அதனேடு சூரியன் ஸ்புடமுங் கூட்டி முன்போல வகுத்து

வந்த இராசியில் சூரியன் வருங் காலமும் ஜாதகருடைய சகோதரன் நிரியாணமாம்.

## களத்திர மாரகம்

### 1251

(இ-ள்.) 2-க்குடையவர் ஸ்புடத்தில் குளிகன் ஸ்புடத்தை நீக்கி முன்போல் பெருக்கி வந்த இராசி பாகையில் சனிவருங் காலமும்,

[2] 2-க்குடையவர் ஸ்புடத்தில் இயமகண்டன் ஸ்புடத்தை நீக்கி முன்போல் வகுக்க வந்த ராசியில் குரு வருங் காலமும்,

[3] 7-க்குடையவர் ஸ்புடத்தில் காலன் ஸ்புடத்தை நீக்கி முன்போலப் பெருக்கிவந்த கலையில் சூரியன் வருங் காலமும்,

[4] சுக்கிரன் ஸ்புடமும், சந்திரன் ஸ்புடமுங் கூட்டி முன்போல் வகுத்து நின்ற ராசியில் சந்திரன் வருங் காலமும் ஜாதகருடைய களத்திர மாரக மென்றுங் கூறப்பட்டது.

## புத்திர மாரகம்

### 1252

(இ-ள்.) சனியின் ஸ்புடமும் 5-க்குடையவர் ஸ்புடமுங் கூட்டி முன்போல் வகுத்து வந்து நின்ற ராசியில் சனி வருங் காலமும்,

[2] சனியின் ஸ்புடத்தையுங் குருவின் ஸ்புடத்தையுங் கூட்டி இதில் 9-க்குடையவர் ஸ்புடத்தை நீக்கி முன்போல் வகுத்து வந்த கலையில் குரு வருங் காலமும்,

[3] சூரியன் ஸ்புடத்தில் குருவிருந்த ராசியாதிபதி ஸ்புடத்தை நீக்கி முன்போல் வகுத்து வந்த கலையில் சூரியன் வருங் காலமும், இச்சாதகருடைய புத்திர மாரகமாம்.

## 1253

(இ-ள்.) 5-க்குடையவர் ஸ்புடத்தில் புதனுடைய ஸ்புடத்தை நீக்கி சந்திரனுக்கு 7-க்குடையவர் ஸ்புடத்தை கூட்டி முன் சொல்லிய விதிப்படி வகுக்க வந்த கலையில் சனி வருங் காலமும்,

[2] சூரியன், இலக்கினம், குளிகன் ஆகிய 3-ஸ்புடங்களையுங் கூட்டி முன்போல் வகுத்து நின்ற கலையில் குரு வருங் காலமும், இச்சாதகருடைய மாமன் மார்க மென்றுங் கூறுக. இதை வஞ்ச மற்றவர்கள் இக்கணிதப்படி சோதித்துக் கூறுவாராகிற் தவரு திருக்குமாம்.

### விவாக காலம்

## 1254

[இ-ள்.] சந்திரனின்ற இராசியாதிபதி ஸ்புடமும், சந்திரனுக்கு 7-க்குடையவர் ஸ்புடமுங் கூட்டி முன் விதிப்படி வகுக்க வருங் கலையில் குரு வருங் காலமும்,

[2] இலக்கினாதிபதி ஸ்புடத்தை 2-க்குடையவர் ஸ்புடத்தால் பெருக்கி அதனோடு சூரியன் நின்ற இராசியாதிபதி ஸ்புடமுங் கூட்டி முன்போல் வகுத்து வந்த கலையில் சூரியன் வருங் காலத்தில், இச்சாதகன் இலட்சுமிக்கு ஒப்பாகிய பெண்ணை விவாகஞ் செய்வானும்.

### ஒன்பதாம் பாவகம்

## 1255

(இ-ள்.) ஒன்பதாம் பாவக மென்னும் பாக்கிய பாகத்தைப் பற்றித் தவம், ஆசான் பத்தி, பாக்கியம், பலகலை யுணர்ச்சி, தந்தையின் செயல்கள் முதலியவற்றை ஒன்றுக்கு இரண்டு பாகங் கூறுவதற்கு எமது ஆசிரியராகிய வீரப்ப பிள்ளையவர்களுடைய பாதங்களைச் சிரசில் வைப்பேனாகவும்.

## பாக்கிய யோகம்

### 1256-1257

(இ-ள்.) இலக்கினத்தில் 3-2-க்குடையவர்கள் நிற்கவும், இவர்களைச் சுபர்கள் நோக்கவும், லக்கினாதிபதி 9-ல் நிற்கவும் பெற்றாலும்,

[2] இலக்கினாதிபதி இலக்கினத்தில் நிற்கவும், செவ்வாயும், குருவுங் கூடி 9-ல் நிற்கவும் பெற்றாலும்,

[3] சுபர்கள் குருவுடனே கூடி 9-ல் நிற்கவும் அல்லது 10-ல் நிற்கவும் பெற்றாலும்,

[4] சந்திர லக்கினாதிபதி 2-9-க்குடையவர்களாகிய மூவர்களும் 10-ல் நிற்கவும், இலக்கினாதிபதி 9-ல் நிற்கவும் பெற்றாலும்,

[5] இலக்கினாதிபதி 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் இலக்கினத்தினின்று 2-க்குடையவரோடு கூடி நிற்கவும், அல்லது 2-க்குடையவரும், வளர்பிறைச் சந்திரனும் பார்க்கவும் பெற்றாலும்,

[6] இலக்கினாதிபதி 5-ல் நிற்கவும், 5க்குடையவர் 9-ல் அமரவும், 9-க்குடையவர் 5-ல் நிற்கவும், இலக்கினத்தில் 7-க்குடையவர் நிற்கவும் பெற்றாலும்,

[7] சந்திரனும், 4-க்குடையவருங் கூடி குரு வீட்டில் நிற்கவும், குருவும், 4-க்குடையவருங் கூடி 10-ல் நிற்கவும் பெற்றாலும், இந்த 7-ஜாதகர்களும் பாக்கிய சுக முடையவர்களாய் உலகில் வாழ்வார்களாம்.

## அவ யோகம்

### 1258

(இ-ள்.) குருவும், 8-6-9-க்குடையவர்களும், பர்பர்களும் ஆகிய இவர்கள் இரண்டிரண்டு கிரகமாக நோக்கினாலும்,

[2] சனி, செவ்வாய், 2-க்குடையவர் ஆகிய மூவர்களும் 12-ல் நிற்கவும் 9-4-க்குடையவர்கள் கூடி 2-ல் நிற்கவும் பெற்ருலும்,

[3] 4-2-10-க்குடையவர் அவரவர்கள் ராசிக்கு 6-8-12-ல் நிற்கப்பெற்ருலும்,

[4] 2-ல் 4-க்குடையவரும், செவ்வாயுங் கூடி நிற்கவும், 2-க்குடையவரோடு 9-2-க்குடையவரும், செல்வாயுங் கூடி நிற்கவும் பெற்ருலும், இந் நான்கு தரமுள்ள ஜாதகர்களும் பாப ஜென்மமெனவுங் கூறியது.

## 1259

(இ-ள்.) 9-க்குடையவர் 6-ல் நிற்கவும், 6 க்குடையவர் 2-ல் அமரவும், இலக்கினுதிபதி 12-ல் நிற்கவும் பெற்ருலும்,

[2] சூரியன் 3-ல் நிற்கவும், சூரியனுக்கு 12-ல் சந்திரன் அமரவும், 10-க்குடையவர் 6-ல் நிற்கவும் பெற்ருலும், இவ்விரண்டு தரமுள்ள ஜாதகர்களும் தவ யோகிபோலிருந்து சந்திக்கரை, தெருத் திண்ணை, தலைக்கடை, அன்னிய தேச சஞ்சாரமுடையவர்களாய், அவயோக சிரோன்மணியாய், ரோண பாதகராய், ஆடை யன்னங் கிடையாமல் அலைந்திடுவார்களாம்.

## 1260-1261

(இ-ள்.) இலக்கினுதிபதி 9-ல் நிற்கவும், சந்திரன் வலுப்பெற்று நிற்கவும், 9-க்குடையவர் 2-ல் அமரவும், குரு 10-ல் நிற்கவும் பெற்ருலும்,

[2] 7-க்குடையவர் 9-ல் நிற்கவும், 2-ல் 2-க்குடையவர் அமரவும், குருவும், 9-க்குடையவருங் கூடி நிற்கவும் பெற்ருலும்,

[3] குருவும், இலக்கினாதிபதி 9-க்குடையவர், சுக்கிரன் ஆகிய நால்வரும் 10-ல் நிற்கவும், 10-க்குடையவர் 9-ல் நிற்கவும் பெற்றாலும்,

[4] 10-க்குடையவர் பலமடையவும் இலக்கினாதிபதி 2-ல் நிற்கவும், குரு 5-ல் நிற்கவும் பெற்றாலும்,

[5] 10-9-க்குடையவர்கள் பாபர் நோக்கமின்றி இலக்கினத்தில் அமரவும், இலக்கினாதிபதி 2-ல் நிற்கவும், அவரைச் சனி பார்க்காதிருக்கவும் பெற்றாலும்,

[6] இலக்கினாதிபதியும் 10-க்குடையவரும் 9-ல் நிற்கவும், அவர்களைச் சுபர்கள் பார்க்கவும் பெற்றாலும்,

[7] புதனும் 4-9-க்குடையவர்களுமாகிய மூவரும் சந்திரன் 10-ல் நிற்கவும், அவரை குரு பார்க்கவும் பெற்றாலும், இந்த ஒன்பது தரமுள்ள ஜாதகர்கள் சத்துச் சித்தானந்த மயமான சிவ ரூபமாகிச் சற்குரு வென்னும் பெயரை வதிந்து மோட்ச மடைவார்களாம்.

## குருத் துரோகி

### 1262

(இ-ள்.) குருவணக்க மில்லாதவர்களுடைய நிலைமையை யொருவாறு கூறுகின்றனம் கேட்பா யாகவும்

[2] 9-க்குடையவர் 6-ல் நிற்கவும், சனி குருவுக்கு 8-ல் அமரவும், சந்திரன் 9-க்குடையவருக்குச் சுபக்கிரகமாய் நிற்கவும் பெற்ற ஜாதகன் குருவின் பெண்ணை விரும்புவனும்.

[3] குருவுக்கு 2-ல் இலக்கினாதிபதியும் 8-க்குடையவரும் நிற்கவும், 4-க்குடையவர் 10-ல் அமரவும், அவரை சனி நோக்கவும் பெற்ற ஜாதகன் குருவின் மகளைப் புணர்வனென்றுங் கூறுக.

[4] சூரியன், சனி, செவ்வாய் ஆகிய மூவரும் 9-ல் நிற்கவும் அவரை 7-க்குடையவர் பார்க்கவும், 12-ல் 2-க்குடையவர் நிற்கவும் பெற்ற ஜாதகர் முன் கூறிய வண்ண முடையவரேயாம்.

## 1263

(இ-ள்.) 2-10-க்குடையவர்களுஞ் சந்திரனும் ஆகிய மூவரும் 8-ல் நிற்கவும், இவர்களை சனியும் 8-க்குடையவரும் பார்க்கவும், இலக்கினுதிபதி சுபஸ்தானங்களேறி நிற்கவும் பெற்ற ஜாதகன் முன் கூறியவர்களுக்கு நல்லவனும்.

[2] 2-9-5-க்குடையவர்களாகிய மூவர்களும் கூடி சந்திரனுக்கு 8-ல் நிற்கவும், அவர்களைச் சனி, குளிகன் பார்த்தாலும், அல்லது சேர்ந்தாலும், 2-க்குடையவர் 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் குருமொழி தவறி, மன நோகவுஞ் செய்பவனுயும் தீயர்களில் ஒருவனுயு முள்ளவராம்.

## 1264

(இ-ள்.) 4-7-5-9-க்குடையவர்கள் ஆகிய நால்வரும் பகைவருடன் கூடி 8-க்குடையவர் நோக்கமுமடைந்து, சந்திரனேடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் குருவின் மனம் நோகச் செய்யும் பாவியு மாவனும்.

[2] 9-ல் 6-9-க்குடையவர்கள் நிற்கவும், 2-ல் சனி 12-க்குடையவர் சந்திரனும் ஆகிய மூவர்களும் அமரவும், 2-ம் இடத்தைச் செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகர் குருமொழி தவறும் தோஷியு மாவராம்.

### அவபுத்திர பாவகம்

## 1265-1266

(இ-ள்) பிதாவின் யோக சுகங்களைக் கெடுக்கும் புத்திரவிதிகளைக் கூறுகின்றனம்,

[2] 5-ம் இடத்திலேனும், 2-ம் இடத்திலேனும், 3-10-9-க்குடையவர்கள் நிற்கவும், அவர்களை 6-க்குடையவருஞ் சூரியனும் பார்க்கவும் பெற்ருலும்,

[3] சனி, சுக்கிரன், சந்திரன் ஆகிய மூவர்களுங் கூடி 2-ல் நிற்கவும், 6-ல் சூரியனும் 9-க்குடையவரும் நிற்கவும் பெற்ருலும்,

[4] லக்கினத்திற் சந்திரனும், 9-க்குடையவரும் நிற்கவும், 2-க்குடையவரைச் சூரியன் பார்க்கவும் பெற்ருலும்,

[5] 2-9-க்குடையவர்கள் 2-ல் நிற்கவும், குரு, சுக்கிரன், சூரியன் ஆகிய மூவர்களுங் கூடி ஒரு ராசியில் நிற்கவும், அவரைச் சனியும் 8-12-க்குடையவர்கள் பார்க்கவும் பெற்ருலும்,

[6] சனி 9-ல் நிற்கவும், சந்திரனுக்கு 8-ல் 9-க்குடையவர் அமரவும், சனிக்கு 3-ல் சூரியன் நிற்கவும் பெற்ருலும்,

[7] 3-9-துலாம் இந்த ராசிகளில் சந்திரனுக்கு 9-க்குடையவர் நிற்கவும், சூரியனை நீசர்கள் பார்க்கப் பெற்ருலும் இந்த 7-தரமுள்ள ஜாதகர்களும் தவத்தினுல்பெற்ற பிதாவின் பொருள் அடையார்களென்றும், பிதாவுக்குப் பணிவிடை செய்யாது உலகத்தி லலையும் பாதகரென்று உலகர் சொல்லும் பழிப்புக்கு உடலெடுத்தவர்களென்றுங் கூறியது.

## 1267

(இ-ள்,) செவ்வாய் 9-ல் நிற்கவும், 2-க்குடையவர் 9-ல் அமரவும், 3-க்குடையவரும், சூரியனும் 8-ல் நிற்கவும், அவரைப் பாபர்கள் பார்க்கவும், சுபர்கள் 6-8-12-ல் நிற்கவும், பாபர்களெல்லாம் சுப ஸ்தானங்களி லடையவும் பெற்ற ஜாதகர் தந்தையினுல் கொடுக்கப்பட்ட பொன் பூமி முதலியவற்றை வேசியர்கள், சூதர்கள், பாதகர்களுக்குங் கொடுத்துவிட்டு ஒரு காசுமு் பெருதவராகி சித்திரத்திலு மெழுதார்களாம்.

## வித்தை பாவகம்

## 1268 - 1269

(இ-ள்.) 9-ல் சந்திரன் நிற்கவும், 9-க்குடையவர் லக்கினுதிபதி, புதன் ஆகிய மூவரும் 4-ல் நிற்கவும், 4-க்குடையவர் 2-ல் நிற்கவும் பெற்ருலும்,

[2] 2-லேனும் 5-லேனும் சந்திரன் நிற்கவும், 9-ல் சுக்கிரனும் 4-க்குடையவரும் அமரவும், 2-ல் சுபர்கள் நிற்கவும், சந்திரனை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ருலும்,

[3] 9-க்குடையவரைச் சுக்கிரனும் குருவும் பார்க்கவும், அவர்களை எதிர்ப்பார்வையாகப் புதனும் பார்க்கவும், சந்திரனும் 4-க்குடையவருங் கூடி 2-ல் நிற்கவும் பெற்ருலும்,

[4] லக்கினத்தில் சந்திரனுக்கு 4-க்குடையவர் நிற்கவும், 9-ல் சுக்கிரன், புதன், சந்திரன், லக்கினுதிப்பதி ஆகிய மூவர்களும் வலிபெற்று நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும் பெற்ருலும்,

[5] கேந்திரத்தில் குரு நிற்கவும், 9-ல் 2-4-க்குடையவர்கள் நிற்கவும், அவர்களை 5-க்குடையவர் பார்க்கவும், லக்கினுதிபதி சிம்மாசனுங்கிஷத்தில் வலி பெற்று நின்ருலும்,

[5] 9-க்குடையவரும், லக்கினத்திற்கு அங்கிஷாதிபதியும் ஆகிய இருவரும் 2-ல் நிற்கவும், அவர்களோடு சுக்கிரனும் 2-க்குடையவரும் கூடி நிற்கவும், 5-ம் இடத்தைக் குரு பார்க்கவும் பெற்ருலும்,

[7] 4-ம் இடத்தில் 8-9-2-க்குடையவர்களும், குரு, சந்திரன், சுக்கிரன் ஆகிய அறுவர்களும் நிற்கவும் பெற்ருலும், இந்த ஏழு தரமுள்ள ஜாதகர்களும் வித்தையில் வல்லவர்களாம்.

1270

(இ-ள்.) 2-க்குடையவர் ஆட்சி உச்சம் பெற்று செவ்வாய் சூரியனோடு கூடி கேந்திர மடையவும், இலக்கினுதிபதியுங் கேந் திரத் திருக்கவும், 4-க்குடையவர் திரிகோண மடையவும், புத னுக்கு 5-ல் சந்திரன் ஆட்சி பெற்று நிற்கவும், கேது குருவுக்கு கேந்திர மடையவும் பெற்ற ஜாதகர் ஞானம், உண்மை, வித்தை, பொருள், பலம் களத்திர சுக முடையவராம்.

பிதிர் யோகம்

1271

(இ-ள்.) சந்திரன் 5-ல் நிற்கவும், அவரைக் குரு பார்க்கவும், சூரியன் திரிகோணங்களில் வலிபெற்று நின்ருலும்,

[2] சந்திரனின்ற ராசியாதிபதியும், செவ்வாய் நின்ற ராசி யாதிபதியும், தனபாக்கியாதிபதி ஆகிய மூவர்களும் திரிகோண கேந்திர மடையவும், அவர்களைக் குரு பார்க்கவும், இலக்கினத் தில் சூரியன் நிற்கப் பெற்ருலும்,

[3] 9-ல் 12-க்குடையவரும், இலக்கினுதிபதியும், குரு ஆகிய மூவரும் நிற்கவும், அவர்களை 9-க்குடையவர் பார்க்கவும், அல்லது கூடி நிற்கவும். சூரியன், குரு இவர்கள் கூடி கேந்திர மடையவும் பெற்ற 3-தரமுள்ள ஜாதகர்களுடைய தந்தை சுக மாகிய யோக முடையவராம்.

1272

(இ-ள்.) செவ்வாய்க்கு 9-க்குடையவர் 9-ல் நிற்கவும், 6-10-க் குடையவர்கள் சந்திரகோண மடைந்து வலி பெற்று நின்ருலும்,

[2] 12-க்குடையவர் 9-ல் நிற்கவும், 9-க்குடையவர் 12-ல் அமரவும், 6-க்குடையவர் லக்கினத்தில் வலிபெற்று நின்ருலும்,

[3] குருவினேடு 12–9–க்குடையவருங் கூடி திரிகோண கேந்திர மடையவும், சூரியனும் சந்திரனுக்கு 9–க்குடையவருங் கூடி 2–ல் நின்றுலும்,

[4] 12–க்குடையவர் 5–ல் நிற்கவும், 9–க்குடையவர் 6–ல் அமரவும், அவர்களைச் சந்திரனுக்கு 9–க்குடையவர் பார்க்கவும், சூரியன் உச்ச மடைந்து நின்றுலும்,

1273

(இ-ள்.) 5–ல் குரு நிற்கவும், குருவின் கேந்திரத்திற் சூரியன் உச்சமடைந்து ஆட்சி யடைந்த செவ்வாயுடன் கூடி நிற்கவும், 5–க்குடையவர் கேந்திர மடையவும், சுக்கிரன் சந்திரனுக்கு 10–ல் நிற்கவும் பெற்ற 5–தரமுள்ள ஜாதகர்களும் செல்வம் பூரண வயது, தந்தையின் பொருள் உடையவராய் வாழ்பவராம்.

பிதிர் மாரகம்

1274

(இ-ள்] பிதாவினுடைய மாரகங்கள் வரும் திசை புசிப்புகளைச் சொல்லுமாறு என் குருவின் அருளைத் துணையாகக் கொண்டு துணிந்தனம்.

9–க்குடையவரோடு கூடினவர் 2–க்குடையவர் இவர்களைப் பார்த்தவர்களும், சந்திரனுக்கு 9–க்குடையவர் நின்ற ராசிக்கு மேற் கூறியபடி நின்றவர்களுடைய திசையிலும், 9–க்குடையவருக்கு இரண்டு பாரிசத்தினின்றவர்கள் திசையிலும், 9–க்கு 8–க்குடையவரோடு நின்றவர்களும், பார்த்தவர்களுடைய திசையிலும், 2–க்கு 9–க்குடையவர் திசையிலும், 9–க்கும், 8–க்கும், 7–க்குடையவர் புசிப்பில் பிதிர் மாரகமென்றும்; இன்னும்,

1275

(இ-ள்.) 10–க்குடையவர்கள் திசையில் சூரியனுக்கு 7–8–க்குடையவர் புசிப்பினும் 2–க்குடையவர் திசையிலும், சந்திரனுக்கு

8–9–க்குடையவர் புசிப்பினும், சந்திரனுக்கு 9–க்குடையவர் திசையிலும், சூரியனோடு சேர்ந்தவர் புசிப்பினும், 3–க்குடையவர் திசையிலும், சூரியனுக்கு 7–க்குடையவர் புசிப்பினும், 9–க்குடையவர் திசையில் சூரியனுக்கு 8–க்குடையவர் புசிப்பினும் பிதாவின் மாரகங்களென்று கூறல் வேண்டுமாம்.

## 1276

(இ–ள்.) சந்திரனுக்கு 9–க்குடையவர் திசையிலும் சந்திரனுக்கு 7–க்குடையவர் புசிப்பினும், சந்திரனுக்கு 8–க்குடையவர் புசிப்பினும் பிதா மாரகமென்றுங் கூறப்படுமாம்.

முன்கூறிய திசை புசிப்பில் பிதுர் மாரகங் கூறியிருக்கின்றமையால், அதற்கு லக்கினங்களைச் சுத்தப்படுத்தி நன்ருகவறிந்து முன்கூறிய தீபம்போலுள்ள சக்கரங்களையும், உயிர்திசை வலியும், கோசரச் சனி–குரு பலங்களும், நினைவாக வறிந்து 9–க்கு 8–10–க்குடையவர், சூரியன் இவர்களுடைய வலி யறிந்து பிதாவின் மாரகங்கள் கூறல் வேண்டுமாம்.

## 1277

(இ–ள்.) இன்னமும் இதில் வினைய முண்டென்று கூறிய கணிதநூ லிலக்கண மறிந்த ஜெபம்பொருந்திய சித்தர்களுடைய கருத்தையுங் கூறுகின்றனம் : பிதாவின் ஆயுள் பலத்தும் ஜாதகன் ஆயுள் குறைந்தும், சரராசி யென்றும், திரராசியென்றும் சுழன்ற பேதகமும், கணித கிரக ஸ்புடத்தினுல் எடுத்த லக்கினத்தி னுரிமையும், லக்கினதி னின்ற முறையும், சூரியன், சந்திர னின்ற உரிமையும், புத்திமான்களாகிய கற்றறிந்தவரிடமுணர்ந்த துணிவினுல் இப்படியுங் காட்டுவார்களாம்.

## பத்தாம் பாவகம்

## 1278

(இ–ள்.) பத்தாம் பாவகத்தில் மேன்மையான வேதாந்தமும், கங்கா ஸ்நானமும், கருமங்களும், புத்திர கர்மமும், தான்

செய்யுங் கருமங்களும், சன்னியாச முதலியவற்றைக் கூறுவதற்கு கடவுளின் பாதங்களை வணங்கினேனாகவும்.

## குரு வணக்கம்

### 1279

(இ-ள்.) பலவித் வேதங்களையும் உணர்ந்த அகஸ்தியரான வர் தம் அடியார்களுடைய குறைகளை நீக்குவதுபோல் முல்லை நிலத்தில் வாசஞ் செய்யும் ஆயர் குலத்தில் பிறந்த திருக் குடந் தைப் பதியில் வாழும் வீரப்பபிள்ளை அவர்கள் என்னும் அவதா ரம் பூண்டு நன்மை பொருந்திய என்னுடைய ஆசிரியரது இரு பாதங்களும் எந்நாளும் நம்மை விடாதென்று கூறுகின்றனம்.

## சன்னியாச பாவகம்

### 1280

(இ-ள்.) 1-9-12-க்குடையவர்கள் ஆகிய மூவருங் கேந்திர மடையவும், அவர்களைக் குரு பார்க்கவும் பெற்றாலும்,

[2] 11-9-10-க்குடையவர்கள் உச்சமடையவும், 2-க் குடையவர் 4-ல் நிற்கவும் பெற்றாலும்,

[3] 8-10-க்குடையவர்கள் சந்திரனுக்கு 9-ல் நிற்கவும், அவர்களைச் சுக்கிரன் பார்க்கவும் பெற்றாலும்,

[4] 9-ல் சந்திரனோடு குரு கூடி நிற்கவும், இலக்கினத்தில் சனி அமரவும், 10-க்குடையவர் உச்சமடையவும் பெற்றாலும்,

[5] சுக்கிரன் இலக்கினத்தினின்று சனியைப் பார்க்கவும் பெற்ற 5-தரமுள்ள ஜாதகர்களும் சாகாதிருக்கும்படி மும்மலங் களையுங் கடந்து கன்மத்தை நீக்கி உண்மைச் சமாதிகளைக் காண் பவர்களாம்.

1281

(இ-ள்.) 9-1-10-5-7-க்குடையவர்களாகிய ஐவரும் 9-ல் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கப் பெற்ருலும்,

[2] 1-4-5-க்குடையவர்களாகிய மூவர்களும் 2-ல் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கப் பெற்ருலும்,

[3] சந்திரனுஞ் சனியு மிருந்த ராசியாதிபதிகளை இலக்கிஞதிபதி பார்க்கவும் பெற்ருலும்,

[4] சந்திரனுக்கும் இலக்கினத்திற்கும் 4-க்குடையவர்களாகிய இருவர்களும் குரு பார்வை யடைந்து 10-ல் நிற்கப்பெற்ருலும், இந்த நான்கு தரமுள்ள ஜாதகர்களும் பரிசுத்தமாகிய சைவ சித்தாந்த துறையில் மூழ்கி, உண்மை ஞான பரிசுத்த நீராடி சிவானந்த அமுதத்தில் உறைந்திருப்பவர்களாம்.

தீர்த்த யாத்திரா பருவம்

1282

(இ-ள்.) 12-ல் புதனும், சூரியனும் நிற்கவும், 10-க்குடையவர் குருவோடு கூடி திரிகோண மடைந்தாலும், 10-க்குடையவர் உச்ச மடையவும், 10-ல் சந்திரன் நிற்கவும், இலக்கிஞதிபதி 10-க்குடையவரைப் பார்த்து நின்ருலும், 10-க்குடையவரும், சுக்கிரனும் உச்ச மடைந்த சந்திரன் பார்வையைப் பெற்று திரிகோண மடைந்தாலும், சுக்கிரனேடு இராகு கூடி 10-ல் நிற்கவும், 10-2-9-க்குடையவர்கள் ஆகிய மூவரும் 9-ல் நிற்கவும் பெற்ருலும், இந் நான்கு தரமுள்ள ஜாதகர்களும் சிவாகம விதி நெறியிற் றேர்ந்து பிரதானமாகிய தெய்வத் தன்மை பொருந்திய கங்கை நீராடி மூவர்களுங் கூறிய வேதங்களைப் படித்து முடிவினில் சிவபுரம் அடைவார்களாம்.

## யாகாதி கருமம்

### 1283

(இ–ள்.) 10–க்குடையவர் சனி, புதன் ஆகிய மூவர்களும் சந்திரனுக்கு 12–ல் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கப் பெற்றாலும், இலக்கினாதிபதி சந்திரனோடு கூடி 2–ல் நிற்கவும், அவரைக் குரு பார்க்கப் பெற்றாலும் சந்திரனுக்கு 10–க்குடையவர் உச்சமடையவும், அவரை லக்கினத்திற்கு 10–க்குடையவருங் குருவும் ஆகிய இருவரும் பார்க்கப் பெற்றாலும் புதன், குரு, இராகு ஆகிய மூவர்களுமிருந்த இராசியாதிபதிகள் சூரியன் வீடாகிய சிம்மத்தில் நிற்கவும், இவர்களை 9–க்குடையவர் பார்க்கவும் பெற்றாலும், கேது புதன் 10–க்குடையவர்களாகிய மூவர்களும் குருவுக்கு 10–ல் நிற்கவும், அவர்களை 9–க்குடையவர் பார்க்கவும் பெற்றாலும், 12–9–க்குடையவர்களாகிய இருவரும் 10–ல் நிற்கவும், உச்சமடைந்த புதனோடு கேது பகை பெற்று நின்றாலும், இந்த ஆறு தரமுள்ள ஜாதகர்களும் வேள்விக்குடையவர்களாம்.

## ஜீவன பாவகம்

### 1284

(இ–ள்.) சந்திரன், செவ்வாய் 10–க்குடையவர்களாகிய மூவர்களுங் கூடி 4–ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் ஜபத்தினாலும் நிலத்தினாலும் ஜீவன முடையவராம்.

[2] 4–க்குடையவரோடு சந்திரனுக்கு 4–க்குடையவர் கூடி 10–ல் நிற்கவும், இவர்களை 9–க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் செட்டாகிய ஜீவனம் செய்பவராம்.

[3] 9–3–க்குடையவர்கள் கூடி 4–ம் இடத்தில் நட்படைந்து நிற்கப் பெற்ற ஜாதகர் கணக்கில்லாத பொருளை வைத்து வியாபாரஞ் செய்பவராம்.

[4] 1-10–4–7–க்குடையவர்களாகிய நால்வருங் கூடி 7–ல் நிற்கப் பெற்ற ஜாதகர் மந்திரி எனக் கூறுக.

[5] 9–10-க்குடையவர்கள் 9–ல் நிற்கவும், 11–க்குடையவர் 10-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் உத்தியோகமும் கீர்த்தியும் அடைபவராம்.

1285

(இ–ள்.) லக்கினத்தில் 10-7-க்குடையவர்களாகிய இருவரும் நிற்கவும், 1-2-க்குடையவர்கள் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் உத்தியோகத்தை யிழந்து அலைபவனும்.

[2] 9-க்குடையவரும், 9-10-க்குடையவரும், சந்திரனும் ஆகிய மூவர்களும் ஒரு ராசியில் நிற்கவும், அவ் விராசிக்கு 9-ல் குரு நின்று மேற்கூறியவர்களைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் உலகம் வணங்கத்தக்க மந்திரி யாவராம்.

[3] 2–ம் இடத்தில் 1–2–க்குடையவர்களாகிய இருவரும் நிற்கவும், 5-க்குடையவரும், குருவும் ஆகிய இருவருங் கூடி சந்திரனுக்கு 1-ல் அமரவும் பெற்ற ஜாதகர் ராஜரீகத்தில் சேவகஞ் செய்பவராம்.

[4] 7-4-10-1-க்குடையவர்களாகிய நால்வர்களுங் கூடி 10-ல் நிற்கப்பெற்ற ஜாதகர் ராஜரீகத்தில் உண்மை உத்தியோகமும் கீர்த்தியு முடையவராம்.

1286

(இ–ள்.) 7-10-க்குடையவர்கள் லக்கினத்தில் நிற்கவும், லக்கினுதிபதி 2-க்குடையவருடன் கூடி 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் சத்திய மந்திரியாய் வாழ்பவராம்.

[2] 4–க்குடையவரும், சந்திரனுக்கு 4-க்குடையவருங் கூடி 10–ல் நிறகவும், அவர்களைச் செவ்வாய் பார்கவும் பெற்ற ஜாதகர் ராஜர் கையின் செங்கோலாகித் துஷ்டர்களைச் சுட்டு விடுவராம்,

[3] 12-9-க்குடையவர்களுஞ் சந்திரனுக்கு 9-க்குடையவரு மாகிய மூவருங்கூடி 10-ல் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் வேளாண்மைத் தொழிலால் வாழ்பவராம்

[4] 9-ல் 4-9-க்குடையவர் அமரவும், 10-க்குடையவர் உச்ச மடையவும் பெற்ற ஜாதகர், பூமி, செல்வம், உத்தியோகமுடைய வராம்.

## கரும பாவகம்

## 1287

(இ-ள்.) 9-க்குடையவர் 10-ல் நிற்கவும், 0-க்குடையவர் 9-ல் நிற்கவும், குரு 3-8-லிருந்து பல மடையவும் பெற்றஜாதகர் தாய் தந்தையர்களுக்குச் சமீபத்திலிருந்து கருமஞ் செய்பவராம்

[2] 10-4-9-க்குடையவர்களாகிய மூவர்களுங்கூடி 7-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் இரண்டு கருமங்களையுஞ்செய்து, தர்மங்கள் பலவுஞ் செய்து முடிப்பவராம்.

[2] சந்திரனுக்கும் லக்கினத்திற்கும், 4-க்குடையவர்களாகிய இருவரும் 10-ல் நிற்கவும், 9-க்குடையவர் சுபனு யிருக்கவும் பெற்ற ஜாதகன் தாய் தந்தையின் கருமங்களைக் கனிவாகச் செய்வன். மேற்கூறிய 9-க்குடையவர் பாபராகில், தாய் தந்தையர்களுக்கு அன்னியரால் கருமம் நடக்குமாம். அதற்கு ஜாதகன் அறிவில்லாதவனு மன்று. ஆனல் மனதின்கண் அன்பில்லாதவனென்றுங் கூறுக.

## 1288

(இ-ள்.) சூரியனுஞ் சந்திரனுங் கூடி திரிகோண மடையவும், சந்திரனுக்கும், லக்கினத்திற்கும் 10-க்குடையவர்கள் தங்கள் தங்களில் ஆட்சி உச்சமடையவும் பெற்ற ஜாதகர் கலியாணஞ் செய்வதுபோல் கருமங்கள் செய்பவராம்.

[2] சந்திரனுக்கு 10-க்குடையவர் வலுப்பெற்று ஆட்சி யுச்ச மடைந்து நிற்கவும், 10-க்குடையவர் தனித்து வலு வடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் பிதிர் முதலிய கருமங்கள் 7-செய்பவராம்.

[3] 10-க்குடையவர் உச்ச மடையவும், 12-க்குடையவர் 7-ல் நிற்கவும், அவரை 7-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாத கர் தாய் தந்தையர்கள் கருமஞ் செய்து பிறகு மனையாள் கரும மூஞ் செய்பவராம்.

[4] 10-3-6-8-க்குடையவர்களாகி நால்வரும் ஆட்சி யுச்ச மடையப் பெற்ற ஜாதகர் தாய், தந்தை, சகோதரமாகிய மூன்று கருமஞ் செய்பவராம்.

1289

(இ-ள்.) 1-3-க்குடையவர்கள் கூடி 10-ல் நிற்கவும், 10-க் குடையவர் 3-ல் அமர்ந்து, பலஹீன மடைந்து, 5-க்குடையவ ரைப் பார்க்கவும் பெற்ற ஜாதகர் தன் புத்திரனுக்குக் கருமஞ் செய்பவராம்.

[2] 9-5-10-க்குடையவர்களாகிய மூவரும் சந்திரனுக்கு 10-ல் நிற்கப் பெற்ற ஜாதகர் 1-2-புத்திரர்களுக்குக் கருமஞ் செய்து மாரக மாவராம்.

[3] சந்திரனுக்கு 5-க்குடையவர் 10-ல் நிற்கவும், அவ ரைச் சந்திரனுக்கு 10-க்குடையவர் பார்க்கவும் பெற்றாலும்,

[4] 2-க்குடையவரும் குருவுங் கூடி 10-ல் நிற்கவும், அவர் களைச் செவ்வாய் பார்க்கவும் பெற்றாலும், குரு, சுக்கிரன், சனி 10-க்குடையவர்களாகிய நால்வர்களுங் கூடி 5-ல் நிற்கப் பெற் றாலும் 8-க்குடையவர் செவ்வாய் 10-க்குடையவருமாகிய இம் மூவர்களுங் கூடி 5-ல் நிற்கவும் பெற்றாலும், இந் நான்கு தர முள்ள ஜாதகர்களும் தம் புத்திரர்களுக்குக் கருமஞ் செய்பவர் களாம்.

## 1290

(இ-ள்.) இதுவரையிற் கூறிய கரும விதிகளில் கணித மறிந்த ஒரு புத்திமான் கூறுகின்றனர். என்னவென்ருல், கருமாதிபதி கரும ஸ்தானத்தில் நின்றவர்கள், கருமாதிபதியைப் பார்த்தவர்கள், சேர்ந்தவர்கள், சந்திரனுக்கு 10-க்குடையவர் ஆகிய இவர்கள் மேற் கூறியவர்களைப்போல் செயலடைந்து வலுப்பெற்றவர்கள் திசையிலும் குருவோடு சேர்ந்தவர்களுடைய திசையிலும் கரும ஸ்தானத்திலிருந்த கருமாதிபன் அவரை அவர்களைப்போல் வலி பெற்றவ ரெவரோ அவர் பொசிப்பிலும், புண்ணிய கருமங்கள் மற்ருென்று அமையாத காலத்தினும் கோசரங்களில் சனி, குரு பலன்களை முற்றும் அறிந்து கருமங் கூறுவார்களாம். இம் மார்க்கமல்லாது ஒன்றை விட்டொன்று பிதற்றுவாராகில் இந்த ஜோதிட சாஸ்திரத்திற்கும், சொல்பவர் களுக்கும் கீர்த்தி யில்லையாம்.

## பதினொராம் பாவகம்

## 1291

### குரு வணக்கம்

(இ-ள்.) பாக்கியம், இலாபம், நல்லறிவு, செல்வம், முன்னேன் ஆகிய பலன்களை 11-ம் இடப் பாவகத்தால் கூறுவதற்கு கணித வல்லவராகியும், என் குருவாகியும், திருக்குடந்தையில் வளரும் ...ரப பிள்ளை என்னும் ஜோதிடக் களஞ்சியத்தினது உபய பாதங்களும் என் நாவினிடைனின்று சொற் பிரளாமல் நடத்து மென்று உறுதியாகத் துணிந்தது.

## பாக்கிய பாவகம்

## 1292

(இ ள்) 10-11-க்குடையவர்கள் 9-ல் நிற்கவும், 9-க்குடையவர் 2-ல் அமரவும், 2-க்குடையவர் 2-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் பாக்கியமும், யோக்கியமும் உடையவராம்.

[2] 11-க்குடையவர் உச்சம் பெற்று கேந்திர மடையவும், அவரை 4-க்குடையவரும் புதனும் கூடி பார்க்கவும், செவ்வாய் திரிகோண மடையவும் பெற்ற ஜாதகருக்குக் கல்வியும், பொருளும், அஸ்வயோகமும் உண்டாகுமாம்.

## 1293

(இ-ள்.) 2-11-க்குடையவர்கள் கூடி கேந்திர மடையவும், அவர்களை இலக்கினாதிபதியும், 4-க்குடையவரும் பார்க்கவும் பெற்ற ஜாதகர் 2-3-வீடுகள் கட்டித் துணைவரோடு செல்வ மோங்கி யிருப்பவராம்.

[2] 11-10-க்குடையவர்கள் இலக்கினத்தில் நிற்கவும், 7-5-க்குடையவர்கள் 11-ல் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும் பெற்ற ஜாதகர் கல்வியுஞ், செல்வமும் பெற்று சைதன்ய சிவாநுபவ மடைவராம்.

## 1294

(இ-ள்.) இலக்கினத்திற்கும், சந்திரனுக்கும் 11-க்குடையவர்கள் கூடி 5-ல் நிற்கவும், 10-9-க்குடையவர்கள் கூடி இலக்கினத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் கல்வி, செல்வம், வாகனமுடையவராம்.

[2] 5-க்குடையவர் கேந்திர மடையவும், அக்கேந்திராதிபதி 5-ல் நிற்கவும், 11-க்குடையவரும், 11-க்குடையவருக்கு 11-க்குடையவரும் ஆகிய இருவரும் கேந்திர மடையவும் பெற்ற ஜாதகருக்குக் கல்வி செல்வ முண்டாகுமாம்.

## 1295

(இ-ள்.) 2-8-9-க்குடையவர்கள் ஆகிய மூவரும் 8-12-ல் நிற்கப் பெற்றாலும்,

[2] சந்திரனுக்கு 11-2-க்குடையவர்கள் ஆகிய இருவரும் 8-ம் இடத்தில் நிற்கவும், அவர்களைச் செவ்வாய் சனி பார்க்கவும் குருவும், 9-க்குடையவருங் கூடி 6-12-ல் நிற்கவும் பெற்றாலும்,

[3] இலக்கினாதிபகிக்கும், இலக்கினத்திற்கும், 11-க்குடைய வரும், சந்திரனும் ஆகிய மூவரும் கூடி 9-12-ல் நிற்கவும் பெற்றா லும் இச் சாதகர்கள் தீனர்களென்றும் கூறுக.

## 1296

(இ-ள்.) 10-4-க்குடையவர்கள் 11-ல் நிற்கவும், இவர்களைப் புதன் 11-ல் இருந்து பார்க்கவும், இலக்கினாதிபதி 4-ம் இடத்தில் நட்பு பெற்று நிற்கவும் பெற்ற ஜாதகர் செல்வமுடையவராம் 11-க்குடையவரும் 11-க்குடையவ் ரிருந்த ராசிக்கு 11-க்குடைய வரும், சந்திரனுக்கு 11-க்குடையவரும், 11-க்குடையவ ரிருந்த இராசியாதிபதியு மாகிய நால்வரும் ஒருவருக் கொருவர் கேந்திர மடைந்து நிற்கப் பெற்ற ஜாதகர் செல்வ முடையவராம்.

## 1297

(இ-ள்.) சந்திரனுக்கு 11-க்குடையவரும், 9-2-க்குடையவர் களாகிய மூவரும் சந்திரனுக்கு 11-ல் நிற்கவும், 7-ம் இடத்தை சனி பார்க்கவும் பெற்றாலும், 1-11-2-க்குடையவர்கள் ஆகிய மூவரும் கேந்திர மடையவும், 4-க்குடையவர் ஆட்சி நட்பில் நிற்கவும், பாபர்கள் 6-8-12-ல் மறைந்து நிற்கவும் பெற்றாலும், இந்த இரண்டு தரமுள்ள ஜாதகர்களும் இலக்குமிக்குச் சமான முள்ள பெண்ணை விவாகம் செய்பவராயும், விஷ்ணு அம்ஸ முடையவர்களாயு மிருப்பவர்களாம்.

## 1298

(இ-ள்.) குருவும், சந்திரனுக்கு 4-க்குடையவருங் கூடி கேந் திர மடையவும், சூரியன் 4-ல் நிற்கவும், 11-ல் சந்திரனுக்கு 10-க் குடையவர் நிற்கவும் பெற்றாலும், சுபர்களுடைய மத்தியில் 11-க்

குடையவர் உச்ச மடையவும், அவ்விராசியாதிபதி 11-ல் நிற்கவும் பெற்றாலும் இந்த இரண்டு தரமுள்ள ஜாதகர்கள் எத் தொழிலைச் செய்தாலும் லாப முண்டாம்

## 1299

(இ-ள்). 1-11-க்குடையவர்களோடு 5-க்குடையவர் வலுப் பெற்று நிற்கவும், அவர்களைக் குளிகன் பார்க்காதிருக்கவும் பெற்றாலும், 9-5-க்குடையவர்கள் லக்கினத்தில் நிற்கவும், சந்திரனுக்கு 5-க்குடையவர் 11-ல் அமரவும், 1-4-க்குடையவர்கள் சுபஸ்தானங்கள் அடையவும் பெற்ற இவ்விரண்டு ஜாதகர்களும் சத்தியந் தவறாது பொருள் மிகுதி யுடையவராம்.

## 1300

(இ-ள்.) 5-1-க்குடையவர்கள் கூடி 11-ல் நிற்கவும், 5-ம் இடத்தில் குருவும், 11-க்குடையவரும் அமரவும், 2-க்குடையவர் திரிகோணமடையவும் பெற்றாலும், லக்கினாதிபதி, சந்திர லக்கினாதிபதி, 11-க்குடையவர் ஆகிய மூவர்களுங் கூடி 5-ம் இடத்தில் சுப மூர்த்தராய் நிற்கவும் பெற்றாலும், கன்னியா லக்கினமாகி அதில் புதன், சுக்கிரன், செவ்வாய் ஆகிய மூவருங் கூடி நிற்கவும் பெற்றாலும், இம் மூன்று தரமுள்ள ஜாதகர்களும் செல்வ முள்ளவர்களாம்.

## 1301

(இ-ள்.) சந்திரனுக்கு 2-க்குடையவர் 12-ல் நிற்கவும், 11-க் குடையவர் 5-ல் அமரவும் பெற்ற ஜாதகர் பொருள் மிகுத்து நல் லறிவோடிருந்தும் நேந்திர நோயுண்டாகுமாம்.

[2] இலக்கினத்தில் 3-10-க்குடையவர்கள் நிற்கவும், அவர்களை லக்கினாதிபதி பார்க்கவும், செவ்வாய் சூரியனோடு கூடி ஆட்சி யடைந்து நிற்கவும் பெற்ற ஜாதகர் மிகுந்த செல்வத்தை நீக்கி விட்டு தன் மனைவியோடு மயங்கி அயல் தேசம் போவாராம்.

## 1302

(இ-ள்.) 9-ம் இடத்தில் 2-க்குடையவர் நிற்கவும், 2-ல் 11-க்குடையவர் அமரவும், செவ்வாய் 5-ல் நிற்கவும், அவரை குரு பார்க்கவும், 4-க்குடையவர் சந்திரன் வீடாகிய கடகத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகர் 3-சகோதரரை ஆயுள் வரையில் தன்னருகில் வைத்துச் சகல பொருளு மடைந்து சிவபதஞ் சேர்வர்களாம்.

## 1303

(இ-ள்.) குரு 11-ல் நிற்கவும், 11-க்குடையவர் சந்திரனுக்கு 11-ல் செவ்வாய் பார்வை பெற்று நிற்கவும் 7-5-க்குடையவர்கள் மாறி நிற்கப் பெற்ருலும்,

[2] இலக்கிஞதிபதியும், செவ்வாயும் 11 க்குடையவருமாகிய இம் மூவர்களும் நின்ற ராசியாதிபதி மூவர்களும் 11-ல் நிற்கவும், சந்திரனுக்கு 11-ல் குரு நிற்கவும் பெற்ருலும், இவ் விரண்டு தரமுள்ள ஜாதகர்களுடைய தமையன் எந்நாளும் செல்வ முடையவராம்.

## 1304

(இ-ள்.) 11-ல் இலக்கிஞதிபதியும், 2-க்குடையவரும் நிற்கவும், 2-ல் 10-க்குடையவரும், சந்திரனும் 8-க்குடையவரும் ஆகிய மூவரும் நிற்கவும், அவர்களை குரு பார்க்கவும் பெற்ற ஜாதகருடைய தன்மையன் செல்வ முடையவராம்.

[2] செவ்வாய், குரு, 9-11-க்குடையவர்களாகிய நால்வரும் இலக்கினத்தில் நிற்கவும் 7-2-க்குடையவர்கள் ஆகிய மூவரும் 2-ல் நிற்கவும், 11-க்குடையவர் வலு குறைந்து நிற்கவும் பெற்ற 2-தரமுள்ள ஜாதகர்களும் பொய்யாகிய வித்தையிலும், புதையலின் இச்சைக்குள் ளரவர்களாம்.

1305

(இ-ள்.) 8-12-ல் 2-8-9-க்குடையவர்களாகிய மூவரும் நிற்க வும், சந்திரனுக்கு 11-2-க்குடையவர்களாகிய இருவரும் 2-8-க் குடையவர்களையும், செவ்வாயையும் பார்க்கவும் பெற்ருலும்,

[2] 8-ம் இடத்தில் 4-க்குடையவர் நிற்கவும், 9-க்குடையவர் 12-ம் இடத்தில் மாறி நின்ருலும், அல்லது 12-ல் நிற்கப் பெற்ரு லும்,

[3] லக்கினதிபதிக்கு 11-க்குடையவரோடு லக்கினத்திற்கு 11-க்குடையவரும், சந்திர லக்கினதிபதியாகிய மூவரும் ஒரு வருக்கொருவர் 6-12-ல் பலங் கெட்டு நிற்கவும் பெற்ருலும், இந்த 3-தரமுள்ள ஜாதகர்கள் கதிவிதி யில்லாது கெடுவர்களாம்.

1306

(இ-ள்.) 11-ல் 4-க்குடையவருக்கு 11 க்குடையவர் நிற்க வும், 8-ல் லக்கினதிபதியும், 9-க்குடையவ ரிருந்த ராசியாதி பதிக்கு 11-க்குடையவர் அமரவும் பெற்ற ஜாதகன் மண், பொன், பெண் முதலிய செல்வ மிருந்தும் ஒரு லாபமு மில்லாத மார்க்கமற்ற மூடனும்.

[2] 11-க்குடையவர்கள் 3-க்குடையவரும் சுபர்களுங் கூடி 11-ல் நிற்கவும், அவர்களைக் குரு பார்க்கவும், 7-ல் சந்திரனும் 8-ல் சுக்கிரனும் நிற்கவும் பெற்ற ஜாதகன் முன்னோர்கள் தேடிய பொருளை வேசையர்க் கழித்துத் துயரப்படுவனும்.

1307

(இ-ள்.) சந்திர னின்ற ராசியாதிபதியும் குருவிருந்த ராசி யாதிபதியும், 7-க்குடையவரும் ஆகிய மூவர்களும் 2-ல் நிற்கவும்,

இவர்களை 11-க்குடையவர் பார்க்கவும், 11-ல் 6-9-12-க்குடைய வர்கள் நிற்கவும் பெற்ற ஜாதகன் வம்பர் திருடர்களுக்குப் பொரு ளெல்லாந் தோற்பானும்.

[2] குருவிருந்த ராசியாதிபதி 11-ல் நிற்கவும், 11-க்குடைய வர் 12-ல் அமரவும், அவரை 4-8-க்குடையவர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் தொட்ட காரியமெல்லாம் விழலுக்கிறைத்த நீர் போலும் ஆகுமாம்.

## 1308

(இ-ள்.) 6-8-12-ல் 11க்-குடையவர் நிற்கவும், 8-க்குடைய வரும், லக்கினதிபதியும் அதில் மாறி நிற்கவும், 2-க்குடையவர் சந்திரனுக்கு 6-ல் அமரவும் பெற்ற ஜாதகன் தொட்ட தொழி லெல்லாம் சமுத்திரத்தில் கரைத்த பெருங்காயமே யாம்.

[2] 6-ம் இடத்தில் 2-க்குடையவர் நிற்கவும், 4-ம் இடத்தில் சந்திரனுக்கு 4-க்குடையவர் அமரவும், 5-ல் 8-க்குடையவர் நிற் கவும், அவரை சந்திரன் பார்க்கவும், குரு 7-ல் அமரவும் பெற்ற ஜாதகன் மரணம் வரையில் இன்பமில்லா தலைவனும்.

## 1309

(இ-ள்.) 11-3-க்குடையவர்களாகிய இருவரும் 12-ல் நிற்க வும் இவர்களைச் சனி பார்க்கவும் பெற்ற ஜாதகன் செய்யும் தொழில்களெல்லாம் பழுதுண்டாகுமாம்.

[2] 4-5-6-க்குடையவர்களாகி மூவரும் 12-ல் நிற்கவும், 1-11-க்குடையவர்களும், குருவும், சந்திரனும் ஆகிய நால்வர் களுங் கூடி பலங்கெட்டு 6-8-ல் நிற்கவும் பெற்ற ஜாதகன் குணங்

கெட்டுக் களவு, சூது செய்பவனாய்ப் பொய் பேசித் துயரப்படுந் தோஷியாம்.

1310

(இ-ள்.) 2–11-க்குடையவர்களாகிய இருவருங்கூடி 2-ல் நிற்கவும், இவர்களை 9–க்குடையவர் பார்க்கவும், 4-க்குடையவர் 3-ல் நிற்கவும், லக்கினாதிபதி பலம் குறைந்து நிற்கவும் பெற்ற ஜாதகன் சூது, பொய், கொலைத்தொழிற் குரியவனாவனும்.

[2] சனியும், லக்கினாதிபதியுமாகிய இருவரும் 12–ல் நிற்கவும், 5-ம் இடத்தில் 8–9–க்குடையவர்கள் நிற்கவும், 5–க்குடையவர் 11–ல் நீச மடைந்து தங்கள் தங்களில் பலங் குறைந்து நிற்கவும் பெற்ற ஜாதகன் கனவிலும் நற் செயலில்லாதவனாய் நரகிகளுக்குக் குருவா யிருந்து நாட்டை விட்டு அப்பால் வாழ்பவனும்.

1311

(இ-ள்.) 5–4-க்குடையவர்கள் கூடி 11-ல் நிற்கவும், 8–ம் இடத்தில் 2-க்குடையவர் பலங் குறைந்து நிற்கவும் பெற்ற ஜாதகன் தாரித்திரியனும்.

[2] குருவும் 11-க்குடையவருமாகிய இருவரும் 12-ல் நிற்கவும், அல்லது சந்திரனுக்கு 4-ல் அமரவும், 3-க்குடையவர் சூரியனோடு கூடி 4-ல் நிற்கவும், அவர்களை நீசர்கள் இருபாலும் நோக்கவும் பெற்ற ஜாதகன் மாயச் சூதாட்டில் திரிந்து வயிறு வளர்க்கும் வம்பனும்.

1312

(இ-ள்.) 11-12-க்குடையவர்கள் கேந்திர மடையவும், சூரிய னைச் சந்திரன் பார்க்கவும், 11-ல் செவ்வாய் நிற்கவும் பெற்ற

ஜாதகனுக்கு இளைய சகோதரத்தால் நன்மை யில்லை யென்றும், ஜேஷ்ட சகோதரமே யில்லை யெனவுங் கூறுக.

[2] 8 ம் இடத்தில் இலக்கினத்திற்கும், சந்திரனுக்கும் 11-க் குடையவராகிய இருவரும் நிற்கவும், 8-க்குடையவர் சூரியன், செவ்வாய் ஆகிய மூவரும் கூடி 11-ல் அமரவும் பெற்ற ஜாதகன் தன் தமையன் என்று மாரக மாவானென்று எண்ணியெண் ணித் தானே மாரக மடையும் வஞ்சகனும்.

[3] 10–ல் 11 க்குடையவர் நிற்கவும், 11–ல் சந்திரனுக்கு 10-க்குடையவர் அமரவும், 8-ல் 8-க்குடையவர் நிற்கவும் அவ ரைச் செவ்வாய் பார்க்கவும் பெற்ற ஜாதகன் முன் கூறிய பலனு டையவனேயாம்.

## 1313

(இ–ள்.) 11-க்குடையவரும், சந்திரனுக்கு 11-க்குடைய வருங் கூடி 8-ல் நிற்கவும், அவர்களைப் பகையுடன் சனி பார்க்க வும், 2-க்குடையவர் 12-ல் நிற்கவும், 6-8-12–க்குடையவர்கள் வலுவடையவும், சுபஸ்தானாதிபதிகள் பலங்குறையவும் பெற்ற ஜாதகன், தந்தைக்குச் சமானமாகிய தமையனோடு காலமுழுதுந் துன்பு வம்பு செய்து அவர்களுக்கு முன்பாகவே மாரக மாவனும். இந்த வகை யனைத்தும் அறிவினால் அளந்து கண்டவர்க ளத்திசை புசிப்பு மறிந்து சொல்வார்களாம்.

## பனிரெண்டாம் பாவகம்

## 1314

(இ–ள்.) 12–4-க்குடையவர்களும், குருவும் ஆகிய மூவர்க ளுங் கூடி 9–ல் நிற்கப் பெற்ற ஜாதகருக்குச் செல்வமும், புகழும், அஸ்வ யோகமு முண்டாம்.

[2] 12-க்குடையவரை 6-க்குடையவர் பார்த்துப் பாப ரோடு கூடி நிற்கவும் பெற்ற ஜாதகன் 8-க்குடையவர் திசையில் அவர் புசிப்பில் துயர மடைந்தும் பொருளோடு தந்தையையு மிழந்து சோர்வு படுவனும்.

1315

(இ-ள்.) பாபர்கள் 2-ல் நிற்கவும், 7-ம் இடத்தைச் செய்வாய் பார்ப்பதோடும், பாவிகளுடன் கூடி நிற்கவும் பெற்ற ஜாதகர் தம் மனைவியால் தவறுண்டு மற்றொரு பெண்ணை மணஞ்செய்து புத்திர செல்வமும், புகழு மோங்கி வாழ்பவராம்.

1316

இ-ள்.) சந்திரனுக்கு 8-க்குடையவர் சுயஸ்தான மேக நிற்க வும், 9-க்குடையவர் ஆட்சி உச்சமடையவும், அவரை குரு பார்க்க வும் பெற்ற ஜாதகர் இராஜ செல்வ மடைந்து குறைவில்லாமல் வாழ்புவராம்.

1317

(இ-ள்.) 10-க்குடையவர் பகையின்றி மித்துருவோடு கூடி திரிகோண மடையவும், அவரைப் பூரண சந்திரனும், 4-க் குடையவரும் பார்க்கவும் பெற்ற ஜாதகன் மிகுந்த பாக்கியவா னென்றும் பகை, பிணி யில்லாதவ னென்றும், புத்திர மித்திர களத்திர சுகமும், ஆயுள் விருத்தியு முடையவனும்.

1318

(இ-ள்.) 2-க்குடையவர் 9-க்குடையுவரோடு கூடி 12-ல் நிற்கவும், அவர்களைச் சுபர்கள் நோக்காது பாபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகன் ஏழையாயும், மனத்தின்கண் எப்பொழுதும் கவலை யுள்ளவனுயும், நன்மை யடையாது தீயனு மாவனும்.

## 1319

(இ-ள்.) 8-ல் 3-க்குடையவர் நிற்கவும். இவரை சுக்கிரன் பார்க்கவும், 8-க்குடையவர் சுபஸ்தானத்தில் நிற்கவும் பெற்ற ஜாதகன் வியாதியனுல் துன்ப மடைவனும்.

[2] 12-க்குடையவர் சனியோடு கூடி திரிகோண மடைய வும், இவர்களை 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் சிவ யோக மார்க்கத்தில் நிற்பவராம்.

## 1320

(இ-ள்.) 6-க்குடையவர் 12-ம் இடத்தைப் பார்க்கப் பெற்ற ஜாதகன் படுபாதகனுகி நரககதி யடைவானும்.

[2] இலக்கினத்தைச் சந்திரன் பார்க்கவும் பெற்ற ஜாதகன் தந்தையினுடைய பொருளிழந்து அயல் தேசம் போவானும்.

[3] சூரியன் 7-8-9-ல் நிற்கவும், உபய ராசிகளாகிய நான்கும் கிரகமில்லா திருக்கவும் பெற்ற ஜாதகர் பரதேசியென்றும் கூறுக.

## 1321

(இ-ள்.) 12-க்குடையவரை சனியும், 4-க்குடையவரும் பகைத்துப் பார்க்கவும் பெற்ற ஜாதகன் அயல் தேசங்களில் பிர யோசன மில்லாது அலைவானும்.

[2] சுபர்கள் 12-ல் நிற்கவும், 6-8-ல் சுபக்கிரகம் 12-க் குடைய சனியோடு கூடி நிற்கவும், அல்லது சனி பார்க்கவும் பெற்ற ஜாதகன் தன் செயலற்றுத் துணைவர்களையு மிழந்து காடு மலைகளில் அலைவனும்.

## 1322

(இ-ள்.) 8-க்குடையவரும், இராகுவும், சனியும் ஆகிய மூவர்களும் கூடி வலுப்பெற்று 12-ல் நிற்கப் பெற்ற ஜாதகன் கெடுதியுடையவனாய் ரௌரவாதி நரக மடைவனும்.

[2] பாபர்களோடு சுக்கிரன் கூடி 12-ல் நிற்கப் பெற்ற ஜாதகன் தாய்க்குச் சமானமானவர்களைப் புணருபவனும்.

[3] சுக்கிரன் செவ்வாயோடு கூடி 12-ல் நிற்கப்பெற்ற ஜாதகன் கீழ்ச் சாதிகளைப்போல் சுக மடைவானும்.

## 1323

(இ-ள்.) 12-ல் பாபர்கள் பகைபெற்று நிற்கப் பெற்ருலும்,

[2] சந்திரன், சனி, செவ்வாய் ஆகிய மூவரும் 12-ல் நிற்க அல்லது பார்க்கப் பெற்ருலும் சந்திரனும், சூரியனுங் கூடி 12-ல் நிற்கப் பெற்ருலும்,

[3] 6 8-க்குடையவர்கள் பாபர்களாகி 12-ல் நிற்கப் பெற்ருலும்,

[4] 12-ல் நால்வர்கள் கூடி நின்ருலும், இந் நான்கு தரமுள்ள ஜாதகர்களுக்கும் பூமி, பொருள் சிதைந்து போகுமாம்.

## 1324

(இ-ள்.) 2-ல் சுபர்கள் 4-க்குடையவரோடு கூடி நிற்கப் பெற்ற ஜாதகன் சினேகிதருக்காக நன்மையான செலவு செய்து பொருள் இழப்பானும்.

[2] குரு 12-ல் நிற்கப்பெற்ற ஜாதகர், புலவர்கள், வேதியர்கள், சொந்த பந்துக்கள், தாரித்திரியர்கள் இவர்களுக்குத் தன் சுயத்தில் பொருள்களை யெல்லாம் வாரி தானங் கொடுப்பவராம்; மேலும், வறுமையில் வாடாதவ ரென்றும் கூறுக.

1325

(இ-ள்.) 12-க்குடையவர் உச்ச மடையவும், அவரை ஆட்சியடைந்த 9-க்குடையவர் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பொருள் மிகுதி யுடையவராம்.

[2] 12-க்குடையவர் சுபர்களோடும், சுக்கிரனோடுங் கூடி நிற்கவும், இவர்களை சுபர்கள் பார்க்கவும் பெற்ற ஜாதகர் பொன் னூஞ்சல் சயனத்தில் சுகிப்பா ரென்றுங் கூறுக.

[3] சந்திரனும், சூரியனுங் கூடி 12-ல் நிற்கவும் பெற்ற ஜாதகர் சில நாள் வாழ்ந்து பிறகு செல்வக் குறை யுள்ளவராம்.

1326

(இ-ள்.) சுக்கிரனும், சனியும், சந்திரனுமாகிய மூவர்களுங் கூடி 9-ல் நிற்கப்பெற்ற ஜாதகர் இராஜயோக மடைந்து பாக்கியத்திற் சிறந்தவரு மாவராம். 12-க்குடையவர் உச்ச மடைந்தால் உப்பரிகையின்மீது ஊஞ்சலில் உறங்குவராம். சந்திரன், சுக்கிரன் இவர்கள் கூடி .2-ல் நிற்க்ப் பெற்ற ஜாதகர் மிகுந்த செல்வ முடையவராம்.

1327

(இ-ள்.) இதுவரையில் கூறிய இலட்சணங்களை முதல் 12-பாகம் வரையில் உணர்ந்ததில் சுப பலன்கள் உயர்ந்திருக்குமாகில் செல்வவானென்றும், பாப பலன் உயர்ந்திருக்குமாகில் தாரித்திரியவான் என்றும் கூறல் வேண்டுமாம்.

சுகர்நாடி என்னும் ஜோதிட சிகாமணி

முற்றுப் பெற்றது.



அச்சகம்: ...... சென்னை-1, 1976,